# பதஞ்சலி யோகம்

## ஒரு விஞ்ஞான விளக்கம்

### பாகம்-7

ஓஷோ

தமிழில் :
சி.எஸ்.தேவநாதன்



Since 1976

கவிதா பப்ளிகேஷன்

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

PATHANJALIYOGAM : ORU VIGYANA VILAKKAM - 7 (Tamil)



Originally published in English under the title:
The Alpha and the Omega, Volume - 7



For more information : www.osho.com
A Comprehensive multilingual web site featuring Osho's meditations, books and tapes and an online tour of the meditation resort at Osho Commune International.

For sale in India, Sri Lanka, Nepal, Bangalesh, Bhutan & Maldives only.

Translated by : **C.S. Devanathan**
Coordination by : **Dhyan Sanjay**
Publishing Editor : **S. Chockalingam**
First Edition : 2006
Second Edition : August, 2012
Third Edition : 2019
Pages : 320
Price : **Rs. 300/-**
ISBN : 81-8345-44-X
Printed a : Sree Durga Printers, Chennai

Published by : க.எ. C.8013338
**KAVITHA PUBLICATION**
8, Masilamani Street, Pandy Bazaar,
T. Nagar, Chennai - 600 017
Ph: 044-4216 1657 What'sapp : +91-7402222787
e-mail: kavitha_publication@yahoo.com
Website : www.kavithapublication.in

# முகவுரை

**ப**தஞ்சலியும் சரி, பகவானும் சரி கடவுள் அல்லது வாழ்க்கையின் எந்தக் கோட்பாட்டையும் பற்றிக் கூற வரவில்லை. அந்த வகையில் யோகா ஒரு மதமாகாது, பதஞ்சலியும், பகவானும் சமயம் சார்ந்தவர்களாக மாட்டார்கள். அவர்கள் இருவரும் ஏதோ ஒன்றை அனுபவித்து, ஏதோ ஒன்றாய் ஆகியிருப்பவர்கள் - தாங்கள் அடைந்ததையே மற்றவர்களும் அடைய அவர்கள் உதவுகிறார்கள். எதுகுறித்தும் உங்களை நம்ப வைக்கிற அவசியம் அவர்களுக்கில்லை. தங்கள் செய்முறைகளை அவர்கள் உங்களுடன் பகிர்ந்து கொள்கிறார்கள், அதன்மூலம் உங்களை நீங்களே புரிந்து கொள்ள முடியும்.

பதஞ்சலி யோகம் பற்றி பகவான் கூறுகிறார்:

'யோகா ஒரு குறையற்ற விஞ்ஞானம். அது நம்புவதற்காகப் போதிக்கவில்லை, அறிந்துகொள்வதற்காகப் போதிக்கிறது. அது உங்களை 'கண்ணை மூடிக்கொண்டு பின்பற்றுங்கள்' என்று சொல்லவில்லை, உங்கள் கண்களைத் திறப்பதற்கான வழிமுறையை உங்களுக்கு வழங்குகிறது. உங்கள் தொலைநோக்குப் பற்றிய அனைத்தையும் அது சொல்கிறது, எப்படி தொலைநோக்கைப் பெறுவது, காண்பதற்கான திறமை, கண், அதன் மூலம் உங்களுக்கு வெளிப்பாடாகிற எதையும்...

தனியொரு மனிதர் ஒட்டுமொத்த விஞ்ஞானத்தையும் ஒருசேர அமைத்திருக்கிறார்கள் என்பதை எண்ணிப் பார்க்கும் போது பிரமிப்பாய் இருக்கிறது. எதுவும் குறைவாயில்லை, ஆனால், மனித குலம் தன்னைப் புரிந்து கொள்ளுமளவு நெருங்கி வரவேண்டும் என்று விஞ்ஞானம் காத்திருக்கிறது.

மெய்ம்மையைக் காண விழைகிறவர்களுக்கும், வழிகாட்டும் ஒளிவிளக்காய் குருவின் அவசியத்தைப் புரிந்து கொண்டவர் களுக்கும் சாதகமாயிருப்பவர்கள் பதஞ்சலியும், பகவானும். யோக

சூத்ரங்களும்கூட தன்னளவில் போதுமானவையாகாது. அவற்றைக் கண்டுபிடித்து விளக்குவதற்கும், ஒவ்வொரு சீடனுக்குரிய மொழியில் அவர்களுடைய புரிதலுக்கேற்றவாறு மொழிபெயர்த்துச் சொல்வதற்கும் ஒரு குரு அவசியம்.

பகவான் ஸ்ரீ ரஜ்னீஷ் அத்தகைய ஒரு குருவாய் இருக்கிறார்.

பகவான் அவர்கள் யோகாவின் எல்லைக்குள்ளாகவே நின்றுவிடவில்லை. யோகா மெய்ம்மையை வந்தடைவதற்கான வழி. எனவே, பகவான் அதுகுறித்துப் பேசுகிறார். ஆனால் அவர் அத்தோடு கட்டுப்பட்டுவிடவில்லை. தந்த்ரா, புத்த மதம், ஜென், தாவோயிஸம், சூஃபிஸம், இயேசு மற்றும் பலரின் மார்க்கங்கள் பற்றிய அவருடைய உரைகள் கொண்ட மற்ற நூல்களிலும் அதே தெளிவையும், புரிதலையும் நீங்கள் காண முடியும். அவர் எந்தவொரு மரபையும் சார்ந்தவரல்லர்.

'எனக்கு முத்திரை குத்தவோ, என்னை வகைப்படுத்தவோ முயலாதீர்கள். மனம் என்னை ஒரு அஞ்சறைப் பெட்டியின் அறைக்குள் வைத்துவிட விரும்பும். ஆக, 'இந்த மனிதர் இப்படி' என்று நீங்கள் என்னைப் பற்றிச் சொல்வதுடன் முடித்துக் கொள்ளப் பார்ப்பீர்கள். அது அத்தனை சுளுவாய் முடிந்து விடுவதில்லை. நான் அதற்கு இடமளிக்க மாட்டேன். நான் பாதரசம் போல் இருப்பவன். நீங்கள் எந்த அளவுக்கு என்னைப் பற்ற முயற்சிப்பீர்களோ அந்த அளவுக்கு நான் நழுவிச் சென்று விடுவேன். ஒன்று நான் எல்லாமாகவும் இருக்கிறேன் அல்லது ஏதுமற்றதாய் இருக்கிறேன். இந்த இரண்டு வகையினங்களுக்கு மட்டுமே இடமளிக்க முடியும்.

பகவான் ஒரு யோகியல்லர். இந்தப் புத்தகமும் யோகா பற்றியதல்ல. யோகா உங்களுக்குக் கொண்டு வரக்கூடிய மெய்ம்மை பற்றிய புத்தகம் இது. பகவான் அந்த மெய்ம்மையில் முன்னதாகவே நிலைத்திருக்கிறார்.

# உள்ளடக்கம்

# III. விபூதி பாதம்

***சூத்திரம் - 1    தேசபந்த: சித்தஸ்ய தாரண***

*தியானப் பொருளில் மனத்தை நிறுத்தி வைப்பது தாரணை என்கிற கவன ஒருமை.*

***சூத்திரம் - 2    தத்ர ப்ரத்யயை கதானதா தியான***

*மனமானது தியானப் பொருளை நோக்கி எவ்விதத் தடங்கலுமின்றித் தொடர்ந்து செல்வது தியானம்.*

***சூத்திரம் - 3    ததே வார்த்த மாத்ர நிர்ப்பாஸம் ஸ்வரூப சூன்ய மிவஸமாதி***

*மனம் தியானப் பொருளுடன் ஒன்றாகி விடுவது சமாதி நிலை (அந்நிலையில் எந்த உருவங்களும் இல்லாமல் கருத்து மட்டும் இருக்கும்)*

***சூத்திரம் - 4    த்ரய மேகத்ர ஸம்யம***

*தாரணை, தியானம், சமாதி இம்மூன்றும் ஒன்றன்பின் ஒன்றாய் வந்து ஒருங்கிணைந்து நிற்கும் நிலை.*

***சூத்திரம் - 5    தஜ்ஜயாத் பிரக்ஞா லோக***

*இதில் தேர்ச்சி பெற்றால் அதீத உணர்வின் அறிவொளி உண்டாகும்.*

ஒரு சமயம் ஜென் குரு ஒருவர் தம்முடைய சீடர்களிடம் இருந்து கேள்விகளை வரவேற்றார். ஒரு சீடன் கேட்டான். 'கடும் முயற்சியுடன் பாடங்களைக் கவனித்துக் கேட்பவர்களுக்குப் பிற்பாடு வெகுமதியாய் என்ன கிடைக்கும்?' என்று.

குரு விடையளித்தார். 'இயற்கையில் நீ இருந்து கொண்டிருக்கும் இடத்தை (home)ப் பற்றிக் கேள்' என்று.

இரண்டாம் மாணவன் கேட்டறிய விரும்பியது 'என்னுடைய பழைய தவறுகள் மேலெழுந்து என்மீது குற்றம் சாட்டினால் நான் எப்படித் தடுப்பது?'

குரு திரும்பவும் சொன்னார் 'இயற்கையில் நாம் இருந்து கொண்டிருக்கும் இடத்தைப் பற்றிக் கேள்' என்று. மூன்றாமவன் கையை உயர்த்தி 'ஐயா, இருக்கிற இடத்தைப் பற்றிக் கேள் என்கிறீர்கள். நீங்கள் எதைக் குறிப்பிடுகிறீர்கள் என்று தெரிய வில்லையே?' என்றான்.

'நீ தொலைவில் இருப்பதைக் காண்பதற்கு முன்பாய் உன் அருகில் இருப்பதைக் காணவேண்டும். இந்தக் கணத்தில் கவனமாயிருங்கள். இதில் கடந்த காலத்துக்கும், எதிர்காலத்துக்கும் விடைகள் உள்ளன. தற்போது உங்கள் மனதில் எதை எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள்? தற்போது எனது முன்னிலையில் நீங்கள் அமர்ந்திருப்பது இறுக்கமடைந்த உடம்புடனா, இறுக்கமற்ற நிலையிலா? (தணிவுற்ற நிலை). என்னிடம் நீங்கள் முழுக் கவனமும் செலுத்துகிறீர்களா, அல்லது பகுதியளவிலா? இத்தகைய கேள்விகள் மூலம் நீங்கள் இருக்கிற இடத்துக்கு நெருக்கமாகி விடுங்கள்' என்றார் குரு.

நெருக்கமான கேள்விகள், தொலைவில் உள்ள நெருக்கமற்ற விடைகளிடம் உங்களை இட்டுச் செல்லும்.

'யோகா' என்கிற ஞானமுறை உங்கள் வாழ்க்கையின் பேரில் கொண்டிருக்கும் மனோபாவம் இது. யோகா ஒன்றும் *இயல் கடந்த ஆய்வு அல்ல.

அது நெருக்கமின்றி தொலைதூரத்தில் இருப்பவற்றைப் பற்றித் தன்னைத் தொல்லைப்படுத்திக் கொள்வதில்லை. நாம் எடுத்த பிறவிகள், இனி எடுக்கும் பிறவிகள், சொர்க்கம், நரகம் போன்றவை பற்றியும் அது தன்னைத் தொல்லைப்படுத்திக் கொள்ளாது. இருக்கும் இடத்துக்கு நெருக்கமான கேள்விகளிலேயே யோகா அக்கறை காட்டும். உங்களுக்கு அருகே உள்ளது பற்றிக் கேட்டால் அப்படிக் கேட்பதன் மூலம் அதற்குத் தீர்வு காணும் சாத்தியம் உண்டு. உங்களுக்கு நெருக்கமான கேள்விக்குத் தீர்வு காண்கிறபோது நீங்கள் முதல் அடியை எடுத்து வைக்கிறீர்கள். அந்நிலையில் புனிதப்பயணம் ஆரம்பமாகிறது. பிறகு காலப்போக்கில் தொலைவில் உள்ளவற்றுக்கும் தீர்வு காண்கிறீர்கள் - ஆனால் யோகா முழுமையுமே உங்களை இருக்கிற இடத்துக்கு நெருக்கமாய் கொண்டு செல்கிற விசாரணை (inquiry)தான்.

ஆக, நீங்கள் கடவுளைப் பற்றி பதஞ்சலியிடம் கேட்டால் அவர் விடை சொல்ல மாட்டார். உண்மையில் உங்களைக் கொஞ்சம் முட்டாள் தனமானவராகவே எண்ணிக் கொள்வார். யோகா அறிவாய்வு கோட்பாட்டுத் துறை (metaphysics) சார்ந்தவர்களைத் தொலைதூரத்தில் உள்ள தீர்வு காணமுடியாத பிரச்சினைகளில் தங்கள் நேரத்தை வீணடிப்பவர்கள் என்றும், அவர்கள் எல்லோருமே முடடாள்கள் என்றும் கருதுகிறது. நீங்கள் எங்கிருக்கிறீர்களோ அங்கிருந்தே தொடங்குவது நல்லது. நீங்கள் இருக்கிற இடத்தில் இருந்து தொடங்குவது மட்டுமே உங்களால் முடிகிற காரியம். உண்மையான பயணம் என்பது நீங்கள் இருக்கும் இடத்தில் இருந்து மட்டுமே தொடங்க முடியும். தொலைவில் உள்ளவற்றைப்பற்றி ரொம்பவும் அறிவார்த்த மாகவோ, ஆய்வு செய்கிற மாதிரியோ கேட்டுக் கொண்டிருக்காதீர்கள். எல்லைக்குள் (within) இருப்பவற்றைப் பற்றிக் கேளுங்கள்.

இதுதான் யோகாவைப்பற்றி முதலில் அறிந்து கொள்ளப்பட வேண்டியது. அது ஒரு விஞ்ஞானம். அது காரண காரியங்களை

---

* இயல் கடந்த ஆய்வு (metaphysics) - மேலை நாட்டு மெய்விளக்கியலில் இயல் கடந்த ஆய்வு என்பது அனுபவ உலகிற்கு அப்பாற்பட்டதை, புலனுணர்வுக்கு எட்டாததை நாடி அறியும் முயற்சியைக் குறிக்கும் சொல்.

ஆராய்ந்தறிவது. அனுபவத்தால் தெரியப்படுவது. நீங்கள் உண்மையில் எதை விஞ்ஞானம் என்கிறீர்களோ அது. கொஞ்சம் தொலைவில் இருப்பவற்றைப் பற்றியதுதான் காரணம் விஞ்ஞானம் இலக்குகளில் - புலனால் அறியும் பொருள்களில் கவனம் செலுத்து வதாகும். யோகா மேலும் சொல்கிறது உங்கள் அகத்தில் (இயல்பான ஆதாரப்பொருள்) உள்ளதை நீங்கள் அறியாதவரை புறத்தில் உள்ளதை (புலன்களால் அறியப்படுவது) எப்படி அறிந்து கொள்ளப் போகிறீர்கள் என்று கேட்கிறது. உங்களை நீங்கள் அறிந்து கொள்ள வில்லையென்றால் நீங்கள் அறிந்து வைக்கிற மற்ற எல்லாமே தவறானவைதாம். காரணம் அடிப்படையே தொலைந்து விடுகிறது. நீங்கள் விளைவற்ற நிலத்தின் மீது நின்று கொண்டிருக்கிறீர்கள். உங்களுக்குள் உள்ளொளி (அறிவுத்தெளிவு) சுடர்விடாதவரை நீங்கள் ஏந்துகிற எந்த விளக்கும் உங்களுக்கு உதவப் போகிறதில்லை. உங்களுக்குள் ஒளி இருக்கும் பட்சத்தில் எதைப்பற்றியும் நீங்கள் அஞ்சும்படி இருக்காது. வெளியே இருட்டாக இருந்தால் இருந்து விட்டுப் போகட்டும், உங்களுக்குள் இருக்கும் ஒளி போதுமானது, உங்கள் பாதையைத் தெளிவுபடுத்துவதற்கு.

இயல் கடந்த ஆய்வுக் கோட்பாடு (metaphysics) உங்களைக் குழப்பவே செய்யும்.

இது நடந்தது. நான் பல்கலைக்கழக மாணவனாய் இருந்தபோது தத்துவம் ஒழுக்கவியல் பாட வகுப்பில் சேர்ந்தேன். பேராசிரியரின் முதல் உரையை மட்டுமே நான் கவனித்தேன். ஒரு மனிதர் அத்தனை பத்தாம்பசலியாய் (out-dated) இருப்பாரென்று என்னால் நம்பவே முடியவில்லை. அறநெறித் தத்துவங்களில் ஏற்பட்டிருக்கும் புதிய வளர்ச்சி பற்றியே தெரியாதவராய், நூறு வருடங்களுக்கு முந்தைய சமாசாரங்களை அவர் சொல்லிக் கொண்டிருந்தார். ஆனால் அது மன்னித்துவிடக் கூடியதுதான். தம்முடைய முயற்சிகள் அனைத்தையும் பயன்படுத்தி உங்களைச் சலிப்படையச் செய்வதாய் அவர் பெரிய அளவில் சலிப்பூட்டிக் கொண்டிருந்தார். ஆனால் அதுகூட பெரிய பிரச்சினையல்ல, நான் தூங்கி விட்டிருப்பேன். ஆனால் அவர் சினமூட்டவும் செய்தார். அவருடைய குரல் அவர் நடந்து கொள்ளும் முறைகள் இவையும் ஒரு முரணை உண்டாக்குவதாயிருந்தது. ஆனால், அதுகூட ஒருவருக்குப் பழகிவிடும். அவர் ரொம்பவும் குழம்பி விட்டிருந்தார். அத்தனை குணாதிசயங்களும் இப்படி

ஒருவருக்குள் ஒன்றாகி விட்டிருப்பதை உண்மையில் நான் அதற்கு முன் ஒருபோதும் கண்டதேயில்லை.

அதற்குப்பிறகு அவருடைய வகுப்புக்கு நான் போகவில்லை. உண்மை அதுபற்றி அவர் கோபப்பட்டிருப்பார். ஆனால் வெளிக் காட்டிக் கொள்ளவில்லை. எப்படியும் ஒருநாள் நான் தேர்வெழுத வந்துதானாக வேண்டும் என்று தன்னுடைய சந்தர்ப்பத்திற்காக அவர் காத்திருந்தார். நான் தேர்வெழுதினேன். அவருடைய கோபம் இன்னும் அதிகரித்தது. காரணம் தேர்வில் நான் தொண்ணூற்றுஐந்து மதிப் பெண்கள் பெற்றிருந்தேன். அவரால் அதை நம்பவே முடியவில்லை.

ஒருநாள் பல்கலைக்கழக சிற்றுண்டிச் சாலையில் இருந்து நான் வெளியே வந்து கொண்டிருந்தபோது என்னைப் பார்த்தவர் அப்படியே பிடித்துக்கொண்டு விட்டார். "கொஞ்சம் கேட்டுக்கோப்பா, உன்னால் எப்படி சமாளிக்க முடிந்தது? நீ என்னோட முதல் நாள் வகுப்புக்கு மட்டுந்தானே வந்திருந்தாய். இரண்டு வருடங்களில் உன்னுடைய முகத்தை நான் பார்த்ததேயில்லை. உன்னால் எப்படி தொண்ணூற்றுஐந்து மதிப்பெண் வாங்க முடிந்தது?" என்று கேட்டார்.

நான் "அது உங்களுடைய முதல் நாள் பாடத்தைக் கேட்டதால் கிடைத்திருக்க வேண்டும்" என்று சோன்னென்.

அவர் குழப்பத்தில் காணப்பட்டார். "என்னது, என்னுடைய முதல் நாள் உரையைக் கேட்டதிலேயேவா? என்னை முட்டாளாக்கப் பார்க்காதே. உண்மையைச் சொல்" என்று கேட்டார்.

நான் சொன்னேன் "நேர்மை அதற்கு இடங்கொடுக்காது" என்று.

அவர் சொன்னார். "நீ பண்பு தவறாமல் இருக்கிறதெல்லாம் சரி தான். என்னிடம் உண்மையைச் சொல்லிவிடு. நான் மனசுல வச்சுக்க மாட்டேன்" என்று.

நான் சொன்னேன். "நான் தங்களிடம் சொன்னது உண்மைதான். தாங்கள்தான் அதைத் தவறாகப் புரிந்து கொண்டு விட்டீர்கள். உங்களு டைய உரையை நான் கேட்காமல் இருந்திருந்தால் எனக்கு நூறு மதிப் பெண்கள் கிடைத்திருக்கும். நீங்கள் என்னைக் குழப்பி விட்டீர்கள். அந்த ஐந்து சதவிகிதக் குறைவுக்கு அதுதான் காரணம்" என்று.

இயல்கடந்த ஆய்வு, தத்துவம் என்பதெல்லாம் அத்தனை நெருக்கமில்லாத விசயங்கள் என்பதால் உங்களைக் குழப்பவே

செய்யும். அது உங்களை எங்கேயும் இட்டுச் செல்வதில்லை. அது உங்கள் மனதைக் குழப்பி விடும். அது உங்கள் சிந்தனைக்குத் தீனி போடுமே தவிர, உங்களை விழிப்படையச் செய்யாது. சிந்திப்பதால் என்ன ஆகிவிடும். தியானம் மட்டுமே உங்களுக்கு உதவக்கூடும். இதுதான் வேறுபாடு. நீங்கள் எண்ணமிடுகிறபோது எண்ணங்களில் மட்டுமே அக்கறை கொண்டிருப்பீர்கள். நீங்கள் தியானிக்கிற போது உங்கள் விழிப்புணர்வுத் திறனுடன் தொடர்புடையவராயிருப்பீர்கள்.

தத்துவம் மனதுடன் தொடர்புடையது. யோகா பிரக்ஞை (consciousness)யுடன் தொடர்புடையது. மனம் தெரிந்து கொள்வது. உங்கள் சிந்தனையை நீங்கள் ஆய்ந்து பார்க்க முடியும். கடந்து செல்லும் எண்ணங்களை நீங்கள் கண்டுகொள்ள முடியும். நிலைமாறும் உணர்வுகளை உங்களால் புரிந்துகொள்ள முடியும். மேகங்களாய் மிதந்து செல்லும் கனவுகளை நீங்கள் காண முடியும். ஒரு நதியைப் போல் அவை தொடர்ந்து செல்கின்றன. இதையெல்லாம் பார்க்க முடிவது பிரக்ஞை.

யோகாவின் ஒட்டுமொத்த முயற்சியும் எது குறைக்கப்படாததாய், குறைக்க முடியாததாய் எஞ்சியிருக்கிறதோ அந்த அக உணர்வை (subjectivity) அடைவதுதான். நீங்கள் அதைக் காண முடியாது. காரணம் அதுவே காண்பவராய் இருக்கிறது. நீங்கள் அதைப்பிடித்து வைக்க முடியாது. உங்களால் பிடித்து வைக்கக் கூடுமெனில் அது உங்களில் இருந்து வேறானதாகவே இருக்கும். பிரக்ஞை எப்போதுமே நழுவிச் செல்வது. விலகியிருப்பது. உங்கள் முயற்சி எதுவாயினும் நீங்கள் செய்கிற அத்தனை முயற்சிகளும் தோற்றுவிடும். இந்தப்பிரக்ஞையை வந்தடைவது பற்றியதுதான் யோகா.

யோகி என்பது நீங்கள் அடையக்கூடிய உயர்நிலை. எதைக் கவனப்படுத்த வேண்டுமோ அதைக் கவனப்படுத்தி எதை அமைதி யாக்க வேண்டுமோ, அதை அமைதியாக்குகிற விஞ்ஞானந்தான் யோகா. எது நீங்கள் = எது நீங்களல்ல என்று தெளிவாகப் பிரித்தறியச் செய்கிறது யோகவியல். ஒரு புனிதமான தெளிவுடன் (pristine clarity) உங்களை நீங்கள் பார்க்கும்படி செய்கிறது. உங்கள் இயல்பையும். நீங்கள் யார் என்பதையும் சற்றே பார்க்கிறபோது இந்த உலகமே ஒட்டுமொத்தமாய் மாறிவிடும்.

அந்நிலையில் இந்த உலகத்தில் நீங்கள் வாழ்ந்தாலும், உலகம் உங்களுடைய கவனத்தைத் திருப்புவதற்கில்லை. எதுவும் உங்களைத்

திசை திருப்ப முடியாதபடி நீங்கள் மையம் கொண்டு விடுவீர்கள். பிறகு நீங்கள் விரும்பிய எந்த இடத்துக்கும் செல்ல முடியும். நீங்கள் நிலைத்திருப்பீர்கள், காரணம் ஒருபோதும் அசையாமல் மாறாமல் இருக்கிற சாசுவதமான ஒன்றை நீங்கள் அடைந்து விடுகிறீர்கள்.

இன்று நாம் பதஞ்சலி யோக சூத்திரத்தின் மூன்றாம் நிலையான விபூதி பாதத்தைத் தொடங்குவோம். அது தனிச்சிறப்பு வாய்ந்தது. காரணம் கடைசியும் நான்காம் பகுதியுமான 'கைவல்ய பாதம்' என்பது நற்பயனை அடைவதாகும். வழிமுறைகளைப் பொறுத்தவரை, உத்திகளைப் பொறுத்தவரை, செயல் ஒழுங்கைப் பொறுத்தவரை விபூதி பாதமே இறுதியானதாகி விடுகிறது. நான்காம் பகுதி ஒட்டுமொத்த முயற்சியின் பயன் அவ்வளவே. கைவல்யம் என்பது பிறவற்றை ஒதுக்கித் தனிமை (aloneness) யாவது, யாரையும் எதையும் சார்ந்திருக்காமல் தனித்திருக்கும் முழுமையான சுதந்திரம் அது - போதிய அளவுக்கு மேல் தன்னிறைவு கொண்டது. இதுவே யோகாவின் குறிக்கோள். நான்காம் பகுதியில் நற்பயன்களைப் பற்றி மட்டுமே நாம் பேசுகிறோம். ஆனால், மூன்றாவதை நீங்கள் தவறவிட்டால் நான்காவதை அறிந்துகொள்ள உங்களால் இயலாது. மூன்றாவது அடிப்படையாய் இருப்பது.

பதஞ்சலி சூத்திரத்தின் நான்காவது பகுதி நாசமடைந்து விட்டால், அதனால் எதுவும் நாசமாகி விடாது. காரணம், மூன்றாவதை அடைய முடிந்த யாரும் நான்காவதை தன்னால் (automatically) அடைந்து விடுவார்கள். நான்காவதை விட்டுவிட முடியும். உண்மையில் அது ஒரு வழியில் பார்த்தால் தேவையற்றதுதான். காரணம் அது முடிவை - குறிக்கோளைப்பற்றிப் பேசுகிறது. வழிவகையை மேற்கொள்கிற யாரும் தங்கள் இலக்கைச் சென்றடைய முயும். உங்கள் மனம் அறிய விரும்பும் என்பதால் பதஞ்சலி உங்களுக்குப் பயன்படுமென்று அதைப் பற்றிப் பேசுகிறார். உங்கள் மனம் நம்பிக்கை அடைய விரும்பும். ஆனால் பதஞ்சலியோ நம்பிக்கை விசுவாசம், பற்றுறுதி இவற்றை நம்புவதில்லை. அவர் ஒரு தூய்மையான விஞ்ஞானி. அவர் குறிக்கோளைப் பற்றி ஒரு கண நேரக் காட்சியை வழங்குகிறார். ஆனால் அடித்தளமாய் விளங்குவது முக்கியத்துவம் உடைய மூன்றாம் பகுதியே ஆகும்.

வழிமுறைகளில் நிறைவானதாய் அமையும் இந்த விபூதி பாதத்திற்காக நாம் ஆயத்தமாயிருந்து கொண்டிருக்கிறோம். கடந்த இரண்டு அத்தியாயங்களில் நாம் ஆய்வு செய்த வழிமுறைகள்

வெளிப்புறத்திற்குரியவை. பதஞ்சலி இவற்றை பகிரங்கமானவை (புறஎல்லை சார்ந்தவை) என்பார்.

தாரணை, தியானம், சமாதி - கவன ஒருமை, தியானித்திருத்தல், சமாதி நிலை இவற்றை அந்தரங்கள் என்பார் (உட்புறத்திற்குரியவை) அவர். முதல் ஐந்தும் உங்களை, உங்கள் சரீரத்தை, உங்கள் குணாதிசயத்தைத் தயார் செய்வதால் நீங்கள் உள்நோக்கிச் செல்ல முடிகிறது. பதஞ்சலி படிப்படியாகச் செல்கிறார். இது ஒரு படிப்படியாக ஏற்படுகிற விஞ்ஞானம். இது உடனடி ஞானமல்ல. இது சிறுகச் சிறுக சமைக்கப்படுகிற பாதை. படிப்படியாகத்தான் அவர் உங்களை வழிநடத்துகிறார்.

## முதல் சூத்திரம்:

தாரணை - கவன ஒருமை, மனதைத் தியானிக்கப் படுகிற பொருளில் உட்படுத்துகிறது.

நோக்கம் (இலக்கு), பொருள், *அப்பால் உள்ளது. இவை மூன்றும் கவனத்தில் கொள்ளப்பட வேண்டியவை. பொருள் என்றால் எண்ணப்பொருள். நான் நோக்கப்படுகிறவனாயிருக்கிறேன். என்னை நோக்கியிருப்பவர் தன்னுடைய புலனைப் பயன்படுத்துகிற பிரஜையாயிருக்கிறார். உங்களுடைய பார்க்கும் திறன் சற்று கூடுதலாயிருந்தால் என்னை நோக்கிக் கொண்டிருக்கும் உங்களையே நீங்கள் காண முடியும். முயன்று பாருங்கள். நான் நோக்கப்படுவதாய் இருக்கிறேன், நீங்கள் என்னை நோக்கியபடி இருக்கிறீர்கள். என்னைப் பார்த்துக் கொண்டிருக்கும் பிரஜையாயிருக்கிறீர்கள். உங்களுக்குள் ஒருபக்கமாய் நீங்கள் நின்று கொள்ள முடியும். என்னை நீங்கள் நோக்கியிருப்பதை உங்களால் கண்டு கொண்டுவிட முடியும். அதுவே 'அப்பால் உள்ளது' ஆகும்.

முதலில் ஒருவர் இலக்கில் - இலக்கு, கவனத்தை ஒருமுனைப் படுத்த வேண்டும். கவனத்தை ஒருமுனைப்படுத்துவதென்பது மனத்தைக் குறுக்கிக் கொள்வதாகும்.

சாதாரணமாக மனம் இடைவிடாத போக்குவரத்தில் இருப்பது - ஒரு கூட்டம் நெரிவதைப் போல் ஆயிரத்தியோர் எண்ணங்கள் வந்து போய்க் கொண்டிருக்கும். பல்வேறு நோக்கங்களுடன் நீங்கள்

---

* அப்பால் உள்ளது (Beyond) - மதிப்பில் உயர்ந்ததும், தன் வலிமைக்கு அப்பாற்பட்டதும்.

குழம்பிப் போயிருக்கிறீர்கள், பிளவுண்டு போயிருக்கிறீர்கள். ஏக காலத்தில் எல்லாத் திக்கிலும் எப்படிச் செல்வீர்கள்? எல்லாப் பக்கங்களிலும் இழுபட்டு, எல்லாமும் அரைகுறையாய் நிற்கப் பைத்தியம் பிடித்த மாதிரி ஆகிவிடும். நீங்கள் இடப்பக்கம் நகர்ந்தால் ஏதோ ஒன்று உங்களை வலப்பக்கம் இழுக்கும். ஆக உங்கள் சக்தி ஒழுங்கற்றதாகும். ஒரு சுழலில், குழப்பத்தில், அச்சத்தில் சிக்கிக் கொள்கிற நீங்கள் எங்கேயும் சென்றடைவதில்லை.

வழக்கமான மனத்தின் நிலை இது. உங்கள் அக உணர்வு (subjectivity) பல்வேறு பொருள்களால் சூழ்ந்து கொள்ளப்பட்ட நிலையில் நீங்கள் யாரென்பதையே உங்களால் உணர முடியாமல் போகும். காரணம், உங்களுக்குள் கூர்ந்து பார்க்க இடைவெளி இல்லாதபடி நீங்கள் பலவற்றுடனும் தொடர்புடையவராயிருப்பீர்கள். அமைதியும், தனிமையும் உங்களிடம் இருக்காது. எப்போதும் நீங்கள் கூட்டத்தில் இருப்பீர்கள்.ஒரு வெற்றிடத்தை, ஒதுக்குப்புற மூலையை உங்களால் காண முடியாது. ஆக அங்கிருந்து தப்பி உங்களுக்குள் செல்வது இயலாத காரியமாகி விடும.

இலக்குகள் இடைவிடாமல்.உங்களுடைய கவனத்தைக் கோரும் ஒவ்வோர் எண்ணமும் உங்களைக் கவன ஈர்ப்பு செய்யும். அவை உங்களை நிர்ப்பந்திக்கும். இதுதான் வழக்கமான நிலை. இது கிட்டத்தட்ட பித்து நிலையாயிருக்கும்.

உண்மையில் பைத்தியமல்லாதவர்களிடமிருந்து பைத்தியங் களைப் பிரித்துப் பார்ப்பது அத்தனை சரியானதாயிருக்காது. அவர்களுக்கிடையே வேறுபாடு என்பது அளவுகளில் மட்டுமே இருக்கும், தரத்தில் அல்ல. நீங்கள் தொண்ணூற்றுஒன்பது சதவிகிதம் பித்துப் பிடித்தவராயிருக்கலாம். இன்னொருவரின் பித்து நிலை நூற்றுயோரு சதவீதமாயிருக்கலாம். அப்படியே உங்களைக் கவனியுங்கள். பலமுறை நீங்களும் எல்லையைத் தாண்டியிருக்கலாம். கோபத்தில் உங்களுக்குப் பெரும் வெறி பிடித்திருக்கலாம். நீங்கள் சிந்தித்திராத, உங்களுக்கு நம்பிக்கையில்லாத ஒன்றை நீங்கள் செய்து கொண்டிருப்பீர்கள். பிற்பாடு, 'இதைச் செய்யாமல் இருந்திருக்கலாமே என்று எண்ணி வருந்தக்கூடிய காரியங்களைச் செய்திருப்பிர்கள். 'எனக்காகத்தான் என்றபோதும் அதைச் செய்ய யாரோ என்னைக் கட்டாயப்படுத்தியது போலிருந்தது. ஒரு கெட்ட ஆவியோ, பிசாசோ என்னைக் கட்டாயப்படுத்தியிருக்க வேண்டும். நான் அதைச் செய்ய

ஒருபோதும் விரும்பியதில்லை' என்பீர்கள். நீங்கள் பலமுறை அந்த எல்லைக்கோட்டைத் தாண்டியிருப்பீர்கள். ஆனால் மீண்டும் மீண்டும் உங்களுடைய வழக்கமான பித்து நிலைக்கே திரும்பி விடுகிறீர்கள்.

யாரேனும் ஒரு பைத்தியக்காரனைக் கவனித்துப் பாருங்கள். பைத்தியத்தைக் கவனிப்பதில் எல்லாருக்குமே பயந்தான். ஒரு பைத்தியத்தைக் கவனிக்கிறபோது உங்களையறியாமலே உங்களுடைய பைத்தியக்காரத்தனத்தையும் நீங்கள் உணரத் தலைப்படுவீர்கள். சட்டென்று அப்படியாகி விடுகிறது. காரணம் உங்களுக்கிடையே வேறுபாடு அளவுகளில்தான் என்பதை நீங்கள் கண்டுகொள்கிறீர்கள். அவன் உங்களைவிடக் கொஞ்ச தூரம் முன்னாடி போயிருப்பான். ஆனால் நீங்களும் அவனைத் தொடர்ந்தபடி இருக்கிறீர்கள். நீங்களும் அதே வரிசையில்தான் நின்று கொண்டிருக்கிறீர்கள்.

வில்லியம் ஜேம்ஸ் ஒரு சமயம் பைத்தியக்கார விடுதியொன்றுக்குச் சென்றிருந்தார். அங்கிருந்து திரும்பி வந்ததும் மிகவும் துயரார்ந்தவராகி, ஒரு போர்வையால் தம்மை மூடி மறைத்துக் கொண்டார். அவருடைய மனைவியால் புரிந்துகொள்ள முடியவில்லை. 'நீங்கள் ஏன் வருத்தமாயிருக்கிறீர்கள்?' என்று அவள் கேட்டாள். அவர் எப்போதும் மகிழ்ச்சிகரமாய் காட்சியளிப்பவர்.

'நான் பைத்தியக்கார விடுதிக்குச் சென்றிருந்தேன். அவர்களுக்கும் எனக்கும் இடையே அப்படியொன்றும் பெரிய வித்தியாசம் இருப்பதாய் தெரியவில்லை என்ற எண்ணம் வந்துவீட்டது எனக்கு. வித்தியாசம் இருக்கிறது. ஆனால் அதிக அளவில் இல்லை. சில நேரங்களில் நானும் எல்லைக் கோட்டைத் தாண்டியிருக்கிறேன். சில சமயம் கோபத்தில், சில சமயம் சிற்றின்ப வேட்கையில், சிலசமயம் வருத்தத்தில், மனச்சோர்வில் அது நேர்ந்திருக்கும். ஒரேயொரு வேறுபாடுதான், அவர்கள் அதே நிலையில் இருக்கிறார்கள். அவர்களால் திரும்பி வரமுடியாது. நான் சற்று இசைவிணக்கமானவன் (flexible) என்னால் திரும்பிவிட முடிகிறது. ஆனால் யாருக்குத் தெரியும். ஒருநாள் அந்த இசைவிணக்கம் இழக்கப்படலாம். பைத்தியக்கார விடுதியில் நான் பார்த்தவர்கள் என்னுடைய எதிர்காலத்தை எனது கண்முன்னே கொண்டு நிறுத்துவதாய் எனக்குப் படுகிறது. நான் ஒரேயடியாய் சோர்ந்து போகிறேன். காரணம் நான் போகிற வழி. சற்று முன்பின்னாகவேனும் நான் அவர்களை எட்டிப் பிடித்து இன்னும் மேலே சென்று விடுவேன்.

சரியாக உங்களைக் கவனியுங்கள். ஒரு பைத்தியக்காரனையுந் தான். பைத்தியக்காரன் தன்பாட்டுக்குத் தனியே பேசிக்கொண்டிருப் பான். நீங்களுந்தான் பேசிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் அடுத்தவர் கண்ணுக்குப் புலப்படாதபடி பேசிக் கொண்டிருப்பீர்கள். ஆனாலும் யாரேனும் ஒருவர் உங்களைச் சரியாகக் கவனித்தால் உங்களுடைய உதடுகளின் அசைவை அவர் கண்டுகொண்டு விடுவார். உதடுகள் அசையாவிட்டாலும்கூட நீங்கள் உள்ளுக்குள் 'பேசியபடிதான் இருப்பீர்கள். என்ன, பைத்தியக்காரன் கொஞ்சம் உரக்கப் பேசுவான். நீங்கள் கொஞ்சம் சப்தக்குறைவாய் பேசுவீர்கள். அவ்வளவுதான். வேறுபாடு அளவில் (quantity) இருக்கிறது. யாருக்குத் தெரியும் என்றாவது ஒருநாள் உங்களுடைய குரலும் உரத்து ஒலிக்கலாம். சாலை யின் ஒருபுறமாய் நின்று, அலுவலகத்தில் இருந்து வருபவர்களை அல்லது அலுவலகத்துக்குப் போகிறவர்களைக் கவனியுங்கள். அவர் களுடைய அங்க அசைவுகளில் இருந்து அவர்கள் தனக்குத்தானே பேசிக் கொள்வதை நீங்கள் உணர்வீர்கள்.

உங்களுக்கு உதவ முயல்கிற *சைக்கோ அனலிஸ்டுகளும் (உளப் பகுப்பாய்வாளர்கள்) பிணிநீக்கும் வல்லுனர்களும் (therapists) கூட அதேமாதிரிதான். உண்மையில் வேறு துறைகளைச் சார்ந்தவர் களைவிட சைக்கோ அனலிஸ்டுகள்தான் அதிகம் பித்து நிலையை அடைகிறவர்கள். பைத்தியமாவதில் அவர்களுடன் மற்ற துறையைச் சேர்ந்தவர்கள் போட்டிபோட முடியாது. அவர்கள் பைத்தியங்களுக்கு மிக அருகில் இருப்பதும் அதற்குக் காரணமாயிருக்கலாம். காலப் போக்கில் அவர்களுக்குப் பித்து நிலை குறித்த அச்சமிருப்பதில்லை. கொஞ்சம் கொஞ்சமாய் அந்த இடைவெளி இட்டு நிரப்பப்பட்டு விடுகிறது.

நான் படித்த குட்டிக்கதையொன்று:

ஒருவன் மருத்துவரிடம் பரிசோதனைக்காகச் சென்றிருந்தான். "சொல்லு, உன் கண் முன்னாடி ஏதாவது புள்ளிகள் தெரியுதா?" என்று மருத்துவர் கேட்டார்.

"ஆமாம், டாக்டர்."

"அடிக்கடி தலைவலி வருதா?"

---

* சைக்கோ அனலிஸ்ட் (Pscho-Analyst) - உணர்வு நிலை, உணர்வு நிலைக்கு அப்பாற்பட்ட நிலை ஆகியவற்றுக்கிடையே உள்ள தொடர்புகள் பற்றிய கொள்கைகளில் தேர்ச்சியுடையவர்.

"ஆமாம்" என்றான் நோயாளி.

"முதுகுல வலி?"

"ஆமாம், ஐயா."

"அடடே, எனக்குந்தான் அப்படியிருக்கு. ஆனா, அதுக்குக் காரணம் என்னவா இருக்கும்னு ஆச்சரியப்படறேன்."

மருத்துவரும் நோயாளியும் எப்படி ஒரே மாதிரி அனுபவத்தை அடைகிறார்கள் என்பதை யாரும் அறிந்திருக்கவில்லை.

கிழக்கில் 'சைக்கோ அனலிஸ்டுகள்' என்றொரு துறையை நாம் உருவாக்கிக் கொண்டதில்லை. நான் உருவாக்கியிருப்பது பிணிநீக்கும் வல்லுனரையல்ல. முற்றிலும் வேறான ஒருவரை - யோகியை. யோகி என்பவர் பண்பு அடிப்படையில் உங்களில் இருந்து வேறானவர்தாம். 'சைக்கோ அனலிஸ்ட்' என்பவர் பண்பு அடிப்படையில் உங்களில் இருந்து வேறானவர் அல்லர். அவரும் உங்களைப் போன்றவர்தான். அவருடைய அனுபவமும், உங்களுடைய அனுபவமும் ஒன்று போலத்தான். அவர் உங்களில் இருந்து எவ்வகையிலும் வேறுபடுவதில்லை. ஒரே வேற்றுமை அவர் உங்களுடைய பித்து நிலையையும், தன்னுடைய பித்து நிலையையும் பற்றி உங்களைவிடக் கூடுதலாய் தெரிந்து வைத்திருக்கிறார் என்பதுதான்.

பித்து நிலை பற்றியும், நரம்பு மண்டலக்கோளாறு பற்றியும், கடுமையான சித்தக்கோளாறு பற்றியும் அவர் அதிக அளவில் கற்பிக்கப் பட்டிருக்கிறார். மனித மனத்தின் மற்றும் மனித இனத்தின் இயல்பு நிலையை அவர் அறிவுநுட்பம் சார்ந்த விதத்தில் அதிகமாகவே தெரிந்து வைத்திருக்கிறார். ஆனால், அவர் வேறானவரல்லர். பண்பு சார்ந்த வகையில் யோகி மற்றவர்களிட மிருந்து முற்றிலும் வேறுபடுகிறார். உங்களுக்குள்ளிருக்கும் பித்து நிலையை அவர் முன்பே விட்டுவிட்டார்.

நீங்கள் மேற்கத்திய முறையில் செயலின் ஆரம்பத்தை (cause)த் தேடுகிறீர்கள், மனித இனத்துக்கு உதவக்கூடிய வழி வகைகளையும், சாதனங்களையும் காண முயற்சிக்கிறீர்கள். ஆனால் தொடக்கத்தில் இருந்தே எல்லாம் தவறாகிக் கொண்டிருப்பதாய் படுகிறது. நீங்கள் இன்னமும் காரணங்களை வெளியில் காண முயற்சி செய்கிறீர்கள் - அந்தக் காரணங்களோ உள்ளே இருக்கின்றன. காரணங்கள் வெளியே

இல்லை. உறவுகளில் இல்லை. வெளி உலகில் இல்லை. அவை உங்களுடைய தன்னுணர்வற்ற தன்மை (unconscious)யின் அடியாழத்தில் இருக்கின்றன. அவை உங்களுடைய சிந்தனையில் இல்லை, கனவுகளில் இல்லை. கனவுகளையும் சிந்தனைகளையும் பகுப்பாய்வு செய்வது பெரிய அளவில் துணை செய்து விடாது. அது பெரும்பாலும் இயற்கைக்குப் புறம்பான நிலையையே இயற்கையாக்கி விடும். அவ்வளவுதான். மனத்தின் போக்குவரத்தையோ, போக்குவரத்தால் ஏற்படும் இரைச்சலையோ நீங்கள் உணர்ந்திருக்கவில்லை, நீங்கள் அதிலிருந்து தனியாய், தொலைவில் விலகியிருக்கவில்லை என்பது தான் அடிப்படைக் காரணம். குன்றின் மீதிருந்து கவனிப்பவராய், ஒரு சாட்சியாய் உங்களால் இருக்க முடிவதில்லை என்பதுந்தான். நீங்கள் தவறான போக்கில் காரணத்தைத் தேடினால் - காண முற்பட்டால் குறிப்பேடுகள் (*case-histories) தாம் மேலும் மேலும் வந்து குவியும். மேற்கில் அதுதான் நடக்கிறது.

உளப்பகுப்பாய்வு (Psycho-analysis) மேலும் மேலும் குறிப்பேடுகளைத்தான் குவித்துக் கொண்டிருக்கின்றன. அதில் இருந்து எதுவும் கிடைப்பதாய் தெரியவில்லை. நீங்கள் மலையைத் தோண்டிப் பார்த்தீர்கள், ஒரு சுண்டெலி கூடக் கிடைக்கவில்லை. நீங்கள் ஒட்டுமொத்த மலையையும் தோண்டியதில் எதுவும் வந்தபாடில்லை. ஆனால் நீங்கள் தோண்டுவதில் கெட்டிக்காரராகி விட்டீர்கள். உங்கள் வாழ்க்கையே அதில் முதலீடு செய்யப்பட்டு விட்டது. எனவே பகுத்தறிவிற்கு ஏற்ற விளக்கங்களைக் காணத் தொடங்கி விட்டீர்கள். ஒன்றை மட்டும் நினைவில் கொள்ளுங்கள், நீங்கள் ஒருமுறை சரியான போக்கைத் தவற விட்டுவிட்டால், முடிவின்றிப் போய்கொண்டேயிருப்பீர்கள். ஒருபோதும் உங்கள் புகலிடத்துக்குத் திரும்புவது என்பதில்லை.

இது நடந்தது.

அயர்லாந்தைச் சேர்ந்த இரண்டு பேர் நியூயார்க்கில் சென்று இறங்கினார்கள். அங்கே அதிகம் சுற்றிப் பார்க்கவில்லை என்பதால் ஓர் இரயிலில் செல்ல முடிவு செய்தார்கள். அவர்கள் இரயிலில் போய்க் கொண்டிருந்த போது, ஒரு பையன் பழம் விற்றுக் கொண்டு வந்தான். அவனிடம் ஆரஞ்சுகளும், ஆப்பிள்களும் இருப்பதைக் கண்டார்கள்.

---

* Case history - பிணியர் பழக்கம், உணவு சுற்றும் சூழல் குறிப்பு.

அவர்கள் அதற்குமுன் கண்டிராத பழமும் அந்தப் பையனிடம் இருந்தது. எனவே அவனிடம் கேட்டார்கள் "என்ன அது?" என்று.

"அது வாழைப்பழம்" என்றான் அவன்.

"அது சாப்பிடத் தகுதியானதா," என்று கேட்டார்கள்.

"நிச்சயமாய்" என்றான் அவன்.

"அதை எப்படிச் சாப்படுவாய்?" அவர்கள் கேட்டனர்.

ஒரு வாழைப்பழத்தை எப்படித் தோலுரிப்பது என்று அவர்களுக்குக் காண்பித்தான் அவன். ஆளுக்கொரு பழத்தை அவர்கள் வாங்கிக் கொண்டார்கள். ஒருவன் வாழைப்பழத்தை ஒரு துண்டு சாப்பிட்டிருப்பான். அப்போது இரயில் ஒரு குகைப்பாதையைக் கடந்து சென்றது.

அவன் சொன்னான். "கடவுள் மிகப்பெரியவர் பாட்! அந்தச் சனியனை நீ சாப்பிடவில்லையென்றால் சாப்பிடாமலே இருந்து விடு. என்னுடையதை நான் சாப்பிட்டேன், கண்ணே தெரியவில்லை" என்று.

ஒத்த நிகழ்வுகளெல்லாம் (coincidences) காரணங்களாகி விடாது. மேற்கத்திய உளவியல் ஒத்த நிகழ்வுகளை ஆராயும். ஒருவர் வருத்தமாக இருந்தால் அப்போது என்ன நடந்திருக்கும் என்று நீங்கள் உடனே ஆராயத் தொடங்கி விடுகிறீர்கள்.அவருடைய குழந்தைப் பருவத்திலேயே ஏதாவதொன்று தவறாகி விட்டிருக்கும். அவர் வளர்க்கப்பட்ட முறையில் தவறு நேர்ந்திருக்கலாம். தந்தை, தாய் இவர்களுடன் குழந்தைக்குள்ள உறவில் கோளாறு ஏற்பட்டிருக்கலாம். அந்தத் தவறு சுற்றுப்புறம் சார்ந்ததாயும் இருக்கலாம். நீங்கள் ஒத்த நிகழ்வுகளைக் காண முயல்கிறீர்கள்.

காரணங்கள் உள்ளே இருக்கின்றன. நிகழ்வுகள் வெளியே இருக்கின்றன. யோகாவில் அதுதான் முக்கியத்துவம் பெறுகிறது. தற்போது நீங்கள் காண்பது தவறாகி விட்டால் ஓர் உண்மையான துணையை - உதவியை எப்போதுமே கண்டடைய முடியாமல் போய்விடும். நீங்கள் உணர்ந்து கொள்ளவில்லை என்பதால் துயரத்தில் இருப்பீர்கள். நீங்கள் உணரவில்லை என்தால் மகிழ்ச்சியற்றிருப்பீர்கள். உங்கள் துன்பத்தக்குக் காரணம் உங்களை இன்னார் என்று நீங்கள் அறிந்து கொள்ளாததுதான். மற்றவையெல்லாம் உடன் நிகழ்வுகள் (coincidences) தாம்.

அடியாழத்திற்குச் சென்று கவனியுங்கள். நீங்கள் துன்பத்தில் இருக்கக் காரணம் உங்களை நீங்கள் தவறவிட்டதுதான். உங்களை இன்னும் நீங்கள் எதிர்கொள்ளவில்லை. முதலில் செய்யப்பட வேண்டியது தாரணை. மனதுக்குள் மிகப் பல இலக்குகள் - பொருள்கள் இருக்கும், மனம் நெரிசலடைந்திருக்கும். அந்தப் பொருட்களை - இலக்குகளை கொஞ்சம் கொஞ்சமாய் விட்டுவிடுங்கள். ஒரு பொருள் - ஓர் இலக்கு என்ற நிலைக்கு அதை (மனம்)க் கொண்டு வாருங்கள்.

நீங்கள் ஏதேனும் ஒன்றில் கவனத்தை ஒருமைப்படுத்தி இருக்கிறீர்களா? கவன ஒருமை என்பது ஒரு பொருளில் மட்டும் ஒட்டுமொத்த மனத்தையும் குவிப்பது. ஒரு ரோஜாப் பூவை நீங்கள் பார்க்கிறீர்கள், பலமுறை பார்க்கிறீர்கள். ஆனால் அந்த ரோஜாவின் மீது நீங்கள் கவனத்தை ஒருமுனைப்படுத்தவில்லை. ஒரு ரோஜாவில் உங்கள் கவனத்தை நீங்கள் ஒருமுனைப்படுத்தியிருந்தால் ரோஜாவே உலகமாகி விட்டிருக்கும். உங்கள் மனம் குறுகி ஒரு மின்பொறி விளக்கு போல் குவிந்துவிடுமெனில் ரோஜா பெரிதாய் மிகப்பெரிதாய் மாறி விடும். இலட்சோபலட்சம் பொருள்களில் ரோஜாவும் ஒன்று. அப்போது அது மிகச்சிறியதாயிருந்தது. தற்போது அதுவே எல்லாமுமாயிருக்கு்து.

உங்களால் ஒரு ரோஜாவின் மீது கவனத்தை ஒருமுனைப்படுத்த முடிந்தால், அதற்கு முன் ஒருபோதும் நீங்கள் கண்டிராத தன்மைகளை அந்த ரோஜா வெளிப்படுத்தும். நீங்கள் எப்போதுமே தவறவிடுகிற வண்ணங்களை அது வெளிக்காட்டும். அது எப்போதும் உள்ள நறுமணங்களை வெளிப்படுத்தினாலும் அதைக் கண்டு கொள்ளும் நுட்ப உணர்வுடன் நீங்கள் இருக்கவில்லை. நீங்கள் முழுமையாய் கவனம் செலுத்தினால் உங்கள் நாசியை நிரப்புவது ரோஜாவின் நறுமணமாக மட்டுமே இருக்கும். உங்கள் உணர்வு மற்ற வாசங்களைத் தவிர்த்து விட்டு, ரோஜாவின் வாசத்துக்கு மட்டுமே இடமளிக்கும். எல்லாமும் விலக்கப்பட்டுவிடுகிறபோது, இந்த உலகம் ஒட்டு மொத்தமாய் கைவிடப்பட்டு விடும். அப்போது ரோஜா மட்டுமே உங்கள் உலகமாயிருக்கும்.

புத்த இலக்கியத்தில் ஓர் அருமையான கதை. ஒரு சமயம் புத்தர் சாரிபுத்ரன் என்கிற சீடரிடம் சொன்னார், "சிரிப்பில் கவனம் செலுத்து" என்று. அந்தச் சீடர் கேட்டார், "நான் எதற்காக அதைக் கூர்ந்து கவனிக்க வேண்டும்?" என்று.

"நீ எந்த ஒன்றுக்காகவும் விசேஷமாய் கவனம் செலுத்த வேண்டும் என்பதில்லை. நீ சிரிப்பில் கவனத்தை ஒருமுனைப்படுத்தினால் போதும். அத்துடன் சிரிப்பு வெளிப்படுத்துவது எதுவாயினும் நீ வகை (report) செய்" என்று புத்தர் சொன்னார்.

சாரிபுத்ரர் அறிவிக்கை செய்தார். அதற்கு முன்போ பின்போ ஒருபோதும் சிரிப்பை அத்தனை கூர்ந்து கவனித்தவர் எவரும் இல்லை. சாரிபுத்ரர் சிரிப்பை வரையறை செய்து ஆறு வகையினங்களில் வகைப்படுத்தினார். அவை மிகச் சிறந்ததில் இருந்து புலனுணர்வைப் பாதிப்பது குறைகளை உடையது என்று பலதரப்பட்ட படிவங்களாய் ஒழுங்கு செய்யப்பட்டவை. சிரிப்பு தனது உள்ளார்ந்த இருப்புணர்வை சாரிபுத்ரருக்கு வெளிப்படுத்தியது எனலாம்.

முதல் வகையை 'ஸிதா' (sita) என்கிறார் அவர். அது முகபாவத்தின் அதிநுட்பங்களுடன், கட்டுப்பாடாய் வெளிப்படும் சோகையான புன்னகை. நீங்கள் மிகவும் கவனமாயிருந்தால் மட்டுமே அவர் 'ஸிதா' என்கிற அந்தப் புன்னகையை நீங்கள் காண முடியும். நீங்கள் கவனித்துப் பார்த்தால் புத்தரின் முகத்தில் அதைக் காணக்கூடும். அது மிகவும் நுட்பமானது, மாசற்றது. நீங்கள் அதீத கவனத்துடன் இல்லாவிட்டால் அதைத் தவற விடுவீர்கள். காரணம் அது வெறும் முகபாவத்தோடு நின்று விடுகிறது. உதட்டசைவு கூட கிடையாது. உண்மையில் அது கண்ணுக்குப் புலனாகாதது, புலப்படாத சிரிப்பு. அதனால்தானோ என்னவோ இயேசு ஒருபோதும் சிரித்ததில்லை என்று கிறிஸ்துவர்கள் நினைக்கிறார்கள். இயேசுவின் சிரிப்பு 'ஸிதா'வாக இருந்திருக்கும். சாரிபுத்ரர் புத்தரின் முகத்தில் 'ஸிதா'வைக் கண்டதாய் சொல்லப்படுகிறது. அது மிகவும் அரிதானது. காரணம் அது எவ்விதக் குறைபாடுமற்றது என்பதாலேயே அரிதாகிவிட்டிருக்கும். உங்கள் ஆன்மா மிக உயர்ந்த நிலையை அடையும்போது மட்டுமே 'ஸிதா' இடம் பெறும். அது நீங்களாகச் செய்யக்கூடியதல்ல. போதிய நுட்ப உணர்வும், போதிய கவனமும் உடையவர்களுக்கு மட்டுமே அது வாய்க்கிறது.

சாரிபுத்ரர் சொல்கிற இரண்டாம் வகை 'ஹஸிதா' (hasita) எனப்படுவது. இது மெலிதான உதட்டசைவுடன், பற்களின் முனைப் பகுதிகள் வெளிப்படுமாறு அமைவது. மூன்றாவது 'விஹஸிதா' (vihasita) - சிறிதளவு சிரிப்புடன் கூடிய விரிந்த புன்னகை. நான்காவது 'உபஹஸிதா' (upahasita) 'உரத்த ஒலியளவுடன் கூடிய அழுத்தமான

சிரிப்பு, தலை, தோள் மற்றும் கையசைவுடன் இணைந்தது. ஐந்தாவது 'அபஹாசிதா' - 'கண்ணீரை வரவழைக்கிற சிரிப்பு'. ஆறாவது 'அதிஹாசிதா' - 'ஒட்டுமொத்த உடம்பும் குலுங்கச் சிரிக்கிற மூர்க்கத்தனமான, பெரும் கூச்சலுடன் கூடிய சிரிப்பு'. மிகை உணர்ச்சிக் கோளாறில் அது இருமடங்காகி விடும்.

சிரிப்பு மாதிரி சின்ன சமாச்சாரங்கள் கூட நீங்கள் கவனம் செலுத்துகிறபோது மிகப்பெரிய விசயமாகி விடுகிறது. ஏன் அதுவே ஒட்டுமொத்த உலகாகி விடுவதும் உண்டு.

வழக்கமாக வெளிப்படாத ஒன்றை வெளிப்படுத்திக் காட்டுவது கவன ஒருமை (concentration). சாதாரணமாக நீங்கள் பெரிய அளவில் அக்கறையில்லாத ஒரு மனநிலையுடன் இருப்பீர்கள். பார்த்தும் பாராத அரைத் தூக்க நிலையில் இருந்து கொண்டிருப்பீர்கள். காதில் வாங்காமல் இருந்து விடுவீர்கள். நீங்கள் கவனத்துடன் பார்ப்பீர்களாயின் மிகச் சிறிய ஒன்றில் இருந்து மிகப்பெரிய விசயங்கள் வெளிப்படுவதைக் காண்பீர்கள்.

ஒட்டுமொத்த அறிவியலும் கவன ஒருமையுடன் கூடியதுதான். ஒரு விஞ்ஞானியைப் பாருங்கள். அவர் கவனத்தை ஒருமுனைப் படுத்தியிருப்பார்.

பாஸ்டர் பற்றிய ஒரு குட்டிக்கதை: அவர் தம்முடைய நுண்பெருக்காடி (microscope) மூலம் எதையோ ஆராய்ந்து கொண்டிருந்தார். அவரைப் பார்க்க ஒருவர் வந்திருப்பது கூடத் தெரியாத அளவு அமைதியாயும் அசைவற்றும் இருந்தார் அவர். எங்கே நம்மால் அவருடைய கவனம் குலைந்து விடுமோ என்ற அச்சம் வந்தவருக்கு. அவர் ரொம்ப நேரம் காத்திருந்தார். புனிதமான ஏதோ ஒன்று அந்த விஞ்ஞானியைச் சூழ்ந்து கொண்டிருப்பதுபோல் இருந்தது. தன்னுடைய கவனத்தில் இருந்து விடுபட்ட பாஸ்டர் வந்தவரிடம் கேட்டார். "நீங்கள் எவ்வளவு நேரமாய் காத்திருக்கிறீர்கள். முன்பே என்னிடம் சொல்லியிருக்கலாமே?" என்று.

அவர் சொன்னார்: "உண்மையில் நான் பலமுறை சொல்வதாகத் தான் இருந்தேன். ரொம்ப அவசரத்தில் இருக்கிறேன். நான் உங்களிடம் ஒரு தகவலைத் தெரிவித்து விட்டுப் போக வேண்டியிருந்தது. ஆனால், நீங்கள் ரொம்பவும் கவனத்தை ஈடுபடுத்தி ஒரு காரியத்தைச் செய்து கொண்டிருந்தீர்கள். அது பிரார்த்திருக்கிற மாதிரி இருந்தது.

பயபக்தியுடன் செய்கிற ஒரு காரியத்துக்கு எப்படி இடையூறு செய்யத் தோன்றும்?''

பாஸ்டர் சொன்னார்: "நீங்கள் சொல்வது சரிதான். அது என்னுடைய பிரார்த்தனையேதான். நான் கவலைக்குள்ளானதாய் உணர்கிறபோது, அமைதிக்குலைவுற்றதாய் உணரும்போதெல்லாம் என்னுடைய நுண்பெருக்காடி முன் உட்கார்ந்து விடுவேன். நான் அதன்வழியே பார்க்கும்போது என்னுடைய கவனத்தில் இருந்து பழைய உலகம் நழுவிவிடும்.

விஞ்ஞானியின் வேலை கவன ஒருமையுடன் மேற்கொள்ளப் படுவது. இதனை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். யோகாவை நோக்கி எடுத்து வைக்கிற முதல் அடி அறிவியல்தான். காரணம் உங்களுடைய கவன ஒருமையே யோகாவில் நீங்கள் எடுத்து வைக்கிற முதல் அடியாக இருக்க முடியும். ஒரே இடத்தில் இருந்து விடாமல் வளர்ந்து கொண்டே போகிற விஞ்ஞானி ஒரு யோகியாகி விடுவான். காரணம், 'கவன ஒருமை' என்கிற அடிப்படையான ஒன்றை அவன் நிறைவேற்றி விடுகிறான்.

'தாரணை' என்கிற கவன ஒருமை தியானப் பொருளில் மனதைக் கட்டுப்படுத்தி வைக்கிறது.

தியானத்தில் மனம் எவ்விதக் குறுக்கீடுமின்றித் தன்னுடைய இலக்கைத் தொடர்கிறது.

முதலாவது - கவன ஒருமை. கும்பலாய் கிடக்கும் பொருள்களை விட்டுவிட்டு ஒரு பொருளை மட்டும் தேர்ந்து கொள்வது. ஒரு பொருளைத் தேர்ந்து கொண்டு விட்டால் உங்கள் பிரக்ஞை அந்த ஒன்றை மட்டுமே தன்னுள் தக்க வைத்துக் கொள்ளும். கவன ஒருமை (concentration) என்பது வேறேயென்ன? தற்போது அடுத்த நடவடிக்கை பிரக்ஞை (consciousness)யானது எவ்விதத் தடையுமின்றி பொருளை நோக்கிச் செல்வதாகும். ஒரு மின் பொறி விளக்கின் ஒளி எவ்விதக் குறுக்கீடுமின்றி ஊடுருவிச் செல்லுமே அப்படி. நீங்கள் ஒரு பானையில் உள்ள நீரை இன்னொரு பானையில் ஊற்றுகிற மாதிரிதான் அது. அதில் தடையேது, எவ்வித குறுக்கீடு மின்றி நடக்கிற காரியம் அது. ஒரு பாத்திரத்தில் உள்ள எண்ணெயை இன்னொரு பார்த்திரத்துக்கு மாற்றுகிறீர்கள். அது இடையீடின்றித் தொடர்ச்சியாய் நடப்பது, அதில் சீர்த்தன்மை கெடுவதில்லை.

தியானம் என்பது - தியானப் பொருளின்மீது எவ்விதத் தடையும் இன்றி உங்கள் கவனம் தொடர்ச்சியாய் இருந்து கொண்டிருப்பதே யாகும். காரணம் - ஒவ்வொரு தடையும் நீங்கள் அமைதிக்குலைவுற்ற தையே குறிக்கும். நீங்கள் போக வேண்டிய இடத்துக்கு மாறாக வேறெங்கோ சென்று விடுகிறீர்கள். முதலாவதை அடைந்தவருக்கு இரண்டாவதை அடைவதில் கஷ்டமில்லை. நீங்கள் முதலாவதை அடையாவிடில் இரண்டாவது சாத்தியமற்றுப் போய்விடும். நீங்கள் பல பொருள்களையும் கைவிட்டு, ஒன்றை மட்டும் தேர்ந்து கொள்கிற போது உங்கள் பிரக்ஞையில் உள்ள அத்தனை இடைவெளிகளையும், சிதறல்களையும் நீங்கள் விட்டுவிட்டு ஒன்றில் மட்டுமே உங்கள் கவனத்தை ஒரேயடியாய் கொட்டுகிறீர்கள்.

நீங்கள் ஒரு பொருளைப் பார்க்கிறபோது அந்தப்பொருள் தன்னுடைய தன்மைகளை வெளிப்படுத்துகிறது. கடவுளின் அத்தனை பண்புகளையும் ஒரு சிறிய பொருளால் வெளிப்படுத்திக் காட்ட முடியும்.

டென்னிஸன் என்றொரு கவிஞர் இருந்தார். அவர் காலைப் பொழுதொன்றில் உலவி வரச் சென்றபோது ஒரு குட்டிச்சுவர் எதிர்ப்பட்டது. அந்தச் சுவரில் புல் வளர்ந்து, ஒரு சிறிய பூவும் பூத்திருந்தது. அவர் அந்தப் பூவைப் பார்த்தார். அது காலை நேரம். அவர் இறுக்கம் தளர்ந்தவராய், மகிழ்ச்சியாய் தன்னை உணர்ந்திருக்க வேண்டும். அவருள் சக்தி நிரம்பி வழிந்திருக்க வேண்டும். சூரியன் மேலெழுந்து கொண்டிருந்தது. உடனடியாய் அவருடைய மனத்தில் ஒரு எண்ணம் தோன்றியது. 'உன்னுடைய வேர் (மூலம்) எதுவென்று நான் அறிந்து கொண்டால், ஒட்டுமொத்த உலகத்தையும் அறிந்தவனாவேன்' என்பதாய். காரணம், ஒவ்வொரு சிறு பகுதியும் உலகத்தின சிறிய வடிவமாயிருப்பதுான்.

கடலின் ஒவ்வொரு துளியும் அதன்பகுதியாய் இருப்பதைப் போலத்தான் பொருளின் ஒவ்வொரு சிறு பகுதியும் உலகத்தைத் தன்னுள் கொண்டுள்ளது. கடலின் ஒரு துளியை - அதன் இயல்பை நீங்கள் அறிந்து கொள்ள முடிந்தால் கடலையே அறிந்து கொண்ட வராவீர்கள்.ஒவ்வொரு துளியையும் அறிந்து கொள்ள வேண்டும் என்பதில்லை. ஒரு துளி போதுமானது. கவன ஒருமை அந்தத் துளியின் தன்மைகளை வெளிப்படுத்தும். அப்போது துளி கடலாகிவிடும்.

பிரக்ஞை (consciousness) யின் தன்மைகளை தியானம் வெளிப் படுத்துகிறது. தனி நபர் சார்ந்த உணர்வு பிரபஞ்ச உணர்வாகிறது.

முதலில் பொருள் வெளிப்படுத்துகிறது. அடுத்து பொருளின் மூலம் வெளிப்படுத்துகிறது. எந்தவொரு பொருளை நோக்கியும் பிரக்ஞையின் ஓட்டம் தடையற்றதாயிருக்கும். அந்தத் தடையற்ற ஓட்டம் ஓர் ஆற்று நீரின் ஓட்டத்தைப்போல் எவ்விதக் குறுக்கீடு மற்றதாயிருக்கும். அதுவரை நீங்கள் சுமந்திருந்த அக உணர்வை முதல் முறையாய்த் தெரிந்து கொள்கிறீர்கள்: நீங்கள் யார் என்பதை.

பிரக்ஞையின் தடையற்ற ஓட்டத்தில் தன்முனைப்பு (Ego) மறைந்து விடுகிறது. நீங்கள் சுயத்தை, அகந்தையற்ற தன்னைமற்ற சுயத்தை அடைகிறீர்கள். நீங்களும் ஒரு கடவாகி விடுகிறீர்கள்.

இரண்டாவது, ஆழ்ந்த சிந்தனை. ஆழ்ந்து சிந்திப்பது கலைஞனின் வழி, கவனத்தை ஒருமுனைப்படுத்துவது விஞ்ஞானியின் வழி. கலைஞன் தன்னுடன் தொடர்புடையவனாய் இருக்கிறான், விஞ்ஞானி வெளியுலகுடன் தொடர்புடையவனாய் இருக்கிறான். ஒரு விஞ்ஞானி எதையேனும் கொண்டு வந்தால் அதைப் புறவுலகில் இருந்தே கொண்டு வருகிறான். கலைஞன் எதையேனும் கொண்டு வருகிற போது தனக்குள் இருந்ததுதான் அதைக் கொண்டு வருகிறான். ஒரு கவிதை - தனது அடியாழத்தில் இருந்தே அவன் தோண்டியெடுக்கிறான். ஓர் ஓவியம் - அவனது அடியாழத்தில் இருந்தே அது உருவெடுக்கும். புறநோக்கு பற்றிக் கலைஞனிடம் கேட்கக்கூடாது. அவன் அகநோக்குடையவன்.

'வான் காக்'கினுடைய மரங்களை நீங்கள் பார்த்ததுண்டா? அவை ஏறக்குறைய விண்ணை முட்டும் உயரத்தில் இருக்கும். அவை நட்சத்திரங்களைத் தொடும். வான் காக்கின் ஓவியங்களிலன்றி வேறெங்கும் அத்தகைய மரங்களை நீங்கள் பார்க்க முடியாது. அந்த ஓவியங்களில் நட்சத்திரங்கள் சிறியதாகவும் மரங்கள் பெரியதாகவும் இருக்கும். வான் காக்கிடம் யாரோ கேட்டார்கள். 'இந்த மரங்களை நீங்கள் எங்கிருந்து படைத்தீர்கள்? இத்தகைய மரங்களை நாங்கள் ஒருபோதும் கண்டதில்லை' என்று. அவர் சொன்னார். 'என்னுள் இருந்து. காரணம், மரங்கள் எனக்கு வானை அடையத் துடிக்கும் மண்ணின் விருப்பங்களாகவே தெரிகின்றன' என்று. 'வானை அடையத் துடிக்கும் மண்ணின் விருப்பங்கள்' என்கிற போது மரம் முழுமையாய் உருமாற்றம் கொண்டு விடுகிறது. அதனை முழுமையான மாற்றம் (metamorphosis) எனலாம். அந்நிலையில் மரம் ஒரு பொருளல்ல, அது அகவுணர்வாகி விடுகிறது. ஓவியன் தானே ஒரு மரமாவதன் மூலம் மரத்தைத் தெளிவாகப் புரிந்து கொள்கிறான்.

ஜென் குருமார்களைப் பற்றிப் பல நேர்த்தியான கதைகள் உண்டு. அவற்றின் நேர்த்திக்குக் காரணம் அவர்கள் சிறந்த ஓவியர்களாகவும், சிறந்த கலைஞர்களாகவும் இருந்ததுதான். வேறெந்த மதமும் அந்த அளவு ஆக்கத்திறன் கொண்டதாய் இருக்கவில்லை. ஆக்கத்திறன் இல்லாத மதம் முழுமையான மதமாய் இருக்காது - ஏதோவொன்றைத் தவறவிட்டதாயிருக்கும்.

ஜென் குரு ஒருவர் தம்முடைய சீடர்களிடம் இப்படிச் சொல்வதுண்டு. **'நீங்கள் ஒரு மூங்கிலை ஓவியமாக்க விரும்பினால் மூங்கிலாகி விடுங்கள். வேறு வழியில்லை. அதை உள்ளுக்குள் அனுபவிக்காமல்** நீங்கள் எப்படி ஒரு மூங்கிலை வரைய முடியும்? சூரிய ஒளியில் பெருமிதத்துடன் உயர்ந்து நிற்கிற, மழைக்கெதிராய் எழுந்து நிற்கிற, காற்றுக்கும் வானுக்கும் எதிராய் உறுதியான நிலையை மேற்கொள்கிற ஒரு மூங்கிலாய் உங்களை உணராமல் அது எப்படி சாத்தியமாகும்? தன்னை ஊடுருவிச் செல்லும் காற்றின் ஓசையைக் கேட்கிற மூங்கிலாய் நீங்கள் மாறவேண்டும். தன்மீது விழுகிற மழைத்துளியை உணரும் மூங்கிலாய் உங்களை உணருங்கள். மூங்கில் கேட்கிற 'குக்கூ' பறவையின் சப்தத்தை, மூங்கிலாக மாறி நீங்கள் கேட்கா விட்டால் அந்த மூங்கிலை எப்படி உங்களால் மறைய முடியும். ஒரு புகைப்படக் கருவியின் மூலம் மூங்கிலை நீங்கள் படமாக்கி விடலாம். ஆனால் அப்போது நீங்கள் ஒரு புகைப்படக்காரராக இருப்பீர்களே யன்றி ஓவியராயிருக்க மாட்டீர்கள்.

புகைப்படக்கருவி அறிவியல் உலகத்துக்குரியது. படமெடுக்கும் கருவி விஞ்ஞானப்பூர்வமானது. அது மூங்கிலின் புறவுண்மை (objectivity)யையே வெளிக்காட்டும். ஆனால் மூங்கிலைப் பார்க்கிற ஒரு குரு புறத்தில் இருந்து பார்ப்பதில்லை. அவர் கொஞ்சம் கொஞ்சமாய் தன்னை விட்டுவிடுகிறார். அவருடைய தடையற்ற பிரக்ஞை மூங்கிலின் மீது விழுகிறது. அங்கே ஒரு சந்திப்பு, திருமணம், தோழமை நிகழ்கிறது. எது மூங்கில், எது பிரக்ஞை என்று சொல்வது கடினம் - ஒவ்வொன்று தொடர்பு கொள்கிறது, ஐக்கியமடைகிறது, அத்துடன் அவற்றுக்கிடையே இருந்த எல்லைகள் மறைந்து விடுகிறது.

இரண்டாவது தியானம் - ஆழ்ந்த சிந்தனை கலைஞனின் வழியாகிறது. அதனால்தான் கலைஞர்கள் சில சமயங்களில் மறைஞானிகளை (mystics)ப்போல் கணநேரக் காட்சிகளைக் காண முடிகிறது. அதனால்தான் உரைநடையால் சொல்ல முடியாத ஒன்றைக்

கவிதை சொல்ல முடிகிறது. வெளிப்படுத்த வேறு வகையற்ற ஒன்றை ஓவியங்கள் வெளிப்படுத்தி விடும். கலைஞன் சமய நம்பிக்கை உள்ள ஒருவருக்கு, மறை ஞானிக்குச் சமீபமாய் வந்து விடுகிறான்.

ஒரு கவிஞன் கவிஞனாக மட்டுமேயிருந்து விட்டால் அவ்வளவு தான். அவன் ஓடிக்கொண்டேயிருக்க வேண்டும். பிரக்ஞையில் இருந்து தியானத்துக்கு, தியானத்தில் இருந்து சமாதி நிலைக்கு என்று அவனுடைய நிலை தொடர்ந்து மாறிக்கொண்டேயிருக்க வேண்டும்.

தியானம் என்பது தியானப்பொருள் மீதான தடையற்ற ஓட்டம். அதைச் சோதித்துப் பாருங்கள். நீங்கள் விரும்புகிற ஒன்றைத் தேர்ந் தெடுப்பது நல்லது. உங்கள் அன்புக்குரியவரை நீங்கள் தேர்ந்தெடுக் கலாம். உங்கள் குழந்தையை நீங்கள் தேர்ந்தெடுக்க முடியும். ஒரு பூவை அல்லது நீங்கள் விரும்புகிற வேறெதையும் நீஙகள் தேர்ந்தெடுக்க முடியும். காரணம் அன்பில் - நேசத்தில் எல்லாமே எளிதாகிவிடும். நீங்கள் விரும்புகிற ஒன்றை நேசிப்பது எளிதா யிருக்கும். உங்கள் அன்புக்குரியவரின் கண்களில் பாருங்கள். முதலில் - மொத்த உலகையும் மறந்து விடுங்கள். உங்கள் பிரியத்துக்குகந்தவரே உங்கள் உலகமாகட்டும். அப்போது கண்களுக்குள் பாருங்கள். எண்ணெயை ஒரு பாத்திரத்தில் இருந்து மற்றொரு பாத்திரத்தில் ஊற்றுவதுபோல் ஒரு தடையற்ற தொடர்ச்சியான ஓட்டத்தை மேற்கொண்டு அவனுக்குள் விழுவீர்கள். எவ்வித அமைதிக்குலைவும் இல்லை. திடுதிப்பென்று நீங்கள் யார் என்பதைக் கண்டுகொள்ள இயன்றவராவீர்கள். முதல் முறையாய் உங்கள் அகவுணர்வைக் கண்டுகொள்வீர்கள்.

ஆனால், இத்துடன் முடிந்து விடுவதில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். பொருளும் நோக்கமும் பூரணமான ஒன்றின் இருபகுதிகள். இரவும் பகலும் முழுமையான ஒன்றின் இரு பகுதிகள். வாழ்வும் மரணமும் ஒரு முழுமையான பிரபஞ்ச இருப்பின் இரண்டு பகுதிகள். பொருள் வெளியே இருக்கிறது, நோக்கம் உள்ளே இருக்கிறது - நீங்கள் வெளியேயும் இல்லை, உள்ளேயும் இல்லை. இதனைப் புரிந்துகொள்வது கடினம். காரணம், சாதாரணமாக 'உள்ளே செல்' என்றுதான் சொல்லப்பட்டிருக்கிறது. இது ஒரு தற்காலிகமான நிலை. ஒருவர் இதற்கும் அப்பால் செல்ல வேண்டியிருக்கும். நீங்கள் உள்ளேயும் செல்ல முடியும், வெளியேயும் வரமுடியும். எதிரெதிரான இரண்டு நிலைகளுக்கிடையே செல்லக்கூடியவராய் நீங்கள்

இருக்கிறீர்கள். எதிர் நிலைகளுக்கு (polarities) அப்பாற்பட்டவர் நீங்கள். அந்த மூன்றாவது நிலையை சமாதி நிலை ஆகும்.

**'சமாதி என்பது மனமும் பொருளும் ஒன்றாகிறபோது வாய்ப்பது'**

பொருள் நோக்கத்தில் மறைகிறபோது, நோக்கம் பொருளில் மறைகிறபோது, நோக்குவதற்கு எதுமில்லை என்றாகிறபோது நோக்குகிறவர் என்று யாரும் இருப்பதில்லை. இருமைத் தன்மை (duality) இல்லை என்றானதும் பேரமைதி ஒன்றே அங்கே விஞ்சியிருக்கும். எது இருக்கிறது என்று உங்களால் சொல்ல முடியாது. காரணம் சொல்வதற்கு யாரும் இருக்கப் போவதில்லை. சமாதியைப் பற்றி உங்களால் எதுவும் சொல்ல முடியாது, காரணம் எல்லா விவரவுரையும் மிகக் குறுகிய காலத்தில் வீழ்ச்சியுற்று விடும். நீங்கள் சொல்வது எதுவாயினும் ஒன்று விஞ்ஞான்ப்பூர்வமாகவோ அல்லது கவித்துவமாகவோதான் இருக்கும். சமயம் என்பது விவரிக்க முடியாததாய், குழப்பம் உண்டாக்குவதாய் இருக்கும்.

ஆக சமயம் சார்ந்த வெளிப்பாடு இரண்டு வகையாய் இருக் கின்றன. பதஞ்சலி விஞ்ஞானபூர்வமான சொற்பாங்கை மேற்கொள் கிறார். காரணம் சமயம் தனக்கென்று எந்தச் சொற்பாங்கையும் கொண்டிருக்கவில்லை. பூரணமான ஒன்றை எப்படிச் சொற்களால் வெளிப்படுத்துவீர்கள்? வெளிப்படுத்துவதாயின் அது பிரிக்கப்பட வேண்டும். அதுபற்றிச் சொல்வதெனில் அது பிரித்தறியப்பட வேண்டும்.

பதஞ்சலி விஞ்ஞான பூர்வமான சொற்பாங்கை மேற்கொள்கிறார். புத்தருங்கூட அதையே செய்தார். 'லாவோட்சு'வும் இயேசுவும் கவித்துவமான சொற்களைக் கையாண்டனர். ஆனால் இரண்டுமே சொற்பாங்குகள் (terminologies)தாம். அது மனதைப் பொறுத்தது. பதஞ்சலியின் மனம் விஞ்ஞானப்பூர்வமானது, தர்க்கத்திலும், பகுப்பாய்விலும் வேர்விடுவது. இயேசுவின் மனம் கவித்துவமானது. லாவோட்சு ஒரு முழுமையான கவிஞர், அவர் கவித்துவமான போக்கைத் தெரிவு செய்தார். ஆனால், இரண்டு வழிகளுமே குறுகிய காலத்தில் வீழ்ச்சியடைகிறவைதாம். ஒருவர் அதற்குமப்பால் செல்ல வேண்டியிருக்கும்.

'மனமும் பொருளும் ஒன்றாகி விடுகிறபோது சமாதி நிலை வாய்க்கிறது.' ஆம், மனம் பொருளுடன் ஒன்றாகி விடுகிறபோது

அறிபவரென்றோ. அறியப்படுவதென்றோ எதுவும் இருப்பதில்லை. இதனை நீங்கள் அறிந்து கொள்ளாவிடில். அறியப்படுவதற்கும் அறிபவருக்கும் அப்பால் உள்ள அறிவை - உங்கள் வாழ்க்கையை நீங்கள் தவறவிடுவீர்கள். அவ்வப்போது வண்ணத்துப் பூச்சிகளையும். கனவுகளையும் துரத்திச் செல்கிற அற்ப சந்தோஷம் உங்களுக்குக் கிடைக்கலாம். ஆனால், நிறைவான பேரின்ப நிலையை நீங்கள் தவறவிட்டு விடுவீர்கள்.

'வீட்டு வேலைகள் செய்யும் பணிப்பெண் ஒருத்தி தனது அறையில் ஒரு தேன் ஜாடியை வைத்திருந்தாள். அதன் இனிய நறுமணத்தால் பல ஈக்கள் அதன்பால் ஈர்க்கப்பட்டன. அவை தேனில் கால் பதித்து தேனை ஆவலுடன் புசித்தன. அவற்றின் பாதங்களில் தேனின் பிசுபிசுப்பு இருந்ததால் தங்கள் இறகைப் பயன்படுத்தி அவற்றால் பறக்க முடியவில்லை. அவை மூச்சுத்திணறி சாக நேர்ந்தது. செத்துக் கொண்டிருந்த போது அந்த ஈக்களில் ஓர் ஈ சொன்னது. 'ஆ, அற்ப சந்தோசத்துக்காக நம்மையே அழித்துக்கொள்ளத் தயாரான நாம் எத்தனை பெரிய முட்டாள்கள்!' என்று.

இது உங்களுக்கும் நிகழக் கூடியது என்பதை நினைவில் கொள்ளுங்கள். உங்களுடைய சிறகுகளை விரிக்க முடியாத அளவுக்கு இந்த உலகத்துடன் நீங்கள் ஒட்டிக்கொண்டு விடலாம்.

உங்களுடைய நிறைவான பேரின்ப நிலையை மறக்குமளவிற்கு நீங்கள் சுமைகளால் அழுத்தப்படலாம். கடற்கரைக் கிளிஞ்சல்களை கூழாங்கற்களைச் சேகரிப்பதில் உங்கள் இருப்புணர்வின் நிறைவான பேரின்பப் பெருநிதியத்தை நீங்கள் தவற விட்டிருக்கலாம். இப்படித்தான் ஆகிவிடுகிறது என்பதை நினைவில் கொள்ளுங்கள். வாழ்வின் இந்தச் சிறை தண்டனையில் சிக்காமல் இருப்பது அரிதாய் வெகுசிலர் மட்டுமே.

நீங்கள் மகிழ்ச்சியை அனுபவிக்க வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. சூரிய ஒளி அழகாயிருக்கிறது. பூக்களும் வண்ணத்துப் பூச்சிகளுந்தான். ஆனால் அவற்றில் தொலைந்து போய் விடாதீர்கள். அனுபவிப்பதிலும் ஆனந்திப்பதிலும் தவறேயில்லை. ஆனால் ஒன்றை நினைவில் கொள்ளுங்கள். மிக அழகான. நேர்த்தியான ஒன்று காத்திருக்கிறது: சூரிய ஒளியில் கொஞ்சம் இளைப்பாறுங்கள். ஆனால் அதையே வாழ்க்கை முறையாக்கிக் கொண்டு விடாதீர்கள். சில நேரங்களில் ஓய்வு கொள்வதும். சில

நேரங்களில் கடலோரக் கூழாங்கற்களுடன் விளையாடி மகிழ்வதுமாய் இருக்க வேண்டும். அதில் தவறேயில்லை. ஒரு விடுமுறையைப் போல், இன்பச் சுற்றுலாவைப்போல் அதற்கும் இடமளிக்க வேண்டும். ஆனால் அதையே வாழ்க்கை முறையாக்கிக் கொண்டு விடாதீர்கள். அந்நிலையில் நீங்கள் அதைத் தவறவிட்டு விடுவீர்கள். உங்கள் கவனம் எங்கே பதிந்தாலும் அதுவே உங்கள் வாழ்வின் மெய்ம்மை யாகி (reality) விடும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் கூழாங்கல்லில் கவனம் வைத்தால் அவை வைரங்களாகி விடும். உங்கள் கவனம் எங்கே படிகிறதோ அங்கேயிருக்கிறது உங்களுடைய செல்வம்.

ஒரு சமயம் இப்படி நடந்ததாய் நான் கேள்விப்பட்டிருக்கிறேன்:

இரயில்வே ஊழியர் ஒருவர் குளிர்பதனூட்டப் பெற்ற இரயில் பெட்டியொன்றில் சிக்கிக் கொண்டார். அந்த நெருக்கடி நிலையில் இருந்து அவரால் தப்பவோ, அடுத்தவர் கவனத்தை ஈர்க்கவோ இயலவில்லை. சாவைச் சமீபத்துக் கொண்டிருந்த அவர் அந்தப் பெட்டியின் சுவர்ப்பகுதியில் இவ்வாறு கிறுக்கியிருந்தார்:

'நான் குளிரில் உறைந்து கொண்டிருக்கிறேன். செயலின்றிக் காத்திருப்பதைத் தவிர வேறொன்றும் செய்வதற்கில்லை. இதுவே என்னுடைய கடைசி வார்த்தைகளாயிருக்கும்.' அந்த இரயில் பெட்டியைத் திறந்து பார்த்தவர்கள் அவர் செத்துக் கிடப்பதைக் கண்டு திகைப்புற்றனர். அவருடைய சாவுக்கான காரணம் தெரியவில்லை. அந்தப் பெட்டியின் வெப்பநிலை மிதமான ஐம்பத்தியாறு டிகிரியில் தான் இருந்தது. உறையச் செய்யும் உபகரணம் அவருடைய மனதில்தான் வேலை செய்திருக்கும். நல்ல காற்று நிறையவே இருந்தது. அவர் மூச்சுத் திணறியிருக்கவில்லை.

தன்னுடைய தவறான கவனமே அவரைச் சாகடித்திருக்கிறது. தனது அச்சங்களால் அவர் செத்துப் போனார். அது தற்கொலையன்றி வேறெயென்ன?

நீங்கள் எங்கே கவனம் வைத்தாலும் அதுவே உங்கள் நடைமுறை (reality) யாகி விடுகிறது. அது நடைமுறையாகி விட்டதுமே உங்களையும் உங்கள் கவனத்தையும் தன்பால் ஈர்த்துக் கொள்ளும் வலிமையைப் பெற்றுவிடும். அந்நிலையில் நீங்கள் அதன்மீது அதிகக் கவனம் செலுத்துகிறீர்கள். அதுவே உண்மையாகி விடுகிறது. உங்கள் மனம் தோற்றுவித்த மாயமான ஒன்று காலப்போக்கில் உங்கள்

நடைமுறையாகி விட எது உண்மையானதோ இயல்பானதோ அது மறக்கப்பட்டு விடுகிறது, முற்றிலுமாய்.

உண்மையான ஒன்றே நாடிப் பெற வேண்டியது. அதை அடைவதற்கான ஒரே வழி - முதலாவதாக பல்வேறு பொருள்களை, அப்பொருள்களின் மீதான இலக்குகளை விட்டுவிடுவதுதான். ஒரு பொருள் ஒரே இலக்கு என்று இருந்துவிட வேண்டும். இரண்டாவது, அமைதிக்குலைவை ஏற்படுத்துகின்றவற்றை விட்டுவிடுவது. உங்கள் உணர்வு அந்தப் பொருளின்மீது தடையின்றி விழுந்திருக்கட்டும். மூன்றாவது, தானாக நிகழ்வது. இந்த இரண்டு நிலைமைகளும் நிறைவேற்றப்பட்டு விட்டால் சமாதி இசைவுடன் நிகழ்ந்து விடும். திடுதிப்பென்று ஒருநாள் பொருளும், அதுபற்றிய நோக்கமும் மறைந்து விடுகிறது. விருந்தாளியும், உபசரிப்பவரும் மறைந்து விடுகிறார்கள். அமைதி ஆட்சி செய்கிறது, நிசப்தம் ஆட்சி செய்கிறது. அந்த அமைதியில் வாழ்வின் குறிக்கோளை நீங்கள் அடைந்து விடுகிறீர்கள்.

பதஞ்சலி சொல்கிறார்:

'ஒரு சேர மேற்கொள்ளப்பட்ட தாரணையும், தியானமும், சமாதியும் 'சம்யமா'வை உண்டாக்குகிறது என்று.

எப்பேர்ப்பட்ட ஓர் அருமையான விளக்கம்! வழக்கத்தில் சம்யமா ஓர் ஒழுங்கு முறையாய்க் கருதப்படுவது, குணாதிசயத்தின் கட்டுப் படுத்தப்பட்ட நிலையில் கருதிக்கொள்ளப்படுவது. ஆனால், உண்மை யில் அப்படியில்லை. சம்யமா என்பது பொருளும் நோக்கமும் மறைகிறபோது அடையப்படுகிற ஒரு நடுநிலையமைதி. இருமைத் தன்மை (duality) இனியும் இருக்கவில்லை என்ற நிலையில் உண்டாகும் அமைதி. அத்துடன் அந்நிலையில் நீங்கள் பிரித்தறியப் படுவதில்லை, ஒருமையுற்று விடுகிறீர்கள்.

சில சமயங்களில் அது இயல்பாய் நிகழ்ந்து விடுகிறது, பதஞ்சலியால் கண்டறியப்பட்டிருக்காது. சிலசமயம் அது இயல்பாய் நிகழ்வதுண்டு. உங்களுக்கும். மெய்ம்மைக்கான தருணங்கள் எல்லாருடைய வாழ்விலும் உண்டு. அப்படியில்லாத ஒரு மனிதனை உங்களால் காண முடியாது. எதிர்பாராதவிதமாய் சில நேரங்களில் அது எப்படி நடக்கிறதென்கிற இயக்கு நுட்பத்தை அறியாமலே நீங்கள் இசைவாகி விடுகிறீர்கள். ஆனால், சில நேரங்களில் நீங்கள் இசைவுற்றதும் (tune) அது உடனடியாய் நடந்து விடுகிறது.

ஓர் ஆசாமி எனக்குக் கடிதம் எழுதினார். 'இன்று நான் ஐந்து நிமிட காலம் மெய்ம்மையை அடைந்தேன்' என்று. 'மெய்ம்மையின் ஐந்து நிமிடங்கள்' என்கிற அந்தச் சொற்றொடர் எனக்குப் பிடித்திருக் கிறது. 'அது எப்படி நடந்தது?' என்று நான் விசாரித்தேன். தான் சில நாட்களுக்கு நோய்வாய்ப்பட்டிருந்ததாய் அவர் சொன்னார். இது நம்ப முடியாத ஒன்று. ஆனாலும் உண்மை. ரொம்ப பேருக்கு பிணி வாய்ப்பட்ட நிலையில் அமைதி வாய்க்கிறது. காரணம் நோயுற்ற நிலையில் உங்கள் இயல்பு வாழ்க்கை தடைப்பட்டு விடும். அந்த மனிதர் சில நாட்களுக்கு - படுக்கை விட்டு எழ முடியாத அளவு நோயில் இருந்தார். அது எதையும் செய்யாத ஓய்வு நிலை. அவர் நான்கைந்து நாட்களுக்கு முறுக்கேறிய உணர்ச்சிகளில் இருந்து விடுபட்டு தணிவு நிலையில் இருந்தமையால் ஒருநாள் எதிர்பாராதவிதமாய் அது நடந்தது. எல்லாமே நின்றுவிட்டிருந்தன. காலம், இடைவெளி என்பதெல்லாம் காணாதொழிந்தது. அங்கு நோக்கும்படியாய் எதுவும் இல்லை. நோக்குபவரும் இல்லை. திடுதிப்பென்று அங்கே ஒருமை நிலவியது. எல்லாமே ஒரு நடை முறையின் கீழ் வந்துவிட்ட ஒருமை. அத்தனையும் ஒற்றைப் படைப்பாய் உருண்டு திரண்டு விட்ட ஒருமை.

புணர்ச்சி நிலையில் ஒரு சிலர்க்கு மட்டுமே அது நேரிடுகிறது. உச்சக்கட்டத்தின் முழுமை! அந்த உச்சக்கட்டத்துக்குப் பிறகு எல்லாமே அமைதியாகி விடுகிறது. ஒழுங்கு பெற்று விடுகிறது. சம்பந்தப்பட்டவர் முறுக்கேறிய உணர்ச்சிகளில் இருந்து விடுபட்டு, தணிவடைகிறார். உறையும் தன்மை போய்விடுகிறது. அதற்கு மேலும் அவர் இறுக்கமாயிருப்பதில்லை. புயலுக்குப் பின் வருமே அந்த அமைதி வந்து விடுகிறது. அப்போது எதிர்பாராத விதமாய் மெய்ம்மை அங்கே இடம் பெற்று விடுகிறது.

சில சமயங்களில் காற்றைச் சாடிக்கொண்டு வெயிலில் நடப்பது மகிழ்ச்சியளிப்பதாயிருக்கும். சில நேரங்களில் ஆற்றின் போக்கில் நீந்திச் செல்வதும், சில நேரங்களில் எதுவுமே செய்யாமல் சும்மா யிருப்பதும், நட்சத்திரங்களைப் பார்த்தபடி மணலில் இளைப்பாறிக் கிடப்பதும் அமைதியைத் தரும்.

அவையெல்லாம் எதிர்பாராது நடப்பவை. அவை தற்செயலாய் நடப்பவை என்பதாலேயே உங்கள் ஒட்டுமொத்த வாழ்க்கை முறைக்குத் தகுதியாயிருப்பதில்லை. அவை பொருந்தவில்லை

என்பதால் நீங்கள் அவற்றை மறந்து விடுகிறீர்கள். நீங்கள் அவற்றின் மீது போதிய கவனம் செலுத்துவதில்லை. தோளைக் குலுக்கியபடி அவற்றைப் பற்றிய எல்லாவற்றையும் நீங்கள் மறந்து விடுகிறீர்கள். ஒவ்வொருவர் வாழ்விலும் மெய்ம்மை நுழைந்து விடுகிறது. ஏதாவதொரு வகையில்.

சில சமயங்களில் எதிர்பாராத விதத்தில் நிகழ்ந்து விடுகிறது என்றாலும், யோகா அதை அடைதற்கேற்ற முறையான வழியாகும். எதிர்பாராதவற்றில் இருந்தும், ஒத்த நிகழ்வுகளில் இருந்தும் யோகா ஓர் அறிவியலை உண்டாக்குகிறது.

ஒருசேர மேற்கொள்ளப்பட்ட அந்த மூன்றும் 'சம்யமா'வைத் தோற்றுவிக்கிறது - ஒருமுனைப்படுத்துதல், தியானம், சமாதி என்கிற மூன்றும். அவ்வ முக்காலியின் மூன்று கால்கள் மாதிரியான தொகுதி.

'அதில் தேர்ச்சி பெறுவதன் மூலம் வாய்க்கிறது உன்னதமான ஒளி - மெய்ஞ்ஞானம்'

கவன ஒருமை, தியானம், சமாதி என்கிற இம்மூன்றையும் ஒருசேரப் பெற்றவர்க்குக் கிடைக்கிறது மெய்ஞ்ஞானம்.

உயரச் செல்லுங்கள், தொலைதூரம் செல்லுங்கள். அந்த வானம் உங்கள் குறிக்கோளாகும். நட்சத்திரத்துக்குக் குறி வையுங்கள். அந்த வானத்தைப்போல் விசாலமடைகிறவரை உங்களுக்கு ஓய்வேது? பயணம் இன்னும் முடிந்து விடவில்லை. முடிவற்றதோர் பேரொளியாய், நட்சத்திரமாய் மாறாதவரை மனநிறைவு கொண்டு விடாதீர்கள். அந்த நேர்த்தியான தெய்வத்தன்மையுடைய அதிருப்தி உங்களுக்குள் ஒரு தீயாய் எரியட்டும். ஒருநாள் உங்கள் ஒட்டுமொத்த முயற்சிகளில் இருந்தும் அந்த நட்சத்திரம் தோன்றும். நீங்கள் முடிவற்ற (eternal) பேரொளியாய் திகழ்வீர்கள்.

'அதில் தேர்ச்சி பெறுவதன் மூலம் அடையப்படுகிறது மெய்ஞ்ஞானம்.' இந்த மூன்று படிகளிலும் (செயல் நிலைகள்) நீங்கள் தேர்ச்சி பெற்றதும் அந்த ஒளி உங்களுக்குக் கிடைக்கிறது. அந்த உள்ளொளியின் பிரகாசத்திலேயே நீங்கள் எப்போதும் வாழ்வீர்கள். 'இன்னும் விலகாத இருளில் இருந்து கொண்டு விடியலை அறிவிப்பு செய்கிறது சேவல்'. நள்ளிரவில் ஒளிவிடும் சூரியன்! நீங்கள் உள்ளொளியைப் பெற்றிருந்தால், இருளிருக்காது. நீங்கள் எங்கு சென்றாலும் உங்கள் உள்ளொளி உங்களைத் தொடர்கிறது. நீங்கள் அதைக் கொண்டு இயங்குகிறீர்கள் அதுவாகவே இருக்கிறீர்கள்.

நீங்கள் எங்கிருந்தாலும் உங்கள் மனம் உங்களுக்குத் திருப்தி யளிக்க முயல்கிறது என்பதைக் கருத்தில் கொள்ளுங்கள். இந்த வாழ்க்கையில் இதற்குமேல் எதுவும் இல்லை என்கிறது மனம். நீங்கள் வெற்றி பெற்று விட்டீர்கள் என்று நம்பிக்கையூட்ட முயற்சிக்கிறது உங்கள் மனம். நீங்கள் அதிருப்தியுற்றுவிட அனுமதிக்காது அந்த மனம்.அறிவுக்கு ஏற்புடைய விளக்கங்களை அது எப்போதும் கண்டுபிடித்துக் கொள்ளும் அந்த விளக்கங்களை நீங்கள் காதில் போட்டுக்கொள்ள வேண்டியதில்லை. அவை உண்மையான காரணங் களாய் இருக்காது. அவை மனத்தின் தந்திரங்கள், காரணம் மனம் ஒன்றை நோக்கிச் செல்ல விரும்புவதில்லை. அது தேவைக்கேற்றபடி செயல்படாது. மனம் அடிப்படையில் சோம்பலுடையது. அது ஒரு வகை உட்பிறட்சி(entropy) ஆகும். மனம் நிலைகொள்ள விரும்புகிறது. உங்கள் இருப்பிடம் எதுவாயினும் ஆகட்டும், ஆனால் ஓர் இடத்தில் இருந்து கொள்ளுங்கள். குறிப்பிட்ட நோக்கம் ஏதுமின்றி அலைந்து திரியாதீர்கள்.

சந்நியாசி தன்னுணர்வோடு அலைந்து திரிபவன். சந்நியாசி என்பதன் பொருள் நாடோடியாகி விடு என்பதுதான். அவன் தேடி யலைந்தபடி இருப்பான். 'தொலைவான உயரங்களை ஏறிக் கடந்திடு. உன்னுடைய குறிக்கோள் அந்த வானம், நீ அடைய வேண்டியது அந்த நட்சத்திரத்தை'. மனத்தின் பேச்சுக்கு நீ செவிசாய்க்க வேண்டிய தில்லை.

ஒருநாள் இரவில் இது நடந்தது.

'தன் வீட்டுச் சாவியை ஒரு விளக்குக் கம்பத்தில் பொருத்த முயன்று கொண்டிருந்த குடிகாரனைக் கவனித்துக் கொண்டிருந்தார் போலீஸ்காரர் ஒருத்தர்.

'கிழவா அது பிரயோசனப்படாது. வீட்டில் யாருமில்லை' என்றார் அவர்.

உணர்வு மழுங்கிய அந்தக் குடிகாரன் சொன்னான். 'அங்கதான் நீ தப்பு பண்ற. மேல விளக்கு எரியுதுல்ல' என்று.

குடிவெறியில் உணர்வு மழுங்கிய குடிகாரனைப் போன்றது மனம். அது விவாதம் செய்தபடி இருக்கும். காரணங்களைக் கற்பிக்கும். அது சொல்லிக்கொள்ளும்: 'இதற்கு மேல் என்ன இருக்கு?' என்று. சில நாட்களுக்கு முன் ஓர் அரசியல்வாதி என்னிடம் வந்தார். 'இதுக்குமேல என்ன ஆகணும்? ஒரு கிராமத்தில் ஏழைக்குடும்பத்தில் பிறந்தவன் நான். தற்போது 'கேபினட்' (Cabinet) அந்தஸ்துள்ள அமைச்சராகி

விட்டேன். வாழ்க்கைல வேறு என்ன வேணும்?' என்று கேட்டார். அந்த ஆள் வாழ்க்கையில் இருந்து வேறு எதைப் பெறுவது. அவருக்குத் திருப்தி கிடைத்துவிட்டது. ஒரு வறிய குடும்பத்தில் பிறந்த கிராமத்து ஆசாமி அதற்குமேல் வேறு எதைத்தான் எதிர்பார்க்க முடியும்? ஒட்டுமொத்த வானமே கைக்கு வருகிறபோது அவர் அமைச்சர் பதவியில் திருப்தி கொண்டவராகி விடுகிறார். அந்த வகையில் ஒரேயடியாய் முடிந்துவிடாதீர்கள்.

ஒரு கடவுளைப் போல் மதிப்பிற்கும் மரியாதைக்கும் உரிய நிலையை அடைகிறவரை உங்கள் பயணத்தை நீங்கள் தொடர்ந்து தான் ஆகவேண்டும். இடைவழியில் அங்கங்கே இளைப்பாறுங்கள். ஆனால் ஒன்றை நினைவில் வையுங்கள். அது இராத்தங்கலாய் மட்டுமே இருக்க முடியும். காலையில் நம் பாட்டுக்குப் போய்க் கொண்டேயிருக்க வேண்டியதுதான்.

சிலர், தங்களுடைய உலகாயத சாதனைகளிலேயே திருப்தி யடைந்து விடுகிறார்கள். சிலரோ தங்களுடைய குருக்களின் (சமய குருமார்கள்) வாக்குறுதிகளில் திருப்தி காண்கின்றனர். இந்த இரண்டாம் வகையினர் சமய நம்பிக்கை கொண்டவர்கள். அவர்கர் பெறும் வாக்குறுதிகளை - நம்பிக்கை உணர்வுகளை சமயம் சார்ந்தது என்றும் சொல்வதற்கில்லை - காரணம் சமயம் ஒரு வாக்குறுதியல்ல. அது தாமாக முயன்று அடையப் பெறுகிற ஒன்று. நீங்கள்தாம் அதை அடைந்தாக வேண்டும். வேறு யாரும் அந்த நம்பிக்கையை உங்க ளுக்கு வழங்க முடியாது. எல்லா வாக்குறுதிகளும் ஆறுதலளிப்பவை தாம். ஆறுதல்கள் ஆபத்தானவை. அவை அபினியை (opium)ப் போல் மயக்கத்தை அளிக்கும்.

நடந்த ஒன்று:

முதல் உதவிப் பயிற்சிக்கான தேர்வின்போது, ஒரு சமய குருவிடம் இப்படிக் கேட்டார்கள். (அவரும் முதல் உதவிப் பயிற்சி எடுத்தவர்தான்) 'ஒரு ஆள் மயங்கிக் கிடக்கும் நிலையில் நீங்கள் என்ன செய்வீர்கள்?' என்று.

'நான் கொஞ்சம் பிராந்தியை அவனுக்கு ஊற்றிக் கொடுப்பேன்' என்றார் அந்த மதகுரு.

'ஒருவேளை பிராந்தி கிடைக்காவிட்டால்?'

'நான் அதுபற்றிய வாக்குறுதியை அளிப்பேன்' என்று பதில் வந்தது.

குருமார்கள் எப்போதுமே அதைத்தான் சொல்கிறார்கள். அவர்கள் வாக்குறுதி அளிப்பதில் கில்லாடிகள் - உறுதிமொழிப் பத்திரங்களை அவர்கள் வழங்கிக்கொண்டே இருப்பார்கள். 'கவலையை விடுங்கள். தேவாலயத்துக்கு நன்கொடை வழங்குங்கள். ஏழைகளுக்கு நிதியுதவி செய்யுங்கள். மருத்துவமனை கட்டுங்கள். நாங்கள் உங்களுக்கு நம்பிக்கை உணர்வை வழங்குகிறோம்' என்று சொல்லிக் கொண்டே போவார்கள்.

யோகா சுய முயற்சியால் செய்யப்படுவது. யோகாவிற்கு குருமார்கள் இல்லை. தங்களுடைய சுயமுயற்சியால் அதை அடைந்த ஆசிரியர்கள்தாம் உண்டு. அதை எப்படி அடைவதென்பதை அவர்களுடைய அறிவின் ஒளியில் இருந்து நீங்கள் கற்றுக் கொள்ளுங்கள். குருமார்களின் வாக்குறுதிகளைத் தவிர்த்து விடுங்கள். உலகிலேயே மிகவும் ஆபத்தான பேர்வழிகள் அவர்கள். காரணம், நீங்கள் அதிருப்தி கொள்ள ஒருபோதும் அவர்கள் இடமளிப்பதில்லை. அவர்கள் உங்களுக்கு சமாதானம் அளித்துக் கொண்டே இருப்பார்கள். நீங்கள் முயன்று அடைவதற்கு முன்பே உங்களுக்குச் சமாதானம் கிடைக்குமெனில் நீங்கள் ஏமாற்றப்பட்டவராவீர்கள்; வஞ்சிக்கப்பட்ட வராவீர்கள். யோகா முயற்சியில் பெரிய அளவிலான முயற்சியில் நம்பிக்கை வைக்கிறது. ஒருவர் போற்றத்தக்கவராய் இருக்க வேண்டும். கடவுட் தன்மையை அவர் ஈட்ட வேண்டும். எனில், அதற்கான விலையை நீங்கள் கொடுக்க வேண்டியிருக்கும்.

முந்தைய வேல்ஸ் இளவரசரிடம் யாரோ கேட்டார்கள், 'நாகரிகம் (civilization) பற்றிய தங்கள் கருத்து என்ன?' என்று.

'ம்.. நல்ல யோசனைதான். யாராவது ஒருவர் அதைத் தொடங்கி வைக்கலாமே' என்று பதில் வந்தது இளவரசரிடமிருந்து.

யோகா என்பது ஒரு கருத்து அல்ல, பயிற்சி. அது அப்யாசம். அது ஓர் ஒழுங்குமுறை. உள்ளார்ந்த மாற்றத்தை ஏற்படுத்தும் அறிவியல் அது. உங்களுக்காக வேறு யாரும் அதைத் தொடங்கி வைக்க மாட்டார்கள். நீங்கள்தான் தொடங்கியாக வேண்டும். உங்களை நீங்கள் நம்ப வேண்டும் என்று யோகா போதிக்கிறது. அது உங்களிடம் திடமான நம்பிக்கையை நீங்கள் வைக்க வேண்டும் என்கிறது. இந்தப் பயணத்தை நீங்கள் தனியே மேற்கொள்ள வேண்டும் என்று யோகா கற்பிக்கிறது. ஆசான் வழியைச் சுட்டிக் காட்டுவதோடு சரி. நீங்கள்தாம் அதைப் பின்பற்றிச் செல்ல வேண்டும்.

**நா**ன் ஒரு பிச்சைக்காரனுக்கு என்ன செய்ய முடியும்? நான் அவனுக்கு ஒரு ரூபாய் கொடுத்தாலும், கொடுக்காவிட்டாலும் அவன் பிச்சைக்காரனாகத்தான் இருக்கப் போகிறான்.

பிச்சைக்காரன் ஒரு பிரச்சினையல்ல. பிச்சைக்காரன் பிரச்சினை யாயிருந்தால் அவனைக் கடந்து போகிறவர்கள் அப்படித்தான் எண்ணிக் கொள்வார்கள். பிச்சைக்காரன் ஒரு பிரச்சினையென்றால் அத்தனை பிச்சைக்காரர்களும் எப்போதோ காணாமல் போய் விட்டிருப்பார்கள். பிரச்சினை உங்களுக்குள் இருக்கிறது. உங்கள் இதயம் அதை உணர்கிறது. அதைப் புரிந்துகொள்ள முயலுங்கள்.

மனம் உடனடியாய் தடுத்து விடுகிறது. இதயம் அன்புணர்வு கொள்கிறபோதெல்லாம் மனம் உடனே அதைத் தடுத்து விடும். மனம் சொல்கிறது 'நீ கொடுத்தாலும், கொடுக்காவிட்டாலும் அவன் எப்போதும் போல் பிச்சைக்காரனாகத்தான் இருக்கப் போகிறான்' என்று. அவன் பிச்சைக்காரனாய் இருப்பதற்கோ, இல்லாமல் இருப் பதற்கோ நீங்கள் பொறுப்பல்ல. ஆனால், ஒன்றைச் செய்ய வேண்டும் என்று உங்கள் மனதுக்குப் பட்டால் அதை நீங்கள் செய்ய முடியுமே. அதைத் தட்டிக் கழிக்க முயலாதீர்கள். மனம் அந்த நிலையைத் தவிர்க்க முயலும். மனம் கூறும், 'அட, என்ன ஆகப்போகிறது? அவன் பிச்சைக்காரனாகத்தான் இருப்பான். நீ எதையும் செய்யத் தேவை யில்லை' என்று. உங்கள் அன்பு பெருக்கெடுக்கும் வாய்ப்பை நீங்கள் தவற விட்டு விடுகிறீர்கள்.

பிச்சைக்காரன் தான் பிச்சைக்காரனாகவே இருப்பது என்று தீர்மானித்து விட்டால் நீங்கள் ஒன்றும் செய்ய முடியாது. நீங்கள் கொடுக்கக்கூடும், அவன் அதை வீசியெறியக் கூடும். அதுபற்றி அவனே தீர்மானிக்கிறான்.

மனம் ரொம்பவும் தந்திரமானது.

கேள்வி இதுதான் -

'எப்படிப் பார்த்தாலும் பிச்சைக்காரர்கள் இருக்கத்தானே செய் கிறார்கள்?'

*மனித இதயத்தில் அன்பில்லை என்பதுதான் அதற்குக் காரணம்.*

*மனம் திரும்பவும் குறுக்கிடுகிறது.*

'பணக்காரன் ஏழையிடமிருந்து தட்டிப் பறிக்கவில்லையா? தன்னிடமிருந்து பணக்காரன் திருடியதை ஏழை மீண்டும் எடுத்துக் கொள்ள வேண்டியதுதானே?'

தற்போது அந்தப் பிச்சைக்காரனையும், உங்கள் இதயத்தில் ஏற்பட்ட வலியையும் மறந்து விடுங்கள். தற்போது ஒட்டுமொத்த விசயமும் அரசியல் சார்ந்ததாய், பொருளாதாரம் சார்ந்ததாய் மாறிக் கொண்டிருக்கிறது. தற்போதுள்ள பிரச்சினை இதயத்துக்குரியது அல்ல, மனதுக்குரியது. மனம்தான் பிச்சைக்காரனை உருவாக்கியது. அது மனதின் தந்திரம், மனம் போடும் கணக்கு. தந்திரக்காரர்களும், கணக்குப் போடுகிறவர்களும் பணக்காரர்களாகி விடுகிறார்கள். மாசற்ற மனிதர்கள் கணக்குப் போடுவதில்லை, தந்திரம் பண்ணுவதில்லை. அவர்கள் ஏழையாகி விடுகிறார்கள்.

உங்களால் சமுதாயத்தை மாற்ற முடியும் - சோவியத் ருஷ்யாவில் மாறி விட்டார்கள். அது ஒன்றும் பெரிய வித்தியாசத்தை ஏற்படுத்திவிடவில்லை. பணக்காரன் ஏழை என்கிற பழைய வகை யினங்கள் மறைந்து விட்டன. ஆனால் ஆள்கிறவர், ஆளப்படுகிறவர் என்றொரு புதிய வர்க்கம் வந்தாயிற்று. தந்திரக்காரக்கள் ஆள்பவர் களாயும், மாசற்றவர்கள் ஆளப்படுகிறவர்களாயும் இருக்கின்றனர். தந்திரக்காரர்கள் பணக்ரார்களாயும், அப்பாவிகள் ஏழைகளாயும் இருந்தபோது உங்களால் என்ன செய்ய முடிந்தது?

மனதுக்கும் இதயத்துக்கும் உள்ள வேறுபாடு மறையாவிடில், மனித இனம் மனத்தை விட்டு, இதயத்தின் வழியே வாழாவிடில் சமுதாயப் பிரிவுகள் இருக்கத்தான் செய்யும். பெயர்கள் மாறினாலும் துன்பங்கள் அப்படியே தொடர்ந்து கொண்டுதானிருக்கும்.

'ஒரு பிச்சைக்காரனுக்கு நான் என்ன செய்ய முடியும்?' இந்தக் கேள்வி மிகப் பொருத்தமாகவும், முறையாகவும், தனிச் சிறப்பு வாய்ந்ததாகவும் இருக்கிறது. பிச்சைக்காரன் ஒரு பிரச்சினையல்ல. நீங்களும் உங்கள் இதயமுந்தான் பிரச்சினை. நீங்கள் செய்யக்கூடியது

எதுவாயினும் செய்யுங்கள். பணக்காரர்களிடம் பொறுப்பைத் தள்ளிவிட வேண்டாம். காரணம், அது அத்தனை முக்கியத்துவமற்றது. மனித இனத்தின் தந்திரமும், கணக்கிடுதலும் மேலும் மேலும் தொடரவே செய்யும்.

உங்களால் என்ன செய்ய முடியும்? முழுமையான ஒன்றின் ஒரு சிறிய பகுதி நீங்கள். நீங்கள் செய்யக்கூடியது எதுவாயினும் அது நிலையை மாற்றப்போவதில்லை. ஆனால், உங்களை மாற்றிவிடும். நீங்கள் கொடுக்கிற ஏதோ ஒன்று பிச்சைக்காரனை மாற்றிவிடாது. ஆனால் பகிர்ந்து கொள்கிற அந்தச் செய்கை உங்களை மாற்றிவிடும். அதுதான் முக்கியம். மக்களின் இதயத்தில் ஏற்படும் புரட்சிகரமான மாறுதல் தொடருமெனில் ஒருநாள் ஏழைகள் மறைந்து போவார்கள், ஏழ்மை மறைந்து விடும். அதற்குப் பதிலாய் ஒரு புதிய வகை சுரண்டல் அங்கே இடம் பெறுவதற்கில்லை.

இதுவரைக்குமாய் புரட்சிகள் தோற்றிருக்கின்றன. காரணம், புரட்சியாளர்களால் வறுமையின் மூலகாரணத்தைக் கண்டறிய முடியவில்லை. அவர்கள் ஆராய்ந்ததெல்லாம் மேம்போக்கான காரணங்களைத்தான். 'அவன் யாரோ சிலரால் சுரண்டப்பட்டான். அதுதான் காரணம், அதனால்தான் அங்கே வறுமை தலைவிரித்தாடு கிறது' என்று உடனே அவர்கள் சொல்லி விடுகிறார்கள்.

ஆனால், ஒரு சிலரால் மட்டுமே எப்படிச் சுரண்ட முடிகிறது? தாங்கள் எதையும் அடைந்துவிடவில்லை என்பதை அவர்களால் ஏன் கண்டுகொள்ள முடியாமல் போனது? அவர்கள் செல்வத்தைச் சேகரிக் கலாம். ஆனால், அதன்மூலம் சுற்றுப்புறத்தின் உயிரோட்டத்தையே அல்லவா அவர்கள் உறிஞ்சிப் போட்டார்கள். அவர்களுடைய செல்வம் அடுத்தவர்களுடைய இரத்தமன்றி வேறேயென்ன? அதை ஏன் அவர்களால் பார்க்க முடியவில்லை? தந்திர மனம் அங்கேயும் விளக்கங்கள் தரத் தயாராயிருக்கும்.

தந்திர மனம் கூறுகிறது, 'மனிதர்களின் ஏழ்மைக்குக் காரணம் அவர்களுடைய கர்மா (வினைப்பயன்)தான். முந்தைய பிறவிகளில் அவர்கள் ஏதேனும் தவறுகள் செய்திருக்க வேண்டும். அதனால்தான் துன்பப்படுகிறார்கள். நான் நற்காரியங்கள் செய்தேன், அதனால் செல்வந்தனாயிருக்கிறேன், நல்ல பலன்களை அனுபவிக்கிறேன்' என்று. இதுவும் மனம்தான். பிரிட்டிஷ் அருங்காட்சியகத்தில், வறுமைக்குக்காரணம் சுரண்டல்காரர்கள்தாம் என்று எண்ணமிட்டபடி

மார்க்ஸ் அமர்ந்திருப்பதும்கூட ஒரு மனமேயாகும். ஆனால் இவர்கள் எப்போதும் இருக்கவே செய்கிறார்கள். தந்திரம் முற்றாக மறையா விடில், சமுதாய அமைப்பை மாற்றும் கேள்விக்கு இடமேயில்லை. மனித ஆளுமையின் ஒட்டுமொத்த அமைப்பை மாற்ற முடியுமா என்பதுதான் கேள்வி.

உங்களால் என்ன செய்ய முடியும்? நீங்கள் பணக்காரர்களைத் தூக்கியெறிவீர்கள். ஆனால் அவர்கள் கொல்லைப்புற வாசல் வழியே திரும்பவும் வந்து விடுவார்கள். அவர்கள் தந்திரக்காரர்கள். உண்மையில் அவர்களைத் தூக்கியெறிபவர்களும் தந்திரக்காரர்கள்தான். இல்லையேல், அவர்களால் தூக்கியெறிய முடியாது. பணக்காரர்கள் வேண்டுமானால் கொல்லைப்புறமாய் நுழைய முடியாமல் போகலாம். ஆனால், புரட்சிக்காரர்களும், பொதுவுடைமை, சமதர்மம் பேசுகிறவர்களும் ஆட்சிப் பீடத்தில் அமர்ந்து சுரண்ட ஆரம்பித்து விடுவார்கள். அவர்களுடைய சுரண்டல் ஆபத்தானது. பணக்காரர்களை விடத் தாங்கள் தந்திரசாலிகள் என்பதை அவர்கள் நிருபித்து விட்டிருக்கிறார்கள். பணக்காரர்களைத் தூக்கியெறிந்ததன் மூலம் ஒரு விசயத்தை அவர்கள் முழுமையாய் நிருபித்து விட்டார்கள், பணக்காரர்களை விடத் தாங்கள் தந்திரம் மிக்கவர்கள் என்பதை. தந்திரம் மிக்கவர்களின் கையில் இருக்கிறது சமுதாயம்.

பெரும் மாறுதல்களை ஏற்படுத்தப் போகிறேன் என்று வேறு சிலர் என்றாவது வரலாம். அப்போதும் மக்கள் சுரண்டலைப் பற்றி எண்ணத் தொடங்கி விடுவார்கள். தற்போது அது ஒரு புதிய அவதாரம் எடுத்திருக்கும். மறுபடியும் ஒரு புரட்சி. ஆனால், பழைய புரட்சிக்காரர்களைத் தூக்கி எறியப் போவது யார்? தற்போது தந்திரசாலிகள் அதிக எண்ணிக்கையில் தேவைப்படுவார்கள்.

ஒரு குறிப்பிட்ட அமைவை (system)த் தோற்கடிக்கிற போது, அந்த அமைவு பயன்படுத்திய அதே உபாயங்களை நீங்களும் பயன்படுத்துவீர்கள். பெயர்கள் மாறலாம், கொடிகள் மாறலாம். ஆனால் சமுதாயம் அப்படியேதானிருக்கும்.

முட்டாளாக்குகிற இந்த வேலை போதும். பிச்சைக்காரன் பிரச்சினையல்ல, நீங்கள்தான் பிரச்சினை. உங்களுடைய தந்திரத்தை, புத்திசாலித்தனமான வேலையை விடுங்கள். இது கர்மா என்று சொல்கிற முயற்சி வேண்டாம். கர்மாவைப்பற்றி உங்களுக்கு எதுவும் தெரியாது. இதய வலியைத் தரக்கூடிய சில விசயங்களை - இதுவரை

விவரிக்கப்படாதவற்றை விவரிக்க முற்படுவது வாதத்தில் தற்காலிக மாய் வைக்கப்படும் ஒரு கருத்தாகவே இருக்கும். அந்தக் கருத்தை நீங்கள் ஏற்றுக் கொண்டால், சுமையில் இருந்து விடுபட்டவராவீர்கள். அப்போது நீங்கள் பணக்காரர்களாகவே இருக்க முடியும், ஏழைகள் ஏழைகளாகவே இருந்து விடுவார்கள். அந்நிலையில் எந்தப் பிரச்சினையும் இருக்காது. அந்தத் தற்காலிகக் கருத்து தாக்குதலின் வேகத்தைக் குறைக்கும் சாதனமாய் (buffer) வேலை செய்யும்.

அதனால்தானோ என்னவோ இந்தியாவில் வறுமை ஆழப் பதிந்திருக்கிறது. மக்களும் அதுபற்றிய உணர்வற்றவர்களாய் இருக்கிறார்கள். தங்களுக்கு உதவக்கூடிய ஒரு கோட்பாட்டை அவர்கள் வைத்திருக்கின்றனர். நீங்கள் காரில் செல்கிறபோது, காரில் உள்ள அதிர்வு தாங்கிகள் (shock absorbers) காரணமாய் சாலையின் கரடுமுரடுகள் உணரப்படுவதில்லை. அதிர்வு தாங்கிகள் அதிர்வு களைக் கிரகித்துக் கொண்டேயிருக்கும். கர்மா பற்றிய இந்தக் கருத்து ஒரு பெரிய அதிர்வு தாங்கிதான். நீங்கள் வறுமைக்கு எதிரிடையான நிலையில் மாறாதிருப்பீர்கள். ஆனால், அங்கே கர்மா கோட்பாடு ஓர் அதிர்வு தாங்கியாய் வந்துவிடுகிறது. உங்களால் என்ன செய்ய முடியும்? அது உங்களை எதுவும் செய்வதற்கில்லை. உங்கள் செல்வ வளங்களை நீங்கள் அனுபவித்து மகிழ்கிறீர்கள். காரணம், உங்களு டைய நற்கூறுகள் (virtues), பூர்வத்தில் நீங்கள் செய்த நல்வினைகள். இந்த மனிதனோ தன்னுடைய தீவினைகளால் துன்புற்றுக் கொண்டிருக்கிறான்.

இந்தியாவில் சமண மதத்தில் தேரா-பந்த் என்றொரு பிரிவு இருக்கிறது. அவர்கள் இந்தக் கோட்பாட்டில் தீவிர நம்பிக்கை கொண்டவர்கள்.அவர்கள் சொல்கிறார்கள், 'குறுக்கீடு வேண்டாம், அவன் தன்னுடைய பழைய வினைகளால் துன்புறுகின்றான். குறுக்கிடாதீர்கள், அவனுக்கு எதையும் கொடுக்காதீர்கள். அதுவே ஒரு குறுக்கீடாகி விடும். அவன் குறுகிய காலத்துக்குள் அனுபவித்துத் தீர்க்கிற துன்பம் உங்களால் தாமதமாகிவிடப் போகிறது. அவன் துன்பத்தை அனுபவித்துதான் ஆகவேண்டும்' என்று.

எடுத்துக்காட்டாக, ஓர் ஏழை மனிதன். அவன் சில ஆண்டு களுக்குத் தொல்லையில்லாமல் வாழ போதிய அளவு நீங்கள் கொடுத்து உதவ முடியும். ஆன்ால் மறுபடியும் துன்புறுதல் தொடரவே செய்யும். அவன் இந்தப் பிறவியில் கலக்கமின்றி வாழும் அளவுக்கு நீங்கள் கொடுத்து உதவ முடியும். ஆனால், அடுத்தப் பிறவியில்

துன்புறும் நிலை தொடங்கி விடுமே. நீங்கள் எங்கே நிறுத்துகிறீர்களோ அங்கிருந்து, மிகச்சரியாக அங்கிருந்து துன்பம் தொடங்கி விடும் மறுபடியும். ஆக, தேரா-பந்தில் நம்பிக்கை வைத்தவர்கள் சொல்வார்கள். குறுக்கீடு செய்யாதீர்கள் என்று. அவர்களைப் பொறுத்தவரை, சாலையோரத்தில் யாரேனும் செத்துக் கொண்டிருந்தாலும் நீங்கள் கண்டு கொள்ளாமல் போய்விடவேண்டும். அவர்கள் அதைத்தான் இரக்கம் என்கிறார்கள். தலையிடுவதன் மூலம் செயல்முறை (துன்புறுதல்)யை நீங்கள் தாமதப்படுத்தி விடுகிறீர்கள்.

எப்பேர்ப்பட்ட ஓர் அதிர்வு தாங்கி!

இந்திய மக்கள் முற்றிலும் உணர்வற்றவர்களாகி விட்டார்கள். ஒரு தந்திரக் கோட்பாடு அவர்களைக் காப்பாற்றி வருகிறது.

மேற்கில் உள்ளவர்கள் ஒரு புதிய கருத்தைக் கண்டடைந்திருக்கிறார்கள். 'பணக்காரர்கள் சுரண்டி வந்தார்கள். பணக்காரர்களை அழித்து விடு' என்பதுதான் அது. கொஞ்சம் அதனைக் கவனியுங்கள். ஏழையை நோக்குமிடத்து உங்கள் இதயத்தில் அன்பு சுரக்கிறது. 'இந்த ஏழை ஏழையாய் இருப்பதற்குக் காரணம் பணக்காரன்' என்று நீங்கள் உடனே சொல்வீர்கள். நீங்கள் அன்பை வெறுப்பாக மாறிக்கொண்டு விடுகிறீர்கள். தற்போது பணக்காரன் மீது உங்களுக்கு வெறுப்பு ஏற்படுகிறது. நீங்கள் ஆடும் ஆட்டம் எத்தகையது? தற்போது நீங்கள் சொல்கிறீர்கள். 'பணக்காரர்களை அழிக்க வேண்டும். அவர்களிடம் இருந்து எல்லாவற்றையும் மீட்டெடுக்க வேண்டும். அவர்கள் குற்றவாளிகள்' என்று. இப்போது பிச்சைக்காரன் மறக்கப்பட்டு விடுகிறான். இதயம் அதற்கு மேலும் அன்பால் நிரம்பியிருப்பதில்லை. மாறாக அது வெறுப்பால் நிரப்பப்பட்டு விடுகிறது. வெறுப்புதான் பிச்சைக்காரர்கள் வாழும் சமுதாயத்தைத் தோற்றுவித்தது. தற்போது மீண்டும் வெறுப்பு உங்களுக்குள் வேலை செய்து கொண்டிருக்கிறது.

வர்க்கங்கள் மாறக்கூடிய, பெயர்கள் மாற்றம் பெறுகிற ஒரு சமுதாயத்தை நீங்கள் தோற்றுவிப்பீர்கள். ஆனால், ஆளப்படுகிறவர் ஆள்பவர் என்கிற நிலை அப்படியேதானிருக்கும். அது ஒன்றும் பெரிய வேறுபாட்டை உண்டுபண்ணி விடாது. சுரண்டப்படுகிறவர்களும் சுரண்டுகிறவர்களும், கொடுமைக்குள்ளாகிறவர்களும் கொடுமைப்படுத்துகிறவர்களும் அப்படியேதான் இருக்கப் போகிறார்கள். எசமானர்களும் அடிமைகளும் இருப்பார்கள். எல்லாம் ஏற்கெனவே இருந்தபடிதான் இருக்கப்போகிறது.

*நீங்கள் மிகப்பெரிய மாறுதலை நிகழ்த்த விரும்பினால் இதயம் சார்ந்த மாறுதலாகவே அது இருக்கும்.*

ஒரு பிச்சைக்காரனைப் பார்க்கிறபோது நுட்ப உணர்வோடு இருங்கள். உங்களுக்கும் அந்தப் பிச்சைக்காரனுக்கும் இடையே எந்தவோர் அதிர்வு தாங்கிக்கும் இடமளிக்காதீர்கள். நுட்ப உணர்வோடு இருங்கள். அது கடினம், ஏனென்றால் நீங்கள் கூச்சலிட ஆரம்பித்து விடுவீர்கள். அது கடினம், ஏனென்றால் அது மிகவும் துன்பம் தருவதாயிருக்கும். உங்களால் பகிர்ந்து கொள்ளக்கூடிய எதையும் பகிர்ந்தளியுங்கள். அவன் பிச்சைக்காரனாகவே இருக்கப்போகிறானா இல்லையா என்பது பற்றிய கவலை உங்களுக்கு வேண்டாம். உங்களால் முடிவது எதுவாயினும் அதைச் செய்யுங்கள். இது உங்களை மாற்றும். ஒரு புதிய இருப்புணர்வை இது உங்களுக்கு வழங்கும். அந்த இருப்புணர்வு இதயத்துக்கு நெருக்கமாயும், மனதுக்குத் தொலைவாயும் இருக்கும். இதுவே உங்கள் உள்ளார்ந்த மாற்றம். இது மட்டுமே செல்வழியாய் - செயல்முறையாய் இருக்கும்.

இவ்விதமாய் ஒவ்வொருவரும் மாறிவிட்டால் என்றாவது ஒருநாள், சுரண்டலற்ற, கொடுமை பற்றிய எச்சரிக்கை உணர்வுடன் கூடிய, நுட்ப உணர்வு கொண்ட மக்கள் வாழும் சமுதாயம் உருவாகும். மக்கள் அப்போது வறுமையையும் அடிமைத்தனத்தையும் நினைத்துக் கூடப் பார்க்க முடியாத அளவு அன்பு கொண்டு விடுவார்கள்.

இதயபூர்வமாக எதையுமே செய்யுங்கள், கோட்பாடுகளுக்கு இரையாகிவிடாதீர்கள்.

*கேள்வி கேட்பவர் தொடர்கிறார்:*

*'நாம் எதிர் முனைக்குச் செல்ல வேண்டும், விஞ்ஞானத்தையும், மதத்தையும், பகுத்தறிவையும், பகுத்தறிவின்மையையும், மேற்கையும் கிழக்கையும், தொழில்நுட்பத்தையும், ஆன்மிகத்தையும் நாம் தேர்வு செய்தாக வேண்டும் என்று நீங்கள் சொன்னீர்கள். நான் அரசியலையும் ஆன்மிகத்தையும் ஒருசேரத் தேர்வு செய்ய முடியுமா? உலகை மாற்றுவதையும் உள்ளார்ந்த மாற்றத்தையும் நான் ஏக காலத்தில் மேற்கொள்ள முடியுமா? நான் ஒரே சமயத்தில் புரட்சிக்காரனாகவும், சந்நியாசியாகவும் இருக்க முடியுமா?*

ஆம், எதிரெதிராக கொள்கைகள் கொண்ட நிலைகளை (polarities) ஏற்க வேண்டுமென்று மறுபடியும் மறுபடியும் நான்

சொல்லியிருக்கிறேன். ஆனால், தியானம் ஓர் எதிர்நிலை அல்ல. தியானம் எதிரெதிர்க் கொள்கை நிலைகளை ஏற்றுக்கொள்வதாகும். அந்த ஏற்புத் தன்மையின் வழியேதான் ஒருவர் எதிரெதிர்க் கொள்கை நிலைகளை (polarities)க் கடந்து செல்கிறார். ஆக, தியானத்துக்கு எதிரிடையாய் ஏதுமில்லை. இதனைப் புரிந்துகொள்ள முயலுங்கள்.

ஓர் இருட்டறையில் நீங்கள் அமர்ந்திருக்கிறீர்கள். இருள் ஒளிக்கு எதிரிடையானதா? அல்லது, ஒளியின்மை என்று அதைக் கூறுவதா? அது வெளிச்சத்துக்கு எதிரிடையானதாயின் அப்போது தனக்கென்று ஒரு பிரபஞ்ச இருப்பை (existence) அது கொண்டிருக்கும். இருள் தனக்கென்று ஓர் இருப்பை கொண்டிருக்கிறதா அல்லது அது ஒளியற்ற நிலையா? தனக்கென்று ஒரு மெய்ம்மையை அது கொண்டிருக்கு மாயின் நீங்கள் மெழுகுவர்த்தியை ஏற்றும்போது அது எதிர்த்து நின்றிருக்க வேண்டும். அது மெழுகுவர்த்தியை அணைக்க முயன் றிருக்க வேண்டும். தன்னுடைய இருப்பை நிலைப்படுத்திக் கொள்ள அது போராடியிருக்க வேண்டும். ஆனால் அது எதிர்த்து நிற்கவில்லை. ஒரு சிறிய மெழுகுவர்த்தியை அணைக்கவும் அது போராடவில்லை. விரிந்து பரந்த இருள். நடுவே ஒரு சிறிய மெழுகுவர்த்தி. ஆனால், அந்தப் பெரிய இருளால் மெழுகுவர்த்தியைத் தோற்கடிக்க முடிய வில்லை. இருள் வீட்டுக்குள் ஆட்சி செய்கிறது. பல நூறு ஆண்டு களாய். ஆனால், ஒரு சிறிய மெழுகுவர்த்தியை நீங்கள் கொண்டு வருகிறபோது, 'நான் நூற்றாண்டுப் பழமை உடையவன், சரியான முறையில் எதிர்த்து நிற்பேன்' என்று அந்த இருளால் சொல்ல முடிய வில்லை. அது இருந்த இடம் தெரியாதபடி மறைந்து விடுகிறது.

இருள் நேர்மறையான நடைமுறையைக் கொண்டிருக்கவில்லை. அது வெளிச்சமற்ற நிலை. அவ்வளவுதான். எனவேதான் நீங்கள் வெளிச்சத்தைக் கொண்டு வந்ததும் அது மறைந்து விடுகிறது. நீங்கள் விளக்கை அணைத்தால் அது தோன்றி நிற்கிறது. உண்மையில் அது வெளியே செல்வதும் இல்லை, உள்ளே வருவதும் இல்லை. காரணம், வெளியே செல்வதும், உள்ளே வருவதும் அதற்கு முடியாத காரியம். இருள் என்பது ஒளியின்மையே அன்றி வேறே என்ன? ஒளி இருந்தால் அது இருப்பதில்லை, ஒளி இல்லாவிட்டால் அது இருக்கிறது. அது 'இன்மை' ஆகும்.

தியானம் என்பது உள்ளார்ந்த ஒளி. அதற்கு 'இன்மை' (absence) தவிர்த்து, எதிரிடையானது என்று எதுவும் இல்லை.

அதிகாரம், அகந்தை, பேராவல் என்று நீங்கள் வாழும் லோகாயதமான வாழ்க்கையில் தியானம் என்பது அறவே இல்லாமல் போய்விடுகிறது. அதுதான் அரசியல் என்றாகிறது.

அரசியல் என்பது பெரிய வார்த்தை. தங்களை அரசியல்வாதி என்று சொல்லிக் கொள்பவர்களை மட்டும் அது உட்படுத்தியிருக்க வில்லை. உலகியல் சார்ந்த அத்தனை பேரையுந்தான் அது உட்படுத்தியிருக்கிறது. காரணம் பேராவல் கொண்டவர் யாராயினும் அவர் அரசியல்வாதிதான். ஏதாவது ஓர் இடத்தை அடைய போராடுகிற எவரும் அரசியல்வாதிதான். எங்கெல்லாம் போட்டி இருக்கிறதோ அங்கெல்லாம் அரசியலும் இருக்கிறது. ஒரே வகுப்பில் படிக்கிற முப்பது மாணவர்கள் தங்களை ஒரே வகுப்பில் உள்ள நண்பர்கள் என்று கூறிக் கொள்கிறார்கள். ஆனால், அவர்கள் ஒரே வகுப்பில் இருக்கும் பகைவர்கள் என்றுதான் சொல்ல வேண்டும். காரணம் அவர்கள் ஒருவருகொருவர் போட்டியிடுவதால் தோழர்களில்லை. அவர்கள் ஒருவரையொருவர் முந்துவதற்கு முயற்சிக்கிறார்கள். முதலிடத்தைப் பெறவும், தங்கப்பதக்கத்தைக் கைப்பற்றவும் அவர்கள் முயற்சி செய்கிறார்கள். அங்கே பேராவல் இருக்கிறது. அவர்கள் முன்பே அரசியல்வாதிகளாகத்தான் இருக்கிறார்கள்.

எங்கே போட்டியும் போராடும் நிலையும் காணப்படுகிறதோ அங்கே அரசியல் இருக்கும். ஆக, ஒட்டுமொத்த வாழ்க்கையும் அரசியலுக்குத் தகவாய் அமைந்து விடுகிறது.

தியானம் என்பது ஒளி போன்றது. தியானம் வந்ததும் அரசியல் மறைந்து விடுகிறது. எனவே நீங்கள் தியானிப்பவராயும் அரசியல் பண்ணுகிறவராயும் இருக்க முடியாது. அது சாத்தியமற்றது. சாத்தியமற்ற ஒன்றை நீங்கள் வேண்டுகிறீர்கள். தியானம் என்பது ஒரு முனை (pole) அல்ல. அது மோதலும், அகந்தையும், பேராவலும் இல்லாதிருக்கும் நிலை.

மிகச்சிறந்த 'சூஃபி' கதையொன்றை நான் சொல்கிறேன். அது அப்படி நடந்திருக்காது.

ஒரு சூஃபி சொன்னார். 'பேராசை, கட்டுப்படுத்துதல், சாத்திய மின்மை இவற்றுக்கிடையே உள்ள தொடர்பைத் தெரிந்து கொள்ளாத வரை மனிதனை யாரும் புரிந்து கொள்ள முடியாது' என்று.

'இது என்னால் புரிந்து கொள்ள முடியாத ஒரு புதிராய் உள்ளது' என்றான் சீடன்.

சூஃபி சொன்னார். 'உன்னால் அதை நேரடி அனுபவத்தின் மூலம் அடைய முடியும் என்கிறபோது, எதற்காகப் புதிர்களின் வழியே காண முயற்சிப்பது?' என்று.

அவர் சீடனை ஆடைகள் விற்கும் கடையொன்றிற்கும் அழைத்துச் சென்றார். கடைக்காரனிடம் 'நான் மிதமிஞ்சி செலவு செய்யும் மனநிலையில் இருக்கிறேன். உன்னிடமுள்ள மிகச்சிறந்த ஆடையை எனக்குக் காண்பிப்பாய்' என்றார் அந்த சூஃபி.

கடைக்காரன் வெகு நேர்த்தியான ஆடையொன்றைக் காண பித்து, அதிக விலை சொன்னான். 'இது நான் விரும்பியது போலவே உள்ளது' என்ற சூஃபி, 'ஆனாலும் கழுத்துப் பட்டியைச் சுற்றிக் கொஞ்சம் வெள்ளி வட்டுகளும் (sequins), மென்மயிர்த் தோல் (fur) அலங்கரிப்பும் இருந்தால் எனக்குப் பிடித்மாயிருக்கும்' என்று சொன்னார்.

'அந்த மாதிரி ஓர் ஆடை எங்கள் பணியிடத்தில் இருக்கிறது' என்று சொன்ன கடைக்காரன், சில கணங்களுக்கு அங்கிருந்து காணாமல் போனான். அவன் திரும்பி வந்த போது அவனுடைய கையில் வெள்ளி வட்டு, மென்மயிர்த்தோல் அலங்கரிப்புடன் கூடிய ஓர் ஆடை இருந்தது.

'இது என்ன விலை?' சூஃபி கேட்டார்.

'முந்தைய ஆடையைவிட இருபது மடங்கு விலை அதிகம்' என்றான் கடைக்காரன்.

'ரொம்ப அருமை. இரண்டையுமே நான் எடுத்துக் கொள்கிறேன்' என்றார் சூஃபி.

தற்போது சாத்தியமின்மை காரணம் இயற்கைப் பண்பில் இரண்டும் ஒரே மாதிரி (self-fame) பேராசை தன்னுள் ஒரு சாத்தியமற்ற தன்மை கொண்டிருப்பதை சூஃபி வெளிப்படுத்தினார். பேராசையின் உள்ளார்ந்ததாய் சாத்தியமின்மை (impossibility) உள்ளது.

ரொம்பவும் பேராசை கொண்டு விடாதீர்கள். காரணம், அரசியல்வாதியாகவும் தியானிப்பவராகவும் ஒருசேர இருக்க வேண்டுமென்பது மிகப்பெரிய பேராசை. நீங்கள் பேராவலுடனும் அதே சமயம் சிரமம் இல்லாமலும் இருக்க வேண்டும் என்கிறீர்கள். நீங்கள் போரிடவும், வன்முறையைப் பயன்படுத்தவும், பேராசை

கரைகளையும் அடைகிறது. உங்கள் தரப்பில் எவ்வித முயற்சியுமின்றி, எளிதாய் ஒரு புரட்சி தொடங்குகிறது. எவ்வித சிரமமுமில்லாமல் நிகழ்கிற புரட்சி இன்பமளிப்பதாயிருக்கும். அதில் முயற்சி இருக்கு மாயின் அது வன்முறை கொண்டதாயுமிருக்கும். அந்நிலையில் உங்கள் கருத்துகளை மற்றவர்கள் மீது நீங்கள் திணித்தபடி இருப்பீர்கள்.

ஸ்டாலின் ஒரு புரட்சிக்காரர் என்பதால் இலட்சோப லட்சம் பேரைக் கொன்று குவித்தார். அவர் சமுதாயத்தை மாற்றியமைக்க விரும்பினார். அவருடைய வழியில் யாரேனும் தடையாயிருந்தால் அவர்களைக் கொன்று, தமது பாதையில் இருந்து அகற்றி விடுவார். உங்களுக்கு உதவ முயல்கிறவர்கள் உங்களுக்கு எதிராகவும் உதவ ஆரம்பித்து விடுவார்கள். சில சமயம் அப்படி ஆகிவிடுகிறது. நீங்கள் மாற விரும்புகிறீர்களா, இல்லையா என்பது பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை. உங்களை மாற்றுவதற்கு ஒரு யோசனை அவர்களிடம் இருக்கும். அவர்கள் உங்களை மாற்றிவிடுவார்கள். உங்கள் பேச்சுக்கு அவர்கள் செவிசாய்க்க மாட்டார்கள். இத்தகைய புரட்சியான மாறுதல் வன்முறையும், குரூரமும் கொண்டதாயிருக்கும்.

ஒரு புரட்சி - மாற்றத்தைக் கொண்டு வரும் முயற்சி வன்முறை யாகவோ, இரத்தம் சிந்த வைப்பதாகவோ இருக்கக்கூடாது. காரணம், அது அன்பும் இதயமும் நிகழ்த்துகிற புரட்சியால் - மாற்றத்தைக் கொண்டு வருகிற முயற்சியாய் இருக்க வேண்டும். உண்மையில் மாற்றத்தை உண்டுபண்ணுகிறவன் எந்த ஒருவரையும் மாற்ற எங்கேயும் செல்வதில்லை. அவன் தனக்குள் நிலைபெற்றிருப்பான். தங்களை மாற்றிக்கொள்ள விரும்புகிறவர்கள் தாமே அவனைத் தேடி வருவார்கள். அவர்கள் தொலைதூரப் பிரதேசங்களில் இருந்து பயணித்து அவனிடம் வருவார்கள். அந்த நறுமணம் அவர்களைச் சென்றடைகிறது. தன்னை மாற்றிக்கொள்ள விரும்புகிறவர் யாராயினும் நுட்பமான வழிகளில், அதற்கு முன் அறிந்திராத வழிகளில் அவனிடம் வந்து சேருவார்கள். உண்மையான புரட்சியாளன் தனக்குள் நிலைபெற்றிருப்பான், குளிர்ச்சி பொருந்திய ஒரு நீர்நிலை மாதிரி. தாகமுள்ளவர் தாம் நீர்நிலையைத் தேடிப்போக வேண்டும். நீர்நிலை உங்களைத் தேடி வராது. உங்களுக்குப் பின்னால் அது ஓடிவராது. நீங்கள் தாகமாயிருக்கிறீர்கள் என்பதற்காக அந்த நீர்நிலை உங்களை அடக்கி ஆட்கொண்டு விடாது. நீங்கள் உற்றுக் கவனிக்காவிடில் அது உங்களை மூழ்கடித்து விடும்.

ஸ்டாலின் பலபேரைக் கொன்று போட்டார். எதிர்வினை செய்பவர்களைப் போலவே புரட்சிக்காரர்களும் வன்முறையைப் பயன்படுத்துகிறவர்கள்தாம். சில சமயம் அதைவிடக் கூடுதலாகவே பயன்படுத்துவார்கள்.

சாத்தியமற்றதைச் செய்ய முயலாதீர்கள். உங்களை மாற்றிக் கொண்டாலே போதும். உண்மையில் அதுவும் ஒருவித சாத்தியமின்மைதான். 'போதும். போதும் என்பதற்கு மேலாகவே நடந்துவிட்டது' என்று நீங்கள் சொல்லிக்கொள்ள முடியும்.

அடுத்தவர்களைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். அவர்களும் உயிர்கள்தாம். அவர்களுக்கும் பிரக்ஞை (consciousness) உண்டு. ஆன்மா உண்டு. அவர்கள் மாறவிரும்பினால் யாரும் வழியில் குறுக்கிடமாட்டார்கள். குளிர்ந்த நீரை உடைய நீர்நிலையாயிருங்கள். அவர்களுக்குத் தாகம் எடுத்தால் அவர்கள் வருவார்கள். உங்களுடைய குளிர்ச்சியே அழைப்பாய் இருக்கும். உங்கள் நீரின் தூய்மையே அவர்களை ஈர்ப்பதாய் அமையும்.

'நான் ஒரே சமயத்தில் புரட்சிக்காரனாகவும் சந்நியாசியாகவும் இருக்க முடியுமா?' இல்லை. நீங்கள் சந்நியாசியாக இருந்தால் அது ஒரு புரட்சியான மாறுதலாய் இருக்குமே தவிர புரட்சிக்காரனாகி விடமாட்டீர்கள். நீங்கள் புரட்சிக்காரராகத் தேவையில்லை. நான் என்ன சொல்கிறேன் என்பதைக் கவனியுங்கள். புரிந்துகொள்ள முயலுங்கள். மனிதர்களை மாற்றத் தேவையில்லை. எங்கும் எந்தவொரு புரட்சியையும் தோற்றுவிக்க வேண்டியதில்லை. நீங்கள் திட்டமிட வேண்டாம். வாழ்ந்து பாருங்கள். உங்கள் வாழ்க்கை முறையே புரட்சிகரமான மாறுதல்தான். நீங்கள் எங்கு நோக்கினும், எதைத் தொட்டாலும் மிகப்பெரிய மாறுதல் ஏற்பட்டுவிடும். மாறுதல் என்பது சுவாசிக்கிற மாதிரி - தன்னால் (புறத்தூண்டுதல் இன்றி) நிகழ்வதாகும்.

இன்னொரு சூஃபி கதையை நான் உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன்.

நன்கறியப்பட்ட ஒரு சூஃபியிடம் இப்படிக் கேட்கப்பட்டது. 'கண்ணுக்குப் புலப்படாதது என்றால் என்ன?' அவர் சொன்னார். 'அதை நிரூபிப்பதற்கான ஒரு வாய்ப்பு நேரிடும் போது நான் இந்தக் கேள்விக்குப் பதிலளிப்பேன்' என்று.

அதிகாரி சூஃபி நூலொன்றை வெளியே எடுத்தான். என்ன இது?' என்று கேட்டான்.

சூஃபி அந்தப் புத்தகத்தின் தலைப்புப் பக்கத்தைப் பார்த்தார். 'நீங்கள் இதற்கு முன் அப்படிச் செய்திராவிட்டாலும் நான் உங்கள் முன்னிலையில் இதனைக் கொளுத்திப் போடுவேன்' என்றார். அவ்வாறே அந்தப் புத்தகத்தை எரித்தார். சிப்பாய்கள் திருப்தியுடன் சவாரியில் சொன்றனர்.

சூஃபியுடன் இருந்தவன் கேட்டான். 'இந்தச் செயலின் நோக்கம் என்ன?'

'உலகிலுள்ள மனிதன் கண்ணுக்கு நம்மைப் புலப்படுத்திக் கொள்ளாமல் இருப்பதற்காக. கண்ணுக்குப் புலப்படுவது (visibility) என்பது நீ ஏதோ ஒன்றுடன் அல்லது யாரோ ஒருவருடன் ஒத்திருப்பதாய் அவன் நம்புவது. நீ வேறானவனாய், மாறுபட்ட இயல்புடையவனாய் தெரிந்தால் உன்னுடைய உண்மையான இயல்பு அவனுக்குப் புலப்படாமல் போய்விடும்' என்றார் சூஃபி.

ஒரு மதவாதியின் வாழ்க்கை புரட்சிகரமானது. ஆனால் கண் ணுக்குப் புலனாவதில்லை. காரணம், அவன் முழுமையாயிருந் தால்தான் புலப்பாடு இருக்கும். புலப்பட வேண்டுமெனில் அவன் ஏணியின் கீழ்ப்படி (lowest rung) யாய் இருக்க வேண்டும். ஒரு மதவாதி, சந்நியாசி தனக்குள் மிகப்பெரிய மாறுதலை (revolution) ஏற்படுத்திக் கொண்ட, கண்ணுக்குப் புலப்படாதவனாகி விடுகிறான். ஒரு புலப்படாத சக்தியைக் கொண்டு அவன் அற்புதங்களை நிகழ்த்துகிறான்.

நீங்கள் சந்நியாசியாக இருந்தால் புரட்சிக்காரனாகவும் இருக்க வேண்டும் என்பதில்லை. நீங்கள் முன்பே ஒரு புரட்சிகரமான மாறுதலைக் கொண்டிருக்கிறீர்கள்.

நான் புரட்சி என்றதற்குக் காரணம் புரட்சிக்காரன் முன்பே மரத்துப் போனவன். அவனுடைய கருத்துகள் அசையாது நிலைநிறுத்தப் பட்டவை. அவன் முன்பே ஒரு மனத்தைப் பெற்றிருப்பவன். நான் புரட்சிகரமான மாறுதலை ஒரு செயல்முறை (process) என்பேன். சந்நியாசியின் கருத்துகள் நிலையானவை அல்ல. அவன் கணங்களில் வாழ்கிறவன். அவனுடைய எதிர்ச்செயல் நிலையான கருத்துகளில் இருந்து வருவதல்ல, அந்தக் கணத்தின் நடப்புக்கேற்பவே அவன் எதிர்ச்செயல் புரிகிறான்.

ஒரு பொதுவுடைமைவாதியிடம் நீங்கள் பேசுகிறபோது உங்கள் பேச்சை அவன் காதுகொடுத்துக் கேட்க மாட்டான். இதனை நீங்கள் கவனித்துப் பார்த்தால் தெரியும். அவன் தலையை அசைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால், கவனமாய்க் கேட்க மாட்டான். ஒரு கத்தோலிக்கனிடம் பேசிப்பாருங்கள். அவன் காது கொடுத்துக் கேட்க மாட்டான். ஓர் இந்துவிடம் பேசிப்பாருங்கள். அவன் காது கொடுத்துக் கேட்க மாட்டான். நீங்கள் பேசிக் கொண்டிருக்கும் போது தன்னுடைய நிலைமாறாத பழைய கருத்துகளில் இருந்து அவன் தனது பதிலைத் தயார் செய்து கொண்டிருப்பான். அவனுடைய முகம் எப்போதுமே எவ்வித சலனமுமில்லாமல் சவத்துப் போயிருப்பதை நீங்கள் காண முடியும். ஒரு குழந்தையிடம் பேசிப் பாருங்கள். அவன் கவனமாய்க் கேட்பான். அவன் கேட்பதாயின் கூர்ந்து கவனித்துக் கேட்பான். கேட்காவிடில் முற்றிலும் கவனக்குறைவாகவே இருந்துவிடுவான். ஆனால். அவனிடம் முழுமை இருக்கிறது. நீங்கள் ஒரு குழந்தையிடம் பேசிப்பாருங்கள். அவனுடைய ஏற்புத்தன்மையில் தூய்மையும், உற்சாகமும் இருப்பதைக் காண்பீர்கள்.

சந்நியாசி ஒரு குழந்தை மாதிரி. மாசற்றவன். அவன் கருத்து களைக் கொண்டு வாழ்வதில்லை, அவன் எந்தவொரு கருத்துத் தொகுதிக்கும் (ideology) அடிமையாயிருப்பதில்லை. அவன் பிரக்ஞையில் வாழ்கிறவன். தன்னுடைய தெரிநிலையைக் கொண்டு வாழ்கிறவன். அவன் இங்கே - இந்தக் கணத்தில் செயல்படுகிறவன். அவனுக்கு நேற்றும் இல்லை, நாளையும் இல்லை, 'இன்று' மட்டுமே.

இயேசு சிலுவையில் அறையப்பட்ட நிலையில் அவருக்குப் பக்கமாயிருந்த ஒரு திருடன் சொல்வான். 'நாங்கள் குற்றம் செய்தவர்கள். நாங்கள் சிலுவையில் அறையப்பட்டது சரிதான். நீரோ அப்பாவி. எங்களால் அதைப் புரிந்து கொள்ள முடியும். ஆனால் உம்முடைய பக்கமாய் நானும் சிலுவையில் அறையப்பட்டிருப்பது எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. நான் பெருமகிழ்ச்சி கொண்டவனா யிருக்கிறேன். நான் ஒருபோதும் மதிக்கத்தக்க காரியம் எதையும் செய்ததில்லை' என்று.

அவன் ஒன்றை முழுமையாய் மறந்து விட்டிருந்தான். இயேசு பிறந்தபோது அவருடைய பெற்றோர் நாட்டைவிட்டு தப்பிப் போய்க் கொண்டிருந்தனர். அவர் பிறந்த காலகட்டத்தில் பிறந்திருந்த அத்தனை குழந்தைகளையும் கொல்லும்படி அரசன்

அத்தனை எளிதாய் இருக்கப் போவதில்லை. நான் அதற்கு இடம் கொடுக்க மாட்டேன். நான் பாதரசம் போன்றவன். நீங்கள் என்னைப் பற்றிப் பிடிக்க எந்த அளவு முயல்கிறீர்களோ அந்த அளவு நழுவிப் போகிறவன் நான். ஒன்று நான் எல்லாமாயிருக்கிறேன் அல்லது எதுவுமாயில்லை - இந்த இரண்டு வகையினங்கள் மட்டுமே இடம் பெறக் கூடும். இடையில் உள்ள மற்ற வகையினங்கள் இடம் பெறுவதில்லை. காரணம் அவை உண்மையாயிருப்பதில்லை என்று நீங்கள் என்னை எல்லாமாகவோ அல்லது எதுமற்றதாகவோ புரிந்து கொள்கிறீர்களோ அதுவே உங்களுடைய மெய்யாக உணரும் நாளாயிருக்கும்.

நான் நேற்றுப் படித்த ஒரு கதையைச் சொல்கிறேன்: ஹெச்.ஜி. வெல்ஸ் தம்முடைய கதையில் (The Country of the Blind) விநோதமான பள்ளத்தாக்கொன்றில் பயணிக்கும் ஒரு பயணியைப் பற்றிச் சொல்கிறார். அந்த இடம் புறவுலகத் தொடர்பின்றி, செங்குத்தான சுவர்களால் தடுக்கப்பட்டிருப்பது. அந்தப் பள்ளத்தாக்கில் வாழ்கிற எல்லாருமே பார்வையற்றவர்கள். அதனால் அது 'குருட்டுப் பள்ளத்தாக்கு' ஆயிற்று. ஒரு பயணி அங்கே சென்றான். சில காலம் அங்கே வாழ்ந்திருந்தான். ஆனால், அந்த இடத்தைச் சேர்ந்தவர்கள் அவனை சந்தேகத்துக்குரியவனாகவே கருதிக் கொண்டனர். அவர்களில் சிறப்பறிவு கொண்டவர்கள், 'அவனுடைய மூளை கண்கள் என்று சொல்லப்படுகிற விநோதமான பொருள்களால் பாதிக்கப்பட்டிருக்கிறது. அவற்றால் அது எரிச்சலுறும் நிலையை, அமைதிக்குலைவை அடைந்திருக்கிறது' என்று தெரிவித்தனர். அவனுடைய கண்கள் அகற்றப்பட்டாலன்றி அவன் இயல்பாய் இருப்பதற்கில்லை என்று அவர்கள் முடிவு கட்டினர். 'ஒரு அறுவை சிகிச்சை அவசியம், அதுவும் உடனடியாய்' என்று அந்தச் சிறப்பறிவாளர்கள் தெரிவித்தனர். - அவர்கள் எல்லாருமே குருடர்கள். ஒரு மனிதன் எப்படிக் கண்களைப் பெற முடியும் என்பதை அவர்கள் சிந்திக்கவில்லை. அவன் இயல்பு நிலையை அடைய அவனிடமுள்ள இயல்புக்கு மாறான ஒன்று அகற்றப்பட வேண்டும்.

அந்தப் பயணி பார்வையற்ற இளம் பெண்ணொருத்தியிடம் காதல் கொண்டிருந்தான். அவர்கள் இருவரும் மகிழ்ச்சியுடன் சேர்ந்து வாழ வேண்டும் என்றால் தன்னுடைய கண்களை அவன் அகற்றிக் கொண்டாக வேண்டும் என்று அவனிடம் வாதாடினாள் அவள்.

'நீ கண்களை அகற்றிக் கொள்ளாவிட்டால் எனது இனத்தவர் உன்னை ஏற்க மாட்டார்கள். நீ இயல்புக்கு மாறானவன்.

விசித்திரமானவன். ஏதோவொரு துரதிர்ஷ்டத்தால் இது உனக்கு நேரிட்டிருக்க வேண்டும். இந்தக் கண்கள் பற்றி எவரும் கேள்விப் பட்டதில்லை. நீ வேண்டுமானால் மக்களிடம் கேட்டுப்பார். யாரும் அதைக் கண்டதேயில்லை. இவ்விரண்டு கண்களின் காரணமாகத்தான் எங்கள் இனத்தவருக்கு நீ அயலானாய் தெரிகிறாய். அத்துடன் நாம் சேர்ந்து வாழ அவர்கள் என்னை அனுமதிக்க மாட்டார்கள். அதுவுமல் லாமல் உன்னுடன் சேர்ந்து வாழ எனக்கும் பயமாக இருக்கிறது. நீ வேற்றாள். அந்நியன்' என்று அந்தப் பெண் சொன்னாள்.

அவர்கள் மகிழ்ச்சியோடு இணைந்து வாழவேண்டுமென்றால் அவன் கண்களை அகற்றியாக வேண்டும் என்று அவனை நயந்து பேசி நம்ப வைத்தாள். ஏறக்குறைய அதை ஏற்கும் நிலையில்தான் அவனும் இருந்தான். காரணம் அவள்மீது அவனுக்குக் காதல் இருந்தது. அந்தக் காதலும் பிணைப்பும் தன் கண்களை இழக்க அவனைத் தயார்படுத்தி விட்டது எனலாம். ஆனால், ஒருநாள் - தீர்மானிப்பின் விளிம்பில் அவன் இருந்தபோது பாறைகளின் மீது சூரியன் உதயமாவதைக் கண்டான்... புல்வெளிகள் அழகாயிருந்தன வெள்ளைப் பூக்களுடன்... அதற்கு மேலும் அந்த இருண்ட பள்ளத் தாக்கில் இருப்பதில் அவனுடைய மனம் நிறைவு கொள்ளாது. அவன் அங்கிருந்து மேலேறி மனிதர்கள் வெளிச்சத்தில் நடக்கும் இடத்துக்குச் சென்றான்.

புத்தரும், இயேசுவும், கிருஷ்ணரும், ஜராதுஷ்டிரரும் பார்வை யற்றவர்கள் வாழும் பள்ளத்தாக்கில் பார்வையோடு இருந்தவர் களாகும். அவர்களை யோகிகளாகவோ, புத்தர்களாகவோ, சமணர்களாகவோ, கிறிஸ்தவர்களாகவோ, பக்தர்களாகவோ நீங்கள் விரும்பியபடி அழைத்துக் கொள்ளலாம். நீங்கள் எப்படி அழைக்க விரும்பினாலும் அழையுங்கள். ஆனால், உங்களுடைய வகையினங் களில் ஒன்று மட்டும் எளிதாய் விளங்கி விடும். அவர்களுடைய பார்வை ஒரு குறிப்பிட்ட தன்மை உடையது. நீங்கள் காணாத வற்றையும் அவர்கள் காண்கிறார்கள் என்பதால் அவர்கள் உங்களில் இருந்து மாறுபடுகிறார்கள்.

நீங்கள் அவர்களைப் பின்பற்றத் தொடங்கியிருந்தாலும் தொடக்கத்தில் நீங்கள் அவர்களை எதிர்த்தீர்கள். உங்கள் மனம் புண்பட்டதாய் உணர்ந்தீர்கள். காரணம், அவர்களுடைய பார்வைகள் ஒரு மிகப்பெரிய வேட்கையை உங்களுக்குள் தோற்றுவித்திருந்தது -

ஆனால், எனக்கு ஒரு பெயரிடுவதன் மூலம் என்னை நீங்கள் அறிந்து கொண்டுவிட இயலுமா? உண்மையிலேயே நீங்கள் என்னை அறிந்து கொள்ள விரும்பினால் தயவு செய்து உங்களுக்கும் எனக்கும் இடையில் ஒரு பெயரைக் கொண்டு வந்து விடாதீர்கள். வகையினங்களை (categories)க் கைவிடுங்கள். நேரடியாய் பாருங்கள். உங்களுடைய கண்கள் எவ்விதத் தூசியும் இல்லாமல் சுத்தமாய் திறந்திருக்கட்டும். மாசற்ற நோக்குடன் எந்தவொரு எண்ணமோ, தவறான கருத்தோ இல்லாமல் என்னைப் பாருங்கள். என்னுடைய ஒருபக்கத்தில் இருந்து மறுபக்கத்தையும் நீங்கள் பார்க்க இயலும். நான் தெள்ளத் தெளிவாய் எளிதில் புறப்படுகிறவனாய் இருப்பேன். என்னை அறிந்துகொள்ள அதுதான் வழி. மெய்ம்மை (reality)யை அறிந்து கொள்ள அதுவே வழி.

'ரோஜா' என்கிற பெயரை மறந்துவிட்டு ரோஜாவைப் பாருங்கள். மரத்தைப் பார்க்கிறபோது 'மரம்' என்கிற சொல்லை மறந்து விடுங்கள். பசுமையான காய்கறிகளைப் பாருங்கள். ஆனால், பசுமை என்கிற சொல்லை மறந்து விடுங்கள். உடனடியாய் ஒரு விநோதமான இருப்பு உங்களை எல்லாப் பக்கங்களிலும் சூழ்ந்து கொள்வதை உணர்வீர்கள். அது கடவுள்.

பெயரிடப்பட்டதும் கடவுள் உலகமாகிறார், உலகம் மீண்டும் பெயரற்று கடவுளாகிறது. உங்கள் மனதில் கட்டுக்குள் வைக்கப்பட்ட கடவுள் உலகமாகிறார். தடையற்ற உலகம் மீண்டும் வடிவற்றதாய், அறியப்படாததாய் - கடவுளாய் ஆகிவிடுகிறது.

சொற்களில்லாமல் என்னைக் கூர்ந்து பாருங்கள்.



**'என்னைப்பற்றியே நான். அச்சமுற்றால் எப்படிச் சரணடைவது? என் இதயம் வேதனைப்படுகிறது. அன்பின் வாயில் எங்கிருக்கிறது?'**

சரணடைவதற்கு 'எப்படி' என்பது இல்லை. அகந்தையின் மதியீனத்தை, முட்டாள்தனத்தை நீங்கள் அறிந்திருந்தால், அகந்தையால் விளையும் துன்பத்தை நீங்கள் அறிந்திருப்பின் அதை நீங்கள் விட்டுவிடுவீர்கள். 'எப்படி,' என்பது இல்லை. நீங்கள் அதைக் கூர்ந்து நோக்கினால் அது மகிழ்ச்சியற்றது என்பதை, நரகம் என்பதைக் கண்டு

கொள்வீர்கள் - அதை விட்டு விடுவீர்கள். நீங்கள் அதைப் பற்றிக் கொண்டேயிருப்பதற்குக் காரணம், அதன் மூலம் ஒரு கனவை நீங்கள் வளர்த்துக் கொண்டதுதான். அது விளைவிக்கும் துன்பத்தை நீங்கள் அறிந்திருக்க மாட்டீர்கள். அதில் ஓர் அதிசயம் இருப்பதாய் நீங்கள் நம்புகிறீர்கள்.

உங்களுக்குள் ஆழ்ந்து கவனியுங்கள். அதை எப்படி விடுவது என்று கேட்காதீர்கள். அதை எப்படி நீங்கள் பற்றிக் கொண்டிருக்கிறீர்கள் என்பதைக் கண்டுபிடியுங்கள். நீங்கள் அதைப்பற்றிக் கொண்டிராவிடில், அது தானாகவே விட்டுவிட்டிருக்கும். அதை எப்படி விடுவது என்று என்னிடம் நீங்கள் கேட்டால், ஓர் உத்தியை நான் உங்களுக்கு வழங்குவேன். அகந்தையை நீங்கள் பற்றிக் கொண்டாற்போல் அந்த உத்தியையும் பற்றிக் கொள்வீர்கள். காரணம் பற்றிக்கொள்ளும் செயல்முறையை நீங்கள் அறிந்திருக்கவில்லை.

சின்னதாய் ஒரு கதை. ஒரு தத்துவப் பேராசிரியர் இருந்தார். ரொம்பவும் ஞாபகமறதிக்காரர். தத்துவ மேதைகள் என்றாலே விதிவிலக்கில்லாமல் ஞாபக மறதி இருக்கும். அவர்களுடைய மனம் எண்ணமற்றிருக்கும் என்பதல்ல. அவர்கள் எண்ணற்ற கருத்துகளைத் தங்கள் மனதில் திணித்துக்கொண்டு, அவற்றைத் தவிர மற்றவற்றை மறந்து விடுவார்கள், அவ்வளவுதான். அவர்கள் எண்ண மூலங்களில் இருப்பவர்கள். அவர் ஒவ்வொன்றையும் தவறான இடத்தில் வைத்து விடுவார். ஒருநாள் அவர் குடையில்லாமல் வீட்டுக்குத் திரும்பி வந்தார். அவர் எங்கே அதை மறந்து வைத்து விட்டிருப்பார் என்பதை அவரிடம் இருந்து தெரிந்துகொள்ள அவருடைய மனைவி முயன்றாள்.

'என்னிடம் சொல்லுங்கள். அதை முதலில் எங்கே தவற விட்டீர்கள் என்பதை மிகவும் சரியாகச் சொல்லுங்கள்?' என்று கேட்டாள்.

- ஒரு ஞாபக மறதிப் பேர்வழியிடம் கேட்கக்கூடிய கேள்வியல்ல அது. 'எங்கே தவற விட்டீர்கள் என்பதை மிகச்சரியாகச் சொல்லுங்கள்' அல்லது, 'நீங்கள் அதைத் தவறவிட்டதை முதல முதலாய் எங்கே தெரிந்து கொண்டீர்கள்?' இது ஒரு தவறான கேள்வி. காரணம் குடையை மறந்து விட்ட ஒருவரால், அதை எப்போது தவறவிட்டார் என்பதை எப்படி மிகச் சரியாகச் சொல்ல முடியும்?'

'சொல்லுங்கள், அதை முதல் முதலாய் எப்போது தவற விட்டீர்கள் என்பதை மிகச்சரியாகச் சொல்லுங்கள்?' அவள் கேட்டாள்.

'அன்பானவளே! ஒரு சின்னத் தூறலுக்குப் பின்னாடி அதை மடக்கிக் கீழே வைக்கலாம்னு கையை உயர்த்தினேன். பிறகுதான் தெரிஞ்சுக்கிட்டேன். அது அங்கே இல்லேங்கிறதை' என்று பதிலளித் தார் அவர்.

நீங்கள் பற்றிக் கொண்டிருப்பதுடன், அதை எப்படி விடுவது என்று கேட்கிறீர்கள். பற்றியிருக்கும் மனம் உத்தியையும் பற்றிக் கொள்ளத் தொடங்கும். 'எப்படி' என்பதைத் தயவுசெய்து கேட்காதீர்கள். அதைவிட உங்களுக்குள் தேடி ஆராய்ந்து பாருங்கள் - நீங்கள் ஏன் பற்றிக் கொண்டிருக்கிறீர்கள் என்பதை. இதுவரை உங்களுடைய அகந்தையைத் தவிர வேறு எதையேனும் அது வழங்கியிருக்கிறதா என்ன? வாக்குறுதிகளைத் தவிர வேறு எதை யேனும் அது வழங்கியிருக்கிறதா? எந்தவொரு வாக்குறுதியை யேனும் எப்போதாவது நிறைவேற்றியிருக்கிறதா? நீங்கள் எப்போதைக்குமாய் அதனிடம் ஏமாறப் போகிறீர்களா? இதுவரை அது உங்களை ஏமாற்றியது போதாதா? அது உங்களை எங்கேயும் இட்டுச் செல்லாது என்பதை நீங்கள் உணரவில்லையா? அதே பழைய கனவுகளுடன் ஒரு நீர்ச்சுழலில் நீங்கள் திரும்பத் திரும்பச் சுழன்று கொண்டிருக்கிறீர்கள். ஒவ்வொரு முறையும் ஏமாறுகிறீர்கள். அது பொய்யான வாக்குறுதி என்பதைத் தொடக்கத்திலேயே நீங்கள் எண்ணிப் பார்க்கவில்லை. நீங்கள் ஏமாற்றமடைகிற கணத்தில், ஒரு புதிய நம்பிக்கையைப் பற்றி மீண்டும் கனவு காணத் தொடங்கி விடுகிறீர்கள். அத்துடன் அகந்தையும் உங்களுக்குத் தொடர்ந்து வாக்குறுதியளித்தபடி இருக்கிறது.

அகந்தை செயலற்றது. அது வாக்குறுதி அளிக்க மட்டுமே முடியும். ஒருபோதும் வழங்குவதில்லை. அதைக் கூர்ந்து கவனியுங்கள். வாக்குறுதிக்கும், வழங்காமைக்கும் இடையே இருப்ப தெல்லாம் மிகுதியான துன்பங்களும், ஏமாற்றமும், துயரங்களும்தான்.

நீங்கள் பெரும் அளவில் அதுபற்றிக் கேள்விப்படக்கூடியது புவியியலின் ஒருபகுதியல்ல. அது பூமிக்கடியில் இருப்பதுமல்ல. அது உங்கள் அகந்தைக்கும் கீழாய் இருப்பது. அகந்தையினால் உண்டாகும் துன்பத்தை உணர்ந்திருப்பின் நீங்கள் அதைப் பற்றியிருக்க மாட்டீர்கள். நீங்கள் விடுங்கள் என்றோ பற்றியிருங்கள் என்றோ நான் சொல்லவில்லை. நீங்கள் பற்றிக் கொள்ளாவிடில் உடனடியாய் சரணடைதல் நிகழும். சரணாகதி என்பது அகந்தையற்றிருத்தல்.

ஆனால் நீங்கள் ஒருபோதும் கேட்டதில்லை. 'நான் எதற்காக அகந்தையைப் பற்றியிருக்கிறேன்' என்று. நீங்கள் கேட்பது, 'எப்படிச் சரணடைவது?' என்றுதான். ஒரு தவறான கேள்வியை நீங்கள் கேட்கிறீர்கள்.

மேலும், ஆயிரத்தியோரு விசயங்கள் பற்றி மனிதர்கள் உங்களிடம் சொல்லிக் கொண்டேயிருப்பார்கள். அந்நிலையில் நீங்கள் அவற்றைப் பற்றிக்கொள்கிறீர்கள். நீங்கள் பல செயல்முறைகளை, உத்திகளை, தத்துவங்களை, மதங்ளை தேவாலயங்களைப் பற்றிக் கொண்டிருக்கிறீர்கள். ஓர் அகந்தையை விடவேண்டி முந்நூறு மதங்களை நீங்கள் தோற்றுவித்திருக்கிறீர்கள். ஒரு சின்ன அகந்தையை விடவேண்டி ஆயிரக்கணக்கான நூல்கள் தொடர்ந்து எழுதப்பட்டு வருகின்றன. இலட்சோப லட்சம் உத்திகள் சொல்லப் படுகின்றன. நீங்கள் எந்த அளவு படிக்கிறீர்களோ அந்த அளவு புலமை பெற்றவராகிறீர்கள். அதை விடுவதற்கான சாத்தியம் மிகக் குறைவு. தற்போது உங்கள் அகந்தை அலங்கரிக்கப்பட்டதாய் இருக்கிறது.

புகழ்பெற்ற ஒரு நாவலாசிரியரின் சுயசரிதையை நான் படித்துக் கொண்டிருந்தேன்.

தமது வாழ்வின் இறுதிக்கட்டத்தில் தமக்குத் தெரிந்தவர்களிடம் எல்லாம் இப்படிக் குறைபட்டுக் கொண்டார் அவர். 'என்னுடைய வாழ்க்கையை நான் வீணடித்து விட்டேன். நான் ஒருபோதும் நாவலாசிரியராக விரும்பியதேயில்லை' என்று. அவரிடம் யாரோ கேட்டார்கள். 'அப்படியானால் நீங்கள் ஏன் நிறுத்தவில்லை? நானும் இருபது ஆண்டுகளுக்கு மேலாய் உங்களைக் கவனித்து வருகிறேன். உங்கள் குறைபாடு பற்றி பலரும் அதற்கு முன்பிருந்தே பேசி வருவதையும் நான் கவனிக்கிறேன். நீங்கள் ஏன் நிறுத்தவில்லை?' அவர் சொன்னார். 'அது எப்படி முடியும்? இது என்னுடைய தொழிலல்ல என்று நான் தெரிந்து கொள்வதற்கு முன்பே நான் புகழ் பெற்று விட்டேன். இது என்னுடைய தொழிலல்ல என்று நான் தெரிந்து கொள்ளுமுன்பே நான் புகழ்பெற்ற நாவலாசிரியனாகி விட்டேன்' என்று.

உங்கள் அகந்தையை அழகுபடுத்திக் கொண்டே செல்வீர் களாயின் உங்களால் அதை விட முடியாது. உங்கள் அறிவு அதனை அலங்கரிக்கிறது. நீங்கள் தேவாலயத்துக்குச் சென்று வருவதும் அகந்தையை அலங்கரிக்கிற காரியந்தான். சமய நம்பிக்கையும் ஓர்

அலங்காரம். தினமும் பைபிள், கீதை போன்று படிக்கிற எதுவும் அதை அலங்கரிப்பதுதான். உங்களைவிடப் புனிதமான பார்வையுடன் நீங்கள் மற்றவர்களைப் பார்க்க முடியும். உங்களைத்தவிர ஒட்டுமொத்த உலகமும் நரகத்துக்குச் சென்று விடும்படியால் ஒரு கண்டனத்தையும் உங்கள் கண்கள் மூலம் நீங்கள் தெரிவிக்க முடியும்.

அடக்கமும், எளிமையும் உடையவராய் உங்களைக் காட்டிக் கொள்ள நீங்கள் முயற்சிப்பீர்கள். ஆனால், அடியாழத்தல் உங்கள் எளிமையில் அகந்தை அரியாசனமிட்டு அமர்ந்திருக்கும்.

நீங்கள் பகுத்தறிவிற்கேற்ற விளக்கங்களைக் கண்டுபிடித்தபடி இருப்பீர்கள். அத்தனை பகுத்தறிவு விளக்கங்களும் அழகுபடுத்தல்கள் தாம்.

இந்தியாவில் ஹைதராபாத் நிஜாமாயிருந்த ஒருவர் சில ஆண்டுகளுக்கு முன் செத்துப் போனார். உலகிலேயே பெரிய பணக்காரர் அவர். ராக்ஃபெல்லர்களும், ஃபோர்டுகளும் அவர்முன் எம்மாத்திரம். உலகின்பெரும் பணக்காரர் அவர். அவரிடம் எவ்வளவு இருந்தது என்று யாருக்கும் துல்லியமாய் தெரியாது. காரணம், அவருடைய செல்வங்கள் இலட்சோப லட்சம் வைரக் கற்களாய் இருந்தன. ஏழு பெரிய கூடங்கள் முழுக்க வைரங்கள்தாம். மிகச் சரியான எண்ணிக்கை அவருக்கே தெரியாது. ஆனால், அவர் மிகப்பெரிய கருமி என்றால் நீங்கள் நம்ப மாட்டீர்கள். நான்பொய் சொல்வதாய் நினைத்துக் கொள்வீர்கள். விருந்தாளிகள் சாம்பல் கிண்ணத்தில் விட்டுச் செல்லும் சிகரெட் துண்டுகளை எடுத்துப் புகைக்குமளவுக்கு மோசமான கஞ்சன் அவர். நீங்கள் என்னை நம்ப மாட்டீர்கள். ஆனால், அது உண்மை.

அவர் ஹைதராபாத் நிஜாமாக அரியணையில் அமர்ந்திருந்த நாற்பதாண்டு காலமும் ஒரே தொப்பியைத்தான் அணிந்திருந்தார். உலகிலேயே மிக அழுக்கான குல்லாய் அதுவாகத்தான் இருக்க முடியும். அது ஒருபோதும் நீர்கொண்டு கழுவப்பட்டதேயில்லை. காரணம் அது சிதைந்து போய் விடுமோ என்கிற பயம் அவருக்கு. ஒரு வறியவனின் வாழ்க்கையை அவர் வாழ்ந்தார். ஆனால், மற்றவர்களிடம் சொல்லும்போது, 'நான் எளிமையானவன். உலகிலேயே பெரிய பணக்காரனாக இருந்தாலும், ஒரு ஏழையின் வாழ்க்கையைத் தான் வாழ்கிறேன்' என்று. ஆனால், அவர் ஏழை அல்லர். அவர் ஒரு கருமி. பொருள்களிடம் தமக்குப் பிணைப்பு இல்லை.

லோகாயதமானவற்றுடன் தம்மை இணைத்துக் கொள்ளவில்லை என்பதால்தான், ஒரு எளிய வாழ்க்கையைத் தாம் வாழ்வதாக அவர் சொல்லிக் கொள்வார். தம்மை ஒரு சாதுவாகவும், பக்கிரியாகவும் அவர் எண்ணிக் கொள்வார். அவர் அப்படியில்லை. அவர் மிகப்பெரிய பணக்காரர் என்பது போலவே மிகப்பெரிய கருமியுங்கூட. ஆனால் தமது கருமித்தனத்துக்குப் பல விளக்கங்களை அவர் கண்டுபிடித்தபடி இருப்பார்.

அவர் மிகுந்த அச்சமும், மூட நம்பிக்கையும் கொண்டவராய் இருந்தார். அவர் பிரார்த்திப்பதுண்டு. தம்மை மிகச்சிறந்த பிரார்த்தனை யாளராய் அவர் காட்டிக் கொள்வார். ஆனால், அவர் அப்படியில்லை. அவரிடம் அச்சம் இருந்தது. அவர் இரவில் உறங்கும்போது ஒரு வினோதமான பொருளுடன் உறங்குவார். அவரிடம் உப்பால் நிரப்பப்பட்ட ஒரு பெரிய பானை இருந்தது;ழ தம்முடைய பாதங்களில் ஒன்றை அந்தப் பானைக்குள் விட்டுக்கொண்டுதான் அவர் உறங்கு வார். உங்கள் பாதம் உப்புக்குள் இருந்தால் கெட்ட ஆவிகள் உங்களைத் தீண்டாது என்ற முகம்மதியர்களின் நம்பிக்கைதான் அதற்குக் காரணம்.

இந்த மனிதர் எப்படிப் பிரார்த்தனைகளைச் செய்ய முடியும்? ஆவிகளைப் பற்றிய அச்சம் உள்ள ஒருவரால், ஆண்டவனை எப்படி நேசிக்க முடியும்? காரணம், கடவுளை நேசிக்கும் ஒருவரிடம் அச்சம் தலைகாட்டாது. ஆனால் பலவேரை அவர் ஏமாற்றிவிட்டார். அவர் பல பேரை ஏமாற்றவில்லை என்றாலும் குறைந்தபட்சம் தம்மைத் தாமே ஏமாற்றிக்கொண்டு விட்டிருப்பார்.

நல்லது. தொடக்கத்தில் இருந்து வருவோம். நீங்கள் எங்கே பற்றிக் கொண்டிருக்கிறீர்கள்? எதற்காகப் பற்றிக் கொண்டிருக்கிறீர்கள் என்பதைக் கவனியுங்கள். எப்படிச் சரணடைவது என்று கேட்காதீர்கள். ஏன் அகந்தையைப் பற்றிக் கொண்டிருக்கிறீர்கள், எதற்காக இத்தனைப் பிடிவாதமாய் இருக்கிறீர்கள் என்பதைக் கவனியுங்கள், கண்டறியுங்கள்.

அந்த விண்ணகத்தை உங்கள் அகந்தை வழங்கிவிடும் என்று நீங்கள் நம்பினால் காத்திருங்கள் - சரணாகதி ஏன் தேவைப்படப் போகிறது? அத்தனை வாக்குறுதிகளும் பொய்யானவை, அகதை ஓர் ஏமாற்று என்று நீங்கள் எண்ணினால், சரணாகதி அடைவது எப்படி என்ற கேள்வி பிறகெதற்கு? பற்றிக் கொள்ளாதீர்கள். உண்மையில் இது

நெருப்பு என்பது உங்களுக்குத் தெரிந்தவுடன் நீங்கள் அதை விட்டுவிடுவீர்கள். நீங்கள் அதை விட்டுவிடுங்கள். வீடு தீப்பிடித்து எரியும்போது வெளியே வருவது எப்படி என்று யாரிடமாவது கேட்டுக் கொண்டிருப்பீர்களா என்ன?

ஓர்முறை அப்படி ஆயிற்று. நான் ஒரு வீட்டில் தங்கியிருந்தேன். அந்த வீட்டுக்கு முன்னால் இருந்த ஒரு வீடு தீப்பற்றிக் கொண்டது. அது மூன்றடுக்கு வீடு. மூன்றாவது தளத்தில் இருந்த குண்டு மனிதர் ஒருவர் சன்னல் வழியே குதிக்க முயன்றார். கூடியிருந்த கும்பல் ஒரு குரலாய் சொன்னது. 'குதிக்காதே! நாங்கள் ஏணி கொண்டு வருகிறோம்' என்று. ஆனால் வீடே பற்றி எரியும் போது யார் காது கொடுத்துக் கேட்பது? அவர் குதித்து விட்டார். ஏணி வரும் வரை அவர் காத்திருக்கவில்லை. முதல் தளத்தில்தான் தீப்பிடித்திருந்தது என்பதால் பெரிதாய் ஆபத்தொன்றும் இல்லை. மூன்றாம் தளத்தை எட்டுவதற்கு நேரமாகும் என்கிற நிலையில் ஏணி கொண்டு வரப்பட்டது. ஒட்டுமொத்த கும்பலும் அவரை நோக்கிக் கத்தியது 'பொறுங்கள்' என்று. ஆனால், அவர் காது கொடுத்துக் கேட்கவில்லை. அவர் குதித்து, தன்னுடைய காலை உடைத்துக் கொண்டார்.

பிற்பாடு நான் அவரைப் பார்க்கச் சென்றபோது அவரிடம் கேட்டேன். 'நீங்கள் ஒரு அதிசயத்தை நிகழ்த்தி விட்டீர்கள்.' எப்படிக் குதிப்பது என்று நீங்கள் யாரிடமும் கேட்கவில்லை. நீங்கள் இதற்கு முன் எப்போதாவது மூன்றாம் மாடியில் இருந்து குதித்திருக்கிறீர்களா?'

அவர் சொன்னார். 'ஒருபோதும் குதித்ததில்லை.'

'எப்போதாவது குதிப்பதற்குப் பயிற்சி எடுத்திருக்கிறீர்களா?'

அவர் சொன்னார். 'ஒருபோதுமில்லை.'

'ஒத்திகை..?'

அவர் சொன்னார். 'என்ன பேசறீங்க? இதுதான் முதல் தடவை.'

'ஏதேனும் புத்தகத்தில் இருந்து தகவல் பெற்றதுண்டா? யாராவது ஒரு ஆசிரியரிடம் கேட்டிருப்பீர்களா? நீங்கள் யாரிடமேனும் விசாரித்து அறிந்து கொண்டிருப்பீர்களா?'

அவர் சொன்னார். 'நீங்க என்ன பேசறீங்க? என்னுடைய பெண்டாட்டி வரட்டும். பிள்ளை வரட்டும் என்றுகூட என்னால் காத் திருக்க முடியவில்லை. மக்கள் எதுக்காகக் கூச்சல் போட்டாங்கன்னும்

புரியலை. பிறபாடு நான் கீழே விழுந்து கிடந்தப்பதான் தெரிந்தது அவர்கள் ஏணி கொண்டு வந்தது...'

வீடு பற்றி எரியும்போது நீங்கள் வெளியே குதிப்பீர்கள். 'எப்படி?' என்றெல்லாம் கேள்விகள் கேட்டுக் கொண்டிருப்பதில்லை. நான் உங்களுக்குச் சொல்கிறேன். 'உங்கள் வீடு தீப்பிடிச்சு எரியுது. அதில் இருந்து எப்படி வெளியே குதிப்பது என்பதை நீங்கள் விவரமாய் கேட்டுக்கொள்ள வேண்டும். உங்கள் வீடு எரிந்து கொண்டிருப்பதை இன்னமும் நீங்கள் உணரவில்லை. 'அதில் இருந்து எப்படி வெளியேறுவது?' என்ற எண்ணத்தை என்னுடைய வார்த்தை உங்களுக்குள் தோற்றுவிக்கும்.' உண்மையிலேயே உங்கள் வீடு பற்றியெரிவதை நீங்கள் அறிந்திருந்தால் 'நான் ஏணி கொண்டு வருகிறேன், கொஞ்சம் பொறுங்கள்' என்று நான் சொன்னால்கூட நீங்கள் காத்திருக்க மாட்டீர்கள். நீங்கள் குதித்து விடுவீர்கள். குதித்துக் காலை உடைத்துக் கொள்வீர்கள்.

ஆனால், எவ்விதக் கலக்கமோ, இடர்ப்பாடோ இல்லாமல் சௌகர்யமாய் கேட்கிறீர்கள், 'எப்படிச் சரணடைவது?' என்று. 'எப்படி' என்பதே இல்லை. அகந்தை உண்டாக்கும் துன்பத்தைக் கூர்ந்து கவனியுங்கள். நீங்கள் அதை உணர்ந்தால் அதில் இருந்து வெளியேறி விடுவீர்கள்.

'என்னுடைய இதயம் வேதனைப்படுகிறது' என்பீர்கள். அப்படித் தான் விதிக்கப்பட்டிருக்கிறது. அகந்தை வேதனையை அதிகரிக்கும்.

நீங்கள் மேலும் கேட்கிறீர்கள், 'அன்பின் வாயில் எங்கிருக் கிறது?' என்று. அகந்தையில் இருந்து வெளியே வாருங்கள். அன்பின் வாயில் அங்கே இருக்கிறது. அகந்தையில் இருந்து வெளியே வாருங்கள், இதயத்தின் வாயில் அங்கே இருக்கிறது. அகந்தை உங்களை அன்பு செய்ய விடாமல் தடுக்கிறது. அகந்தை உங்களை தியானம் பண்ண விடாமல் தடுக்கிறது. அகந்தை உங்களைப் பிரார்த் தனையில் இருந்து தடுக்கிறது. அகந்தை உங்களை இறைவனிடம் இருந்து தடை செய்கிறது. ஆனால், இன்னமும் நீங்கள் அதன் பேச்சைத்தான் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். அது உயர்ந்தபட்சம் உங்கள் வரைக்கும்.

தேர்வு செய்யும் உரிமை உங்களுக்கு இருக்கிறது என்பதை நினைவில் கொள்ளுங்கள். அகந்தையின் குரலுக்குக் காது கொடுக்கும். படி உங்களை யாரும் கட்டாயப்படுத்தவில்லை. அது உங்கள்

தேர்வுரிமை. நீங்களே தேர்வு செய்து கொண்டால் அது சரி. 'எப்படி?' என்பதை அதன்பிறகு கேட்காதீர்கள். நீங்கள் அதைத் தேர்வு செய்யவில்லை என்றால் 'எப்படி' என்று கேட்கிற அவசியமில்லை.



**'உங்களுடைய அறிவுரைகளை நான் முழுக் கவனத்துடன் கேட்டுக்கொள்ள முயல்கிறேன் என்றாலும், பிற்பாடு நீங்கள் சொன்னவை நினைவில் நிற்காவிடில் என்னாவது?'**

அதற்கு அவசியம் இல்லை. நீங்கள் முழுக் கவனத்துடன் நான் சொல்வதைக் கேட்டால், அதை நினைவில் வைக்கும் அவசியம் இல்லை. அது உங்களில் ஒரு பகுதியாகி விடும். நீங்கள் ஏதோ ஒன்றை உணர்கிறீர்கள். நீங்கள் சாப்பிட்டதை நினைவில் வைத்துக் கொள்வீர் களா என்ன? அதனால் என்ன பயன்? அது உங்களில் ஒரு பகுதி யாகிறது. அது உங்கள் இரத்தமாகிறது. உங்கள் எலும்பாகிறது. அது நீங்களாகவே மாறிவிடுகிறது. நீங்கள் ஒன்றைச் சாப்பிட்டவுடன், அதைப்பற்றி மறந்து விடுகிறீர்கள். நீங்கள் சீரணித்துக் கொள்வது நினைவில் வைப்பதாகாது.

நீங்கள் முழுமையாகக் கவனித்தால் நான் உங்களுடைய இரத்தமாகி விடுகிறேன். உங்கள் எலும்பாக மாறி விடுகிறேன், உங்கள் இருப்புணர்வில் கலந்து விடுகிறேன். என்னை நீங்கள் சீரணித்துக் கொள்கிறீர்கள்.

அதற்கு அவசியமில்லை. ஒரு செயலின் நிலை இருக்கிறதென் றால் நீங்கள் எதிர்ச்செயல் (respond) புரிகிறீர்கள். அந்த எதிர்ச்செயலில் உங்களுக்குத் தெரிந்த, நீங்கள் கேள்விப்பட்ட எல்லாமும் இருக்கும். ஆனால், அது நினைவு கூரப்பட்டதாய் இருக்காது, வாழ்ந்து பார்த்ததாய் இருக்கும். இந்த வேற்றுமையும் நினைவில் கொள்ளப்பட வேண்டியது.

நான் இங்கு சோதித்துப் பார்க்கிறவையெல்லாம் உங்களை மேலும் அறிவுடையவராக ஆக்குவதற்கல்ல, சில தகவல்களை உங்களுக்குத் தருவதற்காகவுமல்ல. என்னுடைய பேச்சு அல்லது இருப்புணர்வின் நோக்கம் அதுவாகாது. என்னுடைய ஒட்டுமொத்த நோக்கமும் இன்னும் கூடுதலான இருப்புணர்வை உங்களுக்குத் தருவதேயன்றி, கூடுதலான அறிவைத் தருவதல்ல. எனவே,

என்னுடன் இருங்கள், முழுமையாய் கேட்டிருங்கள். அதன்பிறகு நினைவில் வைத்திருக்க வேண்டும் என்கிற அவசியம் இல்லை. அது உங்களில் ஒரு பகுதியாகி விடும். தேவைப்படுகிற போதெல்லாம் அது மேலெழும். அது நினைவாக இருக்காது. உயிரோட்டமுள்ள எதிர்ச்செயலாக மேலெழும்.

இல்லையேல், அது உங்களுடைய நினைவாகி விடுமோ என்கிற அச்சம் தொடர்ச்சியாயிருக்கும். அந்நிலையில் நீங்கள் மாறுவதில்லை. உங்களுடைய நினைவுக் கொள்கலம் (memory tank) மட்டுமே பெரிதாய் மிகப்பெரியதாய் மாறும். உங்களுடைய கணிப்பொறி கூடுதலாய் தகவலூட்டப்பட்டப் பெறும். உண்மையான ஒரு செயல்நிலை இருக்கும் போதெல்லாம் நீங்கள் மறந்து விடுவீர்கள். அப்போது, உங்கள் தன்னுணர்வைக் கொண்டு செயல்படுவீர்களேயன்றி உங்கள் நினைவாற்றலால் அல்ல. அந்நிலையில் நீங்கள் மறந்து விடுவீர்கள். உண்மையான ஒரு செயல்நிலை இல்லாதபோது நீங்கள் மக்களிடம் வாதிடுவீர்கள், விவாதிப்பீர்கள், நினைவில் கொள்வீர்கள்.

கவனியுங்கள். நான் சொல்வது உங்களுக்குள் ஒரு நினைவாக மாறுமெனில் அது விவாதத்துக்கும், வாதத்துக்கும், சொற்போருக்கும் - மற்றவர்களிடம் உங்கள் அறிவை வெளிப்படுத்திக் கொள்ளவும் தகுதியாயிருக்கும். வேறு எவரைக் காட்டிலும் நீங்கள் கூடுதல் அறிவு பெற்றவர் என்று அவர்களை நம்ப வைக்க முடியும். அதற்கு வேண்டுமானால் அது பயன்படலாம். நீங்கள் காதலைப் பற்றிப் பேசுவதாயின் நான் கூறியவற்றை நினைவுபடுத்திக் கொண்டு நிறையவே பேச முடியும். ஆனால், நீங்கள் காதல்வயப்பட்டீர்கள் என்கிறபோது உங்களுடைய சுயத்தைக் கொண்டே நீங்கள் செயல்பட வேண்டியிருக்கும் - அறிந்த விவரங்களைக் கொண்டல்ல. காரணம், உண்மையான செயல்நிலை (sitatiion)யின்போது சவத்துப்போன ஒரு நினைவைப் பயன்படுத்த மாட்டார்கள்.

நான் கேள்வியுற்ற ஒரு குட்டிக்கதை:

ஒருநாள், காட்டில் அலைந்து கொண்டிருந்த ஆய்வாளர் ஒருவர் நரமாமிசம் உண்பவர்களிடம் மாட்டிக் கொண்டார். அவர்கள் தங்களுடைய பிரியமான உணவை உண்ணத் தயாராக இருந்தனர். அந்தக் கூட்டத்தின் தலைவன் அதிர்ச்சி தரும் விதத்தில் அருமையான ஆங்கிலம் பேசினான். அதுபற்றிக் கேட்டபோது தான் அமெரிக்க மாநிலக்கல்லூரி ஒன்றில் ஓராண்டு படித்ததை ஒப்புக்கொண்டான்.

அச்சத்தில் உறைந்திருந்த ஆய்வாளர் வியப்புடன் கேட்டார். 'நீ கல்லூரியில் படித்துமா நரமாமிசம் உண்கிறாய்?' என்று.

'நல்லது ஆமாம்.' தன்னுடைய செயலை ஒப்புக்கொண்ட தலைவன், இணக்கமான குரலில் சொன்னான். 'ஆனால், தற்போது நான் கத்தியையும், கரண்டியையும் பயன்படுத்துகிறேன்.'

அப்படித்தான் எல்லாமும். உங்கள் நினைவின் ஒரு பகுதியாய் என்னை நீங்கள் ஆக்கிக் கொண்டு விட்டால், நீங்கள் இன்னமும் நர மாமிச பட்சிணியாகவே இருந்தாலும் கத்தி, கரண்டி உபயோகிப் பவராகி விடுவீர்கள். அதுதான் வேறுபாடு. ஆனால், உங்கள் இருப்புணர்வின் உள்ளார்ந்த ஆலயத்துக்குள் என்னைப் பிரவேசிக்க நீங்கள் அனுமதித்தால், முழுமையாய்க் காது கொடுத்துக் கேளுங்கள் - பிறகு கணிப்பொறியையும், நினைவில் வைப்பதையும் மறந்து விடுங்கள்: அதற்கு அவசியம் இருக்காது.

உங்களுக்கு வைக்கப்படும் தேர்வு ஏதோவொரு பல்கலைக் கழகத்தின் தேர்வுக் கூடத்தில் வைக்கப்படுவதல்ல. உங்கள் தேர்வு இப்பிரபஞ்சத்தில் வைக்கப்படுவதாகும். நீங்கள் என்னைக் கவன முடன் கேட்டிருந்தீர்களா; இல்லையா என்பது அங்கே நிரூபணமாகும். நீங்கள் முற்றிலும் மாறுபட்ட முறையில் நேசிப்பதை எதிர்பாராத விதமாய் கண்டு கொள்வீகள். செயல்நிலை (situation) பழைய தாயிருப்பதையும், உங்கள் எதிர்ச்செயல் வேறாயிருப்பதையும் புரிந்து கொள்வீர்கள். சிலர் உங்களைக் கோபமூட்டலாம், ஆனால் நீங்கள் கோபப்படுவதில்லை. சிலர் உங்களை எரிச்சலூட்ட முயற்சிக்கலாம். ஆனால், நீங்கள் எரிச்சலடைவதில்லை. அமைதியாயும் சாந்தமாயும் இருப்பீர்கள். உங்கள் மனம் புண்படும்படியாய் சிலர் நடந்து கொள்ள லாம். ஆனால், நீங்கள் தீண்டப்படாதிருப்பீர்கள். நீங்கள் தண்ணீரில் இருந்தாலும் அதனால் தீண்டப்படாத தாமரை மாதிரி. என்னுடன் இருப்பதால் என்ன நேரிட்டது என்பதை அப்போது நீங்கள் தெரிந்து கொள்வீர்கள்.

அது இருப்புணர்வின் (being) இடமாற்றமேயன்றி அறிவின் தகவலளிப்பு அல்ல.



**உங்கள் சொற்பொழிவின் இறுதியில் நீங்கள் பயன்படுத்தும் அந்தச் சுருக்கமான, வேடிக்கை வினாக்களிலொன்றை நான் கேட்கவும், 'இந்தக் கேள்வி தீரேந்திராவினுடையது' என்று நீங்கள் சொல்வதைக் கேட்டிடவும் நான் விரும்புகிறேன். 'நான் தியானத்தைத் தொடர்ந்தால் அது நிகழுமா?'**

ஒருபோதும் இல்லை. அந்நிலையில் தியானத்தை நிறுத்திவிடு. நீ கேள்விகளை விரும்பினால் தயவு செய்து தியானம் செய்யாதே. நீ தியானம் செய்தால் அத்தனை கேள்விகளும் மறைந்துவிடும், விடை மட்டுமே எஞ்சியிருக்கும். நீ கேள்விகள் அதிகம் கேட்க விரும்பினால் தியானத்தை நிறுத்திவிடு. அந்நிலையில் ஆரத்தியோடு கேள்விகள் கேட்டுக் கொண்டேயிருப்பாய்.

அவை எல்லாமே முட்டாள்தனமானதாயும், வேடிக்கையான தாயும் இருக்கும். அதனால் அதுபற்றிக் கவலைப்பட வேண்டிய தில்லை. தியானம் செய்யாதே. நான் மறுபடியும் சொல்கிறேன் கேள்விகள் எல்லாமே மதியற்றதாயும், விளையாட்டாயும் இருக்கும். நீ தியானித்தால் அவையனைத்தும் மறைந்துவிடும். அமைதி மட்டுமே எஞ்சியிருககும். அமைதியே விடையாகும்.

நினைவிக்கட்டும், ஒன்று உன்னிடம் கேள்விகள் இருக்கும் அல்லது விடைகள் இருக்கும். நீ இரண்டையும் ஒருசேரப் பெற்றிருப் பதற்கில்லை. நீ கேள்விகளைப் பெற்றிருந்தால் உன்னிடம் அதற்கான விடை இருக்காது. நான் விடையளிக்க முடியும். ஆனால் அது உன்னை வந்தடையாது. அது உன்னை அடையும் நேரத்தில் நீ அதை ஆயிரத்தியோரு கேள்விகளாக மாற்றிவிடுவாய். நீ கேள்விகளைப் பெற்றிருந்தால் உன்னிடம் கேள்விகள்தான் இருக்கும். நீ விடையைப் பெற்றிருப்பாயெனில் - நான் சொல்வது விடை, விடைகளல்ல, காரணம் எல்லாக் கேள்விகளுக்கும் இருப்பது ஒருவிடைதான் - உன்னிடம் விடை இருக்கும் போது கேள்விகள் எழாது.

எல்லாக் கேள்விகளுக்குமான விடையை நீ விரும்பினால் தியானம் செய்திடு. நீ கேள்விகள் கேட்டுக் கொண்டேயிருக்க விரும்பினால் தியானிப்பதை நிறுத்தி விடு.

தியானமே விடையாகும்.

**சூத்திரம் - 6 தஸ்ய பூமி ஷுவி நியோக**

சம்யமாவை படிப்படியாய் செய்ய வேண்டும்.

**சூத்திரம் - 7 த்ரயம் அந்தரங்கள் பூர்வேப்ய**

முந்தைய ஐந்துடன் ஒப்பிடும்போது தாரணை, தியானம், சமாதி இம்மூன்றும் அதிகமாய் அகமுகமானவை.

**சூத்திரம் - 8 ததபி பஹிரங்க நிர்பீஜஸ்ய**

இவை விதையற்ற சமாதிக்குப் புற அங்கங்கள்.

**சூத்திரம் - 9 வ்யுத்தான நிரோத ஸம்ஸ்கார யோரபிபவ ப்ராதுர் பாவௌ நிரோதட்சண சித்த அன்வயோ நிரோத பரிணாம**

சஞ்சல நிலையில் உள்ள சம்ஸ்காரங்கள் அடங்கி, அடங்கிய நிலையில் உள்ள சம்ஸ்காரங்கள் எழுந்து, மனம் அந்த நிலையிலேயே தொடர்ந்து இருக்குமானால் அந்நிலை 'நிரோத பரிணாமம்' எனப்படுகிறது.

**சூத்திரம் - 10 தஸ்ய பிரசாந்த வாஹிதா ஸம்ஸ் காராத்**

திரும்பத் திரும்ப ஏற்படுத்தப்படும் பதிவுகள் தடையின்றித் தொடர்வதில் அமைதி உண்டாகும் (பயிற்சியால் மனநிலை உறுதிப்படுகிறது).

ஜெர்மனியில் மரபுசார்ந்த வழியில் இரண்டு சிந்தனைப் பிரிவுகள் இருப்பதாய் எனக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தக் கோட்பாடு நாட்டின் தொழில்சார்ந்த வடபகுதியில் நடைமுறையில் உள்ளது. நிலை தீவிரமானதாயினும் நம்பிக்கையற்றதாகி விடவில்லை. ஜெர்மனியின் தென்பகுதியில் அந்தக் கோட்பாடு மிகுதியான கற்பனையும், குறைந்த அளவேயான நடைமுறையும் கொண்டு காணப்படுகிறது. செயல் நிலை நம்பிக்கையற்றதாய் இருக்கிறது. ஆனால், கடுமையாயில்லை. நீங்கள் என்னைக் கேட்டால் நிலைமை நம்பிக்கையற்றதாயுமில்லை. கடுமையாயுமில்லை என்பேன். நான் மனிதனுக்குரிய பணி பற்றிச் சொல்கிறேன்.

மனிதனின் செயல்நிலை மிகக் கடுமையானதாயிருக்கிறது. காரணம் பல நூற்றாண்டுகளாகவே நாம் கடுமையாயிருக்கும்படி கற்பிக்கப்பட்டிருக்கிறோம். மனிதனின் செயல்நிலை நம்பிக்கையற்றதாய் இருப்பதற்குக் காரணம் தவறானவற்றைச் செய்வதுதான். இலக்கு என்பது இயல்பாயிருப்பது என்பதை நாம் கண்டுபிடித்துக் கொள்ளவில்லை. நமக்குக் கற்பிக்கப்பட்ட அத்தனை குறிக்கோள்களுமே மிகவும் இயல்பற்றவைதாம்.

இயல்பாயிருப்பதென்பது பிரபஞ்ச விதியுடன் பொருந்தியிருப்பதாகும். இதுவே 'சம்யமா' என்று பதஞ்சலியால் குறிக்கப்படுவது. சம்யமா என்பது இயல்பாயிருப்பதும், பிரபஞ்ச விதியுடன் பொருந்தியிருப்பதும் ஆகும். சம்யமா என்பது உங்கள் மீது திணிக்கப்படுவதல்ல. சம்யமா என்பது வெளியில் இருந்து வருவதல்ல. சம்யமா என்பது உங்கள் உள்ளார்ந்த இயல்பின் மலர்ச்சியேயாகும். சம்யமாவில் நீங்கள் முன்பு எதுவாக இருந்தீர்களோ அதுவாகவே ஆகிவிடுகிறீர்கள். சம்யமாவில் நீங்கள் மீண்டும் இயற்கைக்குத் திரும்புகிறீர்கள். மனிதனின் இயற்கையான பண்பு எது? உங்கள் இருப்புணர்வின் அடியாழம் வரை தோண்டாவிடில் மனித இயல்பு எத்தகையது என்பதை நீங்கள் ஒருபோதும் அறிவதற்கில்லை.

ஒருவர் உள்நோக்கிச் செல்ல வேண்டியிருக்கும். யோகாவின் ஒட்டுமொத்த செயல்முறையே ஒரு புனிதப்பயணம். ஓர் உள்நோக்கிய பயணம். படிப்படியாக எட்டுப் படிகள். பதஞ்சலி உங்கள் வீட்டைக் கொண்டு வருகிறார்.

முதல் ஐந்து படிகள் இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், ப்ரத்யாகாரம். உங்கள் சரீரத்துக்கப்பால் அடியாழத்துக்கு நீங்கள் செல்ல அது உதவும். சரீரம் உங்களுடைய முதல் புறவெல்லை (periphery)யாய் உள்ளது. உங்கள் பிரபஞ்ச இருப்பின் பொது மைய (concentric) வட்டமும் அதுவே. இரண்டாம் படி மனதுகப்பால் செல்வதாகும். தாரணை, தியானம் , சமாதி இவற்றின் மூன்று உள்ளார்ந்த படிகள் உங்களது மனதுக்கப்பால் வழிநடத்திச் செல்வதாகும். உங்கள் சரீரத்துக்கப்பால், மனதுக்கப்பால் இருக்கிறது உங்களுடைய இருப்புணர்வின் மையம். அந்த இருப்புணர்வின் மையத்தை விதையற்ற சமாதி - கைவல்யம் என்பார் பதஞ்சலி. அதனை - உங்கள் அடிப்படைக்கு, இருப்புணர்வுக்குத் திரும்புவது நீங்கள் யாரென்பதை அறிந்து கொள்வது என்பார் அவர்.

ஆக, ஒட்டுமொத்த செயல் முறையுமே மூன்று பிரிவுகளாய் பிரிக்கப்பட்டிருக்கிறது. முதலாவது - சரீரதை எப்படிக் கடந்து செல்வது. இரண்டாவது - மனதை எப்படிக் கடந்து செல்வது. மூன்றாவது - உங்களுடைய சொந்த இருப்புணர்வில் எப்படிச் சென்றடைவது என்பதாகும்.

உலகெங்கிலுமுள்ள ஒவ்வொரு கலாசாரத்திலும், ஒவ்வொரு நாட்டிலும், ஒவ்வொரு தட்பவெப்ப நிலையிலும் குறிக்கோள்களை நமக்கு வெளியில் நாடிச் செல்லுமாறு தேடிக் கண்டுபிடிக்குமாறு நாம் கற்பிக்கப்பட்டிருக்கிறோம். அந்தக் குறிக்கோள் பணமாயிருக்கலாம், அந்தக் குறிக்கோள் அதிகாரமாயிருக்கலாம், தன்மானமாயிருக்கலாம் அல்லது கடவுளாகவும் இருக்கலாம், விண்ணுலகமாயும் இருக்கலாம். அது ஒன்றும் பெரிதாய் வேறுபாட்டை ஏற்படுத்தி விடாது. எல்லாக் குறிக்கோள்களும் உங்களுக்கு வெளியே உள்ளன. நீங்கள் எங்கிருந்து வந்தீர்களோ அந்த மூலத்துக்குத் திரும்புவதே உண்மையான குறிக்கோளாகும். அப்போது அந்த வட்டம் பூர்த்தியடைகிறது.

புறத்தேயுள்ள அத்தனை குறிக்கோள்களையும் விட்டு விடுவதுடன், உள்நோக்கிச் செல்லுங்கள். அதுவே யோகா விடுக்கும் செய்தி. புறத்தேயுள்ள குறிக்கோள்கள் திணிககப்பபடடவை. ஏதோவொரு

இடத்துக்குச் செல்லும்படி நீங்கள் கற்பிக்கப்படுகிறீர்கள். அவை ஒருபோதும் இயல்பாயிருப்பதில்லை. அவை இயல்பாவதும் முடியாத காரியம்.

ஜி.கே. செஸ்டர்டன் பற்றி நான் கேட்டறிந்த ஒரு குட்டிக்கதை:

அவர் இரயிலில், ஊக்கத்துடன் எதையோ படித்துக் கொண்டிருந்தபோது டிக்கெட் பரிசோதகர் அவரிடம் டிக்கெட் கேட்டார். சீற்றம் கொண்ட செஸ்டர்டன் அது கிடைக்காமல் தடுமாறினார். பரிசோதகர் அவருக்கு நம்பிக்கையளிக்கும் குரலில் சொன்னார். 'பரவாயில்லை ஐயா. நான் பிற்பாடு வந்து அதை 'பஞ்ச்' (punch) செய்து கொள்கிறேன். உங்களிடம் அது நிச்சயம் இருக்கும்' என்று.

செஸ்டர்டன், 'அது என்கிட்டே இருக்கும்கறது எனக்குத் தெரியும்' என்று திக்கித் திக்கிச் சொன்னார். 'ஆனா நான் இப்போ தெரிஞ்சுக்க விரும்பறது எங்கே போயிட்டிருக்கேன்றதுதான்.'

நீங்கள் எங்கே செல்கிறீர்கள்? எது உங்களுடைய பயண இலக்கு? நீங்கள் எதையெதைச் செய்து முடிக்க வேண்டும் என்று கற்பிக்கப்பட்டிருக்கிறீர்கள். நீங்கள் ஒரு சாதனையாளராய் உருவாக்கப்பட்டிருக்கிறீர்கள். மனம் கைப்பாவையாக்கப்பட்டு அங்கு மிங்குமாய் அலைக்கழிக்கப்படுகிறது. மனம் புறத்தேயுள்ள - பெற்றோர்களாலும், குடும்பத்தாலும், பள்ளிக்கூடத்தாலும், சமுதாயத்தாலும், அரசாங்கத்தாலும் கட்டுப்பாடு செய்யப்படுகிறது. ஒவ்வொருவரும் உங்கள் இருப்புணர்வுக்கு வெளியே உங்களை இழுக்கப் பார்க்கிறார்கள். உங்களுக்குள் ஒரு குறிக்கோளைப் பொருத்தவும் முயல்கிறார்கள். அந்தப் பொறியில் விழுகிறீர்கள். அந்தக் குறிக்கோள் உங்களுக்குள் முன்பே இருப்பதுதான்.

எங்கேயும் போவதற்கில்லை. ஒருவர் தன்னைத் தெளிவாகப் புரிந்துகொள்ள வேண்டும் - தான் யார் என்பதை. நீங்கள் அதனைப் புரிந்து கொண்டு விட்டால், நீங்கள் எங்கு சென்றாலும் உங்களுடைய குறிக்கோளை நீங்கள் கண்டுகொள்ள முடியும். காரணம் அந்தக் குறிக்கோளை உங்களோடுதானே நீங்கள் சுமந்து செல்கிறீர்கள். அந்நிலையில், நீங்கள் எங்கு சென்றாலும் ஓர் ஆழ்ந்த மனநிறைவை நீங்கள் பெறுவீர்கள். ஓர் அமைதி, மனக்கிளர்ச்சியற்ற நிலை, ஒருமித்த உணர்வு உங்களைச் சூழ்ந்திருக்கும். ஒரு நறுமணத்தைப்போல் நல்லமைதியை நீங்கள் பரவச் செய்வீர்கள்.

நீங்கள் எங்கு சென்றாலும் சுற்றுப்புறச் சூழ்நிலைகளால் ஏற்படுத்தப்பட்ட உங்கள் மனநிலை உணர்வை (atmosphere)யும் கொண்டு செல்வீர்கள். எல்லாரும் அதை உணர முடியும். அவர்கள் அதை உணர்ந்தார்களோ இல்லையோ பெரும்பாலும் அதனுடன் அவர்களால் தொடர்பு கொள்ள முடியும். மனதைச் சமநிலையில் வைத்திருக்கும் ஒருவர் திடுதிப்பென்று உங்கள் அருகே வருவதாய் வைத்துக் கொள்வோம். உடனே, ஒரு மென் காற்று உங்களை உரசிக்கொண்டு செல்வதுபோல, இனம் தெரியாத ஒரு நறுமணம் பரவுவதைப் போல் நீங்கள் உணர்வீர்கள். அது உங்களைத் தீண்டும். அமைதிப்படுத்தும். அது ஓர் அருமையான தாலாட்டு. நீங்கள் குழப்பத்தில் இருக்கிறீர்கள், 'சம்யமா'வுடன் கூடிய ஒரு மனிதர் உங்களருகில் வந்துவிட்டால் உடனே உங்களுடைய குழப்பம் மறைந்துவிடும். நீங்கள் கோபத்தில் இருப்பீர்கள். உங்கள் கோபம் இருந்த இடம் தெரியாமல் போய்விடும். காரணம் 'சம்யமா' உள்ள மனிதர் காந்த சக்தியாவார்.

அவர்களுடைய அலைகளின்மீது (உணர்ச்சி வேகம்) நீங்கள் பயணம் செய்வீர்கள். ஒற்றையர் செல்வதை விட அவருடன் செல்கிறபோது இன்னும் உயரத்தில் செல்வீர்கள்.

ஆக, கிழக்கில் உள்ள நாம் சம்யமாவை அடைந்தவர்களிடம் சென்று. அவர்களுடைய பக்கமாய் இருந்து கொள்ளும் ஓர் அருமையான மரபை வளர்த்துக் கொண்டிருக்கிறோம். அதைத்தான் நாம் தரிசனம் என்கிறோம். அதுவே நம்மால் சத்சங்கம் என்று அழைக்கப்படுகிறது. 'சம்யமா' கொண்ட நபரிடம் சொல்வதும், அவரருகில் இருப்பதும். மேற்கத்திய அறிவுக்கு அது நகைக்கத்தக்கதாய் தெரியும். ஒரு மனிதர் எதுவும் பேசாமல் மவுனமாய் அமர்நதிருக்கிறார். மக்கள் அவரிடம் வந்துகொண்டே இருக்கிறார்கள். அவருடைய பாதங்களைத் தொட்டு. அவரது பக்கமாய் அமர்ந்து. அவர்கள் கண்களை மூடியபடி இருக்கிறார்கள். அந்தக் காட்சியை அறிவுக்குப் பொருத்தமற்றதாகவே மேற்கத்திய மனம் பார்க்கும். அங்கே உரையாடல் இல்லை. சொற்கள் சார்ந்த தொடர்பில்லை. அவர்கள் மணிக்கணக்கில் அமர்ந்திருக்கிறார்கள். இனம் புரியாத வகையில் நிறைவடைகிறார்கள். அவர்கள் அந்தப் பாதங்களை நன்றியோடு தொட்டபின், திரும்பிச் செல்கிறார்கள். அவர்கள் ஏதோவொன்றைத் தெரிந்து கொண்டதை, ஏதோ ஒன்றை

அடையப் பெற்றதை அவர்களுடைய முகத்தில் இருந்து நீங்கள் கவனித்தறிய முடியும். சொற்கள் சார்ந்த தகவல் தொடர்பு இருந்திருக்க வில்லை. காணக்கூடியதாய் எதுவும் கொடுக்கப்படவில்லை, ஏற்கப் படவுமில்லை. இதுவே சத்சங்கம். சத்தியமும், நம்பத்தக்க உணர்வும், 'சம்யமா'வும் கொண்ட ஒரு மனிதன் பக்கத்தில் இருப்பது.

அவருடைய அருகில் இருப்பதன் மூலம் உங்களுக்குள் ஏதோ ஒன்று நிகழத் தொடங்குகிறது. ஏதோ ஒன்று எதிர்ச்செயல் புரியத் தொடங்குகிறது.

சம்யமாஅடைந்தவர் போலிருப்பது எனில் அது (concept) ரொம்பவும் ஒழுங்கற்றுப் போகிறது. குழப்பத்துக்குள்ளாகிறது. அதற்குக் காரணம் மக்கள் வெளியில் இருந்து அதைச் செய்யத் தொடங்கியதுதான். ஓர் அமைதியைப் பெறவும், மவுனத்தைக் கடைப் பிடிக்கவும் குறிப்பிட்ட ஒரு முறையை, கட்டுத்திட்டத்தை அவர்கள் கட்டாயமாய் ஏற்கிறார்கள், தங்களைத் தாங்களே நிர்ப்பந்தித்துக் கொள்கிறார்கள். சம்யமாவுடைய ஒரு மனிதனைப் போல் அவர்கள் தோற்றமளிக்கலாம். கிட்டத் தட்ட அப்படித் தெரியலாம். ஆனால் அப்படியே ஆகிவிடுவதில்லை. நீங்கள் அவர்களருகே சென்றால் அவர்களுடைய தோற்றம் அமைதியாயிருக்கும். ஆனால் நீங்கள் அமைதியோடு சென்று அமரும்பட்சத்தில் எந்தவோர் அமைதியையும் புதிதாய் உணரப் போதில்லை. அடியாழத்தில் குழப்பம் ஒளிந்திருக்கும். அவை எரிமலைகள் போன்றவை. மேற்பரப்பில் அமைதியாயிருக்கும். அடியாழத்தில் எரிமலை எந்தக் கணத்திலும் வெடிக்கத் தயாராயிருக்கும்.

இதனை நினைவில் கொள்ளுங்கள்: எதையும் உங்கள் மீது திணிக்கிற முயற்சி வேண்டாம். அது பிரித்துப் போடுகிற செயல் முறை அது உங்களை நம்பிக்கையற்றவராக்கும் வழி. அது முக்கிய விசயத்தைத் தவற விடுகிற போக்கு. உங்களுடைய உள்ளார்ந்த இருப்புணர்வு (being) உங்கள் வழியேதான் ஓடியாக வேண்டும். நீங்கள் பாதையில் உள்ள தடைகளை நீக்கினால் போதும். புதிதாய் எதையும் சேர்க்க வேண்டியதில்லை. உண்மையில் ஒன்றைக் குறைத்துக் கொண்டால் (minus) நீங்கள் குறையற்றவராகி விடுவீர்கள். எதையும் கூட்டிக்கொள்ள வேண்டியதில்லை. நீங்கள் முன்பே நிறைவாக இருக்கிறீர்கள். ஏதேனும் ஒன்று கூடிவிட்டாலும் அது பாதையில் தடைக்கற்களாகி விடும். இந்தப் பாறைக் கற்களைக் கழித்துவிட்டுப் பார்த்தால் நீங்கள் குறையற்றவர்தான். இந்த எட்டுப் படிகளையும்

அந்தப் பாதைக் கற்களை அகற்றும் ஆராய்ச்சி முறையோடு கூடிய வழி எனலாம். இதுவே பதஞ்சலியின் * 'அஷ்டாங்கம்' எனப்படுவது.

ஆனால், புறத்தேயான ஓர் ஒழுங்குப்பாட்டில் (discipline) மனிதன் ஏன் இத்தனை தீவிரமாய் இருக்கிறான்? அதற்கொரு காரணம் இருந்தேயாக வேண்டும். இருக்கிறது. வெளியில் இருந்து ஒன்றை உந்துவதும், கட்டாயப்படுத்தி அடைவதும் எளிது என்பதுதான் அதற்குக் காரணம். அது மலிவாய் எவ்வித இழப்புமின்றி அடையப் படுகிறது. அது நீங்கள் அழகில்லாவிடில், கடைக்குச் சென்று ஓர் அழகான முகமூடியை வாங்கி அணிந்து கொள்வது போலத்தான். அதிக விலையில்லை. மலிவு என்பதுடன் ஓரளவு மற்றவர்களை உங்களால் ஏமாற்றவும் முடிகிறது. அது நீடிக்காது. காரணம், முகமூடி என்பது உணர்ச்சியற்ற ஒரு பொருள். அது அழகாகத் தோன்றலாம். ஆனால், அதில் உண்மையான அழகு இருக்காது. சொல்லப்போனால் முன்பிருந்ததைவிட மிகவும் அவலட்சணமாகி விடுவீர்கள். உங்களு டைய அசலான முகம் எதுவாயினும் குறைந்தபட்சம் உயிரோட்டமும், ஆர்வமும், அறிவு நுட்பமும் அதில் இருந்திருக்கும். தற்போது ஓர் உணர்ச்சியற்ற முகமூடிக்குப் பின்னே உங்களை நீங்கள் மறைத்துக் கொண்டிருக்கிறீர்கள்.

'சம்யமா'வை வெளியில் இருந்து வளர்த்துக் கொளவதில் மக்கள் ஆர்வம் காட்டுகிறார்கள். நீங்கள் எளிதில் கோபவசப்படுகிறவர். கோபமற்ற நிலையை அடைவதற்கு அதிக முயற்சி தேவைப்படும். பயணம் நீண்டது. நீங்கள் அதற்கான விலையைக் கொடுக்க வேண்டி யிருக்கும். கோபத்தை அடக்குங்கள், அதுவே உங்களை உந்திச்செல்ல எளிதாயிருக்கும். உண்மையில் நீங்கள் கோபப்படுவதற்காகும் சக்தியைக் கொண்டு கோபத்தை அடக்கிக்கொள்ள முடியும். அதிலொன்றும் பிரச்சினையில்லை, ஒரு கோபக்காரரால் தன்னுடைய கோபத்தை எளிதில் அடக்கிக்கொண்டு விட முடியும். முதலில் அவர் மற்றவர்களிடம் கோபப்படுகிறார். தற்போது அந்தக் கோபத்தைத் தன்மீது திருப்புவதன் மூலம் அவர் கோபத்தை மறைக்க முடியும். ஆனால், அவர்களுடைய கண்களுக்குள் நீங்கள் கூர்ந்து பார்த்தால் கோபம் ஒரு நிழல் மாதிரி ஒளிந்திருக்கும்.

---

* அஷ்டாங்கம் - ஆதனம், இயமம், சமாதி, தாரணை, தியானம், நியமம், பிரத்யாகாரம், பிராணாயாமம் என்கிற எட்டு யோக முறைகள் ஆகும்.

எப்போதாவது கோபப்படுவதால் கெடுதலாகி விடாது. ஆனால், கோபத்தை வெளிக்காட்டாமல் மறைப்பதும், தொடர்ந்து கோபத்துடன் இருப்பதும் ஆபத்தானதாகும். அதுதான் வெறுப்புக்கும் பகைமைக்கும் உள்ள வித்தியாசம். நீங்கள் கட்டுக்கடங்காத உணர்ச்சியுடன் கோபப்படுவதில் வெறுப்பு இருக்கும். ஆனால், அது கண நேரமே நீடிக்கும். அது வந்தது போலவே சென்று விடும். அதைப்பற்றி அதிகம் கவலைப்பட வேண்டியதில்லை. நீங்கள் கோபத்தை வெளிக்காட்டாது மறைக்க முயல்கிறபோது வெறுப்பு மறைந்து, பகைமை தோன்றும். அதுவே உங்கள் வாழ்க்கை முறையாகி விடும். அடக்கி வைக்கப்பட்ட கோபம் தொடர்ந்து உங்களைப் பாதித்தபடி இருக்கும். உங்கள் நடத்தையும், உறவுகளும் அதனால் பாதிப்படையும். தற்போது நீங்கள் எப்போதாவது கோபப்படுகிறதில்லை, எப்போதுமே கோபப்படுகிற வராகி விடுவீர்கள். தற்போது உங்கள் கோபம் யாரைக் குறித்ததாகவும் இருப்பதில்லை. அது உங்கள் இருப்புணர்வின் தன்மையாகவே மாறிவிடுகிறது. தற்போது, அது உங்களைப் பற்றிக் கொண்டிருக்கிறது. உங்களுக்கு யார்மீது கோபம் என்று உங்களால் சரியாகச் சொல்ல முடியாது. காரணம், கடந்த காலத்தில் கோபத்தை நீங்கள் குவித்துக் கொண்டே இருந்தீர்கள். இப்போது ஒரு நீர்த்தேக்கம் போல் அது ஆகிவிட்டது. உங்களுக்கு எளிதில் கோபம் வந்து விடுகிறது.

இது ரொம்பக் கெடுதல். இது பழக்கமாகி விடும். முதலில் அந்தக் கோபம் தீச்சுவாலையைப் போல் கிளர்ந்தெழுந்தது. அது செயல்நிலை சார்ந்ததாயிருந்தது. அது ஒரு குழந்தைக்கு வருகிற கோபம் போல் இருந்தது. அது ஒரு தீநாக்கு போல் எழுந்து தணிந்தது. இருந்தாற் போலிருந்து புயல் மறைந்து, எங்கும் அமைதியாய் இருக்கிறது. மறுபடியும் அவை இனிமையாய், அழகாய் மாறி விடுகின்றன. ஆனால், காலப்போக்கில் நீங்கள் கோபத்தை எந்த அளவு மறைக்கிறீர் களோ அந்த அளவு அது எலும்புகளுக்குள்ளும் இரத்தத்துக்குள்ளும் நுழைந்து கொண்டு விடும். அது உங்கள் சுவாசத்தில் புகுந்து கொள்ளும். அந்நிலையில் நீங்கள் எதைச் செய்தாலும் கோபத்தோடு தான் செய்கிறீர்கள். நீங்கள் ஒருவரை நேசித்தாலும் அதில் ஒரு சீற்றம் இருக்கும். அதில் வலுத்தாக்குதல் (aggression) இருக்கிறது. அழிவு தரக்கூடிய ஒன்று இருக்கிறது. நீங்கள் அதை வளர்க்காமல் இருக்கக் கூடும். ஆனால் அது இருக்கவே செய்கிறது. அது ஒரு பெரிய பாறையாகவே மாறி விடுகிறது.

வெளியில் இருந்து ஒன்றைத் திணிப்பது தொடக்கத்தில் சிறு மதிப்புடையதாய் (cheap) தெரியும். ஆனால், முடிவில் அது நாசம் விளைவிக்கிற ஒன்று என்பதை நிரூபித்து விடும்.

மக்களுக்கு அது மலிவாய்த் தெரிகிறது. காரணம், சிறப்பறிவு கொண்டவர்கள். அதை எப்படிச் செய்வதென்று தொடர்ந்து சொல்லிக் கொண்டேயிருக்கிறார்கள். ஒரு குழந்தை பிறந்ததும் அதைப் பெற்ற வர்கள் தேர்ந்தவர்களாகி விடுகிறார்கள். ஆனால், அப்படியில்லை. தங்களுடைய சொந்தப் பிரச்சினைகளையே அவர்கள் இன்னும் தீர்த்துக்கொண்ட பாடில்லை. அவர்கள் உண்மையிலேயே குழந்தையை நேசித்தால் அதே அமைப்பை வலுக்கட்டாயமாகத் திணித்துக் கொண்டிருக்க மாட்டார்கள்.

ஆனால், யார் நேசிக்கிறார்கள்? அன்பென்றால் என்னவென்று யாரும் அறிந்திருக்கவில்லை.

தாங்கள் சிக்கியிருக்கும் அதே பழைய அமைப்பை (pattern) அவர்கள் திணிக்கத் தொடங்குகிறார்கள். தாங்கள் என்ன செய்கிறோம் என்பதைக் கூட அவர்கள் தெரிந்து கொண்டிருக்கவில்லை. அதே அமைப்பில் அவர்களும் அகப்பட்டிருப்பதோடு, அவர்களுடைய ஒட்டுமொத்த வாழ்க்கையும் துன்பமயமாயிருக்கிறது. தற்போது அந்த அமைப்பையே தங்களுடைய குழந்தைகளுக்கும் அவர்கள் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். எது சரி, எது தவறு என்று அறியாத கள்ளம் கபடமற்ற பிள்ளைகள் அதற்குப் பலியாகிறார்கள்.

இந்தச் சிறப்பறிவுடையவர்கள் உண்மையில் சிறப்பறிவுடையவர் களல்லர். காரணம் அவர்கள் எதையும் அறிந்திருக்கவில்லை. தங்களுடைய பிரச்சினைகளையே அவர்கள் தீர்த்துக் கொண்ட பாடில்லை. ஒரு குழந்தையைப் பெற்று விட்டதால், அந்தக் குழந்தையை ஒரு குறிப்பிட்ட முறையில் உருவாக்கத் தங்களுக்கு அதிகாரம் வழங்கப்பட்டிருப்பதாய் கருதிக் கொள்கின்றனர். அந்தக் குழந்தை அவர்களைப் பின்பற்றவேண்டியிருக்கிறது, அது உதவியற்றதாயிருக்கிறது. அவன் அதை உணரத் தலைப்படும்போது முன்பே பொறியில் அகப்பட்டவனாயிருக்கிறான். பள்ளிக் கூடங் களும், பல்கலைக் கழகங்களும், சுற்றிலும் கட்டுப்படுத்தும் ஆயிரத் தோரு வழிகளும், அத்தனை வகை வல்லுநர்களும் மற்றுமுள்ளவர் களும் அவன் அறிந்திருப்பதாய் பாசாங்கு செய்கிறார்கள். யாரும் அறிந்தவராய் தெரியவில்லை.

வல்லுநர்களிடம் எச்சரிக்கையாயிருங்கள். உங்கள் உள்ளார்ந்த மையத்தை என்றாவது நீங்கள் சென்றடைய விரும்பினால் உங்கள் வாழ்க்கையை உங்களுடைய கைகளில் எடுத்துக் கொள்ளுங்கள். வல்லுநர்களுக்குச் செவி சாய்க்க வேண்டியதில்லை. போதும் போதும் என்கிற அளவுக்கு நீங்கள் கேட்டாயிற்று.

நான் கேள்விப்பட்ட ஒரு சின்னக்கதை.

திறப்பாடு வல்லுநர் (efficiency expert) ஒருவர் அரசுச் செயலக மொன்றைச் சோதனையிட்டபோது, எதிரெதிர் இருக்கைகளில் இரண்டு இளைஞர்கள் எந்த வேலையும் செய்யாது அமர்ந்திருப் பதைக் கண்டார்.

'உங்களுடைய வேலைகள் என்னென்ன?' என்று வல்லுநர் அவர்களிடம் வினவினார்.

'நான் இங்கே ஆறு மாதங்களாய் இருக்கிறேன். ஆயினும், எனக்கு எந்த வேலையும் கொடுக்கப்படவில்லை' என்று ஒருவன் பதிலளித்தான்.

'உன்னுடைய வேலைகள்?' அடுத்தவனிடம் கேட்டார் வல்லுநர்.

'நானும் இங்கே ஆறு மாதங்களாய் இருக்கிறேன். இன்னும் எந்த வேலையும் எனக்குக் கொடுக்கப்படவில்லை' என்று அவன் பதிலளித்தான்.

'நல்லது, உங்களில் ஒருவர் போய்விட வேண்டும்' கண்டிப்புடன் சொன்னார் வல்லுநர். இது நகலெடுக்கப்பட்ட காரியம் என்று தெளிவாய் தெரிகிறது.'

இரண்டு பேர் ஒரே வேலையைச் செய்து கொண்டிருக்கிறாக்ள். - எதையும் செய்யாமல் இருப்பதை.

வல்லுநர் எப்போதும் அறிவின் வரையறைகளுடன் சிந்திக்கிறார். மதிநுட்பம் உடையவரோ (wise) அறிவின் வரையறைக்குட்பட்டுச் சிந்திப்பதில்லை. அனைத்தையும் அறிந்திருக்கும் தனது கூர்மையான கண்களின் வழியே அவர் காண்கிறார்.

உலகம் வல்லுநர்களால் ஆளப்படுகிறதேயன்றி மதிநுட்ப முடையவர்களாலல்ல. உலகம் மதியூகிகளை மறந்து விட்டதென்றே சொல்ல வேண்டும். உங்களுக்கும் வல்லுநருக்கும் உள்ள ஒரே

வேறுபாடு சில சவத்துப்போன தகவல்களை அவர் திரட்டி வைத்திருப்பார் என்பதுதான். நீங்கள் அறிந்திருப்பதைவிட அவர் கூடுதலாக அறிந்திருப்பார். ஆனால் அவருடைய அறிவு அவரால் மெய்யாக உணரப்பட்டதாயிருக்காது. அவர் வெளியில் இருந்தே அவற்றைத் திரட்டியிருப்பார். அவர் வழங்கும் அறிவுரைகளுக்கு அளவே இருக்காது.

மதிநுட்பமுள்ள ஒரு மனிதனைத் தேடிக் கண்டுபிடியுங்கள். அது குருவிற்கான தேடல். தன்னுடைய உள்ளார்ந்த இருப்புணர்வு மலரப்பெற்ற, சம்யமாவைக் கொண்ட ஒரு மனிதனைத் தேடிப்பிடித்து அவனுடன் இருப்பதற்காக கீழைநாட்டு மக்கள் ஆயிரக்கணக்கான மைல் பயணம் செய்கிறார்கள். அந்தப்பு வெளியில் இருந்து இரவலாய் பெறப்படுவதில்லை. அது உள்ளாக மலர்வது.

பதஞ்சலியின் 'சம்யமா' என்பது சாதாரணமாய் பண்படுத்தி பயிர் செய்யும் கருத்தமைவு (concept) அல்ல. அது உங்களுள் மறைந்து கிடக்கிற ஒன்றை வெளிப்படுத்த உதவுகிற, பூவொன்று பூப்பது பற்றிய கருத்தமைவு. நீங்கள் முன்னதாகவே விதையை வைத்திருக்கிறீர்கள். விதைக்குத் தேவைப்படுவதெல்லாம் சரியான விளைநிலம் மட்டுமே. கொஞ்சம் அக்கறை, அன்பான கவனிப்பு இருந்து விட்டால் அது முளைக்கிறது. ஒருநாள் பூக்கும் பருவத்தையும் அது அடைகிறது. காற்று அதன் நறுமணத்தை எடுத்துச் செல்கிறது எல்லாத் திக்குகளிலும்.

'சம்யமா' கொண்ட மனிதன் தன்னை மூடிமறைக்க முடிவதில்லை. அவன் முயற்சிக்கிறான். அவனால் மறைத்துக்கொள்ள முடிவதில்லை. காரணம், காற்றானது அவனுடைய நறுமணத்தைத் தொடர்ந்து பரவச் செய்கிறது. அவன் மலைக்குகைக்குச் சென்று அங்கே அமர்ந்து கொள்கிறான். மக்கள் அவனைக் காண்பதற்காக அங்கு வரத் தொடங்குகிறார்கள். எப்படியோ அறிவுநுட்பமும், மனவளர்ச்சியும் பெற்றவர்கள் அவனைக் கண்டு கொள்கிறார்கள். அவர்களை நாடிச் செல்கிற அவசியம் அவனுக்கில்லை. அவர்கள்தான் அவனை நாடி வருவார்கள்.

சிறிதளவேனும் ஒப்புமையமான (similar) ஒன்றை உங்கள் இருப்புணர்வில் நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? காரணம், அந் நிலையில் சூத்திரங்களை அறிந்து கொள்வது எளிதாயிருக்கும். நீங்கள் உண்மையிலேயே ஒருவரை நேசிக்கிறீர்கள். ஒருவரிடம் அன்பு காட்டுகிறீர்கள். இரண்டுக்கும் உள்ள வேறுபாடடைக் கவனித்தது

உண்டா? விருந்தாளி ஒருவர் வருகிறார். நீங்கள் அவரை மனப்பூர்வமாக வரவேற்கிறீர்கள். அதில் மலர்ச்சி இருக்கிறது. உங்கள் வீட்டுக்குள் மட்டுமல்ல, இதயத்துக்குள்ளும் அவரை வரவேற்றுக் கொள்கிறீர்கள். பிறகு வேறொரு விருந்தாளி வருகிறார். நீங்கள் வரவேற்றாக வேண்டுமே என்பதற்காக அவரை வரவேற்கிறீர்கள். இரண்டுக்கும் இடையேயுள்ள வேறுபாட்டை நீங்கள் கவனித்திருக் கிறீர்களா?

நீங்கள் உண்மையிலேயே வரவேற்று உபசரிக்கிறபோது உங்கள் வரவேற்பு முழுமையானதாய் - எவ்விதத் தடையுமற்றதாய் இருக்கும். நீங்கள் உண்மையாக வரவேற்காவிடில் அது ஒழுங்குமுறை, நற்பாங்கு (manners) சம்பந்தப்பட்டதாக மட்டுமே இருக்கும். அதில் தங்கு தடையற்ற ஓட்டம் இருக்காது. கண்டுணரும் திறனுடைய விருந்தாளியாயிருந்தால் உடனே திரும்பிச் சென்றுவிடுவார். உங்கள் வீட்டுக்குள் அவர் நுழைய மாட்டார். அவர் உண்மையிலேயே கண்டுணரும் திறனுடையவராய் இருந்தால் உங்களுக்குள் இருக்கும் முரண்பாட்டை உடனே கண்டுபிடித்து விடுவார். நீங்கள் கைகுலுக்கு வதற்காக நீட்டிய கை உண்மையிலேயே நீட்டியதாயிருக்காது. அதனுள் இருக்கும் சக்தி விருந்தாளியை நோக்கிச் செல்வதில்லை. சக்தி நிறுத்தி வைக்கப்பட்டு விடுகிறது. உணர்ச்சியற்ற கைதான் நீள்கிறது.

ஒழுங்குமுறை (discipline) மாதிரி வெளியில் உள்ள ஒன்றை நீங்கள் பின்பற்றுகிற போதெல்லாம், எதிர்மாறான ஒன்றை வலியுறுத்துகிறவராகி விடுகிறீர்கள். அது உண்மையல்ல. நீங்கள் அதில் இருப்பதில்லை.

நீங்கள் எதைச் செய்தாலும் முழுமையாய் செய்ய வேண்டும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் அதை எவ்வகையிலும் செய்ய விரும்பவில்லை என்றால், முழுக்கவே அதைச் செய்யாதீர்கள். 'முழுமை' என்பது நினைவில் கொள்ளப்பட வேண்டியது. காரணம், 'முழுமை' தனிச்சிறப்பு வாய்ந்த ஒன்று.

உங்களுக்கு முற்றிலும் மாறான, நீங்கள் முரண்படுகிற ஒன்றை உங்களில் ஒரு பகுதி வற்புறுத்திக் கொண்டும் மற்றொரு பகுதி வற்புறுத் தாமலும் இருக்கிற ஒன்றை நீங்கள் செய்து கொண்டேயிருந்தால் உங்களுடைய அகமலர்ச்சி அழிந்து போகும். நாளடைவில் ஒரு

நறுமணமற்ற பூவாய், உயிரோட்டமே இல்லாத 'ப்ளாஸ்டிக்' பூவாய் நீங்கள் மாறி விடுவீர்கள்.

இப்படி நேரிட்டது:

முல்லா நஸ்ருதீன் ஒரு விருந்துக்குச் சென்றிருந்தார். விருந் தளித்தவரிடம், 'என்னை அழைத்ததற்கு உங்களுக்கு நன்றி. என் வாழ்நாளில் இதுபோன்ற ஒரு விருந்தில் நான் கலந்து கொண்டதே யில்லை' என்றார். விருந்து ரொம்பச் சாதாரணமாகத்தான் இருந்தது.

விருந்தளித்தவருக்கு நம்ப முடியவில்லை. 'ஓ. அதைச் சொல்லாதீர்கள்' என்று கிட்டத்தட்ட கூவியே விட்டார்.

முல்லா பதிலளித்தார். 'ஆனா நான் சொன்னேனில்லையா. தொடர்ந்து சொல்லிட்டே இருப்பேன்.'

அந்நிலையில் அது பொருளற்றதாகி விடும். அந்நிலையில் அது முற்றிலும் பொருளற்றதாகி விடும்.

வெறும் நடைப்பாங்குகளை மட்டுமே வாழ்க்கையாய் கொண்டு விடாதீர்கள். வெறும் ஒழுங்கு முறைகளை மட்டுமே கொண்ட வாழ்க்கையை வாழாதீர்கள். வாழ்க்கை நம்பத்தக்கதாய் இருக்க வேண்டும்.

ஒழுங்கு முறைகளும், நடைப்பாங்குகளும் மனதுக்கு நிறைவானவை, வசதியானவை என்பதை நான் அறிவேன். ஆனால், அவை வாழ்க்கையை நச்சுத்தன்மை கொண்டதாக்கி விடும். அது உங்களைக் கொஞ்சம் கொஞ்சமாய் அழித்துப் போகும். நம்பகத் தன்மையுடன் கூடிய வாழ்க்கையே நிறைவானதும், வசதியானது மாகும். அது தன்னை ஆபத்துக்குட்படுத்திக் கொள்வதாகும் - ஆனால் உண்மையானது. அந்த அபாய நிலை வாழத் தகுதியானது. அதற்காக நீங்கள் ஒருபோதும் வருந்த வேண்டியிருக்காது. உண்மையான வாழ்க்கையை,உண்மையான உணர்வை, உங்கள் சக்தியின் தங்கு தடையற்ற ஓட்டத்தை நீங்கள் அனுபவிக்கத் தொடங்கியவுடன் நீங்கள் மாறுபடுவதோ சிதைவுண்டு போவதோ இல்லை. அந்நிலையில் நீங்கள் எல்லாவற்றையும் பணயம் வைக்குமளவு அது தகுதியாகவே இருக்கும். உண்மையான வாழ்வின் ஒற்றைக் கணத்துக்காக, உண்மையற்ற ஒட்டுமொத்த வாழ்க்கையையுமே நீங்கள் பணயம் வைத்து விடலாம், அது தகுதியானதுதான் - காரணம் அந்த ஒற்றைக்

கணத்தில் வாழ்க்கை என்னவென்பதை அதன் விதி என்னவென்பதை நீங்கள் அறிந்து கொள்வீர்கள். ஒரு நூறாண்டு வாழ்க்கையை அச்சத்துடன், மேலோட்டமாய் வாழ்கிற நிலையில் அதன் மொத்த வாய்ப்பையும் நீங்கள் தவற விடுவீர்கள்.

நாம் ஒருபோதும் செய்ய விரும்பாதவற்றைச் செய்துகொண்டு, நமக்கு விருப்பமில்லாதவர்களுடன் உறவு வைத்துக்கொண்டு, நமக்கு விருப்பமில்லாத ஒரு தொழில் அல்லது வேலையில் இருந்து கொண்டு வாழும் இந்த வாழ்க்கையை வாழ்ந்தால் என்ன? வாழாவிட்டால் என்ன என்ற எண்ணம் வரும். இப்படியொரு நம்பிக்கையற்ற நிலையை நம்மைச் சுற்றிலும் நாம் உருவாக்கிக் கொள்கிறோம். ஆயிரத்தியோரு வழிகளிலும் தவறானவராய் இருந்து கொண்டு அந்தத் தவறில் இருந்து வாழ்க்கையை அறிய முடியும் என்று நீங்கள் எப்படி எதிர்பார்க்கிறீர்கள்? உங்கள் பொய்ம்மையின் காரணமாய் நீங்கள் அதைத் தவற விடுகிறீர்கள். உங்கள் தவறின் காரணமாய் வாழ்க்கையின் உயிரோட்டத்தில் நீங்கள் கலக்க முடியாமல் போய்விடுகிறது.

சில நேரங்களில் நீங்கள் அதை அறிந்து கொண்டாலும் இன்னொரு பிரச்சினை தோன்றி விடும். மக்கள் வாழ்வின் பொய்ம்மையை உணர்ந்து கொள்கிற போதெல்லாம், அவர்கள் உடனே எதிர் முனைக்குச் சென்று விடுகிறார்கள். ஒரு தவறில் இருந்து மிகச் சரியான எதிர்முனைக்கு நீங்கள் செல்வீர்களாயின் மறுபடியும் ஒரு தவறான முனைக்கே சென்றவராவீர்கள். அது மனதின் மற்றொரு பொறி (trap).

சம்யமா என்பது சமநிலை. அது முற்றிலும் சமநிலையையே குறிக்கிறது. அது எந்த முனைக்கும் செல்லாமல் மையப்பகுதியில் இருந்து விடுவதாகும். இரண்டுக்கும் இடையில் எங்கோ ஓரிடத்தில் உண்மையான ஒன்று இருக்கிறது. நீங்கள் வலதுசாரியாகவோ இடதுசாரியாகவோ இல்லையென்கிறபோது, நீங்கள் ஒரு சமதர்மவாதியாகவோ, தனியுரிமைக் கோட்பாட்டாளராகவோ (individualist) இல்லையென்கிறபோது, எதிர்பாராத நிலையில் உடனடியாய் மலர்ச்சி உண்டாகிறது. அது சம்யமாவின் மலர்ச்சி.

முல்லா நஸ்ருதீன் கடுமையான காய்ச்சலில் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். அது ஒரு கருத்தாவேசமாகவே (obsession) மாறிவிட்டிருந்தது. ஒரு மனநல மருத்துவரிடம் போகும்படி நான் ஆலோசனை கூறினேன். சில வாரங்களுக்குப் பிறகு ஒருநாள் நான் அவரைப் பார்க்க நேர்ந்தபோது கேட்டேன். 'நான் கூறிய

யோசனைப்படி நீர் மனநல மருத்துவரிடம் போய்க் கொண்டிருக்கிறீர் என்று தெரிகிறது. அதில் ஏதாவது பலன் கிடைத்திருப்பதாய் நீர் எண்ணுகிறீரா?' என்று.

'நிச்சயமா அதில் பலனிருக்கு. சில வாரங்களுக்கு முன்னாடி தொலைபேசி மணி ஒலித்தபோது. பதில் பேச எனக்குப் பய மாருந்திச்சி.'

தொலைபேசி கிணுகிணுத்தாலே அவர் நடுங்கத் தொடங்கி விடுவார். என்ன செய்தி வரும்னு யாருக்குத் தெரியும்? யார் அழைக்கிறாங்கன்னு யாருக்குத் தெரியும்?

'சில வாரங்களுக்கு முன்னாடி தொலைபேசி போட்ட சப்தத்துல நான் ஒரேயடியா பயந்துகிட்டேன்.'

'இப்போ?' நான் கேட்டேன்.

அவர் சொன்னார். 'இப்போதானே? அது ஒலித்தாலும், ஒலிக் காட்டாலும் நான் நேரா முன்னாடி போயி பதில் சொல்லிடறேன்' என்று.

நீங்கள் ஓர் உச்ச முனையில் இருந்து மறு உச்ச முனைக்குச் சென்று விடுகிறீர்கள். ஒரு தவறில் இரந்து இன்னொரு தவறுக்கு. ஓர் அச்சத்திலிருந்து இன்னோர் அச்சத்துக்கு உங்களால போக முடிகிறது. நீங்கள் சந்தைப்பேட்டையில் இருந்து மடாலயத்துக்குச் சென்றுவிட முடியும். அவை எதிரெதிர் கொள்கை நிலைகள். சந்தையில் வசிக்கும் மக்கள் குழப்பமுற்றிருக்கிறார்கள். மறுமுறையில் மடாலயத்தில் இருப்பவர்களும் தாறுமாறான மனநிலையில்தான் இருக்கிறார்கள். ஆனால், இருவருமே சமநிலையற்றவர்கள்தாம்.

'சம்யமா' என்றால் சமநிலை. சந்நியாசம் என்பதன் மூலம் மனதின் சமநிலையைத்தான் நான் குறிப்பிடுகிறேன். நீங்கள் சந்தையில் இருக்கலாம். ஆனால் உங்களுக்குள் சந்தை இடம் பிடித்துக் கொண்டுவிடக் கூடாது. சந்தையில் இருந்து உங்கள் மனம் விடுபட்டு இருக்க முடியும் என்றால், நீங்கள் சந்தையில் இருப்பதால் எந்தப் பிரச்சினையும் இல்லை. உங்களால் மடாலயத்துககுள் பிரவேசிக்க முடியும். தனியாக வாழவும் முடியும். ஆனால் சந்தைப்பேட்டை ஒருவேளை உங்களைத் தொடர்ந்து வந்து விட்டால்... அப்படித் தொடர்வதும் விதிக்கப்பட்டதுதான். காரணம், கடைவீதி என்பது உண்மையில் வெளியே இல்லை - அது எண்ணங்களின் ரீங்கார

ஒலியில் இருக்கிறது. எண்ணங்களின் போக்குவரத்து இரைச்சலில் இருக்கிறது. அது உங்களைத் தொடர்ந்தபடி இருக்கும். நீங்கள் எப்படி இங்கே உங்களை விட்டுவிட்டு, வேறு இடத்துக்கு நழுவிச் செல்ல முடியும்? உங்களோடு நீங்கள் போய்த்தான் ஆகவேண்டும். நீங்கள் எங்கு சென்றாலும் ஒரே மாதிரிதான் இருப்பீர்கள்.

எனவே, செயலின் நிலைகளில் இருந்து நழுவிச் செல்ல முயலாதீர்கள். அதைவிடக் கூடுதலான உணர்வுடன் இருங்கள். புறத்தே உள்ள நிலைகளைப் பற்றிக் கவலைப்படாமல் உள்ளார்ந்த தட்பவெப்ப நிலை (climate)யை மாற்றுங்கள். தொடர்ந்து அதில் அழுத்தமாய் இருங்கள். காரணம், மலிவானது எப்போதுமே வசீகரிப்பதாயிருக்கும். அது சொல்கிறது, நீங்கள் சந்தையில் கவலை யுடனிருந்த காரணத்தால் மடாலயத்துக்குத் தப்பிச் செல்லுங்கள், கவலைகள் மறைந்து விடும். காரணம் தொழிலால் வந்த கவலைகள் அவை. சந்தைத் தொடர்பானவையே அதற்குக் காரணம்' என்று. இல்லை, கவலைகள் சந்தையால் வருவதல்ல. கவலைகள் குடும்பத்தின் காரணமாய் வந்தவையல்ல. கவலைகளுக்குக் காரணம் நீங்கள்தாம். இவையெல்லாம் வெறும் சமாதானங்கள். நீங்கள் துறவு மடத்துக்குச் சென்றால் இந்தக் கவலைகள் சார்ந்திருப்பதற்குச் சில புதிய பொருள்களைக் கண்டுபிடித்துக் கொள்ளும். ஆனால், கவலைகள் என்னவோ தொடரவே செய்யும்.

உங்கள் மனதைக் கொஞ்சம் கவனியுங்கள். எப்படியொரு குழப்பத்தில் அது இருக்கிறது. அது செயல் நிலைகளால் தோற்று விக்கப்பட்ட குழப்பம் அல்ல. இது உங்களுக்குள்ளாகவே இருக்கிற குழப்பம். செயல் நிலைகள் - வேலை என்பதெல்லாம் வெறும் சமாதானங்கள்.

மனிதர்கள் உங்களைக் கோபமடையச் செய்வதாய் நீங்கள் நினைப்பீர்கள். அந்நிலையில் இருபத்தியோரு நாள் மவுனத்தை மேற்கொள்ளுங்கள். நீங்கள் அமைதியாய் இருங்கள். அப்போது யாரும் உங்களைக் கோபப்படுத்தா விட்டாலும், கோபப்பட எந்தவொரு காரணமும் இல்லாவிட்டாலும் ஒருநாளில் பலமுறை நீங்கள் கோபமடைவீர்கள். ஓர் அழகான பெண் அல்லது ஆடவனை எதிர்பாராது சந்தித்ததும் உங்களுக்குப் பாலியல் வேட்கை ஏற்பட்டு விட்டதாய் நீங்கள் எண்ணுவீர்களா? அப்படி நீங்கள் எண்ணிக் கொண்டால் அது தவறு. ஓர் இருபத்தியோரு நாள் அமைதியாய்,

தனித்திருங்கள். அப்போது எதிர்பாராத விதத்தில் எந்தத் தூண்டுதலும்இன்றி பாலுறவு நாட்டம் பலமுறை உங்களுக்குள் தோன்றியிருக்கும். அது - உங்களுக்குள் இருக்கிறது.

இரண்டு பெண்மணிகள் பேசிக் கொண்டிருந்தார்கள். நான் அவர்களை ஒட்டுக் கேட்டேன். என்னுடைய அத்துமீறலை மன்னித்து விடுங்கள்.

திருமதி ப்ரவுன் ரொம்பவும் கோபமாய் சொன்னாள். 'இதோ பாருங்கள் திருமதி க்ரீன். நான் உங்களிடம் சொன்ன இரகசியத்தைத் தன்னிடம் நீங்கள் தெரிவித்ததாக திருமதி க்ரே சொல்கிறாள்'

திருமதி க்ரீன், 'ஓ. அந்த அற்ப ஜந்து அப்படிச் சொல்லிற்றா? நான் சொன்னதா உங்ககிட்ட சொல்ல வேணாம்னு அவள்ட்ட சொல்லியிருந்தேனே.'

திருமதி ப்ரவுன், 'நல்லது. இதோ பாருங்கள். அவள் சொன்னதா நான் உங்களிடம் சொன்னதை, நீங்க அவள்ட்ட சொல்லிராதீங்க.'

மனதில் இத்தகைய போக்குவரத்து இரைச்சல்கள் தொடர்ந்து இருந்துகொண்டே இருக்கும். இதனை வலுக்கட்டாயமாய் அமைதிப் படுத்த முடியாது. புரிதலின் (understanding) மூலந்தான் செய்ய வேண்டும்.

முதல் சூத்திரம்:

சம்யமாவைப் பல நிலைகளில்தான் பயன்படுத்தும்படி இருக்கும்.

பதஞ்சலி உடனடி ஞானம் பெறுவதற்கானவரல்லர். உடனடி ஞானம் எல்லாருக்கும் வாய்த்து விடுவதில்லை. அது அரிதானது. விதிவிலக்கானது. அத்துடன் பதஞ்சலி ஒரு விஞ்ஞானக் கண்ணோட்டமுடையவர். அவர் விதிவிலக்கு பற்றிக் கவலைப்படு வதில்லை. அவர் விதியைக் கண்டறிந்தவர், விதிவிலக்கு என்பது விதியை நிரூபிப்பதன்றி, வேறேயென்ன. விதிவிலக்கு தன்னைத் தானே கவனித்துக் கொள்ளும். சாதாரண, சாதாரணமான மனிதப்பிறவி ஒவ்வொரு படியாய், படி நிலைகளில் வளர்ச்சியடையும். காரணம் உடனடி ஞானம் பெற பெரிய அளவில் துணிவு தேவைப்படும். அது கிடைக்கக் கூடியதாயில்லை.

மேலும், உடனடி ஞானம் காரணமாய் - ஒருவர் பித்து நிலைக்குத் தள்ளப்படுகிற அபாயம் இருக்கிறது அல்லது அவர் தெளிந்த

அறிவுடையவராகவும் கூடும். இரண்டு சாத்தியங்களும் வெளிப் படையாகவே உள்ளன. அது ரொம்பவும் எதிர்பாராமல் நிகழ்வது. உங்களுடைய உடல் மற்றும் மனதின் இயக்குநுட்பம் அதற்கான தயார் நிலையில் இருக்காது. அது உங்களை முழுமையாகவே நொறுக்கிப் போட்டுவிடும்.

பதஞ்சலி அதைப்பற்றிப் பேசவில்லை. உண்மையில் சம்யமா பல நிலைகளில் அடையப்பட வேண்டியது என்பதையே அவர் வலியுறுத்துகிறார். எனவே, நீங்கள் கொஞ்சம் கொஞ்சமாய் செயல்பட்டு, சிறிய அளவுகளில் வளர்ந்து, மற்றோர் அடியை எடுத்து வைப்பதற்கு முன்னால் அதற்கான ஆயத்தங்களைச் செய்து கொள்ள வேண்டும் என்கிறார். பதஞ்சலியின் நோக்கில் ஞானம் என்பது உங்களுக்குத் தெரியாத நிலையில் உங்களைத் தனதாக்கிக் கொள்வதல்ல. காரணம், அது அத்தகையதொரு பெரிய நிகழ்வு. நீங்கள் மிகவும் அதிர்ச்சியுறலாம். மரணிக்குமளவு அல்து சித்த சுவாதீனத்தை இழக்குமளவு அதிர்ச்சிக்குள்ளாகலாம். அதுபற்றிய பேச்சை அவர் தடுத்து நிறுத்திக் கொண்டுவிடுகிறார். அதன்மீது எவ்விதத்திலும் அவர் கவனம் செலுத்துவதில்லை.

அதுதான் பதஞ்சலிக்கும் ஜென்னுக்கும் உள்ள வித்தியாசம். ஜென் விதிவிலக்கானது. பதஞ்சலி விதியாய் இருப்பது. உலகில் இருந்து ஜென் அழிந்தொழிந்து போனால் எதுவும் இழக்கப்பட்டதாகாது. காரணம், விதிவிலக்கானது தன்னைத்தானே கவனித்துக் கொண்டு விடும். ஆனால், பதஞ்சலி உலகில் இருந்து மறைந்து போனால் இழப்பு மிகுதியாயிருக்கும். காரணம் அவர் விதியாயிருக்கிறார். அவர் பொதுப்படையானவர். எல்லாருக்கும் உரியவர். ஒரு திலோபாவும் சரி, போதி தர்மரும் சரி, வேகத்தில் வந்து அதே வேகத்தில் மறைந்து போகிறவர்கள். அவர்களுடைய துள்ளலில், தாவலில் ஒரு சாகசம் இருக்கும். ஆனால், அது எல்லாருக்குமான செயல்முறை ஆகாது. உங்களுக்கு மேலும் கீழும் சென்று வர ஒரு படிக்கட்டு தேவைப்படும். நீங்கள் மாடியின் முன்பாகத்தில் இருந்து அப்படியே குதித்துவிட முடியாது. ஒருவர் நற்பாங்குடன் செல்ல முடியும் என்கிறபோது தம்மை ஆபத்துக்குட்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லையே.

ஜென் கொஞ்சம் இயற்கையில் இருந்து மாறுபட்டது. காரணம், அதன் முக்கியப் பண்பே இணையற்ற அனுபவம் குறித்ததுதான். அதன் முக்கியக் கருத்தே அசாதாரணமானது, அரிதானது ஒரு

வகையில் அது வழக்கத்துக்கு மாறானதுங்கூட. பதஞ்சலி அந்த வகையில் எளிதில் விளங்கிக் கொள்ளக்கூடிய தளத்தில் இயங்குகிற வர். சாதாரணர்களுக்கு அவர் பேருதவியாய் பெரிதும் பயன்படக் கூடியவராய் இருக்கிறார்.

சம்யமா பல நிலைகளில் மேற்கொள்ளப்பட வேண்டியது என்கிறார் அவர். அவசரப்படாமல் நிதானமாக இயங்கி, நிதானமாக வளர்ச்சி காண வேண்டும். அப்போதுதான் நீங்கள் அடுத்த அடியை எடுத்து வைப்பதற்கு முன் எல்லாமும் முழுமையாய் இருக்கும். ஒவ்வொரு வளர்ச்சிக்குப் பிறகும் இடைவெளி விட வேண்டும். அந்த இடைவெளியில் நீங்கள் முயன்று அடைந்தது எதுவாயினும் அது கிரகிக்கப்பட்டு, சீரணிக்கப்பட்டு உங்கள் இருப்புணர்வில் ஒரு பகுதி யாகி விடும்... பிறகு மேலே செல்லுங்கள். ஓடவேண்டிய அவசியம் இல்லை. காரணம் ஓடினால் ஓர் ஆயத்தமில்லாத முனைக்கு நீங்கள் செல்லும்படி ஆகும். நீங்கள் ஆயத்தமாக இல்லாவிட்டால் அது ஆபத்து.

பேராசை கொண்ட மனம் தற்போது எதையும் அடைய விரும்பும். மக்கள் என்னிடம் வந்து 'எங்களுக்கு உடனடி ஞானத்தைக் கொடுக்கக்கூடிய ஏதாவதொன்றை ஏன் நீங்கள் செய்யக்கூடாது? என்று கேட்கிறார்கள். ஆனால் இவர்கள் உண்மையில் அதற்கு ஆயத்தமாயிருக்கவில்லை. அவர்கள் ஆயத்தமாயிருந்திருந்தால் அவர்களிடம் பொறுமையும் இருக்க வேண்டும். அவர்கள் ஆயத்தமாய் இருந்திருந்தால், 'அது எப்போது வேண்டுமானாலும் வரட்டும். நாங்கள் காத்திருக்கிறோம்' என்று சொல்லியிருப்பார்கள். அவர்கள் உண்மையானவர்களில்லை. அவர்கள் பேராசைக்காரர்கள். உண்மையில் தாங்கள் எதைக் கேட்கிறோம் என்றே அவர்களுக்குத் தெரியாது. அவர்கள வானத்தை வாவென்று அழைப்பவர்கள். நீங்கள் வெடித்துச்சிதறி விடுவீர்கள். உங்களால் அதை உட்கொண்டிருக்க முடியாது.

சம்யமா பல நிலைகளில் மேற்கொள்ளப்பட வேண்டியது என் கிறார் பதஞ்சலி. இந்த எட்டு நிலைகளையும் அவர் விவரித்திருக்கிறார்.

இந்த மூன்று...

இம்மூன்றையும் பிறிதொரு நாளில் நாம் விவாதித்திருக்கிறோம்.

- தாரணை, தியானம், சமாதி - இவை அவற்றுக்கு முந்தைய ஐந்துடன் ஒப்பிடும்போது உள்ளமைந்தவை (internal) ஆகும்.

அந்த ஐந்து நிலைகளைப் பற்றி நாம் விவாதித்திருக்கிறோம். அவற்றுக்கு முந்தைய ஐந்துடன் ஒப்பிடும்போது அவை உள்ளமைந்தவை ஆகும்.

ஆனால், *நிர்விகல்ப சமாதியோடு (seedless) ஒப்பிடும்போது இம்:மூன்றும் வெளிப்புறத்தைச் சார்ந்தவைதாம்.

நீங்கள் இயமம், நியமம், ஆசனம், ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம் இவற்றுடன் ஒப்பிட்டால் அவை உள்ளமைந்தவை (internal) ஆகிவிடுகின்றன. ஆனால் நீங்கள் புத்தர் அல்லது பதஞ்சலியின் நிறைவான அனுபவத்துடன் ஒப்பிடும்போது அவை புறம்பானவை (external) ஆகிவிடும். அவை இரண்டுக்கும் இடைப்பட்டவை. முதலில் நீங்கள் சரீரத்தைக் கடக்கிறீர்கள். அவை வெளியேயுள்ள படிகள். பிறகு மனத்தைக் கடக்கிறீர்கள். அவை உள்ளாக அமைந்த படிகள். ஆனால், உங்கள் இருப்புணர்வை நீங்கள் அடைகிறபோது அவை உள்ளார்ந்தவை என்றாலும் புறம்பானவையாகவே தோன்றும். உங்கள் மனம் போதிய அளவு உள்ளமைந்ததாய் இருக்கவில்லை. உடலை விடக்கூடுதலாய் உள்ளமைந்திருக்கிறது அவ்வளவுதான். நீங்கள் சாட்சியாய் இருக்கும் வரை அது புறம் சார்ந்ததாய், காணத்தக்கதாகி விடுகிறது. உங்கள் எண்ணங்களை உங்களால் கவனிக்க முடிகிறபோது, அவை காணத்தக்கவைதானே. அவை பொருள்களாகி விடுகின்றன, நீங்கள் அவற்றைக் கவனிப்பவராகி விடுகிறீர்கள்.

நிர்விகல்ப சமாதி என்பது - மேற்கொண்டு பிறப்பு இல்லை என் கிறபோது, இவ்வுலகுக்கு மீண்டும் திரும்புவதில்லை என்றாகிறபோது, உரிய காலத்தில் மீளுவதில்லை என்கிற நிலையில் அமைவது. நிர்விகல்பம் என்பது ஆசைகளின் மூலத்தை முற்றாய் எரித்து விடுகிற நிலை.

நீங்கள் யோகாவை நோக்கிச் செல்வதாயினும், உள்நோக்கிய பயணத்தை மேற்கொள்வதாயினும் அதுகூட ஓர் ஆசைதான் - ஒன்றை முயன்று அடைவதற்கான ஆசை. அமைதியை ஆனந்தத்தை அடைவதற்கான ஆசை. மெய்ம்மையை அடைந்ததற்கான ஆசை. அது இன்னமும் ஆசைதான். நீங்கள் முதல் சமாதியை

* எண்ணங்களற்றது. வேறுபாடில்லாதது

அடைகிறபோது... கவன ஒருமை என்கிற தாரணைக்குப் பிறகு, ஆழ்ந்த சிந்தனை என்கிற தியானத்துக்குப் பிறகு, நீங்கள் சமாதிக்கு வருகிறபோது எங்கே பார்ப்பவரும் பார்க்கப்படுவதும் ஒன்றாகிறதோ அங்கேயும்கூட ஆசையின் நிழல் ஓரளவேனும் படிந்திருக்கும். அது மெய்ப்பொருளை அறிகிற ஆசை, அது ஒன்றாகி விடுகிற ஆசை, கடவுளை அறிகிற ஆசை அல்லது அதற்கு நீங்கள் பெயரிட்டழைக்கிற எதுவும். அந்த ஆசை புலனாகாத அளவு, இல்லையென்றே சொல்லும்படி நுட்பமாய் இருந்தாலும் அது இருக்கவே செய்கிறது. அது இருக்கத்தான் செய்யும், காரணம் உங்கள் செயல்முறை நெடுகிலும் நீங்கள் அதைப் பயன்படுத்தி வந்திருக்கிறீர்கள். தற்போது அந்த ஆசையும் விடப்பட வேண்டியதுதான்.

சமாதியும் விடப்பட வேண்டியதே. தியானத்தை விட வேண்டிய நிலை வரும்போது தியானம் முழுமையாகி விட்டிருக்கும். தியானம் பற்றிய எல்லாவற்றையும் நீங்கள் மறந்து அதை விடுகிறபோது - தியானம் தேவைப்படாதபோது, உள்ளேயோ அல்லது வெளியிலோ செல்ல வேண்டிய அவசியம் இல்லாதபோது எல்லாப் பயணங்களும் முடிந்து விடும் நிலை ஆசை மறைந்து போய் விடுகிறது.

ஆசையே விதை (வினைமுதல்). அது முதலில் உங்களை வெளியே செலுத்துகிறது. நாம் தவறான போக்கில் சென்று கொண்டிருக்கிறோம் என்பதைப் புரிந்து கொள்ளும் அளவு அறிவு நுட்பம் இருந்தால், அது உங்களை உள்நோக்கிச் செலுத்தத் தொடங்கும். ஆனால், ஆசை இன்னும் இருக்கிறது. வெளியில் ஏமாந்துபோன அந்த ஆசை தனது தேடலை உள்ளில் தொடர்கிறது. அந்த ஆசை விடப்பட வேண்டியது.

சமாதி நிலையை அடைந்தபின் சமாதியும் விடப்பட வேண்டியதுதான். அந்நிலையில் நிர்விகல்ப சமாதி தோன்றுகிறது. அதுவே முடிவானது. நீங்கள் விரும்பியதால் அது உண்டாகி விடவில்லை. நீங்கள் விரும்பியிருந்தால் அது வினை முதலற்றதாய் (seedless) இருந்திருக்காது. அது புரிந்து கொள்ளப்பட வேண்டியது. ஆசையின் பயனின்மையை (futility) அறிந்து கொண்டதன் காரணமாகவே அது (சமாதி) தோன்றியது. ஆசையின் பயனற்றத் தன்மையை நீங்கள் புரிந்து கொள்ளும்போது ஆசை மறைகிறது. நிர்விகல்ப சமாதியை அடைய வேண்டும் என்று நீங்கள் விரும்ப முடியாது. ஆசை மறைகிறபோது எதிர்பாராமல் தோன்றுவதல்லவா

நிர்விகல்ப சமாதி. அது உங்கள் முயற்சியால் விளைவதல்ல. அது ஒரு நிகழ்வு.

சமாதி நிலை வரைக்கும் முயற்சி இருக்கும். காரணம், முயற்சி ஆசையை வேண்டி நிற்பது. ஆசை மறைகிற போது முயற்சியும் மறைந்துவிடுகிறது. ஆசை மறைகிறபோது எந்தவொரு செயலுக்கு மான தூண்டல் உணர்வும் இருப்பதில்லை. செயல்படுவதற்கான உந்துதலோ, ஏதேனும் ஒன்றாய் ஆவதற்கான தூண்டுதலோ இருக்காது. முழுமையான வெறுமை, ஏதுமற்ற நிலை - எது புத்தரால் சூனியம் என்று அழைக்கப்பட்டதோ அந்த நிலை - தன்னுடைய இணக்கத்தில் உண்டாகும். அதுதான் அதில் உள்ள அழகு. ஆசையால் தீண்டப் படாத, உந்துதலால் கறைப்படுத்தப்படாத அழகு! அதுவே தூயமை யாயிருக்கிறது. அது மாசற்றது. இதுதான் நிர்விகல்ப சமாதி.

பிறவியெடுப்பதென்பது இனியும் இல்லை. புத்தர் தனது சீடர்களிடம் சொல்வார். 'நீங்கள் சமாதி நிலையை அடையும்போது கவனமாய் இருங்கள். சமாதி நிலையை இறுகப் பற்றிக் கொள்ளுங்கள். அப்போதுதான் மக்களுக்கு உங்களால் உபகாரம் பண்ண முடியும். நீங்கள் சமாதி நிலையைப் பற்றிக் கொள்ளா விட்டால் நிர்விகல்ப சமாதி தோன்றி விடும். நீங்கள் போய்விடுவீர்கள் எப்போதைக்குமாய். நுழையும் வழி மூடிவிடும் ஒரேயடியாய். அந்நிலையில் உங்களால் உதவ முடியாது. 'போதி சத்வா' என்ற வார்த்தையை நீங்கள் அறிந்திருக்க வேண்டும். பல சந்நியாசிகளுக்கு அந்த வார்த்தையை நான் வழங்கியிருக்கிறேன். 'போதி சத்வா' என்றாலே சமாதி நிலைக்கு வந்து, நிர்விகல்ப சமாதிநிலையை மறுத்து, மக்களுக்குப் பயன்பட வேண்டும் என்பதற்காகவே சமாதி நிலையைப் பற்றிக் கொண் டிருப்பவர் என்பதாகும். அது உலகத்துடனான ஒரு குறைந்தபட்ச தொடர்பு.

புத்தரைப் பற்றிய ஒரு கதை. அவர் முடிவான குறிக்கோளாகிய சொர்க்கத்துக்கு வந்தபோது, கதவுகள் திறந்து கொண்டன. அவர் வரவேற்கப்பட்டார். ஆனாலும் அவர் வெளியிலேயே நிற்கிறார். தேவர்கள் அவரிடம் சொல்கிறார்கள். 'உள்ளே வாருங்கள். தங்களுக் காக நாங்கள் நீண்ட காலமாய் காத்திருக்கிறோம்' என்று. ஆனால் அவர் சொல்கிறார். 'நான் தற்போது எப்படி உள்ளே வரமுடியும்? பலருக்கும் நான் வேண்டியிருக்கிறது. நான் வாயிலருகே நிற்பது வருகிறவர் களுக்கு வாயிலைக் காண்பித்து உதவத்தான். நான் உள்ளே நுழைகிற

கடைசி ஆளாய் இருப்பேன். எல்லாரும் உள்ளே நுழைந்தபிறகு, வெளியே ஒருவரும் விடப்படவில்லை என்கிறபோது நான் உள்ளே வருவேன். நான் தற்போது உள்ளே நுழைந்து விட்டால் வாயிற்கதவு மூடிக்கொண்டு விடும். இலட்சோப லட்சம் பேர் போராடிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் சமீபித்துக் கொண்டிருக்கிறார்கள். நெருங்கி வந்து கொண்டிருக்கிறார்கள். நான் வெளியே நிற்பேன். நான் உள்ளே நுழையப் போவதில்லை. நீங்கள் எனக்காகக் காத்திருக்க வேண்டும். நீங்கள் காத்திருக்கும் நேரத்தில் கதவுகள் திறந்திருக்கும். மேலும், 'இதுதான் உள்ளே செல்லும் வழி' என்று மற்றவர்களுக்கு நான் காண்பிக்க முடியும்.

இதுவே 'போதிசத்வ நிலை' என்பது. போதி சத்வா என்பது புத்த நிலை அடைவதற்காக முன்பே வாயிலருகில் வந்து நிற்கும் ஒருவரைக் குறிப்பது. பரிபூரணமான ஒன்றில் மறைவதற்கு அவர் தயாராயிருக்கிறார் என்பதே அதன் சாரம். பிறருடைய துன்பங்களை அவர் தாங்கி நிற்கிறார். அவர் இரக்கத்தைப் பற்றிக் கொள்கிறார். இறுதி விருப்பம் மக்களுக்கு உதவ வேண்டும் என்பது - அதுவும் ஓர் ஆசைதான் - அது அவரைப் பிரபஞ்ச இருப்பில் வைத்திருக்கிறது. அது கடினமானது. இடர்ப்பாடு மிக்கது. பெருமுயற்சி தேவைப்படுகிற ஒன்று. அது பெரும்பாலும் சாத்தியமற்றதுங்கூட. உலகத் தொடர்புடைய அத்தனை சங்கிலிகளும் அறுந்து போன நிலையில், எளிதில் உடையக்கூடிய ஓர் உறவைச் சார்ந்து நிற்பது சாத்தியமற்றதே. ஒருவர் போதிசத்வ நிலையை அடைந்து அதில் இருக்கும்போது அவை சில கணங்களாகவே இருக்கும். மனித குலத்துக்காக வாயில் திறக்கும் கணங்கள் அவை. அந்தச் சில கணங்களில்தாம் உள்ளே போகும் வழியைக் கண்டறிவதும், அதைத் தெளிவாகப் புரிந்து கொள்வதும், அடையாளம் கண்டு அதில் பிரவேசிப்பதும்.

தாரணை, தியானம், சமாதி என்கிற இம்மூன்றும் அதற்கு முந்தைய ஐந்துடன் ஒப்பிடும்போது உள்ளாக அமைந்தவை (internal) ஆகும்.

> நிரோத பரிணம் என்பது மனதின் உருமாற்றம். நிரோதனத்தின் நிலைமையில் மனம் ஊடுருவிப் பரவுகிறது. அது மறையக்கூடிய ஒரு கருத்துக்கும், அதன் இடத்தைப் பிடித்துக்கொள்ளப் போகிற ஒரு கருத்துக்கும் இடையே மிகச்சிறிது நேரமேயாயினும் ஒரு குறுக்கீட்டை மேற்கொள்கிறது.

இந்தச் சூத்திரத்தின் தனிச் சிறப்பே நீங்கள் இதனை உடனடியாய் பயன்படுத்த முடியும் என்பதுதான். பதஞ்சலி அதனை நிரோத் (நிரோதனம்) என்கிறார். நிரோத் என்பது மனதில் நேரிடும் குறுகியகாலத் தடையைக் குறிப்பது. சிறிது நேரமே என்றாலும் அது மனமற்றிருக்கும் நிலை. அது எல்லாருக்குமே ஏற்படுகிறதுதான். அது நுட்பமானது. அந்த நேரம் மிகக் குறுகியது. உங்களிடம் கூடுதல் உணர்வு இல்லாவிடில் நீங்கள் அதனைக் கண்டுகொள்ள இயலாது. முதலில் அது என்னவென்பதை நான் விவரிக்கிறேன்.

மனதில் ஓர் எண்ணம் தோன்றுகிற போதெலலாம் வானத்தில் தோன்றும் மேகத்தைப் போல் அது மனதில் கவிந்து கொள்ளும். ஆனால் எந்த எண்ணமும் நிரந்தரமானதல்ல. எண்ணத்தின் இயல்பே அதன் நிரந்தரமின்மைதான். ஓர் எண்ணம் வரும். போகும். மற்றோர் எண்ணம் வந்து அதன் இடத்தைப் பிடித்துக் கொள்ளும். இந்த இரண்டு எண்ணங்களுக்கு நடுவே ஒரு நுட்பமான இடைவெளி இருக்கும். ஓர் எண்ணம் போய்விட்டிருக்கும். மற்றோர் எண்ணம் இன்னும் வந்திருக்காது. அந்தக் கணமே 'நிரோத்' என்பது. நீங்கள் எண்ண மற்றிருக்கும் ஒரு நுட்பமான இடைவெளி அது. ஒரு மேகம் கடந்து சென்றது. மற்றொரு மேகம் இன்னும் வந்துவிடவில்லை. அந்த வானம் வருவதை ஏற்பதற்கு இசைவாயிருக்கிறது. நீங்கள் அதைக் கூர்ந்து கவனித்தால் தெரியும்.

அமைதியாக உட்கார்ந்தபடி கவனியுங்கள். சாலையின் போக்குவரத்து போன்று எண்ணங்கள் வந்து போகும். ஒரு கார் போய்விட்டது. இன்னொரு கார் வந்து கொண்டிருக்கிறது - ஆனால் அந்த இரண்டுக்கும் இடையே ஓர் இடைவெளி இருக்கிறது - சாலை அப்போது வெறிச்சோடியிருக்கும். சீக்கிரம் மற்றொன்று வந்துவிடும். சாலை நிரம்பி விடும். அது காலியாயிருக்காது. இரண்டு எண்ணங் களுக்கு இடையேயான இடைவெளியை உங்களால் உணர முடியுமாயின் - கண நேர சமாதி நிலையைத் தெளிவாக உணர்ந்து கொள்கிற ஒருவராகவே நீங்கள் இருப்பீர்கள். அது கணநேரக் காட்சி. உடனே அது மற்றோர் எண்ணத்தால் நிரப்பப்பட்டு விடும்.

கவனியுங்கள், கூர்ந்து கவனியுங்கள். ஓர் எண்ணம் போகிறது. மற்றொன்று வருகிறது. இடையே ஓர் இடைவெளி. அந்த இடை வெளியில் சமாதி நிலையை அடைந்த ஒருவரின் அதே நிலையில் நீங்களும் இருப்பீர்கள். ஆனால் உங்கள் நிலை ஒரு கணநேர நிகழ்வு.

பதஞ்சலி அதனை நிரோத் என்கிறார். அது குறுகிய காலமேயானது. வேகம் சார்ந்தது, எபபோதும் மாறிக்கொண்டே இருப்பது. அது இடைவிடாமல் ஏற்படுகிற மாற்றம் (flux) போன்றது. ஓர் அலை போனதும் இன்னோர் அலை வருகிறதே அந்தமாதிரி. இரண்டுக்கும் இடையில்... அலை இருப்பதில்லை. நீங்கள் அதைக் கவனித்தறிய முயலுங்கள்.

தனிச்சிறப்பு வாய்ந்த தியானங்களில் இதுவும் ஒன்று. வேறெதை யும் செய்வதற்கான அவசியம் இல்லை. நீங்கள் அமைதியாய் அமர்ந்தபடி அதைக் கவனிக்க முடியும். அந்த இடைவெளியைக் கவனியுங்கள். தொடக்கத்தில் அது சிரமமாகவே இருக்கும். போகப்போக எச்சரிக்கையாகி விடுவீர்கள். அந்த இடைவெளியைத் தவறவிட மாட்டீர்கள். எண்ணங்களில் கவனம் செலுத்தாதீர்கள். உங்கள் கவனத்தை இடைவெளியில் ஒருமுகப்படுத்துங்கள். சாலை வெற்றிடமாயும், யாரும் அதைக் கடந்து செல்லாமலும் இருக்கும்போது அதைக் கவனியுங்கள். உங்களுடைய பயண வழியை மாற்றிக் கொள்ளுங்கள். சாதாரணமாக நாம் எண்ணங்களில் கவனம் செலுத்து வோமேயன்றி இடையில் உள்ளதில் கவனம் செலுத்துவதில்லை.

ஒருசமயம் இப்படி நடந்தது. யோகாவில் மிகப்பெரிய குருவான ஒருவர் 'நிரோத்' பற்றித் தன்னுடைய சீடர்களுக்குக் கற்பித்துக் கொண்டிருந்தார். அவரிடம் ஒரு கரும்பலகை இருந்தது. அந்தக் கரும்பலகையில் ஒரு சாக்குக்கட்டி (chalk)யைக் கொண்டு தெளிவாய் தெரிகிற ஒரு புள்ளியை வைத்தார். தனது சீடர்களிடம், 'நீங்கள் பார்ப்பது என்ன?' என்ற கேட்டார். 'சின்னதாய் ஒரு வெண்ணிறப் புள்ளி' என்று எல்லோரும் சொன்னார்கள். குரு உரக்கச் சிரித்தார். 'உங்களில் யாருமே கரும்பலகையைப் பார்க்கவில்லையா? அந்தச் சிறிய வெண்ணிறப் புள்ளி மட்டுந்தான் கண்ணில் படுகிறதா?' என்று கேட்டார்.

கரும் பலகையை யாரும் பார்க்கவில்லை. வெண்ணிறப் புள்ளியைப் போன்று கரும் பலகையும் அங்கே இருக்கத்தான் செய்தது. ஆனால், எல்லோரும் வெண்ணிறப் புள்ளியையே பார்த்தக் கொண்டிருந்தனர்.

உங்களுடைய போக்கை மாற்ற வேண்டும்.

குழந்தைகளின் புத்தகங்களில் நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? அதில் படங்கள் இருக்கும். புரிந்து கொள்ளக்கூடிய கருத்துகளுடன்

இருக்கும். ஒரு குறிப்பிட்ட படத்தில் இளம் பெண்ணொருத்தியை நீங்கள் பார்க்கிறீர்கள். அதே படத்தில் ஒரு முதிய பெண்மணியும் மறைந்து கொண்டிருக்கிறாள். நீங்கள் தொடர்ந்து அந்தப் படத்தைப் பார்த்துக் கொண்டே இருந்தால் இளம் பெண் மறைந்த, முதிய பெண்மணியின் முகத்தைக் காண்பீர்கள். அந்நிலையில் அந்த முகத்தை நீங்கள் தொடர்ந்து பார்த்தபடி இருந்தால் திடுதிப்பென்று அது மறைந்து இளம் பெண்ணின் முகம் மறுபடியும் தோன்றும். இரண்டையும் நீங்கள் ஒருசேரக் காண முடியாது. அது நடவாத காரியம். ஒரு நேரத்தில் ஒரு முகத்தையும் இன்னோரு நேரத்தில் இன்னோரு முகத்தையும் உங்களால் காண முடியும். இரண்டு முகங்களையும் பார்த்தவுடன் அந்த முகத்திலேயே இன்னோரு முகம் இருப்பதை நன்றாகத் தெரிந்து கொள்கிறீர்கள். ஆனால் இரண்டு முகங்களையும் நீங்கள் ஒருசேரப் பார்ப்பதற்கில்லை. மனம் இடைவிடாமல் மாறிக் கொண்டே இருப்பது. அதனால்தான் ஒரு சமயம் இளமையான முகத்தையும் மற்றொரு சமயம் முதுமையுற்ற முகத்தையும் நீங்கள் பார்க்கிறீர்கள்.

வளர்ச்சிக்கான காலம் முதுமையில் இருந்து இளமைக்கு மாறுகிறது. இளமையில் இருந்து முதுமைக்கும் முதுமையில் இருந்து இளமைக்குமாய் மாறுகிறது. ஆனால் இரண்டிலும் உங்களால் கவனத்தை ஒருமுகப்படுத்த முடியாது. ஆகவே, நீங்கள் எண்ணங்களில் கவனம் செலுத்துகிறபோது, உங்களால் இடைவெளிகளில் கவனம் செலுத்த முடியாமல் போகிறது. இடைவெளிகள் எப்போதும் இருக்கின்றன. இடைவெளிகளில் கவனத்தை ஒருமுகப்படுத்துங்கள். திடீரென்று எண்ணங்கள் மறைந்து இடைவெளிகள் இருப்பதை உணர்ந்து கொள்வீர்கள். அந்த இடைவெளிகளில் சமாதி நிலையின் கணநேரக் காட்சிகளை நீங்கள் அடைவீர்கள்.

நான் சொல்வது எதுவாயினும், பதஞ்சலி சொல்வது எதுவாயினும், உங்களிடம் முன்பே அதுகுறித்த அனுபவம் சிறிதளவேனும் இருந்தால்தான் அவை உங்களுக்கு அர்த்தமாகும். அந்த இடைவெளி பரம சுகமளிப்பது என்பதை நீங்கள் ஒருமுறை புரிந்து கொண்டு விட்டால் கணப்பொழுதே என்றாலும் ஒரு பேரின்பம் உங்களைக் கவிந்து பிறகு மறைந்து விடும். அந்நிலையில் இந்த இடைவெளியே நிரந்தரமாயிருந்து விட்டால், இந்த இடைவெளியே எனது இயல்பாகி விடக்கூடுமெனில் அந்தப் பரமசுகம் தொடர்ந்து கிடைக்கும் என்பதை அறிந்து கொள்விர்கள்.

இதுவே நிரோத் பரிணம் ஆகும். நிரோத் பரிணம் என்பது மனதின் நிலை மாற்றம். அதில் நிரோத்தின் அடிப்படையில் மனம் ஊடுருவிப் பரவுகிறது. மறைகிற எண்ணத்துக்கும், அதன் இடத்துக்கு வருகிற மற்றோர் எண்ணத்துக்கும் இடையே அது குறுக்கிடுகிறது. அந்தக் குறுக்கீடு குறுகிய கால அளவைக் கொண்டது என்றாலும்.

பத்து ஆண்டுகளுக்கு முன் ஜப்பானிய அரச குடும்பத்து நகைகளைப் பட்டியலிடும் வேலை நடந்தது. சாஷூவன் என்கிற இடத்தில் அரச குடும்பத்தின் பொக்கிசம் பாதுகாப்பாய் வைக்கப்பட்டிருந்தது. தொள்ளாயிரம் ஆண்டுகளாய் அந்த மாளிகையில் நகைகள் வைக்கப்பட்டிருந்தன. *அம்பர் மாலையொன்றைப் பரிசோதித்தபோது ஒரு மணி மட்டும் மற்றவற்றில் இருந்து வேறாயிருந்தது தெரிய வந்தது. பல நூற்றாண்டுகளாய் படிந்திருந்த தூசி துடைக்கப்பட்டு அந்த மணி மட்டும் ஆர்வத்துடன் பரிசோதிக்கப்பட்டது. அந்தச் சிறப்பு வாய்ந்த மணி மற்ற மணிகளைப்போல் சாதாரண அம்பரில் தயாரிக்கப் பட்டதல்ல. அது பசிய இளஞ்சிவப்பு நிறத்தில் உள்ள மிகவும் தரமான முத்து ஆகும். பல காலமாகவே அது அம்பர் என்று தவறாய் கருதிக் கொள்ளப்பட்டது. ஆனால் இனியும் அப்படி கருதப்படாது. நாம் ஒரு தவறான அடையாளத்துடன் எத்தனை காலம் வாழ்ந்திருந்தாலும் அது முக்கியத்துவம் பெறுவதில்லை. நம்முடைய உண்மையான அமைதியான இயல்பு சுயபரிசோதனையில் வெளிப்பட்டு விடும்.

கணப் பொழுதே காணும் காட்சியென்கிற போதும் உங்களுடைய மெய்ம்மை (reality)யை நீங்கள் கண்டு கொண்டதும் உங்கள் பொய்யான அடையாளங்கள் - பலநூறு ஆண்டுகளாய் இருந்து வந்த தவறான அடையாளங்கள் திடுதிப்பென்று மறைந்து விடும். இனியும் நீங்கள் அந்த அடையாளங்களால் ஏமாற்றப்படுவதில்லை. உங்கள் உண்மையான இயல்பின் முதற்காட்சியை இந்த நிரோத் பரிணம் வழங்குகிறது. தூசி அடுக்குகளுக்குக் கீழே சுடர்விட்டுக் கொண்டிருக்கும் உண்மையான முத்தின் காட்சியை அது வழங்குகிறது. இங்கே தூசி அடுக்கு என்றது எண்ண அடுக்குகளன்றி வேறெயென்ன. அவை எண்ணப் பதிவுகள், கற்பனைகள், கனவுகள், ஆசைகள் ஆகும்.

ஒரு காட்சியைப் பெற்றவுடன் நீங்கள் மாறி விடுகிறீர்கள். நான் இதனை மதமாற்றம் (conversion) என்பேன். தற்போது ஓர் இந்து

---

* அம்பர் (amber) - மஞ்சள் அல்லது செம்பழுப்பு நிறத்தில் ஒளி ஊடுருவக்கூடிய ஒரு பிசின்.

கிறிஸ்துவனாக மாறுவதும் ஒரு கிறிஸ்துவன் இந்துவாக மாறுவதும் மாற்றம் ஆகாது. அது ஒரு சிறையில் இருந்து இன்னொரு சிறைக்குச் செல்வது போலத்தான். அது மனதில் இருந்து மனமற்ற நிலைக்கு நீங்கள் செல்வது போன்றது. நீங்கள் நிரோத் பரிணத்தில் கருத்தூன்றிப் பார்க்கிறபோது, இரண்டு எண்ணங்களுக்கிடையே நீங்கள் காண்கிற போது, எதிர்பாராத விதமாய் உங்களுடைய உண்மை நிலை வெளிப்படுகிறது. அதுவே மாற்றம் என்பது - கிட்டத்தட்ட அது ஒரு மின்னல் மாதிரி. அந்நிலையில் மறுபடியும் தெளிவின்மை இருக்கும். ஆனால் நீங்கள் அதே ஆளாய் இருக்க மாட்டீர்கள். தற்போது உங்களால் மறக்க முடியாத ஒன்றை நீங்கள் காணப் பெற்றீர்கள். தற்போது நீங்கள் மீண்டும் மீண்டும் தேடிக் கொண்டிருப்பீர்கள்.

கீழ்க்கண்ட சூத்திரம் இதைத்தான் கூறுகிறது:

**'திரும்பத் திரும்பச் செய்யப்படும் எண்ணப் பதிவுகளுடன் இந்த ஓட்டம் அமைதியாய் இருக்கிறது.'**

மறுபடியும் மறுபடியும் அந்த இடைவெளியில் நீங்கள் விழுவீர்களாயின் மீண்டும் அந்த அனுபவத்தை நீங்கள் ருசிப்பீர்கள்.

மறுபடியும் மறுபடியும் நிரோத்தின் வழியே - மனம் தடைப்பட்ட நிலையின் வழியே நீங்கள் பார்க்கிறபோது - எவ்வித எண்ணமும் இல்லாமல் உங்கள் இருப்புணர்வில் பார்க்கிறீர்கள். இந்த ஓட்டம் அமைதி நிரம்பியதாகிறது. இந்த ஓட்டம் இயல்புடையதாகிறது. இந்த ஓட்டம் தானாக நிகழ்வது. உங்களுடைய சொந்தப் பொக்கிசத்தை நீங்கள் அடைகிறீர்கள், முயன்று அடைகிறீர்கள். முதலில் கணநேரக் காட்சிகளாய், சிறு இடைவெளிகளாய் பின்னர் பெரிய இடைவெளி களாய், மிகப்பெரிய இடைவெளிகளாய் அவை இருக்கும். அந்நிலையில் ஓர்நாள் அது நிகழ்கிறது. அந்தக் கடைசி எண்ணம் போய்விடுகிறது. வேறெந்த எண்ணமும் வருவதில்லை. நீங்கள் ஆழ்ந்த அமைதியில், நிலைபேறுடைய (eternal) அமைதியில் இருக்கிறீர்கள். அதுவே நீங்கள் அடைய விரும்புகிற முடிவு - உங்கள் இலக்கு.

அது கடினமானது, எளிதில் செய்ய இயலாதது. ஆனால் கிடைக்கக் கூடியது.

இயேசு சிலுவையில் அறையப்பட்டதும், அவர் மரிப்பதற்கு முன்பாய், ஒரு சிப்பாய் அவருடைய பக்கவாட்டில் ஈட்டியால் குத்திப்

பார்த்தான். அவர் மரித்து விட்டாரா அல்லது உயிரோடிருக்கிறாரா என்பதை அறிந்து கொள்வதற்கு. அவர் இன்னும் உயிரோடிருந்தார். தம்முடைய கண்களைத் திறந்து சிப்பாயைப் பார்த்துச் சொன்னார். 'நண்பனே, அதைவிடக் குறுகிய வழி இருக்கிறது. என் இதயத்துக்கு' என்று. அவன் ஓர் ஈட்டியைக் கொண்டு அவருடைய இதயத்தில் குத்தினான். உங்கள் இதயத்துக்குள் நுழைவதன் மூலம், நீங்கள் உள்நோக்கிச் செல்வதன் மூலம் உங்களால் இயேசுவை நெருங்கிவிட முடியும்.

இயேசு உயிரோடு இருந்தாலும் இல்லாவிட்டாலும் நீங்கள் உள்நோக்கிப் பார்க்க வேண்டும். உங்கள் சொந்த வாழ்வின் மூலத்தை நீங்கள் நாடிச்செல்ல வேண்டும். அந்நிலையில் நீங்கள் அறிவீர்கள். இயேசு மரித்து விடவில்லை என்பதை. அவர் நிலைபேறுடைய வாழ்வாயிருக்கிறார். அவர் சிலுவையில் அறையப்பட்ட சரீரத்தில் இருந்து மறைந்திருக்கலாம். ஆனாலும் பரிபூரணமான இதயத்தில் என்றும் அவர் நிலைத்திருக்கிறார்.

'நண்பனே, அதைவிடக் குறுகிய வழி இருக்கிறது என் இதயத்துக்கு' என்று இயேசு சொன்னதன் மூலம், 'உள்நோக்கிச் செல்லுங்கள், உங்களுடைய இயல்புக்குள் என்னைப் பாருங்கள். அங்கே என்னைக் காண்பீர்கள். கடவுளின் இராஜ்யம் உங்களுக்குள் இருக்கிறது' என்பதையே குறிப்பிடுகிறார். அது நிலைபேறுடையது. அது முடிவற்ற வாழ்க்கை, அது மரணமற்ற வாழ்க்கை. நீங்கள் நிரோத்தினுள் கூர்ந்து நோக்கினால் மரணமற்ற வாழ்க்கையை, தொடக்கமும் முடிவுமற்ற வாழ்க்கையைக் கூர்ந்து நோக்கிய வராவீர்கள்.

ஒருமுறை அந்தத் தளராத இளமை கொடுக்கும் அமிர்தத்தை, சகல நோய்களுக்கும் நிவாரணியாகிய சஞ்சீவினியை நீங்கள் ருசித்துவிட்டால் உங்கள் விருப்ப இலக்காக வேறு எதுவும் இருக்காது. அந்நிலையில் அதுவே விருப்ப இலக்காகி விடும். அது சமாதி நிலைக்கு உங்களை இட்டுச் செல்லும். அதன்பிறகு அந்த விருப்பத்தையும் விடும்படி இருக்கும். அந்த விருப்பமும் விடப்பட வேண்டியதுதான். அதன் வேலையை அது செய்தாயிற்று. அது ஓர் உந்துவிசை (momentum)யை உங்களுக்கு வழங்கியது. உங்கள் இருப்புணர்வின் வாயிலுக்கு உங்களைக் கொண்ட சேர்த்தது. தற்போது அதை விடவேண்டியதுதான்.

நீங்கள் அதை விட்டதும் அதற்கு மேலும் இருக்க மாட்டீர்கள்... கடவுள் மட்டுமே இருப்பார். இதுவே நிர்விகல்ப சமாதி ஆகும்.

'பகவானே, நான் கேள்விப்பட்டிருக்கிறேன், பதஞ்சலியும் லாவோட்சுவும் ஓர் ஆற்றுப் பக்கமாய் வந்தனர். பதஞ்சலி நீர்ப்பரப்பின் மீது நடந்து ஆற்றைக் கடக்கத் தொடங்கினார். லாவோட்சு கரையில் நின்றபடி அவரைத் திரும்பி வரும்படி அழைத்தார்.

'என்ன விசயம்?' பதஞ்சலி விசாரித்தார்.

'அது ஆற்றைக் கடக்கிற வழியாகாது' என்று சொன்ன லாவோட்சு நீர் அத்தனை ஆழமில்லாத ஓர் இடத்துக்கு அவரை அழைத்துச் சென்றார். அவர்கள் இருவருமாய் ஆற்றின் குறுக்கே நடந்து சென்றனர்' என்பதை.

இது யாத்ரி சொன்னது. உண்மையில் கதைதான். ஆனால் யாத்ரியே, அதிலுள்ள முக்கியக் கருத்தை நீ தவறிவிட்டு விட்டாய் தான். நான் முழுக் கதையையும் மறுபடி உனக்குச் சொல்கிறேன்.

'பதஞ்சலியும் லாவோட்சுவும் ஓர் ஆற்றுப்பக்கம் வந்தார்கள் என்பதை நான் கேட்டிருக்கிறேன். பதஞ்சலி நீரின் மேற்பரப்பில் நடந்து ஆற்றைக் கடக்கத் தொடங்கினார். லாவோட்சு கரையில் நின்று கொண்டு அவரைத் திரும்பி வரும்படி அழைத்தார்.

'என்ன விசயம்,' பதஞ்சலி விசாரித்தார்.

லாவோட்சு சொன்னார், 'ஆற்றைக் கடக்கத் தேவையில்லை. இந்தக் கரையே மற்றொரு கரையாய் இருக்கிறது' என்று.

லாவோட்சு வலியுறுத்துவது இதுதான். 'நீங்கள் எங்கேயும் போகவேண்டியதில்லை. அந்தக் கரை இங்கே உள்ளது. எதையும் செய்யத் தேவையில்லை. அப்படியே இருந்தால் போதும். நீங்கள் எப்படி இருக்கவேண்டுமோ அப்படித்தான் முன்பே இருந்து கொண்டிருக்கிறீர்கள். அதனால் முயற்சி பொருத்தமற்றதாகி விடும். எங்கேயும் போக வேண்டியதில்லை. எந்தப் பாதையையும் பின்பற்றத் தேவையில்லை. எதையும் நாடும்படி இருக்காது. காரணம் நீங்கள்

எங்கு போவதாயினும் அந்தச் செய்கையை முக்கியக் கருத்தைத் தவற விடுவதாகி விடும் காரணம், எல்லாமும் இங்கு முனபே கிடைக்கக் கூடியதாயிருக்கிறது.

நான் இன்னொரு கதையை உங்களுக்குச் சொல்கிறேன். உலகில் மனிதப் பிரக்ஞை பற்றிய முக்கியமான கதைகளுள் ஒன்று அது. இயல்பாயிருப்பதில் நம்பிக்கை கொண்ட ஜராதுஷ்டிரரைப் பற்றிய கதை (இன்னொரு லாவோட்சு):

விஷ்டாஸ்பன் என்கிற பெர்ஸிய அரசன் வெற்றியோடு போர்க்களத்தில் இருந்து திரும்பிக் கொண்டிருந்தான். ஜராதுஷ்ட்ரரின் இருப்பிடத்தைச் சமீபித்தபோது, அந்த மறைஞானியைக் காண்ப தென்று அவன் தீர்மானித்தான். ஜராதுஷ்ட்ரரிடம் அவன் சொன்னான்: 'இயற்கை மற்றும் பிரபஞ்ச விதிகளைத் தாங்கள் எனக்கு விளக்கக் கூடும் என்பதற்காகவே நான் வந்துள்ளேன். நான் போரில் இருந்து எனது நாட்டுக்குத் திரும்பிக் கொண்டிருக்கிறேன் என்பதுடன், எனது அரண்மனையில் முக்கிய ராஜ்ய விவகாரங்களை நான் கவனிக்க வேண்டியிருக்கிறது என்பதாலும் நான் தங்கியிருக்க இயலாது.'

அரசனை நோக்கிப் புன்னகைத்த ஜராதுஷ்ட்ரர் நிலத்தில் இருந்து ஒரு கோதுமை தான்யத்தை எடுத்து, அவனிடம் கொடுத்தார். 'இயற்கையின் சக்திகளையும், பிரபஞ்ச விதிகளையும் இந்தச் சிறிய கோதுமை மண் உட்கொண்டிருக்கிறது' என்று தெரிவித்தார்.

அந்தப் பதிலால் ஆச்சரியப்பட்ட அரசன் அதைப் புரிந்து கொள்ளாதவனாய், தன்னைச் சுற்றியிருந்தவர்கள் முகங்களிலும் புன்னகையைக் கண்டு கோபப்பட்டான். அவர் தனனை ஏளனம் செய்ததாய் எண்ணிக்கொண்டு கோதுமை மணியை நிலத்தின் மீது வீசியெறிந்தான். அத்துடன் ஜராதுஷ்ட்ரரை நோக்கி இப்படிச் சொல்லவும் செய்தான், 'உம்மைக் காண்பதற்காக இங்கே வந்து நான் முட்டாள் தனமாய் நேரத்தை வீணடித்து விட்டேன்.'

ஆண்டுகள் கடந்தன. ஆட்சி செய்வதிலும், போரிடுவதிலும் அந்த அரசன் வெற்றிகரமாய் திகழ்ந்தான். மனநிறைவோடு கூடிய ஓர் இன்ப வாழ்க்கையை அவன் வாழ்ந்தான். ஆனால், இரவில் படுக்கைக்குச் செல்லும்போது விசித்திரமான எண்ணங்கள் தோன்றி, அவனுக்கு மனக்கலக்கத்தை உண்டுபண்ணியது. 'நான் சொகுசாக வாழ்கிறேன், இந்த அற்புதமான மாளிகையில் வளங்கள்

நிறைந்திருக்கின்றன என்றாலும், எத்தனை காலத்துக்கு நான் இந்த வளத்தை, அதிகாரத்தை, செல்வத்தை அனுபவிக்க முடியும்? - நான் சாகிறபோது என்ன நடக்கும்? என்னுடைய அதிகாரங்களும், செல்வங்களும் பிணியில் இருந்து மரணத்தில் இருந்து என்னைக் காப்பாற்றி விடுமா? மரணம் வந்துற்றதும் எல்லாவற்றையும் இழந்து விடுவேனா?

இந்தக் கேள்விகளுக்கு அரண்மனையில் உள்ள எவராலும் பதில் சொல்ல முடியவில்லை. ஆனால், அதே சமயத்தில் ஜராதுஷ்ட்ரரின் புகழ் வளர்ந்து விட்டிருந்தது. எனவே, தன்னுடைய செருக்கையெல்லாம் ஒருபுறமாய் ஒதுக்கி வைத்துவிட்டு, ஒரு பெரிய வண்டி நிறைய செல்வங்களை ஜராதுஷ்ட்ரருக்கு அனுப்பி கூடவே ஒரு செய்தியையும் அவருக்கு அனுப்பினான் அந்த அரசன். 'என்னுடைய இளமைக்காலத்தில் நான் பொறுமையற்றவனாய், சிந்திக்கும் திறனற்றவனாயும் இருந்தேன். பிரபஞ்சத்தின் மிகப்பெரிய பிரச்சினைகளை ஒருசில நிமிடங்களில் விளக்கும்படி தங்களிடம் கோரினேன். நான் அதற்காக வருந்துகிறேன். தற்போது, சாத்திய மற்றவற்றை வேண்டவில்லை, நான் மாறிவிட்டேன். ஆனால், இன்னமும் பிரபஞ்ச விதிகளை, இயற்கையின் ஆற்றல்களை அறிந்து கொள்வதில் ஆர்வம் மிக்கவனாய் இருக்கிறேன். நான் இளமையில் கொண்டிருந்ததைவிடக் கூடுதல் ஆர்வத்துடன் இருக்கிறேன். தாங்கள் என்னுடைய மாளிகைக்கு வருகை தரும்படி மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். அல்லது, அது சாத்தியமில்லையெனில் அவற்றை யெல்லாம் எனக்குத் தெளிவுபடுத்த தங்கள் சீடர்களில் சிறந்தவரை என்னிடம் அனுப்பி வையுங்கள்.

ஓர் இடைவெளிக்குப் பிறகு வண்டியுடன் தூதர்களும் திரும்பி வந்தனர். தாங்கள் ஜராதுஷ்ட்ரரைக் கண்டதாகவும், அவர் வாழ்த்து தெரிவித்தாகவும், ஆனால் செல்வங்களைத் திருப்பியனுப்பி விட்டதாகவும் அரசனிடம் தெரிவித்தனர். அந்தச் செல்வம் தமக்குத் தேவைப்படாது. முடிவான குறிக்கோளகிய செல்வத்தைத் தாம் அடைந்தாயிற்று என்று ஜராதுஷ்ட்ரர் சொல்லியிருந்தார். அத்துடன் காவலர்களிடம் இலையில் சுற்றிய ஒரு வெகுமதியை அரசனுக்காகக் கொடுத்து, அதுவே அரசனுக்குத் தேவையானவற்றைப் போதிக்கிற ஆசான் என்றும் கூறியிருந்தார்.

அரசன் அதைப் பிரித்தான். அதே கோதுமை மணி இருந்ததைக் கண்டான். ஜராதுஷ்ட்ரர் அவனிடம் முன்பு கொடுத்த அந்தக் கோதுமை மணியேதான் அது. அதில் ஏதோ பெரியதோர் இரகசியம், விளக்க முடியாத விளைவுகளைக் கொடுக்கக்கூடிய ஒன்று இருப்பதாய்க் கருதித் தங்கப் பேழையிலிட்டு, தன் பொக்கிஷத்தில் அதைச் சேர்த்தான். ஓர் அற்புதம் நடக்கும் என்ற நம்பிக்கையுடன் தினமும் அந்தப் பேழையைத் திறந்து பார்ப்பான். தான் அறிய விரும்பியவற்றைத் தனக்குக் கற்பிக்கக்கூடிய ஏதோ ஒன்றாக அல்லது யாரோ ஒருவராக அது மாறும் என்று அவன் எதிர்பார்த்தான்.

மாதங்கள் சென்றன. ஆண்டுகள் சென்றன. ஆனால் எதுவும் நடக்கவில்லை. கடைசியில் அரசன் பொறுமையிழந்து சொன்னான். 'ஜராதுஷ்ட்ரர் மறுபடியும் என்னை ஏமாற்றி விட்டதாய் தெரிகிறது. ஒன்று அவர் என்னை ஏளனம் செய்திருக்க வேண்டும் அல்லது என்னுடைய கேள்விகளுக்கான பதில் அவருக்குத் தெரிந்திராது போலும். ஆனால் அவருடைய உதவியில்லாமல் என்னால் விடைகளைக் கண்டறிய முடியும் என்பதை நான் அவருக்குக் காண் பிக்கிறேன்.' எனவே அவன், ஷென் கிரகேச்சா என்கிற மிகப்பெரிய இந்திய மறை ஞானியிடம், முன்பு ஜராதுஷ்ட்ரருக்குத் தான் செல்வத் துடன் அனுப்பியிருந்த அதே வண்டியை அனுப்பி வைத்தான்.

பல மாதங்களுக்குப் பிறகு இந்தியாவில் இருந்து அந்தத் தத்துவ மேதையை அழைத்துக்கொண்டு தூதுவர்கள் திரும்பி வந்தனர். ஆனால் அந்த மேதை சொன்னார், 'உம்முடைய ஆசானாயிருப்பது எனக்குக் கவுரவம். ஆனால் ஓர் உண்மையைச் சொல்லியாக வேண்டும். நான் உமது நாட்டுக்கு வந்தது முக்கியமாக ஜராதுஷ்ட்ரர் என்கிற பெரிய ஞானியைச் சந்திக்கக் கூடும் என்பதற்காகத்தான்' என்று.

அப்போது அந்த அரசன் தங்கப் பேழையைத் திறந்து, கோதுமை மணியை எடுத்துக் காட்டினான். 'எனக்குப் போதிக்கும்படி நான் ஜராதுஷ்ட்ரரிடம் வேண்டினேன். பாரும், இதைத்தான் அவர் எனக்கு அனுப்பியிருந்தார். பிரபஞ்ச விதிகளையும் இயற்கையின் ஆற்றல்களையும் எனக்குக் கற்பிக்க வந்த ஆசான் இதுதான். இது நகைக்கத்தக்கதாயில்லையா?' என்றான்.

அந்தத் தத்துவ மேதை நெடுநேரம் கோதுமை மணியையே கூர்ந்து கவனித்தபடி இருந்தார். அவர் சிந்தனையில் ஆழ்ந்தபோது

மாளிகையே நிசப்தமாயிருந்தது. 'நான் பல மாதங்களாய்ப் பயணம் செய்து இங்கே வந்தது பற்றி வருத்தப்படவில்லை. உண்மையிலேயே ஜராதுஷ்ட்ரர் எவ்வளவு பெரிய குரு என்பதைத் தற்போது புரிந்து கொண்டேன். இந்தச் சிறிய கோதுமை தான்யம் உண்மையிலேயே இப்பிரபஞ்சத்தின் விதிகளையும், இயற்கையின் ஆற்றல்களையும் நமக்குக் கற்பிக்கக் கூடும். நீர் இந்தக் கோதுமை தான்யத்தைத் தங்கப் பேழையில் வைத்திருக்கக் கூடாது. அதன் முழுக்கருத்தையும் நீர் தவறவிட்டுக் கொண்டிருக்கிறீர்' என்றார்.

இந்தத் தான்யத்தை அதற்குச் சொந்தமான மண்ணில் ஊன்ற வேண்டும். மண், மழை, காற்று, சூரிய ஒளி மற்றும் நிலவு, நட்சத்திரம் இவற்றின் ஒளியுடன் அது சம்பந்தப்பட்டு, பெரிதாய் வளரும்: அதேபோன்று நீயும் அறிவிலும், புரிந்து கொள்ளும் திறனிலும் வளர்ச்சியுறுவதாயின் உன்னுடைய செயற்கையான வாழ்க்கையைத் துறந்து, இப்பிரபஞ்சத்துடனும் இயற்கையுடனும் நெருக்கமாய் இருக்கக்கூடிய இடத்துக்குச் செல். மண்ணில் ஊன்றிய விதையை நோக்கி சக்தியின் அத்தனை மூலங்களும் பாய்ந்து செல்கிற மாதிரி அறிவின் எண்ணற்ற மூலங்கள் நீ இயற்கையுடனும் பிரபஞ்சத்துடனும் ஒன்றுகிற வரை உன்னை நோக்கிப் பாய்ந்தோடி வரும். இந்த விதையின் வளர்ச்சியை நீ கவனித்தாயாகில் அழிவற்ற, மறை பொருளான ஒரு சக்தி அதில் இருப்பதைக் கண்டு கொள்வாய். அதுவே உயிர்ச்சக்தி தான்யம் மறைகிறது, அந்த மறைதலில் இருக்கிறது மரணத்தின் மீதான வெற்றி.

அரசன் இப்படிப் பதிலளித்தான். 'நீங்கள் சொல்வதெல்லாம் சரிதான். ஆயினும், அந்தச் செடி உதிர்ந்து, மடிந்து மண்ணோடு மண்ணாகி விடுகிறதே' என்று.

அந்தத் தத்துவ ஞானி சொன்னார். 'ஒரு படைப்புச் செயலை அது செய்து, முதலில் இருந்ததுபோல் பலநூறு தான்யங்களாய் அது மாறும் வரை அப்படி ஆவதில்லை. அந்தச் சிறு தான்யம் மறைந்து ஒரு செடியாகிறது. அதேபோன்று உன்னுடைய வளர்ச்சியும் உன்னை வேறொருவராய் மாற்றி விடும். வாழ்க்கை கூடுதலான வாழ்க்கையைத் தோற்றுவிக்கிறது, உண்மை மிகுதியான உண்மையைத் தோற்றுவிக்கிறது, விதை மேலும் பல விதைகளைத் தோற்றுவிக்கிறது.

ஒரேயொரு வித்தையை மட்டும் ஒருவர் கட்டாயம் தெரிந்திருக்க வேண்டும், எப்படி மரணிப்பது என்கிற வித்தையை. அந்நிலையில்

ஒருவர் மீண்டும் பிறக்கிறார். நாம் ஜராதுஷ்ட்ரரைச் சந்திக்க வேண்டும் என்று நான் முன் மொழிகிறேன். இதுபற்றி மேலும் பல விசயங்களை அவர் நமக்குப் போதிப்பார்' என்று.

சில நாட்களில் அவர்கள் ஜராதுஷ்ட்ரரின் தோட்டத்துக்கு வந்தனர். இயற்கையின் மிகச்சிறந்த புத்தகமே அவருடைய புத்தகம் அதைப் படிக்குமாறு தனது சீடர்களிடம் அவர் போதித்திருக்கிறார். பார்வையாளர்கள் இருவரும் ஜராதுஷ்ட்ரரின் தோட்டத்தில் இருந்து மற்றொரு மிகப்பெரிய உண்மையைத் தெரிந்து கொண்டார்கள். அங்கே - வாழ்க்கை என்பதும், வேலை என்பதும், படிப்பு என்பதும், விளையாட்டு என்பதும், ஒன்று போலிருந்தது. வாழ்வதற்குச் சரியான வழி எளிமையான, இயல்பான வாழ்க்கையை வாழ்வதுதான். ஆக்கபூர்வமான வாழ்க்கை என்பது தனி நபர் வளர்ச்சியைத் தன்னகத்தே கொண்டது. அது இயற்கை ஆற்றலின் ஒட்டுமொத்த விளைவாய் அமைவது. அவர்கள் இயற்கை என்கிற பெரிய புத்தகத்தில் இருந்து வாழ்க்கையைப் பற்றியும், பிரபஞ்ச இருப்பு விதிகள் பற்றியும் கற்றுணர்ந்தபடி ஓராண்டு காலம் அந்தத் தோட்டத்தில் இருநதனர். ஆண்டு முடிவில் அரசன் தனது நகரத்துக்குத் திரும்பும்போது, அந்தச் சிறந்த உபதேச சாரத்தை ஒழுங்கமைவு செய்யும்படி ஜராதுஷ்ட்ரரிடம் கேட்டுக் கொண்டான். ஜராதுஷ்ட்ரரும் அவ்வாறே செய்தார். அதன் விளைவாக உருவானது தான் பார்ஸிகளின் சிறந்த புத்தகமான 'ஜெண்ட்-அவெஸ்டா' (Zend Avesta) ஆகும்.

இந்த நீண்ட கதை ஒரு மனிதன் எப்படி கடவுள் ஆகிறான் என்பது பற்றிய முழுமையான கதை. உங்களுக்குள் நீங்கள் மறைத்து வைத்தவை எப்படி வெளிப்பாடாகிறது என்பது பற்றியும் அது சொல்கிறது.

விதையாக இருங்கள். நீங்கள் விதையாக இருந்தாலும் ஒரு தங்கப் பேழையில் இருக்கிறீர்கள், சிறைபடுத்தப்பட்ட மாதிரி. உங்களுக்குச் சொந்தமான நிலத்தினுள் வீழுங்கள், நிலத்தினுள் மரிப்பதற்குத் தயாராயிருங்கள். மரணிப்பதற்கு அஞ்சாதீர்கள். மரணம் பற்றிய அச்சமுடையவர்களெல்லாம் வாழ்வதிலிருந்து தங்களைத் தடுத்துக்கொண்டு விடுகிறார்கள். வாழ்வின் நுழைவாயிலாயிருக்கிறது மரணம். வாழ்வுடன் முதலில் பழக்கமாவது மரணம். எனவே, மரணத்தைக் கண்டு அஞ்சுகிறவர்களெல்லாம் வாழ்விற்கு மாறாகத்

தங்களைத் தடுத்துக் கொண்டு விடுகிறார்கள். அந்நிலையில் தங்கப் பேழைக்குள் தங்களை அவர்கள் பத்திரமாய் வைத்துக் கொள் கிறார்கள். ஆனால், அதன்பிறகு அவர்கள் வளர்ச்சியடைவதில்லை. உண்மையில் தங்கப் பேழைக்குள்ளான வாழ்வை மரணமென்றுதான் சொல்ல வேண்டும்.

மண்ணுலகில் மண்ணில் அடைகிற மரணம் ஒரு தொடக்கமே யன்றி முடிவல்ல. ஆனால் தங்கப் பேழையில் இருப்பதைத் துல்லியமான முடிவென்றே கொள்ளலாம். அதில் தொடக்கம் என்பது இல்லவேயில்லை.

நீங்கள் ஒரு விதையாய் இருக்கிறீர்கள். எங்கேயும் போகத் தேவையில்லை. உங்களுக்குத் தேவைப்படுவதெல்லாம் உங்களை நீங்கள் வந்தடைவது. ஆனால் விதையின் தோட்டுப்பகுதி (shell) அதற்குமுன் உடைபட வேண்டியது அவசியம். அகந்தை மண்ணுக்குள் மறைந்தாக வேண்டும். அகந்தை மண்ணுக்குள் மரித்தாக வேண்டும். ஒட்டுமொத்த உலகமும் உங்களை மையமாக்கிக் கொண்டு நாடி வரும். எல்லாச் செயல்களையும் தன் ஆளுகையின் கீழ் வைத்திருக்கும் சக்தியே (destiny) உங்களுக்குள் வளர்ச்சி காணத் தொடங்கும்.

உண்மையில் இந்தக் கரையே இன்னொரு கரையாயும் இருக்கிறது. எங்கேயும் போகத் தேவையில்லை. நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் உள்நோக்கிச் செல்வதுதான். உங்கள் இருப்புணர்வினுள் தாவிக் குதிப்பதுதான் நீங்கள் செய்ய வேண்டியது. உங்களக்குள் ஒத்திசைவாய் (tuned) இருங்கள். மறு கரைக்கு எப்படிச்செல்வது என்ற வழியை லாவோட்சு காண்பிக்கவில்லை.

நாம் இந்தக் கதையை மாறுபட்டதொரு வழியில் கையாள முடியும். பதஞ்சலி, புத்தர், லாவோட்சு என மூன்று நபர்கள் இருப்பதாக வைத்துக் கொள்வோம். பதஞ்சலி நீர்ப்பரப்பின் மீது நடக்க முயல்கிறார். அவருக்கு அது முடிகிறதுதான். அவர் உள்ளார்ந்த உணர்வுலகத்தின் சிறந்த விஞ்ஞானியாவார். புவியீர்ப்பு சக்தியை எப்படி எதிர்த்து நிற்பதென்று அவருக்குத் தெரியும். யாத்ரி கதையில் சொன்னதைத் தான் புத்தரும் சொல்வார். ‘ஆற்றைக் கடக்க இதுவல்ல வழி. அத்தனை கடின உழைப்பு தேவைப்படாத இடத்தை நான் காட்டுகிறேன், வாருங்கள். எளிதான வழி. ஆறு ஆழமற்றதாயிருக்கிறது. சில நூறு அடிகள் (yards) நடந்தால் போதும். ஆழமற்ற ஆற்றில் உங்களால்

நடக்க முடியும். இது ஒன்றும் பெரிதாய் கற்றுக்கொள்ளும்படியான கலையல்ல. இதனை எளிதாகச் செய்ய முடியும்' என்று புத்தர் இப்படிச் சொல்வார். லாவோட்சு? அவர் சிரித்தபடி புத்தரிடமும் பதஞ்சலியிடமும் சொல்வார். 'நீங்கள் என்ன செய்து கொண்டிருக் கிறீர்கள்? இந்தக் கரையை விட்டுச் சென்றால் நீங்கள் வழிதவறிய வராவீர்கள்; காரணம் இதுவே மறு கரையாயிருக்கிறது. இங்கே இந்தக் கணத்தில் ஒவ்வொன்றும் இருக்க வேண்டியபடிதான் இருக்கிறது. எங்கேயும் போக வேண்டியதில்லை. மெய்ப்பொருளைத் தேடுகிற வர்களே, எந்தப் பாதையையும் நீங்கள் பின்பற்றிச் செல்ல வேண்டியதில்லை. காரணம் எல்லாப் பாதைகளும் மெய்ப்பொருள் இருக்கும் இந்த இடத்துக்கே வருகின்றன.

லாவோட்சு சொல்வது உங்களுக்குள் தளர்வாகி (relax) விடுங்கள் என்பதைத்தான். அது ஒரு பயணமல்ல, போகவிடுதல் ஆகும். அது ஒரு பயணமல்ல என்பதால் எவ்வித ஆயத்தமும் தேவைப்படாது. நீங்கள் இருக்கிறபடிக்கு, இப்போது இருக்கிறபடிக்கே இளைப் பாறுங்கள். தங்கப் பேழைகள் பற்றிய பொருளற்றவற்றை விடுங்கள் - அவை ஒழுக்கமுறை சார்ந்த சிறைகள், கருத்தமைவுகள், கோட் பாடுகள், மதங்கள் சார்ந்த சிறைகள். அந்த அபத்தங்களை விடுங்கள். மண்ணுலகு பற்றி அச்சப்படாதீர்கள், விண்ணுலகைக் கேட்டு நிற்காதீர்கள். மண்ணுக்குள் இறங்கி வாருங்கள், கைகள் மாசடையுமே என்று கவலைப்படாதீர்கள். இயற்கையோடு இணைந்து கொள்ளுங்கள், இரண்டறக் கலந்து கொள்ளுங்கள். காரணம், ஒட்டுமொத்தமாய் அனைத்துக்கும் நீங்கள் உரியரவாகி விடுகிறீர்கள்.

ஜராதுஷ்ட்ரரின் செய்கை மனநிறைவு அளிப்பதாகவே இருந்தது. அவர் அரசனை ஏளனம் செய்யவில்லை. அவர் ஓர் எளிமையான மனிதர், தான் அதிக நேரத்தைச் செலவிட முடியாது. அரண்மனையில் தனக்குப் பல வேலைகள் இருக்கின்றன, உடனே சென்றாக வேண்டும் என்று அரசன் கூறிய காரணத்தால் தான் ஜராதுஷ்ட்ரர் ஒரு விதையைக் குறியீடாய் தரும்படி ஆயிற்று. ஆனால், அவன் ஒட்டுமொத்தக் கருத்தையும் தவற விட்டான். இது எத்தகைய செய்தி என்பதை அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஜராதுஷ்ட்ரர் அந்த விதையில், முழுமையான 'ஜெண்ட்-அவெஸ்தா'வையும் அவனுக்கு வழங்கினார்.' எதுவும் எஞ்சியிருக்கவில்லை. உண்மை யான மதம் பற்றிய முழுமையான செய்தி அதுதான். மற்றவை யெல்லாம் வெறும் விளக்கவுரையே.

புத்தர் தாமரை மலரொன்றை காசியபனிடம் தந்தது போல் அன்று ஜராதுஷ்ட்ரர் அந்த விதையை அவனிடம் கொடுத்தார். அந்தப் பூவில் இருந்ததைவிட மிருதியான செய்திகளை அந்த விதையின்மூலம் ஜராதுஷ்ட்ரர் வழங்கினார். இந்தக் குறியீடுகளைப் புரிந்துகொள்ள முயலுங்கள்.

புத்தர் மலரைக் கொடுக்கிறார். மலர் என்பது ஒன்று முடிவுக்கு வந்ததைக் குறிப்பது. ஓர் எல்லையை அடைந்துவிட்ட மகா காசியபன் மாதிரி ஒருவரிடந்தான் அதைக் கொடுக்க முடியும். ஜராதுஷ்ட்ரர் விதையைக் கொடுத்தார். விதை ஒன்றின் தொடக்கம் ஆகும். அது தேடலைத் தொடங்கும் ஒருவரிடம் கொடுக்கக்கூடியது. யார் விசாரணையை மேற்கொள்கிறாரோ, யார் வழியைக் கண்டுபிடிக்க முயல்கிறாரோ, யார் இருட்டில் துழாவிக் கொண்டிருக்கிறாரோ அவரிடம் கொடுக்கப்பட வேண்டியது. புத்தருடைய பூவை யாருக்கு வேண்டுமானாலும் தூக்கிக் கொடுத்துவிட முடியாது. அதற்கு ஒரு மகா காசியபன் தேவைப்பட்டார். உண்மையில் யாருக்கு அவசியப்படாதோ அவருக்குத்தான் அது கொடுக்கப்பட வேண்டும். மகா காசியபருக்கு அது அவசியப்படவில்லை. ஜராதுஷ்ட்ரரின் விதை யாருக்கெல்லாம் தேவைப்படுகிறதோ அவர்களுக்கெல்லாம் கொடுக்கப்பட வேண்டியது. மேலும் அவர் என்ன சொன்னார் என்பதைப் பார்க்க வேண்டும். அவர் சொன்னார், 'ஒரு விதையாகி விடுங்கள். நீங்கள் விதையாயிருங்கள். உங்களுக்குள் கடவுள் மறைந்திருக்கிறார். மாறாக எங்கேயும் செல்ல வேண்டியதில்லை.

ஜராதுஷ்ட்ரரின் மதம் இயற்கையால் அளிக்கப்பட்ட - மனிதர்களால் மாற்றப்படாத மதங்களுள் ஒன்று. வாழ்க்கையை இருக்கிறபடி ஏற்றுக்கொள்வதற்கு, அந்த வாழ்க்கையை அது இருக்கிறபடிக்கு வாழ வேண்டும். நடப்பு சாத்தியமற்றவற்றைக் கேட்டுக் கொண்டிருக்கக் கூடாது. அதை எளிதாய் எடுத்துக் கொள்ள வேண்டும். சுற்றி வரப் பாருங்கள், மெய்ம்மை (truth) இருக்கிறது, நீங்கள்தான் இல்லை. இந்தக் கரையே மற்றொரு கரையாயும் உள்ளது. இது தவிர்த்து வேறொரு கரையேது? இதுவே வாழ்க்கை, இன்னொரு வாழ்க்கை கிடையாது.

ஆனால், இந்த வாழ்க்கையை நீங்கள் இரண்டு விதமாய் வாழ முடியும் - குறைந்தபட்சமாய் அல்லது அதிகபட்சமாய். நீங்கள் மிகவும் குறைந்த அளவில் வாழ்வதெனில் ஒரு விதையைப் போன்று வாழ்கிறீர்கள்.அதிக அளவில் - பயன்தரத்தக்க விதத்தில்

வாழ்வதெனில் ஒரு மலரைப்போல் வாழ்வீர்கள். உங்கள் விதை மலராகட்டும். விதையே மலராகிறது. மறு கரையாய் ஆவதும் நீங்கள், மெய்மையாய் மாறுவதும் நீங்களே.

*'ஸா ஜென்னுக்கும் பதஞ்சலிக்கும் இடையேயுள்ள வேறுபாடு என்ன?'*

பதஞ்சலியின் தியானம் ஒரு படிநிலை. அவருடைய எட்டு படிகளில் தியானமும் ஒரு படி. ஸா-ஜென்னில் தியானம் என்கிற ஒரு படி மட்டுமே உள்ளது. வேறு படிகள் இல்லை. பதஞ்சலி படிப்படியான வளர்ச்சியில் நம்பிக்கை கொண்டவர். ஜென் உடனடி ஞானத்தில் நம்பிக்கை கொண்டது. ஆக, பதஞ்சலியில் ஒரு படியாக உள்ளதுதான் ஜென்னில் எல்லாமாயிருக்கிறது. தியானம் மட்டுமே போதுமானது. வேறு எதுவும் தேவைப்படாது. மற்ற எல்லாமும் தூக்கியெறிய வேண்டியவைதாம். மற்றவை பயனுடையவை என்றாலும் அத்தனை முக்கியமாகாது. ஸா ஜென்னில் தியானம் மட்டுமே.

அவசியப்படுகிற அனைத்துமாய் ஒரு முழுமையான அமைவை பதஞ்சலி உங்களுக்கு வழங்குகிறார். அது தொடக்கத்தில் இருந்து இறுதி வரைக்குமானது. அவர் வழங்குவது முழுமையான போதனை. அது ஒரு திடீர் நிகழ்வு அல்ல. ஒருவர் அதில் கொஞ்சம் கொஞ்சமாகவே வளர்ச்சி காணும்படி இருக்கும். நீங்கள் வளர்ந்தபடி, உங்கள் வளர்ச்சியைக் கிரகித்தபடி - உங்களை வளர்ச்சியில் முழுமையாய் ஈடுபடுத்திக் கொண்டு இருந்தால் கூடுதலான படிகளையும் அடையத் திறமை உடையவராவீர்கள். ஜென் அசாதாரணமானவர்களுக்கும், ஒன்றுமே இல்லாததற்காகத் துணிந்து ஆபத்தை மேற்கொள்கிறவர்களுக்கும், எவ்வித எதிர்பார்ப்புமின்றி எல்லாவற்றையும் ஆபத்துக்கு உட்படுத்துகிறவர்களுக்கும் உரியது.

அது எல்லாருக்கும் சாத்தியமில்லை. நீங்கள் எச்சரிக்கையோடு செயல்படுகிறவர், எச்சரிக்கையோடு செயல்படுவது தவறாகாது. அது இயல்பாகவே அமையுமாயின் நீங்கள் எச்சரிகையோடு செயல்பட வேண்டியதுதான். அந்நிலையில் முட்டாளாகி விடாதீர்கள். தாவிக்குதிக்க முயலாதீர்கள். இயற்கையோடு ஒத்த உங்களுடைய பண்புகளைக் கவனியுங்கள். எச்சரிக்கையாய் இருக்க வேண்டும் என்று நீங்கள் எண்ணினால் அது உங்கள் இயல்பு. அப்போது எச்சரிக்கையோடு செயல்படுங்கள். அதுவும் ஆபத்து என்று நீங்கள்

எண்ணிக்கொண்டால் அப்போது எச்சரிக்கையாய் இருப்பது பற்றி வருத்தப்படாதீர்கள். படிப்படியான நடவடிக்கைகள் பற்றித் தொல்லைப்படாதீர்கள். நீங்கள் படிக்கட்டு வழியே இறங்கி வரலாம் அல்லது மாடியில் இருந்து அப்படியே குதிக்கலாம். அது உங்களைப் பொறுத்தது. உங்கள் இயல்பைக் கவனியுங்கள்.

படிக்கட்டின் வழியே இறங்குவது பற்றி ஒருசிலர் கவலைப்படு வதில்லை. அவர்கள் அதற்காகக் காததிருப்பதில்லை. அழைப்பைக் கேட்ட்வுடன் அவர்கள் அப்படியே குதித்து விடுகிறார்கள். அழைப்பு கேட்டவுடன் ஒரு நிமிடம்கூட அவர்களால் பொறுத்திருக்க முடிவதில்லை. ஆனால் இவர்கள் மிகவும் அரிதானவர்கள்.

நான் 'அரிது' என்று சொல்கிறபோது மதிப்பீடு செய்கிற முறையில் சொல்லவில்லை. 'மிக உயர்ந்தவர்கள்' என்று நான் சொல்லவில்லை. நான் 'அரிது' என்று சொல்கிறபோது அதை ஒரு தகவலாகவே சொல்கிறேன். இவர்கள் ரொம்பப் பேர் இல்லை. என்னுடைய கருத்தைத் தவறவிட்டு விடாதீர்கள். அவர்கள் மற்றவர்களைவிட உயர்வானவர்கள் என்று நான் சொல்லிக் கொண்டிருக்கவில்லை. யாரும் உயர்ந்தவர் இல்லை, யாரும் தாழ்ந்தவர் இல்லை - ஆனால் மக்கள் வேறானவர்கள். தாவிக்குதிக்க விரும்புகிறவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் 'ஜென்'னைத் தேர்வு செய்துகொள்ள வேண்டும். எவ்விதத் தொல்லையுமின்றி, கவனமுடன் தங்கள் குறிக்கோளைப் படிப்படியாக அடைய விரும்புகிறவர்களும் இருக்கிறார்கள். ரொம்ப சரி. அதுதான் உங்கள் வழியென்றால் நற்பாங்குடன் செல்லுங்கள்.

எப்போதும் முடிவெடுக்கும் காரணியாய் இருப்பது நீங்களும், உங்கள் போக்கும், உங்கள் இயல்புந்தான். பதஞ்சலியை அல்லது ஜென்னைப் பின்பற்ற வேண்டுமென்பதில்லை. தொடர்ந்து உங்கள் இருப்புணர்வைக் காது கொடுத்துக் கேட்டுக் கொண்டிருந்தால் போதும். பதஞ்சலிகளும் ஜென்னும் உங்களுக்காக இருக்கிறார்கள். ஆனால், நீங்கள் அவர்களுக்காக இருக்க வேண்டுமென்பதில்லை. வழிபாடு மனிதனுக்காக இருககிறதேயன்றி, வழிபாட்டுக்காக மனிதன் இல்லை. எல்லா மதங்களும் உங்களுக்காக இருக்கின்றன. நீங்கள் மதங் களுக்காக இல்லை. நிறைவாக நீங்களே குறிக்கோளாகி விடுகிறீர்கள்.



**'என்னுடைய உணர்வுகளுக்கும், உள்ளிருந்து ஒலிக்கும் குரலுக்கும் நான் காது கொடுக்கிற போது, 'எதையும் செய்ய வேண்டாம். உறங்கு, உணவு கொள், கடற்கரையில் விளையாடியிரு' என்று அவை சொல்லும். இந்த உணர்வுகளைப் பின்பற்றுவதற்கு நான் அஞ்சுகிறேன். காரணம் இவ்வுலகில் தப்பிப் பிழைததிருக்கப் போதுமான பலம் என்னிடம் இல்லாது போய்விடும். என்னை நான் நழுவிச்செல்ல விடும்போது பிரபஞ்ச இருப்பு எனக்குப் பாதுகாப்பளிக்குமா?**

முதலாலது: தொடர்ந்து இவ்வுலகில் வாழ்ந்து கொண்டிருக்கத் தேவையில்லை. இந்த உலகம் ஒரு பைத்தியக்கார விடுதி. இதில் தப்பிப் பிழைத்திருக்க அவசியமில்லை. பேராவல், 'அரசியல், தன்முனைப்பு கொண்ட உலகில் எதற்காகப் பிழைத்திருப்பது? அது ஒரு பிணி. ஆனால் இங்கே வாழ்வதற்கு இன்னொரு வழியும் இருக்கிறது. நீங்கள் இந்த உலகத்தில் இருக்க முடியும். ஆனால் அதனுடையதாய் இருப்பதில்லை.

'என்னுடைய உணர்வுகளுக்கும் உள்ளிருந்து ஒலிக்கும் குரலுக்கும் நான் காது கொடுக்கிறபோது...' அந்நிலையில் எதையும் செய்யாதீர்கள். உங்களைவிட உயர்நதவர் யாரும் இல்லை. கடவுள் உங்களிடம் நேரடியாய் பேசுகிறார். உங்களுடைய அக உணர்வுகளை நம்புங்கள். அந்நிலையில் எதையும் செய்ய வேண்டியிருகக்ாது. நீங்கள் உண்டு, உறங்கி, கடற்கரையில் விளையாடியிருக்க எண்ணினால் அது ரொம்ப சரி. அச்சத்தின் காரணமாய் தங்களுடைய மதத்தைத் தேர்வு செய்து கொண்ட பலரும் அவர்கள் அந்தரத்தில் (சுவர்க்கமும் இல்லாமல் நரகமும் இல்லாமல்) வாழும்படி ஆகியிருக்கிறது. அவர்கள் சமய நம்பிக்கையுடனும் இல்லை, உலகியல் சார்ந்தவராயு மில்லை. அவர்கள் உறுதியற்ற நிலையில் இருக்கிறார்கள்.

அச்சம் எவ்வகையிலும் உதவப் போவதில்லை. அச்சம் என்பது இனந்தெரியாத ஒன்று பற்றிய பயத்தையே குறிக்கிறது. அச்சம் எப்போது மரணம் பயத்தைக் குறித்துக் காட்டும். அச்சம் எப்போதும் இழந்து விட்டிருக்கும் நிலையைக் குறிப்பது. நீங்கள் உயிர் வாழ விரும்பினால் இழந்து விடுகிற சாத்தியத்தையும் ஏற்றுக்கொண்டாக வேண்டும். அறிந்திராத ஒன்று பற்றிய பாதுகாப்பின்மையை ஏற்றாக வேண்டும். பரிச்சயமில்லாத ஒன்று பற்றிய அசவுகர்யத்தை. துன்பத்தை ஒப்புக்கொண்டாக வேண்டும். அதைத் தொடர்ந்து வரும்

மகிழ்ச்சிக்கு அதுதான் நீங்கள் செலுத்த வேண்டிய விலை. நீங்கள் அதற்கான விலையைக் கொடுத்தாக வேண்டும். விலை கொடுக்காமல் எதையும் அடைவதற்கில்லை. இல்லையேல் நீங்கள் அச்சத்தால் செயலற்றுப் போய்விடுவீர்கள். உங்களுடைய ஒட்டுமொத்த வாழ்க்கையும் அத்தோடு தொலைந்ததுதான்.

உங்களுடைய உள்ளார்ந்த உணர்வு எதுவாயினும் மகிழ்ச்சியோடு இருங்கள்.

'இந்த உலகில் தொடர்ந்து வாழ்வதற்குப் போதிய பலமில்லாதவனாகி விடுவேன் என்று நான் எண்ணுகிறேன். அதற்கு அவசியமில்லை. உங்களுக்குள் இருக்கும் அச்சமே அப்படிப் பேசுகிறது. அச்சம் மிகுதியான அச்சங்களைத் தோற்றுவிக்கும். அச்சத்தில் இருந்து அதிக பயம் தோன்றுகிறது.

'பிரபஞ்ச இருப்பு (existence) என்னைப் பாதுகாக்குமா?' மறுபடியும் அச்சம் உத்தரவாதங்களை, வாக்குறுதிகளைக் கோரி நிற்கிறது. உங்களுக்கு உத்தரவாதம் கொடுப்பவர் யார்? உங்கள் வாழ்க்கைக்கு உத்தரவாதமளிக்கக் கூடியவர் யார்? ஒருவித காப்புறுதியை நீங்கள் வேண்டி நிற்கிறீர்கள். இல்லை, அதற்குச் சாத்தியமில்லை.

பிரபஞ்சத்தில் எதுவும் காப்புறுதியோடு இருக்கவில்லை. இருக்க முடியாது. அதுவும் நல்லதுதான். இல்லையேல், பிரபஞ்சமும் காப்புறுதி பெற்றிருக்குமாயின் நீங்கள் முன்பே முற்றாய் மரித்து விட்டிருப்பீர்கள். அப்போது புயற்காற்றில் தாக்குப் பிடித்து வாழும் ஓர் இளந்தளிரின் கிளர்ச்சி இல்லாது போயிருக்கும்.

பாதுகாப்பற்ற காரணத்தாலேயே வாழ்க்கை நேர்த்தியாய் இருக்கிறது. மரணம் வாழ்க்கையை நேர்த்தியாக்கி விடுகிறது. வாழ்க்கை அருமையாயிருப்பதற்குக் காரணம் அது இழக்கப்படக் கூடியது என்பதுதான். நீங்கள் அதைத் தவறவிட முடியாது என்றால் எல்லாமும் உங்கள் மீது திணிக்கப்பட்டிருக்கும். அப்போது வாழ்க்கையும் சிறையாகி விடும். அதை உங்களால் அனுபவித்து மகிழ முடியாது. நீங்கள் பேரானந்தத்துடன், தடையின்றி வாழ்வதற்கு உத்தரவிடப்பட்டால் அப்போது ஆனந்தமும், சுதந்திரமும் ஒரேயடியாய் போய்விடும்.

'என்னை நான் நழுவ விடும்போது பிரபஞ்சம் என்னைப் பாதுகாத்திருக்குமா?' முயன்று பாருங்கள். ஒன்று மட்டும் நான் சொல்ல

முடியும்... அது பாதுகாப்பளிக்கும் என்பதை முயன்று பார்த்தவர்கள் கண்டு கொண்டிருக்கிறார்கள். ஆனால், நீங்கள் அச்சத்தைப் பற்றி நான் பேசவில்லை. உங்களுடைய கிளர்ச்சியூட்டும் செயலை (adventure) நான் ஊக்குவிக்கிறேன், அவ்வளவுதான். துணிகரச் செயலை மேற்கொள்வதற்கு உங்களை நான் தூண்டுகிறேன். முடிவற்ற ஒன்று பாதுகாப்பாய் இருப்பதை முயன்றவர்கள் கண்டு கொண்டிருக் கிறார்கள்.

ஆனால், இப்பிரபஞ்சம் உங்களுக்குக் கொடுத்துக் கொண் டிருக்கும் பாதுகாப்பை உங்களால் அறிந்துகொள்ள முடியுமா என்பது எனக்குத் தெரியாது. நீங்கள் கேட்கிற பாதுகாப்பைப் பிரபஞ்சத்தால் கொடுக்க முடியாது. காரணம், நீங்கள் எதைக் கேட்கிறீர்கள் என்பதே உங்களுக்குத் தெரியாது. நீங்கள் மரணத்தின் பொருட்டு கேட்கிறீர்கள். ஒரு சவம் மட்டுமே முற்றாய் பாதுகாக்கப்படுகிறது. உயிரோடு இருக்கிற ஒன்று எப்போதுமே ஆபத்தில் இருக்கும். உயிரோடு இருப்பதற்கு ஆபத்துகளை மேற்கொள்ள வேண்டி இருக்கும். கூடுதல் இயக்கம் - கூடுதல் சாகசம், கூடுதல் அபாயம், கூடுதல் ஆபத்து.

நீட்சே (Nietzsche) தம்முடைய வீட்டுச் சுவரில் ஒரு மேற்கோள் வாசகத்தைத் தொங்க விட்டிருந்தார்.

'ஆபத்துகளோடு (இடர்ப்பாடுகள்) வாழுங்கள்' அவரிடம் யாரோ கேட்டார்கள். 'நீங்கள் ஏன்இப்படி எழுதி வைத்தது?' என்று. அவர் சொன்னார். 'எனக்கு நினைவூட்டிக் கொள்ளத்தான். காரணம், என்னு டைய பயம் மிகப்பெரிய அளவில் இருக்கிறது.'

வாழ்வதற்கான ஒரே வழி ஆபத்துகளினூடே வாழ்வதுதான். வேறு வழியில்லை. நீங்கள் அறிந்திராத ஒன்றின் அழைப்பைக் காது கொடுத்துக் கேளுங்கள். இயக்கத்தில் இருங்கள். எங்கேயும் ஒரு நிலையாய் இருந்து விடாதீர்கள். ஓரிடத்திலேயே நிலைக்க முயல்வது மரணத்துக்கொப்பாகும். அது அகால மரணம்.

நான் ஒரு சிறுமியின் பிறந்த நாள் விழாவில் கலந்து கொண்டேன். நிறைய பரிசுகளும், விளையாட்டுப் பொருள்களும் வந்திருந்தன. அந்தப் பெண் உண்மையிலேயே மகிழ்ச்சியாயிருந்தாள். அவளுடைய தோழிகள் அங்கே கூடி, நடனமாடினர். திடுதிப்பென்று அவள் தன்னுடைய தாயிடம் கேட்டாள். 'அம்மா, உனக்குத் தெரிந்து கடந்த காலத்தில் இத்தகைய அருமையான நாட்கள் இருந்திருக்கின்றனவா' என்று.

மக்கள் தங்களுடைய மரணத்துக்கு (இயல்பான) முன்பாகவே மரணித்து விடுகிறார்கள். மக்கள் பாதுகாப்பு, வசதி, சவுகரியம் இவற்றில் நிலையாய் இருந்துவிடப் பார்க்கிறார்கள். அவர்களுடைய இருப்பு கல்லறையில் இருப்பது போன்றது.

உங்களுடைய பயத்தைப் பற்றி நான் பேசவில்லை.

'என்னை நான் நழுவ விடும்போது பிரபஞ்ச இருப்பு என்னைப் பாதுகாக்குமா?' அது தொடர்ந்து பாதுகாக்கப்படுகிறது. அது உங்கள் விசயத்தில் மாறுபடும் என்று என்னால் எண்ண முடியாது. அது ஒரு விதிவிலக்காகி விடும் என்று நான் நம்பவில்லை. அது எப்போதுமே அப்படித்தானிருக்கிறது. யார் தன்னை விட்டு அதனிடம் வருகிறார் களோ அவர்களை அது பாதுகாக்கும். யார் தன்னை உதறிவிட்டு வருகிறார்களோ, யார் அதனிடம் தன்னை ஒப்புவித்துக் கொள் கிறார்களோ அவர்களை அது பாதுகாக்கிறது.

இயற்கையைப் பின்பற்றுங்கள், உங்களுக்குள் இயல்பாய் அமைந்தவற்றைப் பின்பற்றுங்கள்.

நான் ஒரு சிறிய கதையைப் படித்துக் கொண்டிருந்தேன், அது எனக்கு மிகவும் பிடித்துப் போனது.

அது இளவேனிற்காலம். கொலம்பியா பல்கலைக்கழக வளாகத்தின் புதிதாய் அமைக்கப்பட்ட புல்வெளிகளில் 'தயவு செய்து புற்களை மிதிக்காதீர்கள்' என்ற அறிவிப்புப் பலகைகள் ஆங்காங்கே வைக்கப்பட்டன. அந்த அறிவிப்புகளை மாணவர்கள் புறக்கணித்தனர். அதைத் தொடர்ந்து பிரத்யேக வேண்டுகோள்கள் வைக்கப்பட்டன. ஆனால் மாணவர்கள் அவற்றைப் பொருட்படுத்தவில்லை. அவர்கள் தொடர்ந்து புற்களை மிதித்து துவைத்துக் கொண்டு சென்றார்கள். தளபதி ஐஸன்ஹோவர் அப்போது பல்கலைக்கழகத்;ன துணை வேந்தராயிருந்தார். கட்டட, நிலப் பராமரிப்பு அதிகாரிகள் பிரச்சினையை அவரிடம் எடுத்துச் சென்றனர்.

ஐஸன்ஹோவர் அவர்களிடம் கேட்டார். 'நாம் போக வேண்டிய இடத்துக்குச் சீக்கிரமாய் போக வேண்டும் என்பதை நீங்கள் கவனித் தீர்களா? மாணவர்கள் எந்த வழியில் போய்க் கொண்டிருக்கிறார்கள் என்பதைக் கவனித்து அந்த வழியை நடைபாதையாக்க வேண்டியதுதானே?'

இது வாழ்க்கை எப்படி இருக்க வேண்டும் என்பது பற்றியது. சாலைகளை, நடைபாதைகளை, ஏற்றுக்கொள்ளப்படும் நடைமுறைச் செயல்களை நாம் முன்கூட்டியே முடிவு செய்வதற்கில்லை.

ஒரு போக்கில் செல்ல நீங்கள் இடமளியுங்கள். இயல்பாகத் தங்கு தடையின்றித் தொடருங்கள். நடந்து செல்லுங்கள். நடப்பதன் மூலம் உங்கள் வழியை உருவாக்கிக் கொள்ளுங்கள். மேம்பட்ட நெடுஞ் சாலைகளை மேற்கொள்ளாதீர்கள். அவை உணர்ச்சியற்றவை. அவற்றின்மீது செல்வதால் நீங்கள் எதையும் கண்டறியப் போகிற தில்லை. முன்பே யாவும் அகற்றப்பட்டு விட்டன. ஒரு மேம்படுத்தப் பட்ட சாலையில் செல்கிறபோது நீங்கள் இயற்கையிடமிருந்து விலகிச் செல்கிறீர்கள். இயற்கைக்குக் குறிப்பிட்ட சாலைகளோ, முன்மாதிரி களோ கிடையாது. அது ஆயிரத்தியோரு அமைப்புகளை (patterns) தடையின்றித் தொடரலாம். ஆனால அவை புறத்தூண்டுதலின்றி தானாகவே நிகழ்வது. நீங்கள் கடற்கரைக்குச் சென்று, கடலைக் கவனியுங்கள். இலட்சோப லட்சம் அலைகள் மேலெழுகின்றன. ஆனால், ஒவ்வோர் அலையும் மாறுபட்டதாய், ஒப்பிட முடியாததாய் இருக்கின்றன. நீங்கள் ஒரே மாதிரியாய் இரண்டு அலைகளைப் பார்க்க முடியாது. அவை எந்த ஒரு முன்மாதிரியையும் பின்பற்றுவதில்லை.

தகுதியானவர்கள் எந்தவொரு முன்மாதிரியையும் பின்பற்று வதில்லை.

மக்கள் என்னிடம் வந்து 'எங்களுக்கு வழிகாட்டுங்கள்' என்று கேட்கிறார்கள். நான் அவர்களிடம் சொல்கிறேன். 'அதைக் கேட்காதீர்கள்' என்று. எப்படி நடப்பது என்பதை மட்டுமே நான் உங்களுக்குச் சொல்ல முடியும். வழியை உங்களுக்குக் காட்ட முடியாது. தயவு செய்து அதிலுள்ள வேறுபாட்டைக் கவனியுங்கள். எப்படி நடப்பது என்பதை மட்டுந்தான் நான் உங்களுக்குச் சொல்ல முடியும் - எப்படித் துணிச்சலுடன் நடப்பது என்பதை. நான் வழியை உங்களுக்குக் காட்ட முடியாது. காரணம் வழி கோழைகளுக்கானது. எப்படி நடப்பது என்று அறியாதவர்களுக்கும், நடக்கும் திறனற்றவர்களுக்குந்தான் வழி இருக்கறிது. நடக்கத் தெரிந்தவர்கள் காட்டுக்குள்ளும் செல்கிறார்கள். நடப்பதன் மூலம் தங்கள் பாதையை அவர்கள் உருவாக்கிக் கொள்கிறார்கள்.

ஒவ்வொருவரும் ஒரு வழியில் கடவுளை அடைகிறார்கள். நீங்கள் ஒரு திரளாய், கூட்டமாய் சென்றடைவதற்கில்லை. நீங்கள்

தனியாகவே முற்றிலும் தனியாகவே சென்றடைகிறீர்கள். கடவுள் இயற்கையாக வாழ்கிறவர், பழக்கப்படாதவர். அவர் இன்னும் நாகரிகமடையவில்லை. அவர் ஒருபோதும் நாகரிகமடைய மாட்டார். அவர் இன்னும் தன்னிச்சையாகவே இருக்கிறார்; அவர் தன்னிச்சைப் போக்கை விரும்புகிறவர். 'கடற்கரைக்குச் சென்று இளைப்பாறுவோம்' என்று உங்களுடைய உள்ளார்ந்த இயல்பு சொன்னால் அதைச் செய்யுங்கள். அதே இடத்தில் இருந்துதான் உங்களுடைய கடவுள் உங்களை அழைக்கிறார்.

நான் போதிப்பது நீங்கள் நீங்களாக இருக்க வேண்டும் என்பதைத்தான். வேறெதையும் அல்ல. என்னைப் புரிந்து கொள்வது கடினம். காரணம், வாழ்ககைக்கான ஒரு முன் மாதிரியை, ஒழுங்கு முறையை, ஒரு நடைப்பாங்கை (style) வாழும் வழியை நான் உங்களுக்கு வழங்க வேண்டுமென்று உங்களுடைய அச்சத்தால் நீங்கள் என்னிடம் கேட்கலாம்.

என்னைப் போன்றவர்கள் எப்போதுமே தவறாகப் புரிந்து கொள்ளப்படுகிறார்கள். ஒரு லாவோட்சுவும், ஒரு ஜராதுஷ்ட்ரரும், ஓர் எபிக்யூரஸும் எப்போதுமே தவறாகத்தான் புரிந்துகொள்ளப்பட்டிருக் கிறார்கள். சமயப்பற்று மிக்க பலரும் சமயப்பற்று இல்லாதவர்களாகவே கருதப்பட்டதுண்டு. காரணம், ஒருவர் உண்மையிலேயே சமயம் சார்ந்தவராயிருந்திருந்தால் அவர் உங்களுக்குத் தன் செயலைத் தானே முடிவு செய்வது பற்றி, நேசிப்பது பற்றிப் போதித்திருப்பார். அவர் சட்டதிட்டங்களை உங்களுக்குக் கற்பிக்க மாட்டார். அவர் நேசிப்பதை உங்களுக்குக் கற்பிப்பார். வாழ்வின் உளுத்துப்போன ஓர் அமைப்பை (pattern)ப் பற்றி அவர் உங்களிடம் பேசிக் கொண்டிருக்க மாட்டார். அவர் குழப்பம், கட்டுப்பாடற்ற நிலை பற்றிப் போதிப்பார். காரணம், கட்டுப்பாடற்ற ஒரு வெளியில்தானே நட்சத்திரங்கள் தோன்றியிருக்கின்றன. அவர் எவ்விதக் கட்டுப் பாடுகளும் இல்லாமல் இருப்பது எப்படி என்பதை உங்களுக்குப் போதிப்பார்.

அச்சம் இருப்பதை, சுதந்திரம் பற்றிய அச்சம் இருப்பதை நான் அறிவேன். இல்லையேல், உலகெங்கிலும் இத்தனை சிறைகள் எதற்காக இருக்க வேண்டும்? மக்கள் தங்கள் வாழ்க்கை நெடுகிலும் எத்தனை சிறைகளைச் சுமந்து கொண்டிருக்கிறார்கள் - கண்ணுக்குத் தெரியாத சிறைகளை! நான் இரண்டு வகையான கைதிகளைச்

சந்தித்திருக்கிறேன். சிலர் கண்ணுக்குத் தெரியும் சிறைகளில் இருப்பவர்கள், மற்றவர்கள் கண்ணுக்குப் புலனாகாத சிறைகளில் இருப்பவர்கள். மனசாட்சி என்கிற பெயரில், ஒழுக்க முறைமை என்கிற பெயரில், மரபு அது இது என்கிற பெயர்களில் பல்வேறு இடங்களுக்கும் தங்கள் சிறைகளை அவர்கள் சுமந்து செல்கிறார்கள்.

அடிமைத்தனத்துக்கும், சிறைவாசத்துக்கும் அநேக பெயர்கள். சுதந்திரத்திற்கு எந்தப் பெயரும் இல்லை. சுதந்திரத்தில் பல வகை என்பது இல்லை. சுதந்திரம் என்றால் ஒன்றுதான். நீங்கள் எப்போதேனும் கவனித்தது உண்டா? உண்மை என்பது ஒன்றே ஒன்றுதான். பொய்கள் இலட்சக்கணக்கில் உள்ளன. நீங்கள் இலட்சக்கணக்கான வழிகளில் பொய் சொல்ல முடியும். உண்மையை இலட்சோப லட்சம் வழிகளில் உங்களால் சொல்ல முடியாது. உண்மை எளிமையானது, ஒரு வழி போதும் அதற்கு. அன்பு ஒன்றுதான், விதிகளோ இலட்சக்கணக்கில். சுதந்திரம் என்பது ஒன்றுதான். சிறைச்சாலைகளோ பலவாய் இருக்கின்றன.

மேலும், நீங்கள் விழிப்புடன் இல்லா விட்டால் தடையின்றிச் செயல்பட முடியாது. பெரும்பாலும் சிறைகளை உங்களால் மாற்றிக்கொள்ள முடியும். ஒரு சிறையில் இருந்து இன்னொரு சிறைக்கு நீங்கள் போக முடியும். இரண்டுக்கும் இடையே நடந்து செல்வது மகிழ்ச்சி தருகிற அனுபவமாயிருக்கும். உலகத்தில் அதுதானே நடந்து கொண்டிருக்கிறது. ஒரு கத்தோலிக்கர் பொதுவுடைமைவாதி ஆகிறார்; ஓர் இந்து கிறிஸ்தவராகிறார். ஒரு முஸ்லிம் இந்துவாகிறார். அவர்கள் சிறைகளை மாற்றிக்கொள்ள முடிகிற ஒரு சின்னச் சுதந்திரத்தில் மகிழ்சசியடைகிறார்கள். ஒரு சிறையில் இருந்து இன்னொரு சிறைக்கு நடந்து செல்வது மகிழ்ச்சியளிக்கிறது. அவர்கள் நிறைவாக உணர்கிறார்கள்.

மறுபடியும் அதே பொறியில் விழுகிறார்கள் - பெயர்கள் மட்டும் வெவ்வேறு.

எல்லாக் கருத்துத் தொகுதிகளுமே (ideologies) சிறைகள்தாம். எல்லாவற்றிடமும் - என்னுடைய கருத்து உள்ளிட்ட எல்லாவற்றிடமும் எச்சரிக்கையாயிருங்கள் என்று உங்களுக்குப் போதிக்கிறேன்.



*'சமீப காலத்தில் சிலமுறை என்னால் பறக்க முடியும் என்கிற உணர்வு எனக்கு ஏற்பட்டது. புவியீர்ப்பில் இருந்து விடுபடும் வினோத உணர்வை நான் அடைந்தேன. என்னுடைய உடம்பின் 150 பவுண்ட் எடை எனக்குச் சலித்துப் போயிற்று. இது என்ன ஆர்வக் கோளாறா?'*

இல்லை. இரண்டு பரிமாணங்கள் சந்தித்துக் கொள்ளும் இடமாக நீங்கள் இருக்கிறீர்கள். ஒரு பரிமாணம் நிலத்தைச் சேர்ந்தது - உங்கள் உடம்பின் 150 பவுண்ட் எடையை கீழே இழுக்கும் ஈர்ப்பு விசையின் பரிமாணமாகும். இன்னொன்று அருளின் பரிமாணம் - கடவுளின் பரிமாணம், சுதந்திரத்தின் பரிமாணம். அதைக்கொணடு நீங்கள் மேலும், மேலும் உயரேச் செல்ல முடிகிறது, எடையே இருக்காது.

தியானத்தில் இது நிகழ்வதுண்டு. தியானத்தில் பலமுறை ஈர்க்குத் தன்மை (gravitation) மறைவதை நீங்கள் எதிர்பாராத விதத்தில் உணர்வீர்கள். தற்போது எதுவும் உங்களை கீழே பிடித்து இழுக்கவில்லை என்பதாயும், பறப்பதா வேண்டாமா என்பதை நீங்களே தீர்மானிக்க இயலும் என்பதாயும் உணர்வீர்கள். ஆம், அது உங்களைப் பொறுத்தது - நீங்கள் விரும்பினால் அந்த வானில் எளிதாய் பறக்க முடியும். அந்த வானமே உங்களுடையதாய் இருக்கும். ஆனால், நீங்கள் கண்களைத் திறக்கிறபோது அங்கே உங்களுடைய உடம்பு இருக்கிறது, உலகம் இருக்கிறது, ஈர்ப்பு விசை இருக்கிறது. நீங்கள் கண்களை மூடித் தியானம் செய்தபோது உங்கள் உடம்பை நீங்கள் மறந்திருந்தீர்கள். நீங்கள் வேறொரு பரிமாணத்தில் இயங்கிக் கொண்டிருந்தீர்கள், அது அருள் என்கிற பரிமாணம்.

இந்த இரண்டு விசயங்களுமே புரிந்து கொள்ளப்பட வேண்டியவை. ஈர்ப்பு விசை (gravity) என்கிற விதி உங்களைக் கீழே இழுக்கிறது. அருள் என்கிற விதி உங்களை மேலே இழுக்கிறது. விஞ்ஞானம் இந்த விதியை இன்னும் கண்டுபிடிக்கவில்லை. அது எப்போதுமே அதைக் கண்டுபிடிக்காமலும் இருந்து விடலாம். அது ஒரு விதியைக் கண்டுபிடித்தது. அந்தக் கதையை நீங்கள் அறிவீர்கள் - அது நடந்ததா இல்லையா என்பதல்ல முக்கியம் - நியூட்டன் என்பவர் தோட்டத்தில் அமர்ந்திருந்தார். அப்போது மரத்தில் இருந்து ஓர் ஆப்பிள் விழுந்தது. அந்த ஆப்பிள் விழுவதைக் கவனித்த நியூட்டன் சிந்திக்கத் தொடங்கினார். 'ஆப்பிள் பழம் ஏன் பூமியை நோக்கி விழுந்தது? அது ஏன் நேராக விழுந்தது?' ஏன் பக்கவாட்டில்

விழவில்லை. அது ஏன் மேல்நோக்கிச் செல்லவில்லை?' அவ்விதமாய்க் கண்டறியப்பட்டதுதான் 'புவியீர்ப்பு விதி'. பூமி ஓர் இழுவைச் சக்தியைக் கொண்டிருப்பதை, அது தன்னை நோக்கி எல்லாவற்றையும் இழுத்துக் கொள்வதை அவ்விதியின் மூலம் அவர் விளக்கினார்.

ஆனால், பழம் கீழே விழுவதைப் பார்த்த நியூட்டன், மரம் மேல்நோக்கி எழுவதைப் பார்க்கவில்லை. அந்தக் கதையைப் படிக்கிறபோதெல்லாம் எனக்கு இதுதான் தோன்றுகிறது. 'பழம் கீழ்நோக்கி விழுவதைக் கண்டவர் ஏன் மரம் மேல்நோக்கி எழுவதைக் காணவில்லை?' நீங்கள் ஒரு கல்லை வீசுகிறீர்கள். அது திரும்பி விடுகிறது. ஆனால் மரம் உயர்ந்து கொண்டே போகிறது. ஏதோ ஒன்று மரத்தை மேலே இழுக்கிறது. கல் ஒரு ஜடப்பொருள், மரம் உயிருடையது. உயிர் போகிறது பல உயரங்களுக்கு.

மனிதன் தன்னுடைய பிரக்ஞையில் உலகின் மிக உயர்ந்த இடத்தை அடைகிறான். நீங்கள் ஆழ்ந்த தியான நிலையில் இருக்கும்போது, பேரான்ந்தத்தில் திளைக்கும்போது, பிரார்த்தனை செய்கிறபோது பரவசத்தில் ஆழ்கிறபோது உங்கள் கண்கள் உலகைப் பார்ப்பதில்லை - சரீரம் அங்கே இருப்பதில்லை. உங்களுக்குள் ஆன்மா என்கிற மரம் இருப்பதை அது மேலும் மேலும் உயர்ந்தெழுவதை நீங்கள் உணர்வீர்கள் - உங்களால் பறக்க முடியும் என்பதை நீங்கள் எதிர்பாராத கணத்தில் உணர்வீர்கள்.

இதில் ஆர்வக் கோளாறாய் எதுவும் இல்லை. ஆனால், தயவுசெய்து இதனை முயற்சித்துப் பார்க்க வேண்டாம். சன்னலுக்கு வெளியே குதிக்கவோ, பறக்கத் தொடங்கவோ செய்யாதீர்கள். அப்போது அது பைத்தியக்காரத்தனமாகி விடும்.

சிலர் எல்.எஸ்.டி. அல்லது மரியுவானா தந்த கிளர்ச்சியில் அதைச் செய்திருக்கிறார்கள். தியான நிலையில் யாரும் அப்படிச் செய்ததில்லை. அதுதான் தியானத்தின் அழகு. அதுதான் போதை மருந்துகளில் உள்ள ஆபத்து. சில இரசாயன மருந்துகளால் கிடைக்கும் அறிதுயில் மூலம், பறப்பதற்கான அருளைப் பெற்றுவிடலாம் என்கிற கருத்து சிலருக்கு. உடல் மறக்கப்படும் - அவர்கள் அப்படி முயன்றிருக்கிறார்கள். நியூயார்க்கில் ஒரு பெண் உண்மையிலேயே அதைச் செய்திருக்கிறாள். கட்டடத்தின் நாற்பதாம் தளத்தில் இருந்து - சன்னல் வழியே அவள் குதித்தாள் - அப்போது நியூட்டன் (நியூட்டனின் விதி) செயல்படத் தொடங்குகிறது.

அந்நிலையில் நீங்கள் மரமாய் இருப்பதில்லை. பழமாகி விடுகிறீர்கள். அப்போது தரையை நோக்கி விழுந்து, மோதுண்டு நொறுங்கிப் போகிறீர்கள்.

அது போதை மருந்துகளால் உண்டாகும் ஆபத்துகளில் ஒன்று. காரணம் சில உண்மைகளை அவை வெளிப்படுத்தக்கூடும். ஆனால் நீங்கள் உணர்வதில்லை. நீங்கள் ஒன்றைச் செய்ய முடியும். அபாயகரமான ஒன்றை உங்களால் செய்ய முடியும். ஆனால், தியானத்தில் ஒருபோதும் அப்படி நடப்பதில்லை. காரணம், தியானம் இரண்டு விசயங்களை ஒருசேர உங்களுக்கு வழங்குகிறது: ஒரு புதிய பரிமாணத்தையும், மிருதியான தன்னுணர்வை (awareness)யும் அது உங்களுக்கு வழங்குகிறது. ஆக, அது அங்கே இருப்பதை நீங்கள் அறிகிறீர்கள். ஆனால் அத்துடன் உங்கள் உடம்பு இருப்பதையும் உணர்கிறீர்கள். இரண்டு பரிமாணங்களிலும் நீங்கள் பரவி நிற்கிறீர்கள்.

ஒருநாள் கொழுத்த, பருமனான ஆசாமி ஒருத்தர் தன்னுடைய டென்னின் உத்தியைப் பற்றி உரையாடிக் கொண்டிருந்தார். 'முன்னோக்கி வேகமாய் ஓடு. பந்தை வலைக்கு மேல் அடித்துத் தள்ளு என்று என்னுடைய மூளை சொல்லிக் கொண்டிருக்கும்.'

நான் அவரிடம் கேட்டேன். 'அதன் பிறகு என்ன நடக்கும்?'

சோகத்துடன் அவர் சொன்னார். 'அதன் பிறகுதானே? என்னுடைய உடம்பு சொல்லும் என்னது நானா?' என்று.

நீங்கள் உடம்பு, பிரக்ஞை என்கிற இரண்டுமாய் இருக்கிறீர்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் இரண்டு பரிமாணங் களிலும் விரிவடைந்திருக்கிறீர்கள். பூமியும் வானமும் சந்தித்துக் கொள்ளும் முனை (point)யாய் நீங்கள் இருக்கிறீர்கள். நீங்களே அருளுக்கும் ஈர்ப்பு விசைக்குமான சந்திப்பு முனையுங்கூட. இது ஓர் எளிய உண்மை.

சில நேரங்களில் அது சாத்தியந்தான். காரணம், அப்படி நடந்திருக்கிறது. நீங்கள் உணரும்படியாய் நான் அதைச் சொல்லி விடுவதே நல்லது. சில நேரங்களில் உங்கள் உடம்பு சிறிது மேலே உயர்ந்தெழுவது சாத்தியமாகும். பவேரியாவைச் சேர்ந்த ஒரு பெண் தியானத்தின் போது நான்கடி உயரத்துக்கு எழுந்திருக்கிறாள். சில நிமிடங்களுக்கு, ஒரு நான்கைந்து நிமிடங்கள் போல் அதே உயரத்தில் தொங்கியபடி இருந்திருக்கிறாள். இது யோகிகளின் மிகப்பழைய

அனுபவங்களில் ஒன்று. அது அரிதாகத்தான். நிகழ்கிறது. ஆனால் கடந்த காலத்தில் சில சமயம் அப்படி நடந்திருக்கிறது. சில சமயம் இப்போதும் அப்படி நடக்கிறது. உங்களில் சிலருக்கும் அந்த அனுபவம் கிடைத்திருக்கக் கூடும்.

அருளின் ஈர்ப்பு அதிகமாயிருந்து, சமநிலை இழக்கப்படுமாயின் அது நிகழ்கிறது. அது ரொம்பவும் சரியானதாகாது. அதை முயற்சிக்காதீர்கள். அதைக்கோரி நிற்காதீர்கள். அது சமச்சீரற்ற நிலை, உயிருக்கே ஆபத்தாகி விடும். அருளின் ஈர்ப்பு மிகுதியாகி, ஈர்ப்பு விசை குறைவாயிருக்கும் போது அது நிகழ்கிறது. உடம்பு மேலெழுகிறது. அந்நிலையில் கூட நீங்கள் அதீத ஆர்வம் கொண்டு விட்டதாகவோ, சித்த சுவாதீனமற்ற நிலைக்குத் தள்ளப்பட்டதாகவோ எண்ணிக் கொண்டு விடாதீர்கள்.

நியூட்டனே உண்மையின் அனைத்து அளவுகளுமாகி விட மாட்டார். நியூட்டனை விட பெரிய உண்மைகள் உள்ளன. ஈர்ப்புத்தன்மை மட்டுமே பரிமாணமாகி விடாது. இன்னும் பல பரிமாணங்கள் உள்ளன. எனவே, எப்போதாவது ஏதேனும் ஒன்று மற்றொரு பரிமாணத்தில் இருந்து பிரவேசிக்குமெனில் ஏதேனும் ஒன்று தவறாகி விட்டதாகவே நாம் உணரத் தொடங்குவோம். உண்மையில் மேற்கில் மனநல மருத்துவமனைகளில் உள்ள பலரையும் பித்துப் பிடித்தவர், நரம்பியக்க சீரழிவுடையவர் (neurotics), மனநோய்க்காரர் என்று மற்றவர்கள் நினைத்துக் கொண்டாலும் அவர்கள் உண்மையில் பித்துப் பிடித்தவர்களல்லர்.

அவர்களில் பலரும் இனந்தெரியாத சில காட்சிகளைக் கண்டிருக்கிறார்கள். ஆனால், சமுதாயம் அவற்றை ஏற்கவுமில்லை, அங்கீகரிக்கவுமில்லை. அத்தகைய காட்சியைக் காண்கிற எவரும் பித்துப பிடித்தவராகவே கருதப்பட்டனர். காரணம் அவர்கள் புதுமை யானவராகி விடுகிறார்கள். நம்மால் அவரை நம்ப முடிவதில்லை.

இயேசு பற்றி எழுதப்பட்ட புத்தகங்கள் சிலவற்றில் அவர் நரம்பியக்கச் சீரழிவு (neurotic)டையவர் என்று குறிப்பிட்டிருக் கிறார்கள். அவர் கடவுளின் குரலை, வார்த்தைகளைக் காது கொடுத்துக் கேட்டிருக்கிறார் என்பதே அதற்குக் காரணம். முகமதுவை உளப்பிணியர் என்று குறிப்பிட்ட புத்தகங்களும் உண்டு. அவர் மறைநூலின் வாசகங்களை உளத்தடுமாற்ற நிலையில் கேட்டிருக்கக் கூடும் என்றும், கடவுளின் வார்த்தைகளை அவர் காது கொடுத்துக்

கேட்டிருக்கலாம். கடவுள் அவரை 'எழுது' என்று சொல்ல அவர் எழுதியிருக்கக் கூடும் என்றும் அந்நூல்கள் குறிப்பிடுகின்றன. காரணம் அது உங்களுடைய அனுபவம் அல்ல, உங்கள் மனதின் இயல்பான போக்குதான் அவர் உளத் தடுமாற்றத்துக்குள்ளாகி இருக்கலாம். அவர் கடுமையான காய்ச்சலில் பாதிக்கப்பட்டிருக்கலாம் என்று கருதச் செய்கிறது. ஏனெனில், நீங்கள் உணர்விழந்த நிலையில்தான் அத்தகையவை நிகழ்கின்றன.

ஆம். இவை பித்து நிலையிலும். அதீத உணர்வு கொண்ட நிலையிலும், மேம்பட்ட அறிவு நிலையிலும் நிகழ்கின்றன. பித்துப் பிடித்தவர் வழக்கமான உணர்வு நிலைக்குக் கீழான உணர்வு நிலையில் இருப்பார். அவருடைய மனம் அவரது கட்டுப்பாட்டில் இருக்காது. தன்னுடைய மனதின் கட்டுப்பாட்டை இழக்கிற ஒருவர் இனந்தெரியாத சக்திகளுக்கு அனுகூலமாகி விடுகிறார். ஒரு யோகி - மறைஞானி 'சம்யமா' நிலையை உணர்வுக் கட்டுப்பாட்டை முயன்று அடைகிறார். அவர் மேல்நோக்கி எழுந்து, திரும்பவும் இயல்பு நிலைக்கு அப்பால் செல்கிறார். அவர் அறிந்திராத ஒன்று அவருக்குக் கிடைக்கக் கூடியதாகிறது. பித்துப் பிடித்தவர் அந்த அறிந்திராத ஒன்றுக்குப் பலியாகிறார். மறை ஞானியோ அந்த அறிந்திராத ஒன்றைத் தன்னுடைய ஆதிக்கத்துக்குட்படுத்தி விடுகிறார் என்பதுதான் அவர்களுக்கிடையே உள்ள வேறுபாடு. அதை நீங்கள் கிறுக்கு என எண்ணிக்கொள்ள வேண்டாம். அது ரொம்பச் சரியாகவே இருக்கிறது. ஆனால் அதைச் சோதித்தறிய முற்படாதீர்கள். அதை அனுபவியுங்கள். அதற்கு இடமளியுங்கள். அது கிறுக்குத்தனமானது என்று நினைக்கத் தொடங்கிவிட்டால், நீங்கள் அதை நிறுத்திக்கொண்டு விடுவீர்கள். அப்படி நிறுத்திக் கொள்வதே உங்கள் தியானத்துக்கு இடையூறாகி விடும். ஒரு கனவில் பறந்து செல்கிற மாதிரி அதை அனுபவித்து மகிழுங்கள். உங்கள் கண்களை மூடி, தியானத்தில் நீங்கள் விரும்பிய இடத்துக்குச் செல்லுங்கள். ஆகாயத்தில் உயர, உயரச் செல்லுங்கள். அஞ்சாதீர்கள், மிகப் பல பொருள்கள் உங்களுக்குக் கிடைக்கக் கூடியதாயிருக்கும். அது மிகப்பெரிய வீரச்செயலாயிருக்கும். நிலவுக்குச் செல்வதைவிட மிகச் சிறந்ததாயிருக்கும் என்று சொல்லலாம். உள்ளார்ந்த அண்டவெளியில் ஒரு விண்வெளி வீரராய் உலவ முடிவது ஒரு பெரிய சாகசந்தானே!



**'நானாக இரு' என்று என்னிடம் நீங்கள் சொல்கிறீர்கள். நான் என்னை அறிந்திராதவரை எப்படி நானாக இருக்க முடியும் என்று எனக்குத் தெரியவில்லை.**

நீ அறிவாயோ இல்லையோ உன்னால் நீயாகவன்றி வேறு எதுவாகவும் இருக்க முடியாது. நீயாக இரு. அதில் தேவையில்லை. ஒரு ரோஜாச்செடி ரோஜாச்செடி என்பதை அது அறிந்திருக்க வேண்டும் என்பதில்லை. பாறை பாறைதான். தான் ஒரு பாறை என்பதை அது அறிந்திருக்க வேண்டியதில்லை. அறிவு அவசியப் படாது.

நீங்கள் நீங்களாக இருக்க முடியாமல் போவதற்கு உங்களுடைய அறிவே காரணம்.

நீங்கள் கேட்கிறீர்கள், நானாக இருக்க வேண்டும் என்று சொல்கிறீர்களே, எனக்குப் புரியவில்லை. என்னை நான் அறிந்திராத போது எப்படி நான் நானாக இருக்க முடியும்,' என்று. அறிவு பிரச்சினையைத் தோற்றுவிக்கிறது. ரோஜாச் செடியைக் கவனியுங்கள். ஒருநாள்கூட அது குழப்பமுற்றதில்லை. அது ஒவ்வொரு நாளும் ரோஜாச் செடியாகவே இருந்து கொண்டிருக்கிறது. ஏதேனும் ஒரு காலைப்பொழுதில் அது மஞ்சள்வண்ண மலர்களைத் தரும் செடி (marigold) யாகி விடுவதில்லை. அது ரோஜாச் செடியாகத்தான் இருந்து கொண்டிருக்கும். அது எவ்வகையிலும் குழப்பமடைவதில்லை. இருப்புணர்வோடு வாழ அறிவு தேவையில்லை. உண்மையில் அறிவின் காரணமாகவே இருப்புணர்வை நீங்கள் தவற விடுகிறீர்கள். அறிவு தேவையில்லாமல் பிரச்சினைகளை உண்டுபண்ணும்.

டட்லி என்கிற ஒரு மனிதரைப் பற்றி நான் படித்துக் கொண்டிருந்தேன்.

அங்கிள் டட்லியின் எழுபத்து ஐந்தாம் பிறந்த நாளைக் கொண்டாடுவதற்காக, பறப்பதில் ஆர்வமுள்ள ஒருவர், டட்லி அத்தனை காலமும் வாழ்ந்திருந்த மேற்கு வர்ஜீனியா நகரத்தின் மீது விமானத்தில் பறப்பதற்கு ஏற்பாடு செய்தார். அங்கிள் டட்லியும் அந்த வாய்ப்பை ஏற்றுக் கொண்டார்.

அந்த நகரத்தின் மீது இருபது நிமிடம் சுற்றிச் சுற்றி வட்டமிட்ட பிறகு அவர்கள் தரையிறங்கினர். அப்போது நண்பர் கேட்டார். 'அங்கிள் டட்லி, நீங்கள் பயந்து விட்டீர்களா?' என்று.

'இல்லை. ஆனால், என்னுடைய முழு எடையையும் நான் கீழ்நிலையில் வைக்கவில்லை' என்று தயக்கத்துடன் பதில் வந்தது.

விமானத்தில் உங்களுடைய முழு எடையையும் நீங்கள் கீழ்நோக்கிச் சுமத்தினாலும், இல்லாவிட்டாலும் அந்த எடையை விமானம் சுமக்கவே செய்யும்.

உங்களை நீங்கள் அறிந்திருக்கிறீர்களா இல்லையா என்பது முக்கியமில்லை. அறிவு உங்கள் அமைதியைக் குலைக்கும். எண்ணிப் பாருங்கள். அங்கிள் டட்லியுடன் ஒரு கற்பாறையும் விமானத்தில் இருப்பதாய் வைத்துக் கொள்வோம். அந்தப் பாறை தன்னுடைய முழு எடையையும் கீழ்நோக்கி அழுத்தும். அங்கிள் டட்லியும் ஏதாவது செய்வார் என்று நினைக்கிறீர்களா? ஏதாவதொரு ஒருவிதத்தில் உதவுவாரா? அவர் தன்னுடைய முழு எடையை விமானத்தில் சுமத்தாதிருக்க சாத்தியம் உண்டா என்ன? அவரும் தன்னுடைய முழு எடையைச் சுமத்தியிருப்பார். ஆனாலும் தேவையில்லாமல் கவலைப்பட்டுக் கொண்டிருப்பார். அவர் ஓய்வாக, இறுக்கமின்றி அந்தக் கற்பாறையைப் போல் இருந்துவிட முடியும். ஆனால், பாறை எதுபற்றிய அறிவும் கொண்டிருக்காது. அங்கிள் டட்லியோ அறிவுடன் இருப்பவர்.

மனித குலம் அறிவோடு இருப்பதுதான் மனித குலத்தின் ஒட்டுமொத்த பிரச்சினை ஆகும். அறிதலின் காரணமாய் இருப்புணர்வு தேவையில்லாமல் மறக்கப்படுகிறது.

தியானம் என்பது அறிவை எப்படிக் கைவிடுவது என்பதுதான். கபடற்ற நிலையை மறுபடியும் எப்படி அடைவதென்பதையே தியானம் குறித்துக் காட்டும். தியானம் என்பது மீண்டும் எப்படிக் குழந்தை ஆவது, ரோஜாச் செடி ஆவது, பாறை ஆவது என்பதைக் குறிக்கும். எண்ணமற்றிருப்பது எப்படி என்பதைத் தியானம் குறிப்பிடும்.

உங்களைப்பற்றி நான் உங்களிடம் சொல்லிக் கொண்டிருக்கும் போது நீங்கள் வேறு யாராகவும் இருக்க முயலாதீர்கள். நீங்கள் அப்படி இருக்க முயற்சி செய்யலாம். ஆனால் அது முடியாது, உங்களை நீங்கள் ஏமாற்றிக் கொள்ளும்படி ஆகும். ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் நம்மால் வேறொருவராக முடியும் என்று நீங்கள் நம்புவீர்கள். ஆனால், அப்படி ஆவதற்கில்லை. இவை எப்போதுமே உங்களிடம் இருக்கிற மாயைகள்தாம். இவை கனவுகளாகவே இருப்பவை. ஒருபோதும்

நனவுகளாவதில்லை. நீங்கள் எதைச் செய்தாலும் நீங்கள் நீங்களாகவே இருக்க முடியும்.

ஏன் இறுக்கமின்றி இருக்கக்கூடாது? டட்லி அங்கிள், உங்கள் முழு எடையையும் விமானத்தின் மீது சுமத்திவிட்டு தளர்வாக (relaxed) இருங்களேன்.

தளர்வு நிலையில், திடுதிப்பென்று உங்கள் இருப்புணர்வை நீங்கள் அனுபவித்து மகிழத் தொடங்கி விடுவீர்கள். வேறொருவராகி விடும் முயற்சி நின்று விடும். அதுதான் உங்கள் கவலை - எப்படி வேறொருவராவது, வேறொருவராய் காட்சியளிப்பது, எப்படி ஒரு புத்தராய் மாறுவது, எப்படி ஒரு பதஞ்சலியாவது என்பதுதானே. நீங்கள் நீங்களாக மட்டுமே இருக்க முடியும். அதனை ஏற்று, மகிழ்ச்சி அடையுங்கள். அதில் உவகை கொள்ளுங்கள்.

ஜென் குருமார்கள் தங்கள் சீடர்களிடம் சொல்வதுண்டு. 'புத்தரிடம் எச்சரிக்கையாயிருங்கள். நீங்கள் வழியில் எங்காவது அவரைக் கண்டால் கொன்று போடுங்கள்' என்று. அவர்கள் எதைக் கருத்தில் கொள்கிறார்கள்? மற்றவர்களைப் பார்த்துப் பின்பற்றுகிற (imitate) மனிதப் பாங்கினையே அவர்கள் குறித்துக் காட்டுகிறார்கள். ஆங்கிலத்தில் 'Imitation of Christ' என்றொரு புத்தகம் இருக்கிறது. அதைப் போன்றதோர் அருவருக்கத்தக்க தலைப்பு அதற்கு முன்போ அல்லது அதற்குப் பின்போ ஒரு புத்தகத்துக்கு வைக்கப்பட்டதில்லை. பார்த்துப் பின்பற்றுதல் (Imitation)? ஆனால், ஒருவகையில் அந்தத் தலைப்பு ஒரு குறியீடாகவே அமைந்தது எனலாம். மனித குலத்தின் முழுமையான மனத்தையே அது வெளிக்காட்டுகிறது. மனிதர்கள் அடுத்தவரைப் போன்று தங்களைப் பாவிக்க முயல்கிறார்கள், வேறொருவராகிற முயற்சி.

யாரும் கிறிஸ்துவாகி விட முடியாது - உண்மையில் அப்படி ஆகவேண்டிய அவசியமுமில்லை. நீங்கள் கிறிஸ்துவாகி விட்டால் கடவுள் சலிப்புற்று விடுவார். அவருக்குப் புதிதாக ஒருவர் வேண்டும். அசலான ஒருவர். அவர் உங்களை விரும்புகிறார். நீங்கள் நீங்களாக இருக்க வேண்டும் என்பதே அவருடைய விருப்பம்.



*'நீங்கள் குதிப்பதைப் பற்றிப் பேசும்போது நானும் தாவிக் குதிக்க விரும்புவதாய் உணர்கிறேன். ஆனால், குதித்தலை மேற்கொள்வதற்கான விளிம்பில் நான் இல்லை என்பதையும் நான் உணர்கிறேன். நீங்கள் எங்களை அசைப்பதை நான் காண்கிறேன். ஆனால் அதை உணரவில்லை.*

*நான் எப்படி அந்த விளிம்புக்கு வருவது?*

*உங்களை எனக்குப் போதிக்கும்படி செய்வது எப்படி?'*

எல்லாரும் விளிம்பில் இருக்கிறார்கள் எப்போதும். காரணம், உங்களிடம் மன ஊக்கம் இருந்தால் ஒவ்வொரு கனத்திலும் குதிப்பது சாத்தியந்தான். ஒவ்வொரு கணமும் அந்த விளிம்பு நிலையை உங்களுக்கு வழங்குகிறது. மேலும் அந்த விளிம்பை எப்படி அடைவது என்று நீங்கள் கேட்கும்போது உங்களுடைய திறமை வெளிப்படுகிறது. நீங்கள் திறமையைக் காட்ட முயலாதீர்கள். உங்கள் கேள்வி ஒரு தந்திரம். அதன்மூலம் நீங்கள் கோழையல்ல என்று உங்களுக்கு நீங்களே ஆறுதலளித்துக் கொள்ள முடிகிறது. அதனாலத்தான் 'எங்கிருந்து குதிப்பது?' என்ற கேள்வி. ஆக, முதலில் அந்த விளிம்பைக் கண்டுபிடித்தாக வேண்டும். நீங்கள் நிற்பது எங்காயினும், குதித்தலை மேற்கொள்வதற்கான கூரிய விளிம்பில்தான் நிற்கிறீர்கள். விளிம்பைக் கண்டுபிடிப்பது எப்படி என்பதை எனக்குக் கற்பியுங்கள் என்று ஒரு திறமையான கேள்வியை நீங்கள் கேட்டு வைக்கிறீர்கள்.

அப்படியே உங்களுக்கு முன்பாய் பாருங்கள், மிகச் சரியாகப் பாருங்கள்.

நீங்கள் எங்கிருக்கிறீர்கள் என்பது ஒரு பொருட்டேயல்ல.

'நீங்கள் எங்களை அசைப்பதை நான் காண்கிறேன். ஆனால், அதை உணரவில்லை'. நீங்கள் உறக்கத்தில் இருக்கிறீர்கள் என்பது பிரச்சினையல்ல. நீங்கள் உறக்கத்தில் இருந்தால் உங்களை அப்படியும் இப்படியுமாய், உலுக்கி விரிக்கச் செய்வது எளிதாயிருக்கும். நீங்கள் தூங்குவது போல் பாசாங்கு செய்கிறீர்கள். அந்நிலையில் அது சாத்தியமற்றதாகிறது. நான் அசைப்பதை நீங்கள் காண்கிறீர்கள். ஆனால் எதவும் நேரவில்லை. நீங்கள் தூங்கிக் கொண்டிருந்தால் எப்படிப் பார்த்திருக்க முடியும்?

சின்னதாய் ஒரு கதை சொல்கிறேன். ஒரு கோடை நாளின் பிற்பகலில் இது நடந்தது. குழந்தைகளை உலவ அழைத்துப் போவதாக தந்தை வாக்குறுதி அளித்திருந்தார் என்றாலும், அவர் அதை விரும்பவில்லை. மாதக்கணக்காகக் காத்திருந்து இன்றுதான் அவருக்கு ஓய்வாக இருக்க நேரம் கிடைத்திருந்தது. எனவே, தாம் உறங்குவதுபோல் அவர் பாசாங்கு செய்தார்.

தந்தை உறங்குவதுபோல் பாவனை செய்ய, குழந்தைகள் அந்த ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் உறக்கத்தில் இருந்து அவரை எழுப்ப முயன்று கொண்டிருந்தார்கள். அவர்களை உலவ அழைத்துப் போவதாய் அவர் வாக்குறுதி அளித்திருந்தார். அவரை எழுப்ப பல வகையிலும் முயன்றனர். அவரை அப்படியும் இப்படியுமாய் உலுக்கி, அவரிடம் கூச்சல் போட்டார்கள். ஆனால், பயனில்லை. எல்லா முயற்சிகளும் தோல்வியுற்றன. தந்தையார் தூங்குவதாய் பாசாங்கு செய்து கொண்டிருந்தார். கடைசியில் அவருடைய நான்கு வயதுப் பெண் அவரது கண் இமைகளில் ஒன்றைத் திறந்து உற்றுப் பார்த்தாள். பிறகு அறிவித்தாள் 'அவர் இன்னும் அசையாமல் அப்படியேதான் இருக்கார்' என்று.

நீங்களும் அப்படியேதான் இருக்கிறீர்கள் என்பதை நான் அறிவேன்.

அது உங்களைப் பொறுத்தது. நீங்கள் விரும்புகிற வரைக்கும் விளையாட்டை நீடிக்கலாம். அது உங்களுடைய செலவு – இழப்பு. நான் அதுபற்றிக் கவலைப்படவில்லை. நீங்கள் பாசாங்கு செய்ய விரும்பினால், சரி. ரொம்பச் சரி. அதைச் செய்யுங்கள். ஆனால் நான் பார்க்க முடியும்... நீங்கள் எல்லாருமே உறங்குவதாய் பாசாங்கு செய்வதை நான் பார்க்கிறேன் - விழிப்பதற்கு அஞ்சி, உங்கள் இருப்புணர்வைத் தெரிந்து கொள்வதற்கு அஞ்சி, செயல்படுவதற்கு அஞ்சி பாசாங்கு செய்கிறீர்கள்.

அதன் உண்மையைக் கண்டறியுங்கள். விளிம்பை எப்படிக் கண்டுபிடிப்பதென்று கேட்டுக் கொண்டிராதீர்கள். நீங்கள் அதன்மீது தான் நின்று கொண்டிருக்கிறீர்கள்.

திறமை காட்ட முயவாதீர்கள். காரணம் அகவுலகில் திறமையாய் இருப்பதென்பது முட்டாள்தனம். அகவுலகில் முட்டாளாயிருக்க வேண்டுமென்றால் திறமையாக இருப்பதுதான். அகவுலகில்

அறிவற்றவர்தாம் விரைந்து செயல்படுகிறார். அறிவுள்ளவரை விடவும். அகவுலகில் அப்பாவியாயிருப்பது (innocent) அழகு. அறியாமை என்பது பெரிய அளவில் அழகாகவும் அப்பாவித்தனமாகவும் இருப்பது.

நான் என்ன சொல்கிறேன் என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளுங்கள். நீங்கள் கவனமாய்க் கேட்பதை நான் அறிவேன். உங்கள் கண்களுக்குள் என்னால் பார்க்க முடிகிறது. உங்கள் கண் இமைகளை என்னால் திறக்க முடியும். தினமும் நான் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறேன். அத்துடன் நீங்கள் அசைவற்றிருப் பதையும் என்னால் கண்டுகொள்ள முடிகிறது. நீங்கள் இறந்துவிட வில்லை. உறங்கிக் கொண்டிருக்கவில்லை. நீங்கள் உறங்குவதாகப் பாசாங்கு செய்கிறீர்கள்.

நீங்கள் எப்போது பாசாங்கு செய்வதைக் கைவிடுகிறீர்களோ அப்போது நான் உங்களுக்கு உதவ முடியும். உங்களுக்கு மாறாக உங்களை நான் தூண்ட மாட்டேன். அதற்கு இடமில்லை. கடவுள் அதை அனுமதிப்பதில்லை. காரணம் அது உங்களுக்கு முழுமையான சுதந்திரத்தை அளிக்கிறது. எவ்வித நோக்கமும் இல்லாமல் திரிந்தலைவது, உறங்கிக் கிடப்பது, அறமுறை விதியை மீறுவது (Sin), கடவுளை மறுப்பது, தற்கொலை செய்து கொள்வது, தன்னைத்தானே அழித்துக் கொள்வது உள்ளிட்ட யாவும் முழுச்சுதந்திரம் ஆகும். முழுமையான சுதந்திரம் என்பது சகலத்தையும் உள்ளடக்கியது. அத்துடன் கடவுள் சுதந்திரத்தை நேசிக்கிறார். காரணம் கடவுள் சுதந்திரமாய் இருக்கிறார்.

'பகவானே,

கணிப்பொறி உங்கள் வார்த்தைகளைப் பெருமளவில் திரட்டி வைத்திருக்கிறது. ஆனால் உங்கள் புன்னகை - அதனைப் புரிந்துகொள்ள - உள்ளடக்க அதற்கு இயலாது.'

இது கேள்வியின் ஒரு பாதி. மறுபாதியை நான் பிறகு படிக்கிறேன். முதலில் நான் முதல் பாதிக்குப் பதிலளிக்க வேண்டும்.

காலஞ்சென்ற பிரெஞ்சு அதிபர் ரெனி கோட்டி பாரீசில் நடந்த பண்பியல் ஓவியக் கண்காட்சியில் கலந்து கொண்டபோது ஓவியங்களை அவர் அறிந்து கொண்டாரா என்று கேட்கப்பட்டது. அவர் பெருமூச்சுடன் சொன்னார், "எல்லாவற்றையும் புரிந்து கொள்வது

அவசியமில்லை என்பதை நான் அறிய இத்தனை காலம் தேவைப்பட்டது' என்று.

இரண்டாவது பாதி:

நீங்கள் அப்படியே அமைதியாய் புன்னகைத்தபடி எங்களுடன் இருப்பீர்களா?

உங்களால் அதைக் காண இயலாது. உங்களால் காண முடிகிற அந்தப் புன்னகை என்னுடையதாய் இருக்காது; எது என்னுடைய புன்னகையோ அதை நீங்கள் காண்பதற்கில்லை. நீங்கள் அறிந்த அமைதி என்னுடைய அமைதி ஆகாது. என்னுடைய அமைதியை உங்களால் அறிய முடியாது. காரணம், நீங்கள் முன்பே அனுபவித்த வற்றைத்தான் உங்களால் அறிந்துகொள்ள முடியும்.

நான் புன்னகை செய்ய முடியும் - உண்மையில், எப்போதுமே நான் புன்னகைத்தபடிதான் இருக்கிறேன். உங்கள் முறையில் நான் புன்னகைத்தால் அப்போது நீங்கள் புரிந்து கொள்வீர்கள். ஆனால் அப்போதும் அதில் முக்கியக் கருத்து இருக்காது.

நான் எவ்வகையிலும், எப்போதும் அமைதியாகவே இருக்கிறேன். நான் பேசிக் கொண்டிருந்தாலும் அமைதியாயிருக்கிறேன். காரணம் பேச்சு என்னுடைய அமைதியைக் குலைப்பதில்லை. பேச்சில் அமைதி குலையுமெனில் அது தகுதியாயிருக்காது. என்னுடைய அமைதி பெரிய அளவிலானது. அது வார்த்தைகளை, பேச்சை உள்ளடக்கும் திறனுடையது. என்னுடைய அமைதி போதிய அளவு பெரியது. எந்தவொன்றும் அதைக் குலைப்பதற்கில்லை. வார்த்தைகளைக் கண்டு அஞ்சுவதல்ல என்னுடைய அமைதி.

அமைதியாயிருப்பவர்களை நீங்கள் பார்த்திருப்பீர்கள், அந்நிலையில் அவர்கள் பேசுவதில்லை. அவர்களுடைய அமைதி பேச்சுக்கு எதிரிடையானது - பேச்சுக்கு எதிரிடையான அமைதியும் பேச்சின் ஒரு பகுதிதான். அது இருத்தல் (presence) அல்ல, இன்மை (absence) ஆகும்.

'பேச்சற்று இருப்பதல்ல என் அமைதி. என்னுடைய அமைதியில் ஓர் இருத்தல்' உண்டு. அது உங்களுடன் பேசும். அது உங்களிடம் பாடும். மிகப்பெரிய சக்தியைக் கொண்டது என்னுடைய அமைதி. அது வெற்றிடமல்ல, நிறைவு ஆகும்.

**சூத்திரம் – 11** **ஸர்வார்த்ததை காக்ரதையோ: க்ஷயோதயௌ சித்தஸ்ய சமாதி பரிணாம**

பல பொருள்களை ஏற்றுக்கொள்வது இல்லாமல் போய் ஒரே பொருளில் மனம் குவிவதாகிய நிலை சித்தத்தின் 'சமாதி பரிணாமம்' எனப்படும.

**சூத்திரம் – 12** **சாந்தோதி தௌதுல்ய ப்ரத்யையௌ சித்தஸ்யை காக்ரதா பரிணாம**

மனம் எப்போது கடந்ததையும் நிகழ்வதையும் ஒன்றாக ஏற்கிறதோ அந்த நிலை சித்தத்தின் ஏகாக்ர பரிணாமம் எனப்படும்.

**சூத்திரம் – 13** **ஏதேன பூதேந்திரியேஷு தாமலக்ஷ்ணாவஸ்தா பரிணாம வியக்யதா**

இதன் மூலமாய் தூல, சூட்சும மற்றும் ஜடப்பொருள்களிலும் இந்திரியங்களிலும் உருவம், காலம், நிலை இவற்றால் வரும் மூன்று வித மாறுபாடுகள் விளக்கப்படுகின்றன.

**சூத்திரம் – 14** **சாந்தோதி தாவ்யபதேச்ய தர்மானு பாதி தர்மீ**

அவை மறைந்திருப்பதாயினும், செயல் திறன் கொண்டதாயினும், அல்லது அறிகுறி தோன்றாதிருப்பதாயினும் அத்தனை பண்புகளும் அடித்தளத்தைப் பற்றியிருக்கும்.

ரஷ்யாவின் மிகச் சிறந்த நாவலாசிரியரான லியோ டால்ஸ்டாய் பற்றிச் சொல்லப்பட்ட கதை: ஒருநாள் அவர் காட்டில் நடந்து சென்றபோது பாறை ஒன்றின் மீது வெயில் காய்ந்து கொண்டிருந்த ஓர் ஓணானைக் கண்டார். டால்ஸ்டாய் அந்த ஓணானுடன் பேசத் தொடங்கினார். 'சூரியன் பிரகாசமாய் இருக்கிறது. உன்னுடைய இதயம் மகிழ்ச்சியில் படபடக்கிறது' என்றார் அவர். கொஞ்சம் தாமதித்துச் சொன்னார். 'ஆனால் நான் மகிழ்ச்சியாயில்லை.'

ஓணான்கள் ஏன் மகிழ்ச்சியாயிருக்கின்றன. மனிதர்கள் ஏன் அப்படி இல்லை? ஒட்டுமொத்த படைப்பும் கொண்டாட்டத்தில் இருக்கும்போது மனிதன் மட்டும் ஏன் அப்படி இருக்கவில்லை. மனிதனைத் தவிர எல்லாமும் முழுமையான பொருளுடன் (whole) எவ்வாறு பொருந்தியிருக்க முடிகிறது? மனிதன் ஏன் விதிவிலக்காகிப் போனான்? மனிதனுக்கு என்னவாயிற்று? அவனுக்கு நேர்ந்த துரதிர்ஷ்டம் தான் என்ன? இது முடிந்த அளவு ஆழமாய் புரிந்து கொள்ளப்பட வேண்டியது. காரணம் அந்தப் புரிதலில் இருந்தே பாதை தொடங்குகிறது. அந்தப் புரிதலில் இருந்தே நீங்கள் கண்டடைபவ ராகிறீர்கள். அந்தப் புரிதலில் இருந்து அதற்கு மேலும் மனிதப் பிணியின் ஒரு பகுதியாய் நீங்கள் இருக்க மாட்டீர்கள். நீங்கள் அதற்கும் அப்பால் சென்று விடுகிறீர்கள்.

ஓணான் நிகழ்காலத்தில் இருக்கிறது. ஓணானுக்கு கடந்த காலத்தைப் பற்றியோ, எதிர்காலத்தைப் பற்றியோ எந்தத் திட்டமும் இல்லை. ஓணான் இப்போதைக்கு வெயிலில் காய்ந்து கொண்டிருக் கிறது. ஓணானைப் பொறுத்தவரை இந்தக் கணம் போதுமானது. ஆனால் மனிதனுக்கு இந்தக் கணம் போதுமானதாய் இருக்காது. அங்கேதான் பிணி தோன்றுகிறது - காரணம் உங்களுக்கு எப்போது கிடைக்கப்பெற்றாலும் கிடைக்கப் பெறுவது ஒரு கணந்தான். உங்களுக்கு இரண்டு கணங்கள் ஒருசேரக் கிடைப்பதற்கில்லை. நீங்கள் எங்கெங்கோ இருந்தாலும் எப்போதும் இங்குதான் இருப்பீர்கள்.

நீங்கள் உணர்வு கொள்வது எப்பொழுதாயினும் இப்போதில் (now) உணர்வுடையவராயிருப்பீர்கள். கடந்த காலம் என்பது இனியும் இல்லை. வருங்காலம் என்பது வந்தபாடில்லை. நாம் கடந்த காலத்துக்கு உரியதையும், எதிர்காலத்துக்கு உரியதையும் தவறவிட்டுக் கொண்டிருக்கிறோம்.

பாறையில் வெயிலில் காய்கிற ஓணானாக இருப்பது தியானம் செய்பவராயிருப்பதுதான். கடந்த காலத்தை விடுங்கள். வருங்காலத்தை விடுங்கள். இது எதைக் குறிக்கிறது? சிந்திப்பதைக் கைவிட வேண்டும் என்பதை அது குறிக்கும். காரணம், எல்லாச் சிந்தனைகளுமே ஒன்று கடந்த காலம் பற்றியதாயிருக்கும் அல்லது வருங்காலம் பற்றிய தாயிருக்கும். எந்தச் சிந்தனையும் 'இப்போது'க்கு உரியதாயில்லை. சிந்தனை - ஒன்று மரித்தாயிருக்கிறது அல்லது இன்னும் பிறந்திராத தாயிருக்கிறது. நிகழ்காலம் பற்றியதில்லை. அது எப்போதுமே - ஒன்று நினைவின் பகுதியாய் அல்லது கற்பனையின் பகுதியாய் மாயத் தோற்றம் (unreal) கொண்டிருக்கிறது. நிஜம் ஒருபோதும் எண்ணமாயிருப்பதில்லை. நிஜம் ஓர் அனுபவமாயிருப்பது. நிஜம் என்பது உளதாய் இருப்பதன் அனுபவம்.

நீங்கள் நிஜத்தில் நடனமாட முடியும். நீங்கள் நிஜத்தில் வெயில் காய முடியும். நீங்கள் நிஜத்தில் பாட முடியும், நீங்கள் நிஜத்தில் காதலிக்க முடியும். ஆனால் அதை நீங்கள் மனத்தால் எண்ண முடியாது. எண்ணமிடுவதென்பது அதைப்பற்றியதாக இருக்கும். அந்த 'பற்றியதில்' (about) மறைந்திருக்கிறது ஒட்டுமொத்த துன்பமும். அந்த 'பற்றியதில்' நீங்கள் சுற்றிச் சுற்றி போய்க்கொண்டே இருக்கிறீர்கள். எப்போதுமே இருந்து கொண்டிருக்கும் அந்த முக்கியப் பகுதியைத் தான் இன்னும் அடைந்த பாடில்லை.

தியானத்தின் முழுமையான கருத்து ஓணானாயிருங்கள். பாறையில் வெயிலில் காய்ந்து கொண்டிருங்கள். இந்தக் கணத்தில் இருங்கள், முழுமையின் ஒரு பகுதியாயிருங்கள். எதிர்காலத்தினுள் எகிறிக் குதிக்காதீர்கள். இல்லாத ஒன்றை எதற்காகச் சுமப்பது என்பதுதான். கடந்த காலத்தின் சுமை இல்லாமல், எதிர்காலத்தைப் பற்றிய கவலை இல்லாமல் இருந்தால் துன்பம் உங்களைத் தொட்டு விடுமா? கடந்த காலத்திய சுமையோ எதிர்காலத்திய கவலையோ இல்லாத லியோ டால்ஸ்டாய் எப்படித் துன்பத்துக்குள்ளாக முடியும்?

துன்பம் எங்கிருக்கிறது? அது தன்னை எங்கே மறைத்துக்கொள்ள முடியும்? எதிர்பாராத விதமாய் முற்றிலும் வேறானதொரு பரிமாணத்தை நீங்கள் அடைகிறீர்கள். நீங்கள் காலவெளியைக் கடந்து செல்வதுடன், நிலைபேறுடைய ஒன்றின் பகுதியாகிறீர்கள்.

ஆனால்,தேய்ந்து போன கிராமஃபோன் தட்டு மாதிரி நாம் திரும்பத் திரும்ப ஒரே பாதையில் போய்க் கொண்டிருக்கிறோம்.

நான் கேட்டறிந்த ஒன்று:

பூங்காவில் இரண்டு பெண்கள் பேசிக் கொண்டிருந்தனர். அவர் கள்ள் ஒருத்தி வாட்டமும், துயரமும் கொண்டவளாய் காணப்பட்டாள். மற்றொருத்தி பரிவுணர்ச்சி கொண்டவளாய் இருந்தாள். அவள் விரும்பத்தக்க பொம்மை போல் இருந்த அடுத்தவளின் *மிங்க் கோட்டைச் சுற்றித் தன்னிரு கைகளையும் மாலைபோல் கோத் திருந்தாள். அவளிடம் 'ஏஞ்சலின் உன்னை வாட்டிக் கொண்டிருப்பது எது?' என்று கேட்டாள்.

ஏஞ்சலின் தோள்களைக் குலுக்கியபடி சொன்னாள். 'ஓ. அப்படி எதுவும் இருப்பதாய் நான் கருதவில்லை. ஆனால், ஒரு பதினைந்து நாட்களுக்கு முன் திருவாளர் ஷார்ட் செத்துப் போனார். அவரை உனக்கு ஞாபகம் இருக்கிறதா? அவர் எப்போதும் என்னிடம் அன்பாக நடந்து கொண்டவர். எப்படியோ அவர் சாகும்படி ஆயிற்று. சாகும்போது ஐம்பதாயிரம் ரூபாயை அவர் எனக்கு விட்டுச் சென்றிருக்கிறார். பாவம் போன வாரம் பில்கின்ஹவுஸ் செத்துப் போனார். அவர் எனக்கு அறுபதினாயிரம் ரூபாயை விட்டுச் சென்றிருக்கிறர்ர். ப்சு... இந்த வாரம் அப்படி எதுவும் இல்லை.'

நம்மிடம் இதுதான் தொல்லை. எப்போதும் எதிர்பார்த்தபடி இருப்போம். இன்னும் அதிகமாய் வேண்டும் என்று கேட்போம. இன்னும் வேண்டும் என்று கேட்பதற்கு முடிவேயில்லை. உங்களுக்குக் கிடைப்பது எதுவாயினும் மிகுதியான அளவில் கற்பனை செய்து துயரத்திலாழ்வீர்கள்.

ஏழைகள் துன்பப்படுவது உங்களுக்குத் தெரிந்திருக்கும், ஆனால் பணம் படைத்தவர்களுமல்லவா துன்பப்படுகிறார்கள். இல்லாத வனுக்குள்ள அதே அளவு துயரம் இருப்பவனுக்கும் உண்டு.

* மிங்க் (mink) - ஒரு சிறிய விலங்கின் மென் மயிர்த் தோலாலானது.

நோயுற்றவர்களும் துன்பத்தை அனுபவிக்கிறார்கள். நல்ல உடல் நலத்தோடு இருப்பவர்களும் துன்பத்தை அனுபவிக்கிறார்கள். ஏதாவதொரு வகையில் துன்பம் இருந்து கொண்டுதான் இருக்கிறது. செல்வம் இருப்பதாலும், ஆரோக்கியம் இருப்பதாலும் அல்லது அதுபோன்ற மற்றவற்றாலும் துன்பம் மறைந்து விடாது. அது உள்ளாக அமைந்த நீரோட்டம் போல் தொடர்ந்தபடி இருக்கும்.

கூடுதலாய் கேட்பதில் இருக்கிறது துன்பம், மனித மனம் எப்போதுமே மிகுதி பற்றிய கற்பனையில் இருந்து கொண்டிருக்கும். அதிகத்தைப் பற்றிய கற்பனை இல்லாத ஒரு சந்தர்ப்பத்தை உங்களால் எண்ணிப் பார்க்க முடியுமா? முடியாது. சொர்க்கத்தைக் கூட இன்னும் சொகுசாக்கினால் தேவலை என்றுதான் நினைப்போம். கற்பனை நின்று விடுகிற ஒரு நிலையை உங்களால் எண்ணிப் பார்க்கவும் முடியாது. மிகச்சிறந்த ஒரு நிலையை உங்களால் கற்பனை செய்ய முடியாது. இது நீங்கள் எங்கிருந்தாலும் துயரத்தோடு இருப்பீர்கள் என்பதையே குறிக்கும். சொர்க்கமும் உங்களுக்குப் போதுமானதாயிருக்காது. எனவே, சொர்க்கத்துக்காகக் காத்திருக்காதீர்கள். இங்கு போலத்தான் அங்கும் துயர் படுவீர்கள். ஏன் அதைவிடக் கூடுதலாகவும் இருக்கலாம். காரணம் இங்காவது சொர்க்கத்துக்குச் செல்கிற, என்றாவது ஒருநாள் செல்வோம் என்கிற நம்பிக்கை இருந்தது. ஆனால், நீங்கள் அதில் காலடி வைத்துவிட்டால் அந்த நம்பிக்கையும் போய்விடுகிறது.

சொர்க்கமும் நரகமும் நம்முடைய பார்வைக்கு ஏற்றபடிதான் இருக்கும். அவை தூலமான (physical) இடங்களல்ல. நீங்கள் விசயங்களை எப்படி நோக்குகிறீர்கள் என்பதைப் பொறுத்த மனப்பாங்குகள்.

ஓர் ஓணான் சொர்க்கத்தை அடைகிறது. லியோ டால்ஸ்டாய் நரகத்தை அடைகிறார். டால்ஸ்டாய் போன்ற ஒரு மனிதருக்கும் அப்படி ஆகிவிடுகிறது. அவர் உலகப் புகழ் பெற்றவர். உங்களால் கற்பனை செய்து பார்க்க முடியாத பெரும் புகழ். அவருடைய புகழ் வரலாற்றுப் புத்தகங்களில் இடம் பெற்றது. அவருடைய புத்தகங்கள் காலாகாலத்துக்கும் படிக்கப்பெறும். அவர் ஒரு மேதை. ஆனால், அத்தனை துயரார்ந்த ஒரு மனிதனை உங்களால் கற்பனை செய்ய முடியாது. அவர் ஒரு பணக்காரர், ரஷ்யாவின் மிகப்பெரிய பணக்காரர்களில் ஒருவர். அவர் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்.

அவர் ஓர் இளவரசர். அழகான ஓர் இளவரசியை மணந்து கொண்டவர். ஆனால், அவரைவிட சோகமான ஒருவரை உங்களால் கற்பனை செய்ய முடியாது. தற்கொலை செய்து கொள்வது பற்றித் தொடர்ந்து சிந்தித்துக் கொண்டிருந்தவர் அவர். தன்னுடைய துன்பத்துக்குக் காரணம் தான் பணக்காரராயிருப்பதுதான் என்று அவர் எண்ணத் தொடங்கினார். எனவே ஓர் ஏழையைப் போல் அவர் வாழலானார். அவர் ஓர் ஏழைக் குடியானவனைப் போல் வாழ்ந்த போதும் துன்பம் அவரைத் தொடரவே செய்தது.

அவரைத் தொல்லைப்படுத்தியது எது? அவருடைய கற்பனை ஒரு நாவலாசிரியருக்கு இருக்க வேண்டிய அளவில் மிகப்பெரிய கற்பனையாய் இருந்தது. மிதமிஞ்சிய கற்பனை உடையவருக்கு எது கிடைத்தாலும் அது குறைவாகவே தெரியும். மிகுதியான கற்பனை. மிகுதியான துன்பம்.

இதனை நினைவில் கொள்ளுங்கள், நீங்கள் வாழ்க்கையில் இருந்து எதையேனும் எதிர்பார்த்திருந்தால் நீங்கள் எதையும் அடைவதற்கில்லை. எதிர்பார்க்காதவர்களே மகிமைப்படுத்தப் படுகிறார்கள். எதிர்பார்த்திராதீர்கள். அது வேண்டும் இதுவேண்டும் என்று கோரி நிற்காதீர்கள். அது (வாழ்க்கை) வியக்கத்தக்க விதத்தில் உங்கள் மீது சகலத்தையும் பொழிந்து விடும். அதன் வித்தையே அதில்தான் (எதிர்பார்ப்பின்றி இருப்பது) இருக்கிறது. எண்ணங்களின்றிச் சிறிது நேரம் காத்திருக்க வேண்டும். ஆனால், உங்களால் அது முடிவதில்லை.

அதற்காக, நீங்கள் எண்ணமற்றிருக்கிற கணங்களே இல்லை என்றாகி விடாது. அவை இருக்கின்றன என்கிறார் பதஞ்சலி. மனிதனின் அகவுலகில் பிரவேசித்த எவருமே அறிவார்கள். அங்குள்ள இடைவெளிகளை. ஆனால், நீங்கள் எப்படியோ அவற்றைத் தவறவிட்டு விடுகிறீர்கள். காரணம் அந்த இடைவெளிகள் நிகழ்காலத்தியதாய் இருப்பவை. நீங்கள் ஓர் எண்ணத்தில் இருந்து இன்னொன்றுக்குத் தாவுகிறீர்கள். இரண்டுக்கும் இடையில் இருக்கிறது அந்த இடைவெளி. ஒரு நகரத்தில் இருந்து மற்றொரு நரகத்துக்கு நீங்கள் தாவிக் குதிக்கிறீர்கள். இரண்டுக்கும் இடையில் இருக்கிறது சொர்க்கம்.

இடையில் இருக்கிறது சொர்க்கம். ஆனால் அந்த இடைப்பட்ட நிலையில் நீங்கள் இல்லை. எண்ணங்களுக்கு இடையில் தாவிக்

கொண்டிருக்கும் உங்களுக்கு அகந்தை தீனி போடுகிறது. அது ஓர் எல்லையை, வடிவை, அமைப்பை, அடையாளத்தை உங்களுக்கு வரையறை செய்கிறது. இரண்டு எண்ணங்களுக்கு இடையேயான இடைவெளியை நீங்கள் கூர்ந்து நோக்குவதில்லை. காரணம் இடைவெளியை நோக்குவதென்பது உங்கள் அசலான முகத்தை நோக்குவதாகும். அது அடையாளமற்றது. அந்த இடைவெளியை நோக்குவது என்பது முதலும் முடிவுமற்ற ஒன்றை (eternity) நோக்குவதாகும். அங்கே நீங்கள் தொலைந்து விடுகிறீர்கள்.

இரண்டு எண்ணங்களுக்கிடையே உள்ளது இடைவெளி. ஆனால், நீங்கள் அதைக் காண்கிறதில்லை. முதலாவது அடுத்தது, அதற்கடுத்தது என்று எண்ணங்களை மட்டுமே நீங்கள் காண்கிறீர்கள்... கொஞ்சம் கவனியுங்கள். எண்ணங்கள் ஒன்றின் மீதொன்றாய் கவிந்து கொண்டிருக்கவில்லை. ஒவ்வோர் எண்ணமும் தனித்தனி. இரண்டுக்கும் இடையில் இடைவெளி இருந்ததாக வேண்டும். இருக்கிறது. அந்த இடைவெளி ஒரு வாசலாய் இருக்கிறது. அந்த வாயிலின் வழியே நீங்கள் பிரபஞ்ச இருப்பினுள் (existence) மறுபடியும் பிரவேசிக்க முடியும். அந்த வாயிலன் வழியேதான் நீங்கள் ஏடன் தோட்டத்தில் இருந்து தூக்கியடிக்கப் படுகிறீர்கள். அந்த வாயிலின் வழியே மறுபடியும் ஏடன் தோட்டத்துக்குள் நீங்கள் பிரவேசிப்பீர்கள். திரும்பவும் ஒரு பாறை மீது வெயிலில் காய்கிற ஓணானாகி விடுவீர்கள்.

நான் கேட்டறிந்தது இது:

ஒரு குடும்பம் நாட்டுப்புறத்தில் இருந்து நகரத்திற்குச் சென்றது. தாயானவள் சின்னப்பையன் 'பாபி'க்கு போக்குவரத்து பற்றிச் சொல்லும்போது, 'கார்கள் கடந்து செல்லும் வரை சாலையைக் கடக்காதே' என்று சொன்னாள். அவன் தன்னுடைய நண்பனைக் காணச் சென்றான். ஒரு மணி நேரம் கழித்துத் திரும்பி வந்தபோது அவனுடைய கண்கள் கண்ணீரால் நிரம்பியிருந்தது.

'என்ன ஆச்சு?' அவனுடைய தாய் கேட்டாள்.

'என்னால் போக முடியலை. நானும் ரொம்ப நேரம் காத்திருந்தேன். ஒரு கார்கூட வரலை' என்றான் பாபி.

கார்கள் தாண்டிச் செல்லும் வரைக் காத்திரு என்பதுதான் அவனுக்குச் சொல்லப்பட்டது. ஆனால் ஒரு கார்கூட அந்தப்பக்கம்

வரவில்லை. சாலை வெறிச்சோடிக் கிடந்தது என்றாலும் அவன் கார்களுக்காகக் காத்திருந்திருக்ககிறான்.

இதுவே உங்களுக்குள் இருக்கும் நிலை. சாலை எப்போதுமே வெறுமையாயிருக்கிறது. ஆனால், நீங்கள் கார்களை எண்ணங்களைக் காணும் முயற்சியில் இருந்தபடி கவலைக்குள்ளாகிறீர்கள். மிகப்பல எண்ணங்கள், அவை மேலும் பெருகியபடி இருக்கின்றன. அவை உங்களுக்குள் மீண்டும் மீண்டும் எதிரொலிக்கின்றன. நீங்கள் தொடர்ந்து அவற்றின்பால் கவனமாய் இருக்கிறீர்கள். உங்கள் போக்கு தவறானது.

உங்கள் போக்கை மாற்றிக் கொள்ளுங்கள். நீங்கள் எண்ணங்களுக்குள் கூர்ந்து நோக்கினால் ஒரு மனதை உங்களுக்குள் தோற்றுவித்துக் கொண்டவராவீர்கள். நீங்கள் இடைவெளிக்குள் கூர்ந்து நோக்கினால் ஒரு தியானத்தை உங்களுக்குள் தோற்றுவித்துக் கொள்வீர்கள். இடைவெளிகளின் குவியல் தியானம், எண்ணங்களின் குவியல் மனம். இவை இரண்டு போக்குகள், உங்கள் இருப்புணர்வின் இரண்டு சாத்தியங்கள். ஒன்று மனத்தின் மூலம் அல்லது தியானத்தின் மூலம் நீங்கள் இருக்கிறீர்கள்.

இடைவெளிகளைக் கவனியுங்கள். அவை முன்பே இருப்பவைதாம். இயல்பாகக் கிடைப்பவைதாம். தியானம் என்பது முயற்சியில் உருவாக்கிக் கொள்ளப்படுவதல்ல. அது மனம் இருப்பது போலவே இருந்து கொண்டிருப்பதுதான். உண்மையில் மனத்தைவிட கூடுதலாக இருக்கிறது எனலாம். காரணம், அது அலைகளாய் மேற்பரப்பில் இருப்பது. தியானம் கடலின் அடியாழமாய் இருப்பது.

நீங்கள் கடவுளை நாடுமளவுக்கு ஒவ்வொரு கணமும் கடவுள் உங்களை நாடி வருகிறார்.

நீங்கள் உணர்வுடன் அவரை நாடாதிருக்கலாம். பல நாமங்களைக் கொண்டு அவரை நாட முற்படலாம். நீங்கள் அவரை பரம சுகமாய் - பேரானந்தமாய் காண விழையலாம். நீங்கள் அவரை மகிழ்ச்சியில், திருப்தியில் காணக்கூடும். நீங்கள் அவரை இசையில், அன்பின் காண விழையலாம். நீங்கள் பல பெயர்களில் பல்வேறு வழிகளில் அவரைக் காண முற்படுவீர்கள். பெயர்கள் முக்கியமில்லை. அறிந்தும் அறியாமலும் அவரைக் கண்டுபிடிக்க முயல்கிறீர்கள். தெரிந்தும் தெரியாமலும் அவரைத் தேடியபடி இருக்கிறீர்கள். ஒன்றை நீங்கள்

நினைவில் கொள்ள வேண்டும். அவரும் உங்களை நாடி நிற்கிறார். இருதரப்பிலும் தேடுதல் இல்லாவிட்டால் சந்திப்பு சாத்தியப்படாது.

பகுதி முழுமையைத் தேடிக் கொண்டிருக்கும் அளவுக்கு முழுமையும் பகுதியைத் தேடிக் கொண்டிருக்கிறது. பூவைத் தேடும் சூரியனைப் போல் பூவும் சூரியனைத் தேடி நிற்கிறது. ஓணான் மட்டும் வெயிலில் காய்ந்து கொண்டிருக்கவில்லை. சூரியனும் ஓணானாகி விடுகிறது. அது ஒன்றுக்கொன்று தொடர்புடைய முழுமை. அது அப்படித்தான் இருக்க வேண்டியிருக்கும். இல்லையேல் பொருளாகட்டும், செயலாகட்டும் பிரிந்து தனித்தனியாகி விடும். அது பல பகுதிகளின் சேர்க்கையாய், இசைவிணக்கம் உடையதாய், ஒற்றை நடனமாய் இருக்கிறது. எல்லா அசைவுகளும், இயக்கங்களும் ஒருங்கிணைக்கப்பட்டிருக்கின்றன. அவை அப்படித்தான் இருந்தாக வேண்டும். இல்லையேல், தனித்தனியாகி விடும். பிரபஞ்ச இருப்பும் அதற்கும் மேல் பிரபஞ்ச இருப்பாயிருக்காது, மறைந்து விடும்.

ஒரு நீதிக்கதையின் மூலம் அதைச் சொல்கிறேன், அக்கறையுடன் கவனியுங்கள்.

பள்ளத்தாக்கில் வாழ்ந்த மனிதன் ஒரு மலையில் ஏறிக் கொண்டிருக்கிறான். அவன் பள்ளத்தாக்கில் இருந்தபோது கனவு கண்டான், கற்பனை செய்தான். ஆனால், அவனுடைய எண்ணங்கள் அங்கே ஏமாற்றத்துக்குள்ளாயின. பள்ளத்தாக்கில் இருந்தபோது அவன் வெற்றாகவும், நிறைவடையாமலும் இருந்தான். அதனால் தான் மலையுச்சியில் கடவுள் இருப்பதாக அவன் எண்ணிக் கொண்டது. இதுவரை அவன் இருந்தது பள்ளத்தாக்கில். உச்சி என்பது தொலைவில் இருப்பது.

சூரிய ஒளியில் அது ஈர்ப்புத்தன்மையுடன் பிரகாசிக்கிறது. எப்போதுமே தொலைவில் இருப்பது உங்களை அழைக்கும், வரவேற்கும். தொலைவில் இருப்பதைக் காண்பதுதான் கடினமாய் இருக்கும் என்பதில்லை, மிக அருகில் இருப்பதைக் காண்பதும் கடினமே. மிக அருகில் இருக்கிற ஒன்றின் மீது அக்கறை காட்டுவது அத்தனை எளிதாயிருக்காது, தொலைவில் இருக்கிற ஒன்றின்மீது ஆர்வம் கொள்ளாதிருப்பதும் கடினந்தான். தொலைவில் இருப்பது மிகப்பெரிய அளவில் ஈர்ப்புத்தன்மை உடையதாயிருக்கும். தொலைவில் உள்ள மலை உங்களுக்கு அழைப்பு விடுத்தபடி இருக்கிறது.

நீங்கள் பள்ளத்தாக்கில் வெறுமையாய் உணரத் தொடங்கும்போது, நீங்கள் காண விழைகிற ஒருவர் பள்ளத்தாக்கில் இல்லை என்றே எண்ணிக் கொள்வீர்கள். அவர் உச்சியில்தான் இருக்க வேண்டும். மனம் பள்ளத்தாக்கில் இருந்து மலையுச்சிக்கு - ஒரு கோடியில் இருந்து மறுகோடிக்குச் செல்வது இயல்பான விசயந்தான்.

மலையுச்சியில் கடவுள் இருப்பதாய் மனிதன் எண்ணிக் கொள்கிறான். மனித வாழ்க்கையின் கவனிப்புகளும், அக்கறைகளும், கவலைகளும், நேசமற்றும் போருக்குரிய இடர்ப்பாடுகளும் பள்ளத்தாக்கில் இருக்கின்றன. பள்ளத்தாக்கில் இருக்கும்போது நீங்கள் கவலைகளை, மாசுகளைச் சேர்த்துக் கொண்டேயிருப்பீர்கள். கொஞ்சம் கொஞ்சமாய் நீங்கள் செயலற்று, மரித்துப் போவீர்கள். அந்தப் பள்ளத்தாக்கு கல்லறைத் தோட்டமாகி விடும். அங்குள்ளவர் அதில் இருந்து வெளியேற விரும்புவார். அங்கிருப்பவர் சுதந்திரத்தை (மோட்சம்) பற்றி எண்ணத் தொடங்கி விடுவார். சிறையாக மாறிக் கொண்டிருக்கும் பள்ளத்தாக்கில் இருந்து எப்படி வெளியேறுவது, பந்தங்களில் இருந்து எப்படி விலகிப் போவது, அன்பில் இருந்தும், பேரார்வத்தில் இருந்தும், வன்முறையில் இருந்தும், போரில் இருந்தும், கவலையையும் வேதனையையும் நோக்கி உந்திச் செல்கிற சமுதாயத்தில் இருந்தும் எப்படி விடுபடுவது என்று சிந்திக்கத் தொடங்கி விடுவார்.

சிந்தித்தலை ஒரு தப்பித்தல் - ஒன்றில் இருந்து நழுவிப்போதல் எனலாம். உண்மையில் நீங்கள் மலையுச்சியை அடைகிறீர்களோ இல்லையோ பள்ளத்தாக்கில் இருந்து விலகிச் செல்கிறீர்கள். அது உங்களை மலையுச்சி அழைத்ததென்று ஆகிவிடாது. பள்ளத்தாக்கு உங்களைப் பிடித்துத் தள்ளியதுதான் உண்மை. நீங்கள் இன்னமும் பள்ளத்தாக்கினால் தள்ளப்படுகிறீர்கள்; தள்ளப்படுகிறவரை உங்களைத் தடையற்றவர் (free) என்று சொல்ல முடியாது. நீங்கள் அதைச் சுயமாய் செய்வதில்லை. நீங்கள் தூக்கியடிக்கப்படுகிறீர்கள். நீங்கள் தொடர்ந்து அங்கே இருக்க முடியாத நிலையைப் பள்ளத்தாக்கு உருவாக்கி விடுகிறது. வாழ்க்கை போதும் போதுமென்றாகி விடுகிறது. இந்தத் தாங்கொணாத நிலை எல்லாருடைய வாழ்விலும் ஏதாவதொரு கணத்தில் வரவே செய்யும். அப்போது இந்த உலகமே சகிக்க முடியாததாகி நம்மை ஓட்டம் பிடிக்க வைக்கும்.

மனிதன் உச்சியை நோக்கி நழுவியோடுகிறான். அந்த நீதிக்கதையின் முக்கிய பகுதி இங்கே வருகிறது. கடவுள் இன்னொரு பக்கம் மலையில் இருந்து இறங்கி வந்து கொண்டிருக்கிறார். அவருடைய தனிமையும் புனிதமும் அவருக்குத் திகட்டிப் போனது.

நீங்கள் எப்போதாவது கவனித்ததுண்டா? நீங்கள் மட்டும் தனிமையில் மகிழ்ச்சியாயிருப்பது எளிது. அடுத்தவருடன் மகிழ்ச்சியாயிருப்பது கடினம். ஒருவர் எந்த விலையும் கொடுக்காமல் தனிமையில் இனிமை காண முடியும். இருவர் மகிழ்ச்சியாயிருப்பது என்பது கடினம். மகிழ்ச்சியற்றிருப்பதற்கு எந்த விலையும் கொடுக்க வேண்டியிருக்காது. மூன்று பேர் சேர்ந்திருக்கும் போது மகிழ்ச்சியாய் இருப்பது சாத்தியமில்லை - அப்போது மகிழ்ச்சிக்கு விலை கொடுத்தாக வேண்டியிருக்கும்.

மனிதனுக்குக் கூட்ட நெரிசல் போதும் போதுமென்றிருக்கும். எங்கும் அசைவதற்கில்லை, உங்களுக்கென்றோர் இடத்தை நீங்கள் கண்டுபிடிக்க முடிவதில்லை. நீங்கள் எப்போதும் மேடையில் செயல்பட்டபடி இருக்கிறீர்கள். பார்வையாளர்களின் கண்கள் தொடர்ச்சியாய் உங்கள் மீது படிந்திருக்கிறது. தனிமை என்பதே இருப்பதில்லை. தனித்திருக்கும் நிலை உங்களுக்கு வாய்ப்பதில்லை. காலப்போக்கில் ஒருவர் தெவிட்டு நிலை அடைவதும், சலிப்புற்றுப் போவதும் இயல்புதானே.

ஆனால் பாருங்கள். கடவுளும் சலிப்புற்று விடுகிறார். அவர் தனித்திருக்கிறார், புனிதமாயிருக்கிறார். ஆனால், தொடர்ந்து புனிதமாயிருப்பது கூட சலிப்பை ஏற்படுத்தி விடுமாம்.

கடவுள் பள்ளத்தாக்கை நோக்கிக் கீழிறங்கி வருகிறார். அவர் இந்த உலகில் நுழைய ஆசைப்படுகிறார். மனிதனோ இந்த உலகை விட்டு வெளியேற ஆசைப்படுகிறான். தான் கடவுளாகி விடவேண்டும் என்கிற விருப்பம் மனிதனுக்கு. தான் மனிதனாகி விடவேண்டும் என்கிற விருப்பம் கடவுளுக்கு.

திரும்பிச் செல்லுதல் (withdrawal), திரும்பி வருதல் (returning) பற்றிய ஓர் உண்மை. மனிதன் எப்போதும் திரும்பிச் செல்கிறவன். கடவுள் எப்போதும் திரும்ப வருகிறவர். இல்லையேல் படைப்பு என்பது எப்போதோ முற்றுப் பெற்றிருக்கும். கடவுள் திரும்ப வருவது தொடர்ச்சியாய் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. அது ஒரு

வட்டத்தைப்போல. கங்கையானது தொடர்ந்து கடலில் விழுந்தபடி இருக்கிறது. கடலோ மேலெழுந்து மேகமாகிறது. பின் இமயத்தின் மீது மழையாய் விழுந்து, கங்கைக்குத் திரும்புகிறது. கங்கையும் தடையின்றி ஓடிக்கொண்டிருக்கிறது. மனிதன் கடவுளை நாடிச் செல்கிறான். கடவுள் மனிதனை நாடி வருகிறார்.மனிதன் மட்டுமே திரும்பிச் செல்கிறவனாய் இருந்து கொண்டு, கடவுள் திரும்ப வராமல் இருந்திருந்தால் ரொம்ப காலத்துக்கு முன்பே உலகம் தொடர்ச்சியைக் கைவிட்டிருக்கும். மனிதர்கள் எல்லாரும் போய் கடவுள் திரும்பி வராத நிலை ஒருநாள் ஏற்படும். அன்று இந்த உலகம் இல்லாதொழியும்.

ஆனால், பள்ளத்தாக்கு இல்லால் மலையுச்சி என்பது இருப்பதற்கில்லை. உலகம் இல்லையேல் கடவுள் இல்லை. பகலில்லாமலா இரவு? மரணமில்லாமலா வாழ்க்கை?

மனிதனின் திரும்பிப் போதலும், கடவுளின் திரும்ப வருதலும் ஒரே சீரில் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. மனிதன் பற்றுகளைத் தொலைத்து சந்நியாசி ஆகிறான். கடவுள் உலகுக்கு வருவதை ஒரு கொண்டாட்டம் எனலாம். இதனைப் புரிந்து கொள்வது கடினம்.

மதம் என்பது திரும்பிச் செல்வது பற்றியது. அப்போதும்கூட அது அரைவாசியாகத்தான் இருக்கும். மதம் திரும்பி வருவது பற்றியதாகவும் இருக்க வேண்டும். அந்நிலையில்தான் அது முழுமை பெறும். உங்களுக்குள் எப்படிச் செல்வது என்பதை மதம் கற்பிக்க வேண்டும். மறுபடியும் எப்படித் திரும்புவது என்பதையும் அது கற்பித்தாக வேண்டும். காரணம், மலையுச்சிக்கும் பள்ளத்தாக்கிற்கும் இடையில் எங்கோ ஓரிடத்தில் கடவுளும், மனிதனும் சந்தித்துக் கொள்கிறார்கள். நீங்கள் மேலேறிச் செல்கிறீர்கள். கடவுள் கீழிறங்கி வருகிறார். நீங்கள் அவருக்குப் பக்கமாகவே சென்றாலும் அவரை ஏறெடுத்துப் பார்க்காமல் கூட சென்றிருப்பீர்கள். கடுமையான வெறுப்பை உங்கள் கண்கள் தெரிவிக்கக்கூடும். பள்ளத்தாக்கிற்கு, திரும்பச் செல்கிற ஒருவர் எப்படிக் கடவுளாக இருக்க முடியும். உங்களைவிடப் புனிதம் மிக்கவராகவே அவரை நீங்கள் பார்க்கக் கூடும் என்றாலும்.

இதனை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் கடவுளைப் பார்க்கிற போதெல்லாம் அவர் இவ்வுலகிற்குத் திரும்பி வருவதையே காண்பீர்கள். நீங்கள் இவ்வுலகில் இருந்து புறப்பட்டுச் செல்கிறீர்கள். அதனால்தான் மகாத்மா என்று அழைக்கப்படுபவர்களும், புனிதர்கள்

என்று அழைக்கப்படுபவர்களும் கடவுள் என்றால் என்னவென்று ஒருபோதும் அறிந்திருக்கவில்லை. அவர்கள் கடவுளைப் பற்றி ஒரு செல்லரித்த கருத்தையே சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், அவர்கள் கடவுளைப் பற்றிச் சிறிதும் அறிந்திருக்கவில்லை. காரணம், அவர்கள் எப்போதுமே கடவுளைத் தவற விடுகிறார்கள். உங்கள் பாதையில் ஏதோ ஓரிடத்தில் நீங்கள் அவரைச் சந்திப்பீர்கள். ஆனால், உங்களுடைய புலன் அவரை ஏறெடுத்தும் பார்த்திருக்காது. அவர் ஒரு பாவயைப்போல் தோற்றமளிக்கலாம், திரும்பவும் உலகத்துக்குப் போய்க் கொண்டிருக்கிறாரே.

ஆனால் ஒருவேளை அவர்கள் உச்சியை அடைவார்களாயின் அது வெறுமையாயிருப்பதை அவர்கள் காண்பார்கள். உலகம் நிரம்பி வழிகிறது. உச்சியோ வெறுமையாயிருக்கிறது. அவர்களால் கடவுளைக் காணவும் முடிவதில்லை. காரணம், அவர் எப்போதுமே திரும்பி வந்தபடி இருக்கிறார். அவர் எப்போதும் வந்து கொண்டிருக்கிறார். அவர் எப்போதும் படைத்துக் கொண்டிருக்கிறார். அவர் ஒருபோதும் முடிந்து விடவில்லை. படைப்பு என்பது ஒரு முடிவற்ற செயல் முறையாகவே உள்ளது. கடவுள் உளதாயிருக்கும் ஒரு பொருளல்லர். அவர் ஒரு செயல்முறை, திரும்பி வருதல் பற்றிய செயல்முறை.

நீங்கள் வழியில் அவரைப் பார்த்தால் உங்களால் அவரை அடையாளம் காண முடியும். அந்நிலையில் மட்டுமே அவ்விடத்தில் ஒரு சாத்தியம் உள்ளது. பிறகு உச்சிக்குச் செல்லும் எண்ணத்தை நீங்கள் விட்டு விடுவீர்கள். திரும்பத் தொடங்குவீர்கள். இதனைப் புரிந்துகொண்ட மேலோர்கள் முதலில் விலக்கிக் கொள்ளும் நிலைக்குச் செல்கிறார்கள். பிறகு அவக்ள் இந்த உலகிற்குத் திரும்புகிறார்கள். மிகப்பெரிய தியான மலர்ச்சியுடன் மறுபடியும் சந்தைப்பேட்டைக்கு - உலகத்துக்கு வருகிறார்கள். அவர்கள் முக்கியக் கருத்தை அறிந்து கொண்டவர்களாய் இந்த உலகத்துக்குத் திரும்புகிறார்கள். அவர்கள் புனிதமான, பூரணமான பொருளைப் புரிந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் வெளிப்படையானது உள்ளார்ந்தது என இரண்டில்லை என்பதையும், படைப்பு, படைப்பவர் என இரண்டில்லை என்பதையும், புனிதமானது, புனிதமற்றது என இரண்டில்லை என்பதையும் அவர்கள் புரிந்து கொண்டிருக்கிறார்கள். அவை எல்லாமே ஒன்றுதான். அவற்றின் இருமைத்தன்மை மறைந்து

போயிற்று. நான் இதைத்தான் அத்வைதம் என்கிறேன். *இருமையற்றது - இது வேதாந்தத்தின் உண்மையான செய்தி. இது யோகா விடுக்கிற உண்மையான செய்தி.

இந்த உலகம் திகட்டிப் போவது இயல்புதான். சுதந்திரத்தை நாடுவதும் இயல்பானதே. அதில் விசேஷமாய் எதுவும் இல்லை.

அது நடந்தது!

முல்லா நஸ்ருதீன் தம்முடைய திருமணத்தின் இருபத்து ஐந்தாவது ஆண்டு நிறைவைக் கொண்டாடிக் கொண்டிருந்தார். அதையொட்டி தம்முடைய நண்பர்களுக்கு விருந்து வைத்தார். என்னையும் அழைத்திருந்தார். ஆனால் விருந்தளிப்பவரை எங்கேயும் காண முடியவில்லை. கடைசியாக அவர் நூல் நிலையத்தில் கணப்பை உற்று நோக்கியபடி, பிராந்தி குடிப்பதைக் கண்டேன்.

'முல்லா, நீங்களும் நண்பர்களோடு கொண்டாட்டத்தில் கலந்து கொண்டிருக்க வேண்டும். நீங்கள் ஏன் கவலையோடு காணப்படு கிறீர்கள். இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?' என்று கேட்டேன்.

'என்னுடைய துயரத்துக்கு என்ன காரணம்?' அவரே விவரிக்க லானார். எனக்குத் திருமணமாகி ஐந்தாண்டுகள் ஆனபோது, என்னுடைய மனைவியைக் கொன்று விடுவதென்று நான் தீர்மானித்தேன். நான் என்ன செய்யப் போகிறேன் என்பதை என் வக்கீலிடம் சென்று தெரிவித்தேன். நான் அதைச் செயத்தால் இருபதாண்டு சிறைவாசம் அனுபவிக்க நேரிடும் என்றார் அவர். இன்று நான் சுதந்திரமானவனாகி விட்டேன்' என்று முல்லா என்னிடம் தெரிவித்தார்.

அது இயல்புதானே. உலகம் ரொம்பவே கலக்கத்தை உண்டு பண்ணுவதாய் இருக்கிறது. அது மிகுதியான அளவில் கவலையைத் தோற்றுவிக்கிறது. பல சிறைகளை அது உருவாக்குகிறது. சுதந்திரத்தை நாடுகிறவர் அதுபற்றி விசாரித்தறிய முற்படுவது இயல்புதான் - அதில் விசேஷமாய் எதுவும் இல்லை. நீங்கள் அதைப் புரிந்து கொள்கிறபோது,

---

* இருமையற்ற தன்மை (non-duality) - பொருள்கள் அடிப்படை ஒற்றுமை கொண்டவை. அவை பலவாக இருத்தல் உருவெளித் தோற்றம்.

உச்சியில் இருந்து பள்ளத்தாக்கிற்குத் திரும்பி வருகிறபோது உங்கள் காலடிகளில் ஒரு புதிய நடனத்துடன், உங்கள் உதடுகளில் ஒரு புதிய பாடலுடன், முற்றிலும் புதியதோர் இருப்புணர்வுடன் (being) இந்த மாசுபடிந்த உலகத்தில் மட்டற்ற புனிதத்துடன் நீங்கள் வருகிறபோது அது விசேஷத்தன்மை கொண்டு விடும். நீங்கள் அச்சமற்றவராய் இருப்பீர்கள். காரணம் தற்போது நீங்கள் தூயவராய் இருக்கிறீர்கள்.

உங்களுடைய சொந்த இணக்கத்தின் (accord) பேரில் நீங்கள் இந்தச் சிறைக்குத் திரும்புகிறபோது, ஒரு சுதந்திர மனிதனாய் நீங்கள் இங்கு வருகிற போது, இந்தச் சிறையை இதில் உள்ள உங்கள் அறை (cell) யை நீங்கள் ஏற்றுக்கொண்டு விடுகிறபோது இதற்கு மேலும் அது சிறையாயிருக்காது. காரணம் சுதந்திரத்தைச் சிறைப்படுத்த முடியாது. கட்டுப்பாட்டுக்கு உட்பட்டிராத ஒரு மனிதனை எப்படிச் சிறையிலடைக்க முடியும் - அவன் சிறையில் இருந்தாலும் தடையற்றவனாகவே இருப்பான். அத்தகைய ஆற்றலைக் கொண்டிராவிடில் உங்கள் சுதந்திரம் தகுதி உடையதாயிருக்காது.

தற்போது சூத்திரங்களைப் பற்றி...

சமாதி என்கிற வார்த்தைக்கு மிகச் சரியாய் ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பது கடினம். அதற்கு இணையான வார்த்தை இல்லை. ஆனால், கிரேக்க மொழியில் இணையாகச் சொல்லக்கூடிய ஒரு வார்த்தை உண்டு. அந்த வார்த்தை 'அதராக்ஸியா' (Ataraxia) என்பதாகும். அமைதி, சாந்தி, உள்ளார்ந்த மனநிறைவு என்று பொருள்படுவது. அதுவே சமாதி என்கிற சொல்லின் பொருள்.

மிகுந்த மனநிறைவுடன் இருப்பது. அந்நிலையை எதுவும் குலைப்பதற்கில்லை. அந்நிலை எதனாலும் சிதைவுபடுவதில்லை. பிரபஞ்ச இருப்பு (existence)டன் பொருந்திக் கொள்வது செய்த தவறுக்குப் பரிகாரமாய் அமையும் என்பதால் தற்போது பிரச்சினை எதுவும் இருக்காது. இன்னொன்று உங்கள் அமைதியைக் குலைப்பதில்லை. இன்னொன்று (other) என்பது உங்கள் எண்ணங்களோடு மறைந்து விடும். எண்ணங்கள்தாம் அந்த இன்னொன்று. இடைவெளிகளில் இருக்கிறது சமாதி நிலை. 'அதராக்ஸியா' இடைவெளிகளில் இருக்கிறது அமைதியும், சாந்தியும்.

நீங்கள் அதை அடையப் பெற்றதும் சிந்திக்க இயலாமல் போய்விடும் என்பதல்ல. உங்களுடைய சிந்திக்கும் திறன்

மறைந்துவிடும் என்பதல்ல. உண்மையில் அதற்கு மாறாக, நீங்கள் இடைவெளியில் வாழ்கிறபோது முதல் முறையாய் சிந்திக்கும் திறமையைப் பெறுவீர்கள். அதற்கு முன்னால் நீங்கள் பலியாட்களாய் இருந்தீர்கள். சமுதாயம் சார்ந்த சூழலின் பலியாட்களாய், உங்களைச் சுற்றிச் சூழ்ந்திருக்கும். ஆயிரத்தியோர் எண்ணங்களின் பலியாட்களாய் இருந்தீர்கள். ஒரேயோர் எண்ணம்கூட உங்களுடையதாய் இருக்காது. அவை எண்ணங்கள் என்றாலும் அவற்றை எண்ணமிடும் திறமை உங்களிடம் இருந்ததில்லை. அந்நியப் பொழுதில் மரக்கிளையை அடையும் பறவையைப்போலல்லவா அந்த எண்ணங்கள் உங்களுக்குள் இடம் பெற்றன. அவை உங்களுக்குள் பிரவேசித்தன. அவை அசலானவையல்ல, இரவலாய் பெறப்பட்டவை.

நீங்கள் வாழ்கிற இந்த வாழ்க்கை இரவலாய் பெறப்பட்டது. அதனாலதான் நீங்கள் துயர்படுகிறீர்கள். அதனால்தான் ஆர்வம் இல்லை. அதனால்தான் நீங்கள் உணர்ச்சியற்ற ஒரு வாழ்க்கையை வாழ்கிறீர்கள். அங்கே அதிர்வேதும் இல்லை. அதனால்தான் அங்கே மகிழ்ச்சியோ உவகையோ இல்லாது போயிற்று. இரவலாய் பெற்ற எண்ணங்களால் எல்லாமே தடைப்பட்டன. உங்களுடைய முழு ஓட்டமும் தடைப்பட்டது. நீங்கள் ஓட முடியாமல் போனதற்குக் காரணம் இரவலாய் பெற்ற அந்த எண்ணங்கள். நீங்கள் சமாதியின் அதரரக்ஸியாவின் ஒரு பகுதியாகிறபோது, இடைவெளிகளின் உள்ளார்ந்த அமைதியாகிற போது, இடைவெளிகளாகிற போது நீங்கள் முதல் முறையாய் கண்டறிவதற்கும், சிந்திப்பதற்குமான திறமையைப் பெறுகிறீர்கள் - ஆனால் தற்போது அந்த எண்ணங்கள் உங்களுக்கே உரியவையாய் இருக்கின்றன. தற்போது ஓர் அசலான எண்ணத்தை உங்களால் உருவாக்க முடிகிறது. ஓர் அசலான வாழ்க்கையை நீங்கள் வாழ இயன்றவராகிறீர்கள். அது காலைப்பொழுதின் புதிய பொலிவை, தென்றலின் உற்சாகத்தைக் கொண்டதாயிருக்கும். நீங்கள் ஆக்கத்திறன் உடையவராயிருப்பீர்கள்.

சமாதி நிலையில் நீங்கள் ஒரு படைப்பாளியாகி விடுகிறீர்கள். காரணம் சமாதி நிலையில் நீங்கள் கடவுளின் ஒரு பகுதியாகி விடுவதுதான்.

'மனிதனின் பெரும்பாலான துன்பங்களுக்குக் காரணம் அவனால் கொஞ்ச நேரம் கூடத் தனது அறையில் சும்மாயிருக்க முடிவதில்லை என்பதுதான்' - இது பாஸ்கல் என்கிற மேதையின்

வாக்கு. ஆம். அது உண்மையே. உங்கள் அறையில் நீங்கள் அமைதியாயிருக்க முடிந்தால் ஏறத்தாழ எல்லாத் துன்பங்களுமே இல்லையென்றாகி விடும். நீங்கள் அங்கும் இங்கும் அலைந்து திரிந்தவல்லவா அவற்றை உண்டு பண்ணிக் கொண்டீர்கள். உங்கள் எண்ணங்களுடன் தேவையில்லாமல் உங்களைப் பிணைத்துக் கொண்டதால் அல்லவா அவை உருவாயிற்று. அவை உங்களுடையவை அல்ல. உங்களால் சும்மா உட்கார முடியாமல் அவற்றைத் தோற்றுவித்துக் கொண்டீர்கள்.

சமாதி பரிணம் என்கிற அகநிலை மாற்றம் கவனச் சிதறல்களை படிப்படியாய் ஒரு முடிவுக்குக் கொண்டு வருகிறது. அதே சமயம், ஏகாக்ர சிந்தையும் அதனால் ஏற்படுகிறது.

பதஞ்சலி முதலில் நிரோத் பரிணம் பற்றி - இரண்டு எண்ணங் களுக்கு இடையே உள்ள இடைவெளியைக் கூர்ந்து நோக்குவது பற்றி உரைத்தார். நீங்கள் தொடர்ந்து நோக்குகிறபோது எண்ணங்கள் மெல்ல மெல்ல அமைதியாகி விடுகின்றன. கவனச்சிதறல்களுக்கு முடிவு கட்டப்படுகிறது - யாரோ ஒருவர் கடந்து செல்வதைப் போல. மலையில் இருந்து ஓடிவரும் சிற்றாறு ஒன்றைக் கடந்து செல்கிற மனிதர்களும், மாட்டு வண்டியும் எழுப்பிய மாசு மண்டலம் மறைவதைப் போல் அவை மெல்லக் குறைந்து ஒரேடியாய் மறைந்து விடுகின்றன. அந்தச் சிற்றாறு, சில கணங்களுக்கு முன்பு வரை தெள்ளத் தெளிவாய் இருந்தது. தற்போது குழம்பி மாசுடையதாயிற்று. ஆனால் அந்த மாட்டு வண்டிகள் சென்ற பிறகு, மனிதர்கள் போய்ச் சேர்ந்த பிறகு கொஞ்சம் கொஞ்சமாய் அந்த மாசுகள் ஆற்றின் அடிப்பகுதிக்குச் சென்று தங்கி விடுகின்றன. ஆறு மறுபடியும் பளிங்கு போல் தெளிவாகி விடுகிறது.

நீங்கள் இடைவெளிகளினூடே நோக்குகிறபோது அந்த மாட்டு வண்டிகள் - உங்களைத் தொல்லைப்படுத்திய உங்கள் இருப்புணர்வை இடர்ப்பாட்டுக்குள்ளாக்கிய எண்ணங்கள் தொலை தூரத்துக்குப் போய்விட்டிருக்கும். உங்களுக்குள் ஓடும் பிரக்ஞை (consciousness) என்கிற ஆறு அமைதிப்படத் தொடங்கியிருக்கும். இதுவே பதஞ்சலி கூறும் சமாதிபரிணம் - அகநிலை மாற்றம் ஆகும். இது கவனச்சிதறல்களைப் படிப்படியாய் முடிவுக்குக் கொண்டு வருவது. அதே சமயம் ஏகாக்ர சிந்தையையும் உண்டுபண்ணுவது. அது இரண்டு பகுதிகளைக் கொண்டிருக்கிறது. ஒன்று - கவனக்

குலைவுகளுக்கு முடிவு கட்டுவது. மற்றொன்று ஏகாக்ர சிந்தையைத் தோற்றுவிப்பது.

நீங்கள் எண்ணங்களால் நிரம்பி வழிகிறபோது ஒரேயோர் ஆளாய் இருக்க மாட்டீர்கள். உங்களுடைய தன்னுணர்வு (consciousness) ஒற்றையாயிருக்காது. நீங்கள் ஒருதிரளாய் பெருகியிருப்பீர்கள். எண்ணங்கள் இருக்கும்போது உங்கள் போக்கு எண்ணங்களைக் கூர்ந்து நோக்குவதாகிறபோது நீங்கள் பகுப்படைகிறீர்கள். உங்கள் மனதில் உள்ள எண்ணங்கள் போலவே நீங்களும் பகுக்கப்படுகிறீர்கள். ஒவ்வோர் எண்ணமும் உங்கள் இருப்புணர்வின் ஒரு பிரிவு ஆகிறது. நீங்கள் ஒற்றை ஆத்மாவுடன் இருப்பதில், பல ஆத்மாக்களைக் கொண்டவராகி விடுகிறீர்கள். நீங்கள் ஒற்றையாயில்லை, பலவாகி விடுகிறீர்கள். காரணம் ஒவ்வோர் எண்ணமும் உங்களில் ஒரு பகுதியை எடுத்துச் செல்கிறது. அந்த எண்ணங்கள் எல்லாப் பக்ங்களிலும் ஓட்டம் பிடிக்கின்றன. நீங்கள் கிட்டத்தட்ட ஒரு பைத்தியமாகி விடுகிறீர்கள்.

நான் கேட்டறிந்தது:

ஸ்காட்லாந்து நாட்டு முதிய வழிகாட்டி ஒருவர் புதிய அமைச்சருடன் பறவை வேட்டைக்குச் சென்று திரும்பினார். காட்டில் இருந்து களைப்புடன் வந்தவர் தனது வீட்டுக் கணப்பருகே ஒரு நாற்காலியில் புதைந்து கிடந்தார்.

'ஆங்கஸ், உங்களுக்காக சூடான தேநீர் கொண்டு வந்திருக்கிறேன்' என்று சொன்ன மனைவி, 'ஆமாம், அந்தப் புதிய அமைச்சர் நன்றாகச் சுடுகிறவரா,' என்று கேட்டாள்.

அந்த முதியவர் தனது 'பைப்'பைப் புகைத்தபடி பதிலளித்தார். 'ஆகா, ரொம்ப அருமையாய் சுடுகிறார். அவர் சுடும்போது பறவைகளை எப்படிக் காப்பாற்றினார் தெரியுமோ, ரொம்ப அற்புதம்!' என்று.

உங்கள் இலக்கை நீங்கள் தவற விடுகிறீர்கள். காரணம் நீங்கள் ஏக சிந்தையாய் இருக்கவில்லை. உங்களுக்கு விருப்பமானவற்றை நீங்கள் தவறவிட்டுக் கொண்டிருப்பதற்குக் காரணம் நீங்கள் ஒரே நோக்கத்துடன் இருப்பதில்லை. மனிதனின் முழுமையான துன்பம் அவன் ஏக காலத்தில் எல்லாத் திக்குகளிலும் ஓடிக்கொண்டிருக்கிறான் என்பதுதான். முற்றிலும் தீர்மானிக்கிற திறனின்றி, உறுதியற்ற நிலையில்

அவன் இருக்கிறான். தான் போகிற இடமும், செய்கிற காரியமும் அவனுக்குத் தெரிந்திருக்கவில்லை.

இரண்டு அரசியல்வாதிகள் ஓர் உளப்பகுப்பாய்வாளரின் (Psychoanalyst) அறை வாசலில் சந்தித்துக் கொண்டார்கள். ஒருவர் வெளியே வந்து கொண்டிருந்தார். இன்னொருவர் உள்ளே சென்று கொண்டிருந்தார். உள்ளே செல்பவர் கேட்டார். 'நீங்கள் உள்ளே வருகிறீர்களா அல்லது வெளியே செல்கிறீர்களா?' என்று. வெளியில் வந்து கொண்டிருந்தவர் சொன்னார். 'நல்லது. நான் வெளியே வருகிறேனா அல்லது உள்ளே வருகிறேனா என்பது எனக்குத் தெரிந்திருந்தால் நான் இங்கிருக்க மாட்டேன்' என்று.

தான் உள்ளே செல்கிறவரா வெளியே வருகிறவரா என்பது எவருக்கும் தெரிந்திருக்கவில்லை. நீங்கள் எங்கே சென்று கொண்டிருக்கிறீர்கள், எதை நாடிச் செல்கிறீர்கள்?

நீங்கள் தவறவிட்டுக் கொண்டேயிருப்பதற்குக் காரணம் உங்களுடைய குறி இலக்குகள் (targets) மாறிக்கொண்டிருப்பதுதான். அது இடைவிடாமல் ஏற்படும் மாற்றம். உங்களைச் சுற்றி ஆயிரத்தோர் இலக்குகள் இருக்கின்றன. நீங்களும் ஆயிரத்தியோரு பேர் கொண்ட கூட்டமாய் அநேக இலக்குகளை நோக்கிச் சுடுகிற கூட்டமாய் இருக்கிறீர்கள். ஒட்டுமொத்த வாழ்க்கையும் வெறுமையை மெய்ப்பிக்கிறது.

சமாதி பரிணம் - அகநிலை மாற்றம் என்பது கவனக்குலைவை படிப்படியாய் முடிவுக்குக் கொண்டு வருவதும் அதே சமயத்தில் ஏகாக்ர சிந்தையை உண்டுபண்ணுவதுமாகும். கவனக்குலைவை உண்டுபண்ணும் எண்ணங்கள் மறையும்போது ஏகாக்ர சிந்தை (ஒரே நோக்கம்) எழுகிறது. நீங்கள் ஒற்றையாளாகி விடுகிறீர்கள். பிரக்ஞை என்கிற ஆறு ஒரே பக்கமாய் ஓடும். அது நெறிப்படுத்தப்பட்டதாகி விடும். தனக்கென்று ஒரு போக்கை அது தற்போது கொண்டிருக்கும். அது அடையக் கூடியதாயிருக்கும். அது வெகுநாளைய தேவையை நிறைவேற்றி விடும்.

'ஏகாக்ருத பரிணம் - ஒரே நோக்கமுடையதாய் மாறுவது என்பது மனதின் நிலைமை - அதில் மனதின் ஓர் இலக்கு மறைகிறபோது அடுத்த கணமே அதைப்போன்ற மிகச்சரியான மற்றோர் இலக்கு இடம் பெற்று விடும்'.

வழக்கமாக ஓர் எண்ணம் இடம் பெயர்கிறபோது அதற்கு முற்றிலும் மாறான ஓர் எண்ணம் வந்துவிடும். கவலை போகிறது / மகிழ்ச்சி வருகிறது. மகிழ்ச்சி போகிறது / விரக்தி வருகிறது. விரக்தி போகிறது / கோபம் வருகிறது. கோபம் போகிறது / துயரம் வருகிறது. உங்களைச் சுற்றியுள்ள சூழல் மாறிக்கொணடே இருக்கும். ஒவ்வொரு கணமும் உங்கள் இருப்புணர்வு வேறானதொரு பண்பை (colour)ப் பெற்று விடுகிறது. எனவே, உங்களைப்பற்றி நீங்கள் அறிந்திருக்க வில்லை எனில் அதில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது? - காலையில் நீங்கள் கோபத்துடன் இருந்தீர்கள், மதிய உணவின்போது மகிழ்ச்சியாய் இருந்தீர்கள். பிற்பகலில் கவலையுடன் காட்சியளித் தீர்கள். மாலையில் விரக்தி கொண்டவராய் இருந்தீர்கள். நீங்கள் யார் என்பது உங்களுக்குத் தெரியாது. நீங்கள் வெகுவாய் மாறி விடுகிறீர்கள். காரணம், உங்களைக் கடந்து செல்கிற ஒவ்வொரு நிறமும் (பண்பு) சில கணங்களுக்கு உங்களுடைய அடையாளமாயிருக்கும்.

ஏகாக்ருத பரிணம் என்கிற உங்களுடைய உணர்வு நிலையில் இந்த மாற்றம் முற்றுப் பெறுகிறது. நீங்கள் ஒரே நோக்கம் உடைய வராகிறீர்கள். அதுமட்டுமல்லாமல், ஒரு குறிப்பிட்ட நிலையிலான விவகாரங்களைத் தக்க வைத்துக்கொள்ள நீங்கள் விரும்பினால், அதைத் தக்க வைத்துக்கொள்ளும் திறமையைப் பெற்று விடுகிறீர்கள். நீங்கள் மகிழ்ச்சியாயிருக்க விரும்பினால் மகிழ்ச்சியின் இடத்தில் மகிழ்ச்சியே மறுபடியும் வைக்கப்படும். மீண்டும் மீண்டும் மகிழ்ச்சி. நீங்கள் மகிழ்ச்சியாயிருக்க விரும்பினால அதுவும் உங்கள் வரையிலானதுதான். ஆனால் அந்நிலையில் நீங்கள் எதையும் அடக்கியாள்பவராய், எதிலும் தேர்ச்சி பெற்றவராய் இருக்கிறீர்கள். இல்லையேல் எல்லாமும மாறியபடி இருக்கும்.

உங்களை நான் கருத்தூன்றிக் கவனிக்கிறேன். நீங்கள் எப்படிக் கையாள்கிறீர்கள் என்பதே நம்ப முடியாததாய் தெரிகிறது. ஒருநாள் தம்பதிகளிருவர் என்னிடம் வந்து, 'நாங்கள் ஆழ்ந்த அன்புடையவர்கள், எங்களை ஆசீர்வதியுங்கள்' என்றனர். அத்துடன், நாங்கள் சண்டையிட்டுக் கொண்டதால், பிரிந்திருக்கிறோம்' என்றும் தெரிவித்தனர். எது உண்மை? நேசமா, சண்டையா? உங்களிடம் உண்மையாய் எதுவும் இல்லை. எல்லாமே மாறிக்கொண்டிருப்பதாய் தெரிகிறது. எதுவும் நிலையாயிருக்கவில்லை. எதுவும் உங்கள் இருப்புணர்வின் ஒரு பகுதியாகி விட்டிருப்பதாய் தெரியவில்லை.

எல்லாமும் உங்கள் சிந்திக்கும் செயல்முறையில் ஒரு பகுதியாகத்தான் தோற்றமளிக்கிறது - ஓர் எண்ணம் அதற்குரிய பண்பு, மற்றோர் எண்ணம் மற்றொரு பண்பு என்று.

இது நடந்தது.

கிட்டப்பார்வை உடைய ஓர் இளம்பெண் மணம் செய்து கொள்வதென்று தீர்மானித்தாள். கடைசியில் தனக்கொரு கணவனைக் கண்டுபிடித்து, அவனுடன் தேனிலவுக்காக நயாகரா வீழ்ச்சிக்குச் சென்றிருந்தாள். அவள் திரும்பி வந்தபோது அவளுடைய தாய் கிறீச்சிட்டு அலறியபடி தொலைபேசியை நோக்கி ஓடினாள், கண் மருத்துவர் ஒருவரை அழைத்தாள்.

'டாக்டர்' என்றபோது மூச்சுத் திணறியது அவளுக்கு. 'நீங்கள் உடனே இங்கு வரவேண்டும். ரொம்ப அவசரம். தொடர்ந்து என் மகள் கண்ணாடி போட்டுக்கொள்ள மறுத்து வந்ததாளில்லையா. அவள் தற்போது தேனிலவில் இருந்து திரும்பியிருக்கிறாள் - அத்துடன்...

'மேடம்' - மருத்துவர் குறுக்கிட்டார், 'தயவு செய்து உங்களைக் கட்டுப்படுத்திக் கொள்ளுங்கள். உங்கள் மகளை என்னுடைய அலுவலகத்துக்கு அனுப்பி வையுங்கள். அவளுடைய கண்கள் எவ்வளவு மோசமாகி விட்டிருந்தாலும், அத்தனை அவசரப்பட வேண்டியிருக்காது' என்றார்.

'ஏன் இல்லாமல்?' என்ற தாய், 'நல்லாருக்கே, இவளுடன் வந்திருக்கிற ஆசாமி முன்பு இவளோடு நயாகராவுக்குச் சென்ற ஆளில்லை' என்ற பதறினாள்.

இந்த நிலை எல்லாருக்கும் ஏற்படுகிறதுதான். நீங்கள் காலையில் நேசித்த ஒருவரை மாலையில் வெறுக்கக் கூடும். காலையில் உங்கள் வெறுப்புக்கு இலக்கான ஒருவர் மாலையில் உங்கள் நேசத்துக் குரியவராகலாம். பிறிதொரு நாளில் பேரழகுடன் விளங்கிய ஓர் ஆணோ பெண்ணோ இன்று மிகவும் அவலட்சணமாகி விட்டிருக் கலாம்.

அது அவசரமாய் பரிசீலிக்கத்தக்க நிலையில் இருப்பதுதான்.

அத்துடன் காற்றின் கருணையில் இழுபடும் ஒரு மரத்தைப் போல இந்த வழியில் நீங்கள் போய்க் கொண்டிருக்கிறீர்கள். காற்று தன் போக்கை மாற்றிக் கொள்கிறது, உங்களுடைய போக்கும் மாறுகிறது.

எனினும் இன்றியமையாத (soul) எந்த ஒன்றையும் நீங்கள் பெற்றிருக்கவில்லை.

குருட்ஜீவ் தன்னுடைய சீடர்களிடம் இப்படிச் சொல்வதுண்டு. 'முதலில் இருக்கப் பாருங்கள். ஏனெனில் தற்போது நீங்கள் இருந்து கொண்டிருக்கவில்லை. இருத்தலை உங்கள் வாழ்வின் குறிக்கோளாய் கொள்ளுங்கள். யாரேனும் அவரிடம் கேட்பார்கள். 'நாங்கள் எப்படி நேசிப்பது?' என்று. அவர் சொல்வார். 'அபத்தமாய் கேட்காதீர்கள். முதலில் 'இருப்பது' முக்கியம். காரணம் நீங்கள் இல்லாதபட்சத்தில் உங்களால் எப்படி நேசிக்க முடியும்?'

நீங்கள் இல்லாவிடில் உங்களால் எப்படி மகிழ்ச்சியாயிருக்க முடியும்? நீங்கள் இல்லாவிடில் ஏதோ ஒன்றை உங்களால் எப்படிச் செய்ய முடியும்? முதலில் தேவைப்படுவது இருப்புணர்வு (being), அதன் பிறகு எல்லாமே சாத்தியமாகி விடும்.

இயேசு கூறுவார். 'முதலில் தேவனின் இராஜ்யத்தைக் கண்டுபிடியுங்கள். பிறகு எல்லாமே உங்களை வந்தடையும்' என்று. நான் சிறிதளவு அதை மாற்ற விரும்புகிறேன்.

'முதலில் உங்கள் இருப்புணர்வைக் கண்டுபிடியுங்கள். அதன்பிறகு எல்லாமும் உங்களை வந்தடையும்' என்று. மேலும் அதுவே இயேசு சொன்னதன் பொருள் ஆகும். 'இருப்புணர்வின் இராஜ்யம்' என்பதற்குப் பயன்படுத்தப்பட்ட பழைய சொல்லே 'தேவனின் இராஜ்யம்' என்பது. முதலில் இருக்கப் பாருங்கள். பிறகு எல்லாமே சாத்தியந்தான். ஆனால் தற்போது உங்களை நான் உற்றுக் கவனிக்கிறபோது நீங்கள் அங்கே இருக்கவில்லை. விருந்தினர் பலரும் இருக்கிறார்கள். ஆனால், விருந்தளிப்பவரைத்தான் காணவில்லை.

ஏகாக்ருத பரிணம் - உங்கள் இருப்புணர்வு மேலெழுவதற்கு ஒரே நோக்கம் என்பது அவசியம். மாறிக்கொண்டே இருந்தால் இருப்புணர்வு சாத்தியப்படாது. நீங்கள் பெரும்பாலும் இதுவாகவோ அதுவாகவோ வேறு எதுவாகவோ மாறியபடி இருக்கிறீர்கள். ஆனால் இருப்புணர்வுடன் ஒருபோதும் இருப்பதில்லை.

**'கடைசி நான்கு சூத்திரங்களில் சொல்லப்பட்டதன் மூலம் குணங்கள், பண்புகள், அடிப்படைக் கொள்கைகள் மற்றும் புலன்களின் நிலைமாற்றங்கள் ஆகியவை விளக்கப் பட்டன.'**

பதஞ்சலி சொல்கிறார். இதுவே செயலின் நிலை (situation) என்று. உங்களைச் சுற்றிருக்கும் உலகம் மாறிக்கொண்டே இருக்கிறது. உடல் மாறுகிறது, புலன்கள் மாறுகின்றன, மனம் மாறியபடி இருக்கிறது - எல்லாமே மாறிக் கொண்டிருக்கிறது. நீங்களும் மாறிவிட்டால் நிலைபேறுடைய - மாறாதிருக்கிற ஒன்றைக் கண்டுபிடிக்கும் சாத்தியம் இல்லாது போய்விடும். இவையெல்லாம் மாறிக்கொண்டிருப்பது உண்மை. உலகம் தொடர்ந்து மாறிக் கொண்டே இருக்கிறது. ஒரு செயல்முறை. அதற்கு இருப்புணர்வு இல்லை. அது இடைவிடாமல் மாறிக் கொண்டிருக்கும். அது அப்படியே இருந்து விட்டுப் போகட்டும். மாற்றம் ஒன்றே உலகில் மாறாமல் இருப்பது. மாற்றத்தைத் தவிர மற்ற எல்லாமும் மாறிக்கொண்டே இருக்கின்றன. மாற்றம் மட்டுந்தான் நிலையான சிறப்பியல்பைக் கொண்டிருக்கிறது.

ஒவ்வொரு கணத்திலும் தொடர்ந்து மாறியபடி இருக்கிறது சரீரம். ஒவ்வொரு கணத்திலும் அது ஓடிக்கொண்டும் மாறிக்கொண்டும் இருக்கிறது. இல்லையேல் நீங்கள் எப்படி முதுமை அடைகிறீர்கள்? ஒரு குழந்தை எப்படி இளமை அடைகிறது? குழந்தை இளைஞனான நாளை உங்களால் சொல்ல முடியுமா? இளைஞன் எப்போது - எந்த நாளில் முதுமையுற்றான் என்று உங்களால் சொல்ல முடியுமா? அது கடினம். உண்மையில், உடற்கூறுவியலாரிடம் நீங்கள் எந்தக் கணத்தில் உயிரோடு இருந்தவன் இறந்து போனான் என்பதைக் கேட்டுப் பாருங்கள். அதை மிகச்சரியாக அவர்களால் சொல்ல முடியாது. அதைத் தீர்மானிப்பது முடியாத காரியம். உயிரோடிருப்பது ஒரு செயல்முறை. உண்மையில் நீங்கள் இறந்த பிறகும், ஒருசில செயல்முறைகள் உங்கள் உடம்பில் தொடர்ந்தபடி இருக்கும் - நகங்கள் வளர்ந்து கொண்டிருக்கும். முடிகள் வளர்ந்துகொண்டே இருக்கும். உங்களில் ஒரு பகுதி இன்னமும் உயிரோடு இருப்பதாய், இயங்கிக் கொண்டிருப்பதாய் தெரியும்.

ஒரு மனிதன் இம்மி பிசகாது இறந்து போயிருந்தாலும் அது இன்னமும் விவரிக்க இயலாததாகவே இருக்கிறது. உயிரின் நிலையும், மரணத்;ன நிலையும் வரையறை செய்ய முடியாதவை. அது மாறிக்கொண்டே இருக்கிற நடப்பு. உடல் மாறிக் கொண்டே இருக்கிறது. மனம் மாறியபடி இருக்கிறது - ஒவ்வொரு கணத்திலும் மனம் மாறியபடி இருக்கும்.

மாறிக் கொண்டிருக்கும் இவ்வுலகில் உங்கள் இருப்புணர்வின் கவனச்சிதறல்களை நீங்கள் கூர்ந்து நோக்கினாலும் மெய்ம்மை, கடவுள், பரமசுகம் என்று நீங்கள் கவனமாய் தேடினாலும் ஏமாற்றதுக்கு உள்ளாகவே செய்வீர்கள். உள்நோக்கிச் செல்லுங்கள். உலகமோ, உடலோ, மனமோ இல்லாத இடைவெளிகளுக்குள் சென்று பாருங்கள். அங்கே ஆதியந்தமற்ற, சாசுவதமான ஒன்றை நீங்கள் நேருக்கு நேர் சந்திப்பீர்கள்.

அவை மறைவாகவோ, செயல்திறன் கொண்டதாகவோ, வெளிப்படுத்திக் கொள்ளாததாகவோ இருந்தாலும், அவற்றின் முக்கியப் பண்புகள் அடித்தளத்தில் பிரிக்க முடியாததாய் - பற்றியிருக்கும்.

ஒரு பூ மலர்ந்திருந்தாலும், உதிர்ந்து போயிருந்தாலும் அவற்றுள் வேறுபாடில்லை என்கிறார் பதஞ்சலி. மலர்ந்திருக்கும் ஒரு பூ மரணித்துக்கொண்டிருக்கும். மரித்துப் போனது திரும்ப வர முயற்சி செய்யும்.

படைப்பு என்பது ஆக்கல் அழித்தல் என்கிற செயல்முறையைக் கொண்டது. பதஞ்சலி இதனை 'ப்ரக்ருதி' என்கிறார். ப்ரக்ருதி என்றால் உருவாக்குவது மட்டுமல்ல, உருவாக்கியதை அழித்தலும் கொண்ட செயல்முறை அது.

ஒவ்வொரு பொருளும் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும். பின்பு மறையும், எவ்வித அறிகுறியுமற்றதாகும். ஆனால் அடித்தளத்தில் அது எஞ்சியிருக்கவே செய்யும். மறுபடியும் அது திரும்ப வரும். கோடைக்காலம் வரும், போகும். மீண்டும் வந்து விடும். பனிக்காலம் வரும் போகும், திரும்பவும் வந்துவிடும். அது தொடர்ந்தபடி இருக்கும். பூக்கள் தோன்றுகின்றன, மறைந்து போகின்றன. உலகம் ஒரு சுழற்றி (cycle) யை மேற்கொண்டு இயங்குகிறது.

பொருள்கள் இரண்டு நிலையில் இருக்கும். வெளிப்படையானது மற்றும் வெளிப்படையாகாதது. நீங்கள் வெளிப்படையாயும் இல்லை, வெளிப்படையற்றதாயும் இல்லை. நீங்கள் சாட்சி பாவத்தில் இருக்கிறீர்கள். நிரோத் பரிணாமத்தின் வழியேயும், இரண்டு எண்ணங்களுக்கு இடையே உள்ள இடைவெளி மூலமாயும், அதன்

கணநேரக் காட்சியை (glimpse) முதல் முதலாய் காணப் பெறுவீர்கள். பிறகு அந்த இடைவெளிகளைச் சேகரிக்கவும், குவிக்கவும் செய்வீர்கள். இரண்டு இடைவெளிகள் ஒன்றாகி விடும் என்பதை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள். அவை இரண்டு பொருள்களைப் போல் இருப்பதில்லை. இரண்டு பொருளற்றவையாய் - வெறுமையாய் (emptiness) இருக்கும். அவை இரண்டாக இருக்க முடியாது. இரண்டு பூஜ்யங்களைப் பக்கமாய் கொண்டு வருகிறீர்கள். அவை ஒன்றாகி விடுகின்றன. இரண்டு பூஜ்யங்கள் இரண்டு பூஜ்யங்களாகவே இருந்து விடாது. பூஜ்யம் என்பது எப்போதும் ஒன்றுதான். நீங்கள் ஆயிரத்தியோரு பூஜ்யங்களை வீட்டுக்கு எடுத்துச் செல்லுங்கள். அவை ஒன்றின்மீது ஒன்றாய் குதித்து ஒன்றாகி விடும்.

ஆக, அந்த இடைவெளிகளை, இருப்புணர்வின் பூஜ்யங்களைக் குவித்தபடி இருங்கள். மெல்ல மெல்ல பதஞ்சலி கூறிய நிரோத என்கிற நிலை சமாதி என்கிற நிலையாய் மாறிவிடும். சமாதியில் கவனச்சிதறல்கள் மறைந்து விடுகின்றன. அவை தூரத்துக்கு, தொலை தூரத்துக்குச் சென்று, பிறகு, மறைந்து விடுகின்றன. உங்கள் இருப்புணர்வில் ஒரே நோக்கம் உண்டாகியிருக்கும். இதுவே - ப்ரக்ருதிக்கு அப்பால் ஆக்கல், அழித்தல் என்கிற ஆட்டத்துக்கு அப்பால், அலைகள் அலைகளற்றது என்கிற விளையாட்டுக்கு அப்பால், பூக்கள், பூக்களற்ற நிலை, மாற்றம், இயக்கம், அற்ப ஜீவிதம் (momentariness) இவற்றுக்கப்பால், நீங்கள் யார் என்பது பற்றிய முதற்காட்சியாய் அது இருக்கும். நீங்கள் எல்லாவற்றுக்கும் ஒரு சாட்சியாக இருப்பீர்கள்.

அந்த சாட்சி பாவம் உங்கள் இருப்புணர்வு (being) அதனை அடைவதே யோகாவின் ஒட்டுமொத்த குறிக்கோள் ஆகும்.

யோகாவின் பொருள்: ஆத்ம பலத்தை ஒருங்கிணைத்தல் (unio mystica). நீங்கள் உங்களோடு ஒன்றாகி விட்டிருந்தால் உடனே பூரணமான பரம்பொருளுடனும் ஒன்றாகி விட்டிருப்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்வீர்கள். எப்படியெனில், உங்கள் இருப்புணர்வுக்குள் நீங்கள் செல்கிறபோது அது மறுபடியும் வெறுமையாயிருக்கும். ஓர் அமைதி, முடிவற்ற பேரமைதி அங்கே நிலவும். கடவுளும் அமைதியாய் இருக்கிறவர். இரண்டு அமைதிகள்

இரண்டாகவே இருந்து விடுவதற்கில்லை - அவை ஒன்றின் மீது ஒன்றாய் தாவி ஒன்றாகி விடும்.

நீங்கள் உங்களுக்குள் திரும்பிச் செல்கிறபோது கடவுளும் திரும்ப வருவார். வழியில் அவரைச் சந்திப்பீர்கள், நீங்கள் ஒன்றாகி விடுவீர்கள். அந்த ஒருமை இணக்கத்தின்பாற்பட்டது. யோகா என்கிற சொல்லுக்கு ஒருமை என்பது பொருள். யோகா என்றாலே ஒன்றாகி விடுவதுதான்.

**'நான் எதற்காகத் திரும்பத் திரும்ப ஒரே மாதிரியான கேள்விகளையே கேட்டுக் கொண்டிருக்கிறேன்?'**

காரணம் என்னவெனில் மனம் சொன்னதையே சொல்லிக் கொண்டும், செய்ததையே செய்து கொண்டும் இருக்கிறது. மனம் ஒருபோதும் அசலாக - தன்பண்பு கொண்டதாக (original) இருக்கவில்லை. அது அவ்வாறு இருக்க முடியாது. அதன் சுபாவமே அப்படித்தான். மனம் இரவலாய் பெறப்பட்ட ஒன்று - அது ஒருபோதும் புதியதாய் இருக்கவில்லை. அது எப்போதுமே பழசுதான். மனம் என்றாலே கடந்தது - காலம் கடந்தது. அது மெல்ல மெல்ல ஓர் அமைப்பாய் (pattern), பழக்கமாய், எந்திர நுட்பமாய் மாறிவிடுகிறது. அந்நிலையில் நீங்கள் அதில் மிகவும் திறமையுடையவராகி விடுகிறீர்கள். பிறகு நீங்கள் அதே தடத்தில் போய்க் கொண்டிருப் பீர்கள். அதே நடைமுறை ஒழுங்கை (routine) மேற்கொள்விர்கள் மறுபடியும், மறுபடியும்.

நீங்கள் அதே மனத்துடன் இருக்கிறீர்கள், அதனால்தான் அதே கேள்விகளை நீங்கள் தொடர்கிறீர்கள். நீங்கள் புதியவராயில்லா விட்டால் உங்கள் கேள்விகளிலும் புதுமை இருக்காது. உங்களுடைய பழைய மனத்தை நீங்கள் முற்றாகக் கைவிடாவிட்டால் உங்களுக்குள் புதிய கேள்விகள் இடம் பெறுவதற்கில்லை. புதிய கேள்விகள் உங்களுக்குள் செல்ல முடியாது. காரணம், அங்கே பழைய கேள்வி நிரம்பியிருக்கும். நீங்கள் பழைய கேள்விகளால் நிரப்பப்பட்டிருக்கும்போது உங்களுக்குள் புதிய கேள்விகளுக்கு எப்படி இடமிருக்கும்? மனம் கூறியதையே கூறுகிற, செய்ததையே செய்கிற பழககத்தை விடாமல் பற்றியிருக்கும். அது மிகுந்த திறமை உடையது. மனம் பிடிவாதமானது, வளைந்து கொடுக்காது. அது மாறுவது போல் நடிக்கும். அந்த மாறுதல் உண்மையானது அல்ல. அது வெறும் பாசாங்குதான். அது சிறிய அளவில் திருத்தங்களுக்கு உட்படுத்தப்பட்ட பழசு, அவ்வளவே. கருத்துகளை வெளியிடும் முறை

(language) மாறக்கூடும், வடிவம் மாறக்கூடும். ஆனால், உள்ளார்ந்த கேள்வி அப்படியே இருக்கும். மனம் தன்னுடைய நிலையைத் தொடரும்.

நீங்கள் இதனைப் புரிந்து கொள்ள வேண்டும். இந்தக் கேள்வி மிகச் சரியானது. குறைந்தபட்சம் இந்தக் கேள்வி பழசாயிருக்காது.

இது சரோஜ்ஜிடம் இருந்து அவள் கேள்விகள் கேட்டபடி இருந்தாள். நான் ஒருபோதும் அவளுக்கு விடையளித்ததில்லை. ஆனால் இன்று நான் விடையளிப்பதென்று தீர்மானித்து விட்டேன். காரணம் இது ஒரு புதிய காட்சி. தான் திரும்பத்திரும்ப அதே பழைய கேள்வியைக் கேட்டுக் கொண்டிருப்பதை அவள் அறிவாள். இந்த ானதால் உணரும் திறன் புதியது. அவளுடைய மனதில் அது ஒரு புதிய காலை, புதிய விடியல் எனலாம். ஒரு குறிப்பிட்ட பழைய அமைப்பிடம் (pattern) எச்சரிக்கை கொண்டு விட்டிருக்கிறது அவளுடைய உணர்வு.

இந்தத் தெரிநிலைக்கு - விழிப்புணர்வு (awareness) அனுகூல மாயிருங்கள். அதனுடன் சேர்ந்து செயல்படுங்கள். மெல்ல மெல்ல நீங்கள் இரண்டு பரிமாணங்களில் உங்களைக் காணத் தொடங்குவீர்கள். ஒன்று, மனதின் பரிமாணம் - பழையது, காலம் கடந்தது. மற்றொன்று - தன்னுணர்வின் (consciousness) பரிமாணம் எப்போதும் புதிதாய், புதுமையாய், அசலாக இருப்பது.

நான் சின்னதாய் ஒரு கதை சொல்வேன் உங்களுக்கு.

ஒருவன் கிளர்ச்சியுற்றவனாய் ஓடி, தெருவில் போய்க் கொண்டிருந்த இன்னொருவனுடைய முதுகில் அன்புடன் ஓங்கி அறைந்தான். 'பால் பீட்டர், உன்னைப் பார்க்க முடிந்ததில் நான் சந்தோசப்படுகிறேன். ஆனாலும், பால் என்கிட்டே சொல்லிடு. உனக்கு என்ன ஆச்சு? போன தடவை நான் உன்னைப் பார்த்தப்போ நீ குள்ளமா, குண்டா இருந்தே. திடீர்னு ஒல்லியா, உசரமா தெரியறே?' என்று கேட்டான்.

'இதோ பாருங்கள். நான் பால் போர்ட்டர் இல்லை' என்று குழப்பமுற்ற அந்த ஆசாமி பதிலளித்தான்.

சற்றும் அச்சமின்றி வரவேற்பளித்த முதலாமவன் இறுமாப்புடன் சொன்னான். 'ஹேய், உன்னோட பெயரையும் மாத்திட்டாயா?' என்று.

மனம் - அத்தனை உண்மைகளுக்கு மாறாகவும்கூட தன்னைத் தொடர்ந்து நம்பும் பழக்கம் உடையது. உங்களுடைய பழைய மனம் உங்களுக்கு துன்பத்தையும், மன வேதனையையும் தந்து கொண்டிருந்த போதும் நீங்கள் தொடர்ந்து அதன்மீது நம்பிக்கை வைத்திருப்பீர்கள்.

இது நம்பிக்கையின்மை (unbelief)யின் காலம் என்று மக்கள் சொல்கிறார்கள். நான் அதைக் கண்டதில்லை. மனதில் இருந்த அதே பழைய நம்பிக்கை தொடர்கிறது. ஒருவர் இந்துவாக இருக்கிறார். அவருக்கு இந்து மதத்தில் நம்பிக்கை. காரணம், அவருடைய மனம் இந்துவாக இருக்கும்படி கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. ஒருவர் கிறிஸ்தவராக இருக்கிறார். அவருக்குக் கிறிஸ்துவ மதத்தில் நம்பிக்கை. அவர் கிறிஸ்தவராக இருக்கும்படி அவருடைய மனம் கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. ஒருவர் பொதுவுடைமைவாதியாக இருக்கிறார். அவர் பொதுவுடைமைக் கொள்கையில் தொடர்ந்து நம்பிக்கை கொண்டிருக்கிறார். காரணம் அவருடைய மனம் பொது வுடைமைவாதியாய் இருப்பதறகான நிலையில் வைக்கப்பட்டிருக்கிறது. இம்மூன்று நிலைகளும் ஒன்றுதான். அவர்கள் வெவ்வேறு பேர்வழிகளல்லர். அவர்களுக்கு வெவ்வேறு பெயர்கள், முத்திரைகள் இருக்கலாம். ஆனால் அவர்களுக்கு நேரிடுகிற விசயங்கள் ஒரே மாதிரியானவைதாம். அவர்கள் எல்லாருமே ஒரு நிலையில் வைக்கப்பட்டவர்கள், தங்கள் மனதைப் பற்றிக் கொண்டிருக்கும் அவர்கள் மனதிடம் நம்பிக்கை கொண்டிருப்பவர்கள்.

மனதைத் துறந்தவரைத்தான் நான் சமயம் சார்ந்தவர் என்பேன். யார் மனதைப் பற்றிக் கொண்டிருக்கும் நிலையைத் தொடர வில்லையோ, யார் தன்னுடைய உணர்வு நிலைக்குள் நுழையத் தொடங்குகிறாரோ, யார் கட்டுப்பாடுகள் அனைத்தையும் விட்டொழித் தவரோ, யார் கட்டுப்பாடுகள் பற்றிய உணர்வை மிகுதியாய் கொண்டவரோ அவரே சமயச்சார்புடையவர் ஆவார். அந்த விழிப்புணர்வில் அவர் கட்டுப்பாடுகளில் இருந்து விடுபடுகிறார் - அங்கிருக்கக் கூடிய ஒரே சுதந்திரம் அதுதான். மற்றவை எல்லாம் வெறும் குப்பைகள்தாம். கட்டுப்பாடுகளில் இருந்து விடுபட்டிருக்கும் சுதந்திரம், மனதில் இருந்து விடுபட்டிருக்கும் சுதந்திரம் மட்டுமே சுதந்திரம். அந்தச் சுதந்திரம் உங்களை எச்சரிக்கையோடும், விழிப்புணர்வோடும், கவனத்தோடும் இருக்கச் செய்யும். அது உங்களைப் புதிய பரிமாணத்தில் இயங்கச் செய்யும்.

நல்லது சரோஜ். உன்னுடைய கேள்விகள் ஒரே மாதிரியானவை. திரும்பத் திரும்பக் கேட்கப்பட்டவை என்பதை நீ உணர்ந்து கொண்டு விட்டாய். அவை திரும்பத் திரும்பக் கேட்கப்பட்டவை என்பதால்தான் நான் அவற்றுக்கு விடையளிக்கவில்லை. அது பயனற்றது. காரணம் தன்னுடைய பழைய பழக்க வழக்கங்களையே மனம் பற்றியிருக்கும் என்கிறபோது அது எதையும் காதில் போட்டுக் கொள்ளாது.

புதிதாய், புதுமையாய், புத மலர்ச்சி கொண்ட ஒன்றைக் கண்டறிய முயலுங்கள். அது பழசாகுமுன்பு கைப்பற்றி விடுங்கள். அது ஒரு வடிவமைப்பாவதற்கு முன் அதனுள் உங்களை கரையச் செய்து விடுங்கள். உங்கள் வாழ்க்கையை ஒருபோதும் வார்க்கப்பட்டதாகவோ, ஓர் அமைப்பிற்கு உட்பட்டதாகவோ வைத்துக் கொள்ளாதீர்கள். அது அறிந்திராத ஒன்றை நோக்கி தொடர்ந்து ஓடுவதாய், உறைந்து விடாததாய, ஊடுருவும் தன்மை கொண்டதாய் இருக்கட்டும்.

மனம் என்பது அறியப்பட்டது. நீங்களோ அறியப்படாதவர். இதனை நீங்கள் புரிந்து கொண்டால் உங்கள் மனதைப் பயன்படுத்து வீர்கள். மனம் உங்களைப் பயன்படுத்த இடமளிக்க மாட்டீர்கள்.



**நீங்கள் சொல்வதில் ஏகப்பட்ட முரண்பாடுகளைக் கண்டபிடிக்க எத்தனையோ பேர் இருக்கிறார்கள். இது ஏன் இப்படி இருக்கிறது என்பதை ஒருமுறை நீங்கள் விளக்கியிருக்கிறீர்கள். ஆனால், இந்தக் கணம் வரைக்கும் நான் ஒரேயொரு முரண்பாட்டையும் - ஒரு முரண்பாடு இருந்தே தீரும் என்றாலும்கூட, எதிர்கொண்டதில்லை. நான் எத்தனையோ முயன்றும் அதைக் காண முடியவில்லை. என்னிடம் எதுவும் தவறாகி விட்டிருக்குமா? தயவு செய்து விளக்கங்கள்.**

இல்லை. உங்களிடம் தவறாய் எதுவும் இல்லை. முரண்பாடுகளைக் காண முற்படுகிறவர்களிடந்தான் தவறு இருக்கிறது. ஆனால் அவர்கள் பெரும்பான்மையினராய் இருக்கிறார்கள். நீங்கள் தனித்திருக்கிறீர்கள். பெரும்பான்மையினர் உங்களை அடக்கியாள விட்டுவிடாதீர்கள். பெருமபான்மையினரின் அதிகாரத்துக்குட்பட்டு விடாதீர்கள். தனியாக இருங்கள். உண்மை ஒருபோதும் கூட்டத்தால் நிரப்பப்படவில்லை. அது எப்போதுமே தனி நபருக்குரியதுதான்.

உண்மை பலவற்றாவானதல்ல. அது அரிதானது. அது பலருக்கானதல்ல, வெகு சிலருக்கானது. அது இணையற்றது. இந்த வேறுபாடு புரிந்துகொள்ளப்பட வேண்டியது.

விஞ்ஞான உண்மை இணையற்ற ஒன்றாகாது. அது சொல்லப்போனால் 'இணையற்றது' என்கிற நிலையைத் தள்ளி வைப்பது. அது செய்ததையே மீண்டும் செய்தாலன்றி நம்புவதற் கில்லை என்கிறது. அதனால்தான் ஒரு பரிசோதனை மீண்டும் மீண்டும் மேற்கொள்ளப்படுகிறது. ஒரு சோதனையை ஆயிரத்தியோரு முறை செய்தாலும் அது தொடர்ந்து ஒரே முடிவைத்தான் கொடுக்கும். அந்நிலையில் அது மெய்ப்பிப்பதற்கான நம்பிக்கைச் சான்றுகளை (evidences)த் தேடும்.

மதம் சார்ந்த உண்மை இணையற்றது. ஒரு புத்தர் திரும்பி வரமாட்டார். ஓர் இயேசு திரும்ப வரமாட்டார். அவர்கள் ஒருமுறை வந்தார்கள். அத்தோடு மறைந்து விட்டார்கள். அவர்கள் சூன்யத்தில் இருந்து வெளிப்பட்டு சூன்யத்தில் (emptiness) மறைந்தவர்கள் - அவர்களின் திரும்புகைக்கு வழியில்லை. விஞ்ஞானம் அவர்களை மறுக்கிறது. காரணம், அது திரும்பத் திரும்ப நடக்கிற ஒன்றில் நம்பிக்கை வைப்பது. புத்தரை 'ஆர்டர்' கொடுத்துச் செய்ய முடியுமென்றால் - ஒரு ஃபோர்டு காரைப் போல் புத்தரையும் ஒருங்கிணைப்புப் பிரிவில் (assembly line) தயாரித்துவிட முடியுமென்றால் அப்போது விஞ்ஞானம் அதை நம்பத் தயார். ஆனால், அது சாத்தியமல்ல.

மதம் என்பது திருப்புதலுக்கு இடமற்ற, அரிதான இணையற்ற ஒன்று. அதைத் திரும்பத் திரும்பக் கொண்டு வர முடியாது. விஞ்ஞானம் மீண்டும் மீண்டும் செய்யக்கூடியது. அதனாலதான் விஞ்ஞானம் மனதின் ஒரு பகுதியாகவும், மதம் மனதுக்கப் பாற்பட்டதாகவும் இருக்கிறது. காரணம் திரும்பத் திரும்பச் சொல்லக் கூடிய, செய்யக்கூடிய எதையும் மனதால் புரிந்து கொள்ள முடியும் என்பதுதான்.

நான் சொன்னதையே மீண்டும் சொல்வது கிடையாது. அதனால்தான் மக்கள் என்னிடம் முரண்பாடு காண்கிறார்கள். அவர்கள் என்னிடம் முரண்பாடு காண்பதற்குக் காரணம் அவர்களுடைய மனம் ஒரு குறிப்பிட்ட முறையில் - அரிஸ்டாட்டிலின் தர்க்க முறையில் பயிற்றுவிக்கப்பட்டது. அரிஸ்டாட்டிலுடைய தர்க்க முறை சொல்கிறது.

'இது வெள்ளையாக இருக்கலாம் அல்லது கறுப்பாகவும் இருக்கலாம்' என்று. அது வெள்ளையாக இருக்குமெனில் அதுவே கறுப்பாகவும் இருப்பதற்கில்லை. அது கறுப்பாக இருக்குமானால் பிறகு அது வெள்யையாகவும் இருக்க முடியாது. ஒன்று, 'இது அல்லது அது' என்று கற்பிக்கிறது அரிஸ்டாட்டிலின் வாத முறை. அறிவியல் சார்ந்த மனதுக்கு அதுவே அடிப்படை. மதம் சார்ந்த மனம் சொல்கிறது இரண்டும் இருப்பதாக. வெள்ளேயே கறுப்பாகவும் இருக்கிறது. கறுப்பே வெள்ளையாகவும் இருக்கிறது என்று. அது வேறு மாதிரியாய் இருக்க முடியாது. காரணம் எதிரிடையான இரண்டு ஒன்றாகி விடும் என்பதை அது ஆழமாய் புரிந்து கொண்டிருக்கிறது.

உயிரோடிருப்பது மரிக்கும், மரித்தது உயிர் பெறும். காரணம் உயிரும் மரணமும் முன்பே உங்களுக்குள் சந்தித்துக் கொண்டிருப்பதை, ஒன்றையொன்று எதிர்கொண்டிருப்பதை மதம் சார்ந்த மனம். மதம் சார்ந்த பிரக்ஞை அறிந்திருக்கிறது. ஒன்று மரிக்கிறது, மற்றொன்று பிறக்கிறது. ஒவ்வொரு கணத்திலும் நீங்கள் செத்துக் கொண்டிருப்பதை நான் பார்க்கிறேன். ஒவ்வொரு கணத்திலும் நீங்கள் மறுபடியும் பிறப்பதை நான் பார்க்கிறேன். நீங்கள் ஒரு தொடர்ச்சியான நிலையை (continuity)க் கொண்டிருக்கவில்லை. ஒவ்வொரு கணத்திலும் ஏதோ ஒன்று மறைகிறது. ஒவ்வொரு கணத்திலும் ஏதோ ஒன்று புதிதாய் இப்பிரபஞ்ச இருப்பை வந்தடைகிறது. ஆனால், அதை நீங்கள் உணர்ந்திருக்கவில்லை. எனவே, இடைவெளியை உங்களால் காண முடியாமல் போகிறது. காரணம் அது ஒரு தொடர்ச்சி நிலையைப் போல் இருப்பதால் அந்த இடைவெளியை நீங்கள் காண முடிவதில்லை.

முரண்பாடுகளே இல்லை, முரண்பாடுகள் இருக்க முடியாது. காரணம் பிரபஞ்ச இருப்பென்பது ஒன்றே என்று மதம் நம்புகிறது. எதிரெதிர் கொள்கை நிலைகள் இல்லை என்பதாக நம்புவதோடு அப்படியே புரிந்து கொள்ளவும் செய்கிறது மதம. எதிரெதிர் கொள்கைகள் இருந்தாலும் கூட அவை ஒன்றுக்கொன்று துருவமாகவோ, எதிரிடையாகவோ இருக்கவில்லை. காரணம் பிரபஞ்ச இருப்பு இருமைத்தன்மையற்றது. (non duality) ஆகும். அது ஒன்றாகத்தான் இருக்கும்.

வாழ்வில் இருந்து மரணத்தைப் பிரித்து வேறாக்குவதற்கில்லை பகலில் இருந்து இரவை விலக்கி வைப்பதற்கில்லை. கோடையைப்

பனிக்காலத்தில் இருந்து பிரித்து வைப்பது முடியாத காரியம். அவ்வாறே குழந்தைப் பருவத்தில் இருந்து முதுமையை விலக்கிவிட முனைவதும். குழந்தைப் பருவந்தான் முதுமையை அடைகிறது. இரவு பகலாக மாறுகிறது. பகல் இரவாக மாறுகிறது. இல்லை என்பதும் உண்டு என்பதும். இரண்டில் எது அல்லது இரண்டும் சேர்ந்ததா என்கிற கேள்வியின் பாற்பட்டதல்ல. இரண்டு கருத்துகள் ஒரே கோட்டில் இருக்கின்றன, இருவேறு முனைகளில் என்றாலும் எல்லைக்கோடு ஒன்றுதான்.

மத நம்பிக்கையுடைய ஒருவர், விஞ்ஞானியின் அதே முறையில் முரண்பாடற்றவராயிருப்பார் என்று சொல்ல முடியாது. அவருடைய முரணற்றத் தன்மை ஆழ்ந்ததாயிருக்கும். அது அவருடைய இருப்புணர்வின் அடியாழத்தில் இருக்கும்.

நான் ஒரு தத்துவ மேதையல்ல. எந்தவொரு கோட்பாட்டையும் நான் நிருபிக்க முயலவில்லை. தற்காலிக ஆதாரமாய் கொள்ளப்படும் ஒரு கருத்தை (hypothesis) நிரூபிப்பதற்காக நான் பேசிக் கொண்டிருக்கவில்லை. எதையும் நிரூபித்தாக வேண்டுமென்ப தில்லை. உண்மை முன்பே இருந்து கொண்டுதான் இருக்கிறது. தனக்கென்று ஒரு கோட்பாட்டை அது கொண்டிருக்கவில்லை. முன்பே இருக்கிற ஒன்றை எப்படிக் கண்டுகொள்வது என்பதற்கான ஒரு வழிமுறையையே அது வழங்குகிறது. நான் உங்களிடம் பேசியபடி இருக்கிறேன் - என்னிடம் ஒரு கோட்பாடு இருப்பதால் அல்ல. என்னிடம் ஒரு கோட்பாடு இருந்திருப்பின் அப்போது நான் முரண்பாடு கொண்டு விடுவேன். அது என்னுடைய கோட்பாட்டுக்குப் பொருந்துகிறதா இல்லையா என்று பார்க்கத் தொடங்கி விடுவேன். அது பொருந்தினால் சரி. பொருந்தா விட்டால் விட்டுவிடுவேன். ஆனால் என்னிடம் எந்தக் கோட்பாடும் இல்லை. எல்லாமே என்னுடன் பொருந்துகிறது. என்னிடம கோட்பாடு இருந்தால் நான் அதைக் கூர்ந்து நோக்க வேண்டியிருக்கும். பிறகு, உண்மை இரண்டாம் இடத்துக்குத் தள்ளப்பட்டு, கோட்பாடு முதன்மை பெற்றுவிடும். உண்மையும் கோட்பாடும் ஒன்றோடொன்று பொருந்திக் கொண்டு விட்டால் எல்லாமே சரியாயிருக்கும். அது பொருந்தாவிடில் நான் அதைப் புறக்கணிக்கும்படியாகும்.

என்னிடம் கோட்பாடு எதுவும் இல்லை. ஒவ்வோர் உண்மையும் அது உண்மையாய் இருப்பதாலேயே என்னுடன் மிகச் சரியாகப்

பொருந்தி விடுகிறது. வெகுசிலர் மட்டுமே அதை உணர்ந்து கொள்வார்கள். எனவே, கவலைப்பட வேண்டாம். மற்றவர்கள் முரண்பாடுகளைக் காண்பார்களெனில் அவர்களிடம் அரிஸ்டாட்டிலின் கட்டுப்படுத்தும் நிலை இருக்கும்.

என்னுடைய முழு முயற்சியும் உங்களுடைய கட்டமைப்பு மறையுமளவுக்கு உங்களை உருகச் செய்வதுதான். மெல்ல மெல்ல எதிரிடையானவற்றையும் நிறைவளிப்பவையாய் நீங்கள் காணத் தொடங்கி விடுவீர்கள். நீங்கள் என்னை நேசித்தால் இது உடனடியாய் நடந்து விடும். காரணம் இதயம் முரண்பாடுகளை அறிந்திருப்பதில்லை. அப்படியே ஒரு முரண்பாடு மேற்பரப்பில் இருந்தாலும், எங்கோ அடியாழத்தில் ஒரு முரண்பாடின்மை இருக்கும் என்பதை அந்த இதயம் அறியும். இந்த முரண்பாடு ஏதோ ஓர் இடத்தில் எதிர்ப்படும். முரண்பாட்டுக்கப்பால் செல்லக்கூடிய ஒன்று அவற்றை ஒன்றாக வைக்கும்.

நான் ஒன்றாயிருக்கிறேன். நீங்கள் என்னைக் கவனித்தால், என்னை நேசித்தால் அந்த ஒன்றாயிருக்கும் தன்மையை - ஒற்றுமை (unity)யை நீங்கள் காண இயலும். என்னுள் இருக்கும் ஒற்றுமையை நீங்கள் கண்டு கொண்டதும் நான் சொல்கிற எதுவும் அந்த ஒற்றுமையில் இருந்தே வெளிப்படுவதைக் காண்பீர்கள். அது முரண்பாடற்றதாயிருக்கும். அறிவுக்கு ஏற்புடைய விதத்தில் நீங்கள் புரிந்துகொள்ள முடிகிறதா இல்லையா என்பதல்ல முக்கியம். இதயம் தனக்குரிய காரணங்களைக் கொண்டிருக்கும். அந்தக் காரணங்கள் பகுத்தறிவின் காரணங்களை விட ஆழமானவை.

எவ்வகையிலும் தங்களை என்னிடம் ஒப்பவித்துக் கொள்ளாத மக்களும், எவ்விதத்திலும் என்னுடன் ஆழ்ந்த தொடர்பு கொண்டிராத மக்களும், அறிந்திராத ஒன்றை நோக்கி என்னுடன் பயணம் செய்யாதவர்களும் நான் எதைச் சொன்னாலும் காது கொடுத்துக் கேட்கிறார்கள். தங்களுடைய வழியில் அவர்கள் அதனைப் புரிந்து கொள்கிறார்கள். விளங்கிக் கொள்கிறார்கள். அப்போது அந்த விசயம் நான் கூறியதாய் இருக்காது, வேறு ஏதோ ஒன்று - அவர்கள் விளக்கிக்கொண்ட பொருள். அதில் நுழைந்துவிட்டிருக்கும். அவர்களுடைய பொருள் விளக்கத்தின் (interpretation) காரணமாய் ஒட்டுமொத்த பண்பும் மாறி, புனிதம் தொலைந்து போய்விடுகிறது. அந்நிலையில் பிரச்சினைகள் தோன்றுகின்றன. அவற்றைத் தாங்களாகவே அவர்கள் செய்து கொள்கிறார்கள்.

நான் கேட்டறிந்த ஒரு கதை:

குற்ற ஒப்புகைக்காகச் சென்ற பாட்ரிக் பாதிரியாரிடம் சொன்னான். 'தந்தையே, என்னுடைய அண்டை வீட்டாரை நான் நேசிக்கிறேன்' என்று.

பாதிரியார் சொன்னார். 'எனக்கு ஆச்சரியமாயிருக்கு. தேவாலய வழிபாடுகளுக்கு வருவதன் பலனை நீ பெற்றுவிட்டிருப்பது எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. இறைவனின் வழிமுறைகள் உனக்குக் கற்பிக்கப்பட்டிருக்கிறது. நல்ல காரியத்தைத் தொடர்ந்து மேற்கொண்டிரு. 'உன் அண்டை வீட்டுக்காரனையும் உன்போலவே நேசி' - அதுவே இயேசு விடுக்கிற முழுமையான செய்தியாகும்.'

பாட்ரிக் வீட்டுக்குச் சென்றான். நன்றாக உடுத்திக்கொண்டு பக்கத்து வீட்டுக்குள் நுழைந்தான். அழைப்பு மணியை ஒலித்து, 'எல்லாம் சரியாத்தானே இருக்கு?' என்றான்.

அடுத்த வீட்டுக்காரனின் மனைவி சொன்னாள். 'ஆல்பர்ட் வெளியில் போயிருக்கார். ஆனா இது பகல் நேரம். இந்தப் பகல் வெளிச்சத்துல... நீ இங்க வர்றதை யாராவது பார்த்துட்டா...'

'ஒண்ணும் ஆகாது. நான் அருட்தந்தை ஓ' ப்ரியனிடம் இருந்து அனுமதி (dispensation) பெற்று வந்திருக்கிறேன்' என்றான் பாட்ரிக்.

உங்கள் அண்டை வீட்டுக்காரரை உங்களைப் போலவே நேசியுங்கள். இயேசு அதுபற்றிக் கூறும்போது முற்றிலும் வேறான பொருளையே கருத்தில் கொண்டிருந்தார். பாட்ரிக் விளக்கிக்கொண்ட பொருள் அதற்கு மாறானது. 'உன் அண்டை வீட்டுக்காரனை நேசி' என்பது ஒரு பிரார்த்தனை, அது ஒரு தியானம். இருப்புணர்வின் முழுமையான செயல்முறை. ஆனால் ஒரு சராசரி மனம் அதைக் கேட்கிறபோது அது வேறொரு பண்பைக் கொண்டு விடுகிறது. நேசம் உறவு நாட்டமாகி விடுகிறது. பிரார்த்தனை அறிவற்ற மோகமாகி விடுகிறது. மனம் ரொம்பவும் தந்திரமானது - தான் விரும்பிய ஒன்றை அடைவதற்காக - எங்கிருந்து எது கிடைத்தாலும் அதைத் தனக்கு ஆதாரமாக்கிக் கொண்டு விடும்.

நான் சொல்வதைக் கேட்கிறபோது விழிப்புடனிருங்கள். நீங்கள் என்னுடைய வார்த்தைகளுக்கு உங்கள் வழியில் பொருள் விளக்கம்

கொள்வீர்கள். நான் 'சுதந்திரம்' என்று சொல்கிறபோது நீங்கள் அதற்கு உரிமம் (license) என்று பொருள் கொள்வீர்கள். நான் 'காதல்' என்று சொல்வதை நீங்கள் 'கலவி' என்று புரிந்து கொள்வீர்கள். கவனியுங்கள். உங்கள் பொருள் விளக்கங்களைக் கூர்ந்து கவனியுங்கள். காரணம் அவை பொறி (traps) களாய் இருக்கின்றன - அந்நிலையில் முரண்பாடுகளை என்னில் நீங்கள் காண்பீர்கள். காரணம், அதற்கு மேலும் நான் அங்கிருப்பதில்லை. தற்போது, அது உங்களுடைய பிரதிபலிப்பாகவே இருக்கும். உங்களுக்குள் பல முரண்பாடுகளை நீங்கள் கொண்டிருக்கிறீர்கள். கிட்டத்தட்ட ஒரு குழப்பத்தின் வடிவமாய் நீங்கள் இருக்கிறீர்கள். உங்களுக்குள் பல மனங்கள் இருக்கின்றன. நீங்கள் பல வழிகளில் விளக்கிக் கொள்கிறீர்கள். அதன்பிறகு உங்களுடைய சொந்த விளக்கங்களிலேயே முரண்பாடுகளைக் காண்கிறீர்கள்.

என்னைக் காது கொடுத்துக் கேளுங்கள். கேட்பதை விடவும் - என்னோடு இருங்கள். அப்போது எல்லா முரண்பாடுகளும் மறைந்து விடும்.



மூன்றாவது கேள்வி தேவதீர்த்தாவுடைய ஓர் அழகிய கதையாகும்.

'பகவானே, 'அங்கிள் டட்லி' பற்றிய உங்கள் கதை வேறொரு மேற்கு வர்ஜீனியக் கதையை எனக்கு நினைவூட்டுகிறது.

அந்நியன் ஒருவன் ஒரு குறிப்பிட்ட இடத்தைத் தேடிச் சென்றபோது வழியைத் தொலைத்து விட்டான். எனவே ஒரு கிழட்டு விவசாயியிடம் வழி கேட்டுக்கொண்டு நின்றான் என்பதாய் போகிறது கதை.

அந்த முதியவன், 'வடக்காக மூன்று மைல் சென்று ஒரு பாலத்தைக் கடக்க வேண்டும். பிறகு வலப்புறமாய் ஆறு மைல் போக வேண்டும். ஒரு பாழடைந்த தானியக் களஞ்சியம் வரும். மரக்கட்டை வேலியிருக்கும் இடத்தில் இடப்புறமாய் திரும்ப வேண்டும். இல்லை, அது சரிப்படாது' என்றான்.

அவன் மீண்டும் தெளிவுபடுத்த முயல்பவனாய், 'இந்தச் சாலையில் நான்கு மைல் போய், ஒரு வாய்க்காலைத் தாண்டினால் ஒரு 'செஸ்ட்-நட்' மரம் வரும். அதற்கு வலப்பக்கமாய் போகிற சாலையில் இரண்டு மைல் சென்றால் 'நிறுத்தக்குறி' இருக்கும். அங்கிருந்து இடப்புறமாய் திரும்பு... இல்லை, மறுபடியும் தப்பா சொல்லிட்டேன்.

மற்றொரு முறையும் சொல்வதற்கு முயற்சித்த அந்த முதியவன், 'க்ரூபர்ஸ் அங்காடியை அடையும் வரை மேற்கு நோக்கிப்போயிட்டே இரு. பாலம் வரும். பாலத்துக்கு வலப்புறமா ஐந்து மைல் போகணும். அப்புறமா ஒரு மஞ்சள் நிற வீடு வரும். அங்கிருந்து வலப்புறம் திரும்பி நின்று ஒடுக்கமான கரை மேடுகளை (ridges)த் தாண்டிப்போகணும்... இல்லை, அதுவும் சரிப்படாது' என்றவன், தீவிரமாய் சிந்தித்து விட்டுச் சொன்னான். 'சாரி, இங்கிருந்து நீ அங்கே போய்ச்சேர முடியாது' என்று.

இந்தக் கதையை நான் எப்போதும் விரும்பியிருக்கிறேன். இது பெரிய அளவில் சிறப்பு வாய்ந்தது. கதையின் இறுதிப்பகுதியை மீண்டும் சொல்கிறேன். 'அவன் சொன்னான், 'சாரி, நீ இங்கிருந்து அங்கே போய்ச் சேர முடியாது.'

உண்மையில் நீங்கள் இங்குதான் இருக்க முடியும். இங்கிருந்து அங்கே செல்ல வழியில்லை. நீங்கள் இங்கிருந்து இங்கேதான் சென்றடைய முடியும். இந்தக் கணத்தில் நீங்கள் அடையக்கூடியது இந்தக் கணத்தைத்தான். அதுதானே எப்போதும் இருப்பது. இன்றைய பொழுதில் இருந்து கொண்டு நாளைய பொழுதை நீங்கள் அடைவதற்கில்லை. இன்றில் இருந்து இன்றுக்குத்தான் நீங்கள் திரும்ப முடியும். எத்தனை முறை முயன்றாலும் - காரணம் நாளை என்பது இன்றில் இல்லை. 'இன்று'தான் இருக்கிறது. அதுவே நிலைபேறுடைய தாகும்.

மனிதன் குடித்திருக்கலாம். ஆனால், சில சமயங்களில் குடிகாரர்கள்தாம் மிகப்பெரிய உண்மைகளை உதிர்க்கிறார்கள். எதனால்? காரணம் குடிகாரர்கள் அரிஸ்டாட்டிலின் தர்க்கமுறையைக் கொண்டிருப்பதில்லை.

அப்போது மது அல்லது போதை மருந்தின் ஆற்றலில் உங்கள் உணர்வு கிளறிவிடப்படுகிறது - அது உங்களுடைய இறுக்கத்தைத்

தணிவிக்கிறது. இங்கு மற்றும் அங்கு, தற்போது மற்றும் பிற்பாடு, இன்று மற்றும் நாளை என்று அரிஸ்டாட்டிலின் தர்க்க முறையில்' ஆராய முற்பட்டிருந்த உங்கள் மூளை பிரித்தறிதலைக் கைவிடுகிறது. பிரிவுகள் மறைகின்றன. நீங்கள் அமைதியாய் உங்களுக்குள்ளாகவே இருந்து விடுகிறீர்கள். முன்பு தொலைத்த குழந்தைப் பருவத்தை நீங்கள் மீட்டெடுக்க முடியும் - ஒவ்வொன்றும் வேறொன்றாய் இருந்ததையும், ஒவ்வொன்றும் வேறொன்றை எதிர்கொண்டு, அதனுடன் ஐக்கியப்பட்டதையும், அங்கே எல்லைகள் இருக்க வில்லை என்பதையும் உங்களால் புரிந்து கொள்ள முடிகிறபோது.

ஒரு குழந்தையைக் கவனியுங்கள். அவன் சிலசமயம் தான் கனவில் தொலைத்த பொம்மையைக் காலையில் கண் விழித்ததும் காணாமல் அழுவதுண்டு. உண்மையில் கனவுக்கும் பகலுக்கும் இடையே எல்லை என்பது இல்லை - கனவுக்கும் நனவுக்கும் இடையே எல்லைக்கோடு எதுவும் கிடையாது. அவை ஒன்றை யொன்று எதிர்கொள்கின்றன. இரண்டறக் கலந்து ஒன்றாகின்றன. குழந்தை முற்றிலும் வேறானதோர் உலகத்தில் வாழ்கிறது - அது ஒருமையின் உலகம், மறை ஞானிகளின் உலகம், இரட்டைத் தன்மையற்ற உலகம். எங்கே தனி வேறுபாடுகள் இல்லையோ, எங்கே பொருள்கள் பிரித்தறியப்படுவதில்லையோ அந்த உலகம் அது. *அத்வைதர்களின் உலகம் அது.

அந்த முதியவன் அன்று செமத்தியாய் குடித்திருக்கலாம். இல்லையேல் உணர்வோடு இருக்கிற ஒருவர் அவ்வாறு பேசுவதற்கில்லை. அவன் கடுமையாக முயன்றான். தன்னுடைய அரிஸ்டாட்டில் தனமான மனதைப் பற்றிப் பிடிக்க அவன் வெகுவாகவே முயன்றிருக்கிறான். மதுவின் தாக்குறவில் மங்கிக் கொண்டிருந்த பழைய வகையினங்களுக்குள் (categories) நுழைய அவன் கடும் முயற்சி செய்தான். ஒரு வழியைக் கண்டுபிடிக்க முயன்று மறுபடியும் மறுபடியும் முடியாமல் போயிற்று அவனுக்கு. கடைசியில் சொல்லி விட்டான் அது நடவாத காரியம் என்று. 'சாரி, நீ இங்கிருந்து அங்கே சென்றவடைவதற்கில்லை.'

---

* அத்வைதர்கள் - பொருள் இரண்டாயிருந்தும் வேறறக் கலந்து நிற்கும் தன்மை அத்வைதம். பரமாத்மாவும் சீவாத்மாவும் ஒன்றெனக் கொண்டவர்கள் அத்வைதர்கள்.

இந்தக் குட்டிக் கதையின் நிறைவுப்பகுதியை ஜென் குருமார்கள் விரும்பக்கூடும். அதன் முக்கியக் கருத்தை அவர்கள் புரிந்து கொள்வார்கள். காரணம் அவர்களும் போதையில் இருப்பவர்கள்தாம் - கடவுளிடம் கொண்ட போதை. மறுபடியும் அது நிகழ்கிறது. வகையினங்கள் மறைகின்றன. வேறுபாடுகள் மறைகின்றன. லாவோட்சு கூறுவார், 'எல்லாரும் தெளிவாக இருக்கிறார்கள். நான் மட்டுமே குழப்ப நிலையில் இருக்கிறேன்' என்று. லாவோட்சுவிற்குக் குழப்பமா? லாவோட்சு சொல்கிறார். 'எது எப்படியிருக்கிறது என்பதை எல்லாரும் அறிவார்கள். நான் மட்டுமே அறியவில்லை. எல்லாருமே மதிநுட்பத்துடன் இருக்கிறார்கள். நான்தான் அறியாமையில் இருக்கிறேன். லாவோட்சு என்ற வார்த்தைக்குப் பொருள் 'கிழவன்' அல்லது 'கிழட்டு முட்டாள்' என்பதாகவே இருக்கும்' என்று. நண்பர்கள் 'கிழவன்' என்ற பொருளில் அவரை 'லாவோட்சு' என்று அழைத்திருக்கலாம். அவரைப் பிடிக்காதவர்கள் 'கிழட்டு முட்டாள்' என்ற பொருளில் அவரை 'லாவோட்சு' என்று அழைத்திருக்கலாம். ஆனால், அவர் இரண்டுந்தான்.

எங்கும் போவதற்கில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். உங்களுடைய 'இங்கு' மற்றும் 'இப்போது' உங்களைச் சுற்றியே இருக்கிறது. நீங்கள் எங்கு சென்றாலும் அது எப்போதும் 'இங்கு' என்பதாகவே இருக்கும். நீங்கள் எங்கு சென்றாலும் அது 'இப்போது' என்பதாகவே தொடர்ந்து அறியப்படும். 'இங்கு' மற்றும் 'இப்போது' என்பவை நிலைபேறுடையவை. மேலும் அவை இரண்டாக இருக்கவில்லை. ஐன்ஸ்டீன் இடமும் காலமும் இரண்டல்ல என்கிற விஞ்ஞான உண்மையை நிரூபித்திருக்கிறார். (மொழியில் வேண்டு மானால் நாம் அவற்றை இரண்டாக அழைத்துப் பழகியிருக்கலாம்) அவற்றை ஒன்றாக்கும் நோக்கில் 'spatio-time' என்றொரு புதிய சொல்லையே அவர் உருவாக்கியிருக்கிறார். அது சரி என்றால் இங்கு மற்றும் இப்போது என இரண்டு இருக்க முடியாது. 'இங்கு-இப்போது' என்கிற வார்த்தை எதிர்காலம் பற்றியது. சற்று முன்பின்னாகவேனும் ஐன்ஸ்டீன் கருத்து வெளியிடும் முறைகளுள் (languages) கிரகிக்கப்படும் போது இந்த வார்த்தைகள் - 'இங்கு இப்போது' தனி வேறுபாட்டை இழந்து விடும்.

சிறுகதை அருமையானது. சிலசமயம் குட்டிக் கதைகளிலும், நாட்டுப்புற கதைகளிலும் (folk-lore) மெய்யறிவு மிகுதியான

அளவில் இருக்கும். அவற்றைக் கேட்டுச் சிரித்து விடாதீர்கள். சிலசமயம் சிரிப்பின் மூலம் உங்களுக்கு அசௌகர்யமாய் படுகிற ஏதோ ஒன்றில் இருந்து நழுவ முற்படலாம். இந்தக் கதைகளை யாரும் எழுதவில்லை. அவை மரங்களைப் போல் வளர்ந்து விட்டிருக் கின்றன. ஆயிரத்தியோரு மனங்கள் அநேக நூற்றாண்டுகளாய் அந்த வேலையைச் செய்திருக்கும். அவை தொடர்ந்து மாறிக்கொண்டும், செப்பனிடப்பட்டும் வந்திருக்கின்றன. அவை மனித குலத்தின் பரம்பரைச் சொத்துக்களில் ஒரு பகுதி. ஒரு நகைச்சுவையை எப்போது கேட்டாலும் உடனே சிரித்து விடாதீர்கள். மறந்து விடாதீர்கள். சிரிப்பது முற்றிலும் சரியான விசயந்தான். ஆனால், சிரிப்பில் நகைச்சுவையைத் தவற விட்டு விடாதீர்கள். அது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த ஏதோ ஒன்றை தன்னுள் மறைத்து வைத்திருக்கும். நீங்கள் அதைப் புரிந்து கொள்ள முடிந்தால் உங்களடைய தன்னுணர்வு (consciousness) வளம் பெறும்.



**'சமீபத்தில் நான் ஒரு பொருளற்ற காட்சியைக் கண்டேன். என்னுடைய வேலையில் அடுத்தடுத்து வைக்கப்பட்ட படிமங்களின் (images) வழியே நான் பேசுகிறேன். அந்தப் படிமம் மறுபடியும் தோன்ற துப்புரவாக்கும் செயல்முறை (clearing process) இடமளிக்குமா? அல்லது நான் மறைவது போலவே அந்த வேலையும் மறைந்து விடுமா?'**

அது சார்ந்திருப்பது. உங்களுடைய வேலை திறத் தொழிலாயின் (profession) நீங்கள் மறைகிறபோது அதுவும் மறைந்து விடும். ஆழ்ந்த தியானத்தில் உங்களுடைய அகந்தை மறையும்போது உங்கள் தொழிலும் மறைந்து போகும். ஆனால் அது ஒரு திறத்தொழிலாக இல்லாமல் வெறும் தொழிலாக மட்டுமே இருப்பின், அது உங்களால் அல்லது மற்றவர்களால் உங்களுக்குள் திணிக்கப்படாமல் அதேசமயம் உங்களுக்குள் மூலாதாரங்களைக் கொண்டிருப்பின், அது ஒரு வேலையாக இல்லாமல் அழைப்பாக இருப்பின், அடியாழத்தில் உள்ள ஊற்றுகள் அவற்றை ஊட்டி வளர்க்கும். அவற்றுக்கு ஊட்டமளிக்கும். பிறகு, அகந்தை மறைகிறபோது உங்கள் வேலையை நீங்கள் முதல் முறையாய் நேசிக்கத் துவங்கி விடுவீர்கள். அந்நிலையில் உங்கள் ஆக்கத்திறன் அதிகரிக்கும்.

அகந்தை மறையும்போது சக்தி மிகப்பெரிய அளவில் வெளிப்படும். காரணம் உங்கள் சக்தியில் பெரும் பகுதியை அகந்தை வீணடித்திருக்கும். சரியாக இருபத்து நாலு மணி நேரம் கவனித்திருங்கள். உங்கள் அகந்தை - கோபத்தில், கர்வத்தில், சிறு பயணங்களில் பெருமளவு சக்தியைப் பயன்படுத்திக் கொண்டிருக்கும். சக்தி நிறையவே வீணாகியிருக்கும். அகந்தை மறையும்போது அத்தனை சக்தியும் உங்களுக்கு உங்களுடைய வேலைக்குக் கிடைப்பதாயிருக்கும்.

அது படைப்பார்ந்ததாயிருக்கக் கூடும். ஆனால் அந்தப் படைப்புத்திறன் வேறானவொரு தரத்தை வேறானதொரு ரசனையை, சுவையைக் கொண்டிருக்கும். அந்நிலையில் அது நீங்கள் படைப்பதாயிருக்காது: உங்களை ஒரு சாதனமாய்க் கொண்டு அது உருவானது போலிருக்கும். உங்களைவிட சிறந்த ஒன்றின் பிடியில் இருந்து கொண்டு நீங்கள் செயல்படுகிற மாதிரி இருக்கும். பிரபஞ்ச இருப்பு உங்களை ஒரு கருவியாய், ஊடகமாய் பயன்படுத்துகிறது எனலாம். உங்களை ஒரு புல்லாங்குழலாக்கி கடவுள் இசைக்கிறார். நீங்கள் வெற்றான உள்ளீடற்ற ஒரு வழி. முழுமை - (பரம்பொருள்) உங்கள் வழியே பாய்ந்தோட நீங்கள் இடமளிக்கிறீர்கள். அதில் ஏதேனும் குறை இருந்தால் அது உங்களுடையதாகவே இருக்கும். அதில் ஏதேனும் அழகிருந்தால் அது கடவுளுடையதாகவே இருக்கும். நீங்கள் தவறு செய்தால் அது உங்கள் தவறு. உண்மையில் ஏதேனும் ஒன்று உங்கள் மூலம் தோன்றியிருப்பின் நீங்கள் இன்பமாய் உணர முடியும். தவறுகள் உங்களுடையவை. ஏதானும் ஒரு வழியில் நீங்கள் தடுக்கப்படுவீர்கள். நீங்கள் ஒட்டுமொத்த வெறுமையில் இருப்பதற் கில்லை. தடைபட்டிருப்பீர்கள். உங்களுக்குள் அடைப்பு இருக்கும். கடவுள் தடையின்றிச் செல்வதற்கு வழி தெளிவாயிருக்காது. ஆனால், நேர்த்தியான ஒன்று நிகழ்கிற போதெல்லாம் - ஓர் ஓவியம், கவிதை, நடனம் இப்படி நிகழ்கிற போதெல்லாம் நீங்கள் இன்பமாய் உணர்வீர்கள். உங்கள் இதயத்தில் பிரார்த்தனை இடம்பெறும். உங்கள் இதயம் நன்றி பாராட்டும்.

அந்நிலையில் உங்கள் படைப்புத்திறன் ஓர் அமைதியை, சாந்தத்தைக் கொண்டிருக்கும். தற்போது; அகந்தையால் குழப்பமும், கிளர்ச்சியும் ஏற்பட்டிருக்கும். அகந்தையுள்ளவர் எதைப் படைத்தாலும் வெற்று ஆரவாரமாகவே நின்று விடும். கவிதை தகுதியானதாய்

இருக்காது. ஆனால் கவிஞன் கூரை மீதேறி கூச்சலிட்டுக் கொண்டிருப்பான். ஓவியம் எவ்வித முக்கியத்துவமுமற்றதாய், அசலான தோற்றம் இல்லாமல், ஒரு போலியாய் இருக்கும். ஆனால், ஓவியனோ கர்வத்துடன் தலையை நிமிர்த்திக் கொண்டு திரிவான். அகந்தையிடம் இருப்பது ஆரவாரந்தான்.

அகந்தை மறைந்து விட்டால் நீங்கள் பல்வேறு வழிகளிலும் தடையின்றிச் செய்வீர்கள். ஆனால் எல்லாமும் அமைதியாய், அடக்கமாய் இருக்கும்.

இது நான் கேட்டறிந்தது:

பேராசிரியர். சார்லஸ் டவுன்செண்ட் கோப்லாண்டிடம் யாரோ கேட்டார்கள். அவர் எதற்காக ஹாலிஸ் ஹால் கட்டடத்தின் கடைசித் தளத்தில், புழுதி படிந்த பழைய அறைகளில் வசிக்கிறார் என்று. அவர் சொன்னார். 'நான் தொடர்ந்து இங்குதான் இருப்பேன். கேம்பிரிட்ஜில் இந்த ஓர் இடத்தில்தான் கடவுள் மட்டுமே எனக்கு மேல் இருக்கிறார்' என்று. சற்று தாமதித்துவிட்டு அவர் சொன்னார். 'அவர் ரொம்பப் 'பிஸி' (busy). ஆனால், அலட்டிக்கொள்வதில்லை' என்று.

ஆம், கடவுள் பெரிய அளவில் 'பிஸி'யாய் இருப்பவர் - இப்பிரபஞ்சமெங்கும் பரவி இருக்கிறாரே. அவர் ஏக காலத்தில் எத்தனை காரியங்களைச் செய்கிறார் என்பதைப் பாருங்கள். அவருடைய விரிவு எந்த அளவிற்கும் உட்படாத வகையில் உயர்ந்தது. ஆயிரத்துக்கும் மேற்பட்ட கைகளுடன் காட்சியளிக்கும். இந்துக் கடவுள்களை நீங்கள் படங்களில் பார்த்திருப்பீர்கள். அவை குறியீடுகளாய் அமைந்தவை. அவருடைய வேலைக்கு இரண்டு கைகள் போதாது என்பதையே அது காட்டுகிறது. மிகப் பிரும்மாண்ட வேலை அவருடையது. மூன்று தலைகளுடன் மூன்று *உருவளவுகளில் நோக்கிக் கொண்டிருக்கும் இந்துக் கடவுள்களைப் பார்த்திருப்பீர்கள். அவருக்கு ஒரேயொரு தலை மட்டும் இருந்தால் தனக்குப் பின்னால் என்ன நடக்கிறது என்பதை எப்படி அறிவார்? அவர் எல்லாப் பக்கங்களிலும் பார்க்க வேண்டியிருக்கிறது. அவர் எல்லா இடங்களிலும் சுறுசுறுப்பாய் இயங்கியாக வேண்டும். ஆயிரத்தியோரு கைகளுடன். ஆனாலும் ரொம்ப அடக்கம். 'நான் இத்தனை வேலைகளைச் செய்திருக்கிறேன் பார்த்தியா?' என்றெல்லாம் மார்தட்டிக் கொள்வதில்லை.

---

* உருவளவு (dimension) நீளம், அகலம், உயரம் அல்லது கனம் ஆகிய அளவுத் தொகுதிகளைக் காட்டுவது. இதனைப் பரிமாணம் என்பர்.

நீங்கள் ஒரு சின்ன வேலையைச் செய்கிறீர்கள் - சில வார்த்தைகளை ஒழுங்கு பண்ணிவிட்டு அது ஒரு கவிதை என்று கருதிக் கொள்கிறீர்கள் - தற்போது உங்களுக்குள் கர்வம் உண்டாகி, களிவெறி கொள்கிறீர்கள். ஏதோ ஒன்றைப் படைத்து விட்டதாய் பீற்றிக் கொள்கிறீர்கள். இரண்டாம் தரமானவர்கள் தாம் கொண்டாடுவார்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். உண்மையிலேயே சிறப்பயில்பு கொண்டவர்கள் உரிமை கொண்டாடுவதில்லை. காரணம், உண்மையான படைப்பாளிகள் ரொம்பவும் அடக்கமானவர்கள். அவர்கள், அது தங்களுடைய உரிமைப் பொருளல்ல என்பதை அறிவார்கள். உண்மையில் அவர்கள் சாதனமாக மட்டுமே இருந்திருக்கிறார்கள்.

மகாகவி ரவீந்திரநாத் தாகூர் மனநிலை சரியில்லை என்றால், ஓர் அறைக்குள் சென்று, கதவடைத்துக் கொள்வார். சில நாட்களுக்குச் சாப்பிட மாட்டார். வெளியில் வரமாட்டார். கடவுளின் குரலைக் கேட்டவண்ணம் அமைதியாய் இருந்து விடுவார். தம்மைத் தூய்மைப்படுத்திக் கொள்வதன் மூலம் ஒரு சரியான சாதனமாகி விடுவார் அவர். அழுவார், புலம்புவார், தொடர்ந்து எழுதிக் கொண்டேயிருப்பார். யாரேனும் கேட்கிற போது அவர் சொல்வார். 'அழகும் நேர்த்தியும் கொண்டதெல்லாம் என்னுடையவை அல்ல. எது மிகவும் சாதாரணமானதோ அதுவே என்னுடையது. அதன் முக்கியத்துவத்தை அதிகரிக்க நான் எதையாவது இணைந்திருக்க வேண்டும்' என்று.

கூலரிட்ஜ் இறந்தபோது - பூர்த்தி செய்யப்படாத நாற்பதாயிரம் கவிதைகளும், கதைகளும் கண்டுபிடிக்கப்பட்டன - ஆம், நாற்பதாயிரம். 'நீங்கள் ஏன் அவற்றைப் பூர்த்தி செய்யாமல் விட்டீர்கள்?' என்று அவருடைய நண்பர்களில் பலரும் அவரிடம் கேட்டதுண்டு. அவர் சொன்னார். 'நான் எப்படி பூர்த்தி செய்ய முடியும். தொடங்கியது அவன் (கடவுள்) அவனல்லவா முடிக்க வேண்டும். என்னால் ஆகக்கூடியது என்ன? ஒருநாள் அவன் என்னை ஆட்படுத்திக் கொண்டு சில வரிகளை எழுதச் செய்தார் - ஒரு வரி விடுபட்டிருந்தது. ஆனால் அந்த ஒரு வரியை நானாக எழுதிச் சேர்ப்பதற்கில்லை. அது பாழ்படுத்துவதாகி விடும். விண்ணில் இருந்து பெற்ற ஏழு வரிகளுடன் மண்ணில் இருந்து ஒரு வரியை நான் இணைக்க முடியுமா? இல்லை, அது சிறகுகளை வெட்டிவிடும். நான்

காத்திருப்பேன். அவன் விரைவு காட்டவில்லை என்றால் அதுகுறித்து வருத்தப்பட நான் யார்?' என்று. உண்மையான படைப்பாளி இப்படித்தான் இருப்பார்.

உண்மையான படைப்பாளி ஒரு படைப்பாளியே அல்லர். அவர் காரணமாக (instrumental) இருப்பவர். மிகபபெரிய சக்திகள் அவரை ஆட்கொண்டிருக்கும். கடவுளின் கட்டுக்கடங்காத சக்திகளால் அவர் ஆட்கொள்ளப்பட்டிருப்பார். கடவுளின் பிரம்மாண்டமான கடல்களும், வானமும் அவரை ஆட்படுத்தியிருக்கும். அவர் உச்சரித்தாலும் அந்த வார்த்தைகள் அவருடையவை அல்ல. அவர் ஓவியத்துக்குத் தீட்டும் வண்ணம் அவருடையதல்ல. அவர் ஆடுகிறார் - ஆனால் ஆட்டி வைத்தபடி ஆடுகிறார். அவர் மூலம் வேறு யாரோ ஆடுகிறார்கள்.

ஆக அது சார்ந்திருக்கிறது. உங்கள் அகந்தை தியானத்துக்குள் மறைந்து விட்டால் உங்களுடைய வேலைக்கு என்ன நேரிடும் என்பதுதான் கேள்வி. அது ஒரு திறத்தொழிலாய் (profession) இருக்குமாயின் அகந்தை மறைந்து விடும். அப்படி மறைவது நல்லதுதான். யாரும் திறத்தொழிலினராய் இருக்க வேண்டும் என்பதில்லை. உங்கள் வேலை உங்களால் நேசிக்கப்பட வேண்டும். இல்லையேல் அந்த வேலை பாழாகி விடும். ஆனால் வலிந்து செய்யப்படுகிற - நீங்களாக இழுத்து விட்டுக் கொள்கிற வேலை உங்கள் ஒட்டுமொத்த வாழ்க்கையையுமே மழுங்கடித்து விடும். உங்கள் வாழ்க்கை சூன்யமாகும். நிறைவற்றதாகி விடும். நீங்கள் ஒருபோதும் முதன்மையளிக்க விரும்பாத ஒருவேலையைச் செய்ய நேரிடுவது பெரிய கொடுமை. அதைத் தற்கொலை என்றுதான் சொல்ல வேண்டும் - உங்களை நீங்களே மெல்ல மெல்லக் கொன்று போடுகிறீர்கள். உங்களுடைய இயக்க மண்டலம் நச்சுத்தன்மை அடைகிறது. யாரும் திறத்தொழிலினராக (prfessional) இருக்க வேண்டும் என்பதில்லை. உங்கள் வேலை உங்கள் பிரியத்துக்குகந்ததாய் இருக்க வேண்டும். அது உங்கள் வழிபாடாய் இருக்க வேண்டும். அது உங்கள் சமயமாய் (religion) இருக்க வேண்டுமேயன்றி தொழிலாக அல்ல.

உங்களுக்கும் உங்கள் வேலைக்கும் இடையே ஒரு வேட்கை இருந்தாக வேண்டும். உங்கள் தொழிலை நீங்கள் கண்டுபிடிப்ப தென்பது ஒரு காதல் சமாசாரம் மாதிரிதான். நீங்கள் அதைச் செய்தாக வேண்டும் என்பதல்ல. அதைச் செய்வதற்காக உங்களை நீங்கள் நிர்ப்பந்திக்க வேண்டியதில்லை. அதற்குமுன் நீங்கள் அறிந்திராத

முற்றிலும் வேறான வழியில், சற்றும் எதிர்பாராத விதத்தில் நீங்கள் அதைச் செய்கிறீர்கள். உங்களுடைய பாத வேலைகளில் ஒரு வித்தியாசமான நடனம் இருக்கிறது. உங்களுடைய ஒட்டுமொத்த அமைவும் முதல் முறையாய் உச்ச அளவில் இயங்குகிறது. அது நிறைவளிக்கிற காரியம். அதன் வழியே உங்கள் இருப்புணர்வை நீங்கள் கண்டு கொள்விர்கள் - அது ஒரு கண்ணாடியாகி, உங்களைப் பிரதிபலிக்கும். அது ஒரு சின்னக் காரியந்தான். ஆனால் பெரிய காரியங்கள் தான் தொழிலாக வேண்டுமென்பதில்லை. நீங்கள் குழந்தைக்கான பொம்மைகள் செய்யலாம் அல்லது காலணிகள் செய்யலாம் அல்லது துணி நெய்து கொண்டிருக்கலாம். சின்னதாய் வேறு எதையேனும் செய்து கொண்டிருக்கலாம்.

அது என்னவென்பது முக்கியமில்லை. ஆனால் நீங்கள் அதை நேசிப்பீர்களாயின், எவ்விதத் தங்கு தடையுமின்றித் தொடர் வீர்களாயின், உங்களை நிறுத்தி வைத்துக்கொள்ளாது. இயல்பாய் நடமிட்டபடி உட்செல்வீர்களாயின் - அது உங்களைத் தூய்மைப் படுத்தும். அது உங்களைப் புனிதப்படுத்தும். உங்களுடைய சிந்தனை கொஞ்சம் கொஞ்சமாய் மறையும். ஒரு ஓர் அமைதியான இசையாயிருக்கும். அது ஒரு வேலை மட்டுமல்ல, உங்கள் இருப்புணர்வும் ஆகும் என்பதை மெல்ல மெல்லப் புரிந்து கொள்வீர்கள். ஒவ்வொரு நடவடிக்கையும் நிறைவேற்றப்பட்டு, உங்களுக்குள் இருக்கிற ஏதோ ஒன்று மலர்ச்சி அடையும்.

தன்னுடைய தொழில் இன்னதென்று கண்டு கொண்டவனே செல்வனாவான். தன்னுடைய வேலையில் ஒரு நிறைவை உணரத் தொடங்குகிறவனே பெரிய செல்வந்தன். அந்நிலையில் மொத்த வாழ்க்கையுமே ஒரு வழிபாடாகிவிடும்.

வேலையே ஒரு வழிபாடாயிருக்க வேண்டும். ஆனால், உங்கள் இருப்புணர்வு மிகுந்த அளவில் தியானிக்கிறபோது மட்டுமே அது சாத்தியம். தியானத்தின் மூலம் நீங்கள் துணிவைச் சேகரிக்கிறீர்கள். திறத்தொழிலை (profession) விட்டுவிட்டு புரிதொழிலை (vocation) மேற்கொள்வதறகான துணிவைத் தியானத்தின் மூலம் திரட்டிக் கொள்கிறீர்கள்.

நீங்கள் தேர்ச்சி பெற்ற ஒன்றைச் செய்வதன் மூலம் செல்வந்த ராகலாம். ஆனால், அந்தச் செல்வம் புறம் சார்ந்ததாகவே இருக்கும்.

புரிதொழில் ஒன்றைச் செய்கிறபோது நீங்கள் ஏழையாயிருக்கலாம். உங்களிடம் அத்தனை பணம் இருக்காதுதான். சமுதாயம் அதற்குப் பொறுப்பேற்காது. காரணம், தனக்கென் சில எல்லைகளைக் கொண்டது அது. நீங்கள் கவிதைகளை எழுதித்தள்ளக்கூடும். ஆனால், அவற்றை வாங்க ஆட்கள் இல்லாது போகலாம். காரணம் சமுதாயத்துக்குக் கவிதைகள் தேவைப்படாது. அது கவிதைகளில்லாமல் தனக்கு இயலுமளவில் இருந்து கொள்ளும். நீங்கள் போரிடவோ, வன்முறையில் இறங்கவோ முனையும்போது அது விலை கொடுக்கும். ஆனால் நீங்கள் அன்பின் பொருட்டு எதையேனும் செய்கிறபோது - அன்பின் வெளிப்பாடாய் கவிதை மாதிரி - சமுதாயம் அதைப் பொருட்படுத்தாது. சமுதாயத்துக்குத் தேவை படையாட்கள், சமுதாயத்துக்குத் தேவை வெடிகுண்டுகள், சமுதாயத்துக்குத் தேவைப்படுவது போர்க்கருவிகளேயன்றி வழிபாடல்ல.

சமுதாயம் உங்களுக்குப் பொறுப்பேற்காமல், நீங்கள் ஏழையாகவே இருக்கலாம். அதனால்தான் சொல்கிறேன் அந்த ஏழ்மையும், நீங்கள் துணிந்தேற்கும் ஆபத்துகளும் மேற்கொள்ளத் தகுதியானவை தாம். காரணம், உள்ளார்ந்த பெருஞ்செல்வங்கள் உங்களுக்குள் நிரம்பி வழிகின்றன. உங்கள் வெளியுலகைப் பொறுத்தவரை நீங்கள் வறுமையில் மடிந்திருக்கலாம். ஆனால், உங்களின் உள்ளார்ந்த இருப்புணர்வைப் பொறுத்தவரை நீங்கள் ஒரு பேரரசராகவே இறந்து போவீர்கள். அதுவே முடிவான குறிக்கோள் என்கிறபட்சத்தில் அது எந்த விதத்திலும் தகுதியானதே.



*'என்னுடைய உடம்பு அசாதாரண அளவில் நோயுற்றிருக்கிறது - ரோகி*

*என்னுடைய மனம் அறிவியல் பூர்வமாய் விருப்பத்துக்கு அடிபணிவதாயிருக்கிறது - போகி என் இதயம் ஏறத்தாழ யோகியைப் போல் இருக்கிறது. சூழ்ச்சித்திறன் இல்லாமல், கபடற்றவனாய், உண்மையை நேசிக்கிறவனாய் கிட்டத் தட்ட ஒரு குழந்தையின் செயல்பாட்டைக் கொண்டிருக்கிறேன். இந்த வாழ்க்கையில் நான் ஞானம் பெறும் வாய்ப்புகள் உள்ளனவா? எனக்கு வழிகாட்டுவதுடன் என்னுடைய நேர்வை (case) கடவுளின் ராஜ்யத்துக்கு*

*விரைவுபடுத்துங்கள். நான் கேடுகெட்ட நிலையில் இருந்து கொண்டு மிகச் சிறந்ததை எதிர்பார்த்திருக்கிறவன்.'*

ஆரோக்கியமாயிருந்தால் உடம்பு நமக்கு உறுதுணையாயிருக்கும். அது உறுதுணையாயிருக்கும் என்பது நிபந்தனையல்ல. உங்கள் உடம்புடனான அடையாளத்தை விட்டுவிடாமல், இந்த உடம்பல்ல நீங்கள் என்பதை உணரத் தொடங்கி விட்டால், அந்நிலையில் இந்த உடம்பு ஆரோக்கியமாக இருக்கிறதா இல்லையா என்பது ஒரு பொருட்டாயிருக்காது. நீங்கள் அதற்கும் அப்பால் போகத் தொடங்கி விட்டால், அதைக் கடந்துவிட்டால், அதற்கு ஒரு சாட்சியாகி விடுவீர்கள். அந்நிலையில் பிணியுற்ற உடம்பும் ஞானம் பெறுவது சாத்தியமாகி விடும். அதன் துன்பங்களை, வேதனைகளை, நலக்குறைவை அது இடைவிடாமல் நினைவுபடுத்திக் கொண்டேயிருக்கும். அது மாறாமல் உங்களைத் தன்னிடம் திரும்ப அழைத்தபடி இருக்கும். அதற்கு அக்கறை தேவைப்படும். அதற்குக் கவனிப்பு தேவைப்படும். அதை மறப்பது சிரமம். நீங்கள் அதை மறக்காவிட்டால் அதற்கும் அப்பால் போவது கடினந்தான். நான் கடினம் என்கிறேனயன்றி சாத்தியமற்றது என்று கூறவில்லை.

எனவே, அதுபற்றி வருத்தப்படாதீர்கள். அது நோயுற்றிருப்பதாய் நீங்கள் உணர்ந்தால், நாட்பட்ட நோயாயிருப்பின் அதை நலம்பெறச் செய்ய வழியேதும் இல்லை. நீங்கள் அதைப்பற்றி மறந்து விடலாம். சாட்சி பாவத்தைப் பெறுவதற்கு நீங்கள் கொஞ்சம் கூடுதலாய் முயற்சிக்க வேண்டும. ஆனால், அம்முயற்சியின் மூலம் நீங்கள் அதைப் பெற முடியும்.

முகமது நல்லாரோக்கியத்துடன் இருந்திருக்கவில்லை. புத்தர் இடைவிடாமல் நோய் வந்து அவதிப்பட்டிருககிறார். அவர் எப்போதும் ஒரு மருத்துவரைத் தன்னுடன் அழைத்துச் செல்வார். அந்த மருத்துவரின் பெயர் ஜீவகன். அவர் நிலைமாறாமல் புத்தரைக் கவனித்துக் கொண்டார். சங்கரருக்குச் சாகும்போது வயது முப்பத்து மூன்று. அவருடைய சரீரம் தகுதியான நிலையில் இருந்திருக்கவில்லை என்பதையே அது காட்டுகிறது. இல்லையேல் இன்னும் கொஞ்சம் காலம் அவர் இருந்திருப்பார். முப்பத்துமூன்று சாவதற்கான வயதல்ல. எனவே, கவலைப்படாதீர்கள். அதையொரு இடையூறாய்க் கொள்ள வேண்டாம்.

இரண்டாவதாக, நீங்கள் சொல்வது - 'என் மனம் விஞ்ஞான பூர்வமாய் விருப்பத்துக்கு அடிபணிகிறது'. அது உண்மையிலேயே விஞ்ஞானபூர்வமாய் விருப்பத்துக்கு அடிபணிகிறதென்றால் நீங்கள் அதில் இருந்து வெளியே வரமுடியும். விஞ்ஞானபூர்வமற்ற ஒரு மனந்தான். திரும்பத் திரும்ப அடிபணிகிற முட்டாள்தனத்தைச் செய்து கொண்டிருக்கும். உங்களிடம் கொஞ்சமேனும் எச்சரிக்கைத்தன்மை இருந்தால், விஞ்ஞான பூர்வமாய் விழிப்புடன் கவனிப்பவராயிருந்தால் சற்று முன் பின்னாகவேனும் நீங்கள் அதில் இருந்து வெளியே வந்து விடுவீர்கள்.

உடலுறவை எடுத்துக் கொள்வோம். அதில் தீங்கு விளைவிப்ப தாய் எதுவும் இல்லைதான். ஆனால் உங்கள் வாழ்க்கை முழுதிலும் அதைத் தொடர்ந்து மேற்கொண்டால் நீங்கள் முட்டாள்தான். அது பாவ காரியம் என்று நான் சொல்ல மாட்டேன். கொஞ்சம் அறிவுக் குறைவானர் என்றுதான் உங்களைச் சொல்ல வேண்டியிருக்கும். உடலுறவு பாவ காரியம் என்று மதம் சொல்லிக் கொணடே இருக்கிறது. நான் அப்படிச் சொல்வில்லை. அது முட்டாள்தனம், அவ்வளவுதான். அதில் வேறேதுமில்லை. அதற்கு இடமளிக்கப்படடிருக்கிறது. ஆனால் நீங்கள் மதிநுட்பம் உடையவராய் இருந்தால் அதை விட்டு வெளியே வந்துவிட முடியும். இன்றில்லா விட்டாலும் ஒருநாள் அதில் இருந்து வந்து விடுவீர்கள். எந்த அளவு அறிவுத்திறன் பெற்றிருக்கிறீர்களோ, அந்த அளவு சீக்கிரமாய் அதைப் புரிந்து கொள்வீர்கள். 'ஆமாம், ரொம்ப சரி. அதற்கொரு காலம் இருக்கிறது. வாழ்க்கையின் ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் அது அர்த்தமுடையதாய் இருந்திருக்கும். ஆனால், அதன்பிறகு ஒருவர் அ:்ல இருந்து வெளியே வந்துதானாக வேண்டும்.' அது கொஞ்சம் குழந்தைத் தனமானதுதான்.

ஒரு கதை சொல்கிறேன்.

வயதான கணவனும் மனைவியும் விவாகரத்து வழக்கிடுவதற்காக நீதிமன்றத்துக்கு வந்திருந்தனர். கணவனுக்கு வயது தொண்ணூற்றியிரண்டு. மனைவிக்கு வயது எண்பத்து நான்கு.

நீதிபதி முதலில் அந்த ஆணிடம் கேட்டார். 'உங்களுக்கு என்ன வயதாகிறது?' என்று.

'தொண்ணூற்றியிரண்டு, யுவர் ஹானர்.'

பிறகு அந்தப் பெண்மணியிடம் அவர் விசாரித்தார்.

'எனக்கு எண்பத்து நாலு வயது' அவள் கூச்சத்துடன் ஒப்புக் கொண்டாள்.

நீதிபதி அந்த மனிதரிடம் கேட்டார். 'உங்களுக்குக் கல்யாணம் நடந்து எவ்வளவு காலமாகிறது?'

'அறுபத்தியேழு ஆண்டுகள்' முகத்தைச் சுளித்துக் கொண்டார் முதியவர்.

'கிட்டத்தட்ட எழுபதாண்டு மண வாழ்க்கையை முடிவுக்குக் கொண்டுவர விரும்புகிறீர்கள், இல்லையா? நம்ப முடியாமல் கேட்டார் நீதிபதி.

அந்த முதியவர் தோள்களைக் குலுக்கியபடி சொன்னார். 'பாருங்கள் யுவர் ஹானர். அதை எந்த வழியில் பார்த்தாலும் போதும்னா போதும்தான்' என்று.

அதை எந்த வழியில் பார்த்தாலும்... நீங்கள் அறிவுத்திறன் உடையவராயிருந்தால் தொண்ணூற்றியிரண்டு வருஷம் காத்துக் கொண்டிருக்க மாட்டீர்கள். போதும்னா போதும்கிற நிலை சீக்கிரமே வந்து விட்டிருக்கும். நீங்கள் எந்த அளவு நுண்ணறிவோடு இருக்கிறீர்களோ அந்த அளவு சீக்கிரமே அது வந்துவிடும். மன விருப்பங்களுக்கு மண்டியிடும் இந்த உலகினைத் தன்னுடைய இளமைக் காலத்திலேயே புத்தர் துறந்து விட்டார். தனது முதல் குழந்தை பிறந்த ஒரு மாதத்திலேயே அவர் அரண்மனையில் இருந்து வெளியேறி விட்டார். போதும் என்கிற மனப்பக்குவம் அவருக்கு குறித்த காலத்துக்கு முன்பாகவே வந்துவிட்டது. அவர் உண்மையிலேயே மிகுந்த அறிவுத்திறன் கொண்ட மனிதர். எந்த அளவு அறிவுத்திறன் இருக்கிறதோ அந்த அளவு விரைவாய் எல்லையை (புலன் உணர்வுகள்)க் கடந்து செல்லலாம்.

ஆக, நீங்கள் உண்மையிலேயே விஞ்ஞானபூர்வமாய் இருந்தால் போதும் என்பதைப் புரிந்து கொள்கிற நேரம் இதுதான்.

நீங்கள் சொல்கிறீர்கள், 'என்னுடைய இதயம் ஏறத்தாழ ஒரு யோகியினுடையது' என்று. அது என்ன 'ஏறத்தாழ?' இதுவல்ல

இதயத்தின் மொழி. 'ஏறத்தாழ' என்பது மனதின் பேச்சு முறை. முழுசாய் இருப்பதை மட்டுமே இதயம் அறியும் - ஒன்று இந்த வகை அல்லது அந்த வகை. 'ஏறத்தாழ' என்கிற மாதிரி அது எதையும் அறிந்திருக்கவில்லை. ஒரு பெண்ணிடம் சென்று 'உன்னை நான் ஏறத்தாழ காதலிக்கிறேன்' என்று சொல்லிப் பாருங்கள். அப்போது உங்களுக்குத் தெரியும்.

ஏறத்தாழ (approximate) எப்படிக் காதலிக்க முடியும்? உண்மையில் அது எதைக் குறிக்கிறது? நீங்கள் காதலிக்கவில்லை என்பதை.

இல்லை. இதயம் இன்னமும் இயங்குவதாய் தெரியவில்லை. உங்கள் இதயத்தில் இருது ஒரு வதந்தியை நீங்கள் கேட்கலாம். ஆனால் அதை நீங்கள் புரிந்து கொள்வதற்கில்லை. இதயம் எப்போதுமே முழுமையானது. அது சார்பாயினும், எதிராயினும் முழுமையானது. அது பிரித்தலை அறியாது. எல்லாப் பிரிவுகளும் (divisions) மனத்தினுடையவை.

உடம்பு நலக்குறைவாயிருக்கிறது. ஒன்றும் பிரச்சினை இல்லை. கொஞ்சம் கூடுதல் முயற்சி, அவ்வளவுதான். மனம், மனம் விருப்பத்துக்கு அடிபணிவது. அதுவும் பெரிய அளவில் பிரச்சினை ஆகாது. சற்று முன்பின்னாகவேணும் நீங்கள் புரிந்து கொள்வீர்கள். அதில் இருந்து வெளியில் வந்து விடுவீர்கள். ஆனால் அந்த மூன்றாவதுதான் உண்மையிலேயே பிரச்சினை.' 'ஏறத்தாழ' பிரயோசனப்படாது. எனவே மறுபடியும் உங்கள் இதயத்தின் அடியாழத்தில் பாருங்கள். உங்களால் முடிந்த அளவு ஆழத்துக்குச் சென்று பாருங்கள், கவனியுங்கள். இதயம் உங்களிடம் பேசவும், முணுமுணுக்கவும் இடமளியுங்கள். யோகா என்றால் தேடல் - உங்கள் இதயம் உண்மையிலேயே யோகாவை விரும்பினால், அதன்மூலம் வாழ்வின் உண்மையைக் கண்டறிய விரும்பினால் - மெய்யாகவே உங்கள் இதயம் தேடலில் இறங்கி விட்டால் எதுவும் அதைத் தடுப்பதற்கில்லை. மன விருப்பத்துக்கு அடிபணிவதோ, நோய்வாய்ப் பட்டுக் கிடப்பதோ அதற்குத் தடையாகி விடாது. இதயத்தால் எந்தவொரு செயல் நிலையையும் புறக்கணிக்க முடியும். மிதித்துச் செல்ல முடியும். இதயமே உங்கள் ஆற்றலின் பிறப்பிடம். இதயத்தின் குரலுக்குச் செவி சாயுங்கள். இதயத்தை நம்புங்கள். இதயத்தோடு செயல்படுங்கள்.

ஞானத்தைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். காரணம் அந்தக் கவலையும் மனத்தினுடையது தான். இதயம் வருங்காலம் பற்றி எதையும் அறிவதில்லை. அது இங்கே, இந்தக் கணத்தில் வாழ்வது. தேடுங்கள், தியானியுங்கள், நேசியுங்கள், இங்கே இந்தக் கணத்தில் வாழ்ந்திடுங்கள். ஞானத்தைப் பற்றிய கவலை 'வேண்டாம். அது தன்னுடைய இசைவில் (accord) வருகிறது. யார் கவலைப் படுகிறார்கள்? நீங்கள் தயாராயிருந்தால் அது தானே வரும். நீங்கள் அதற்கு ஆயத்தமாயில்லாவிடில், இடைவிடாது அதைப்பற்றி சிந்திப்பது உங்களை ஆயத்தப்படுத்தி விடாது. உண்மையில் அந்தச் சிந்தனையே அதற்குத் தடையாகி விடும். எனவே, ஞானத்தைப் பற்றி மறந்து விடுங்கள். அது உங்கள் வாழ்க்கையில் நிகழுமா இல்லையா என்கிற கவலை வேண்டாம்.

நீங்கள் எப்போது தயாராயிருந்தாலும் அது நிகழ்ந்துவிடும். அது இந்தக் கணத்திலும் நிகழக்கூடும். பழுத்த பழம் மரத்தில் தங்குமா, தரையில் விழுந்து விடுந்தானே. முற்றான வளர்ச்சி (ripeness) தேவை, அவ்வளவுதான். எனவே உங்களைச் சுற்றி அனாவசிய பிரச்சினைகளை உருவாக்கிக் கொள்ளாதீர்கள். போதுமானது. நீங்கள் நோய்வாய்ப்பட்டிருக்கிறீர்கள். அது ஒரு பிரச்சினை மன விருப்பத்துக்கு அடிபணிவது, அதுவும் ஒரு பிரச்சினைதான். யோகா, ஞானம் இவற்றில் வைக்கிற அரைகுறையான விருப்பமும் பிரச்சினையே. தற்போது எந்தப் பிரச்சினையும் இல்லை. தயவு செய்து ஞானத்தை இதில் கொண்டு வராதீர்கள். அதை மறந்து விடுங்கள். அதற்கு உங்களிடமோ, உங்கள் சிந்தனையுடனோ, உங்கள் எதிர்பார்ப்புகளுடனோ எதுவும் ஆக வேண்டியதில்லை. நீங்கள் எப்போது ஆசையற்றவராகி விட்டாலும், ஆயத்தமாய் இருந்தாலும் பழம் பழுத்து விடும். அதனுடைய சொந்த இசைவில் அது நிகழ்கிறது.



நீங்கள் இறக்கிறபோது என்னையும் இறக்கச் செய்வீர்களா?

நான் இப்போதே உங்களுக்கு உதவத்தயார். ஏன் நீண்ட காலம் காத்திருப்பது? ஏன் தள்ளிப் போடுவது?

நான் உயிரோடு இருக்கும்போது என்னை நீங்கள் தவறவிட்டால் நான் இறந்துவிட்ட நிலையில் என்னை எப்படி அடைவீர்கள்?

நான் இங்கே இருக்கும்போது நீங்கள் என்னைத் தொடர்விட்டால், நான் போனபிறகு அது உங்களுக்கு மிகவும் கடினமாகி விடும். ஏன் தள்ளிப் போடுவது?

நீங்கள் தாகமாயிருக்கிறீர்கள். நான் இப்போதே அதைத் தணிப்பதற்குத் தயாராய் இருக்கிறேன். நீங்கள் எதற்காக அஞ்ச வேண்டும்? இன்று நீங்கள் அஞ்சினால் நாளையும் அச்சத்துடன்தான் இருப்பீர்கள். நாளைய அச்சம் கூடுதலாகவே இருக்கும். காரணம் இன்றைய அச்சமும் சேர்ந்து கொண்டு விடுகிறது அல்லவா. ஒவ்வொரு நாளும் நீங்கள் அச்சத்தை சேர்த்துக் கொண்டே போகிறீர்கள்.

அதைக் கைவிடுங்கள். சாவை ஏற்கத் தயாராய் இருத்தலே மீண்டும் பிறப்பதற்கான தயார் நிலையும் ஆகும்.

ஓர் அருமையான கதை:

'201, 135, 97 வயதான மூனறு ஆமைகள் லண்டனில் உள்ள பொது விடுதிக்கு ஊர்ந்து செல்வதென்று தீர்மானித்தன. அவை முதலில் 'ஸ்டார் அண்ட் கார்ட்டர்' விடுதிக்குச் சென்றன. ஒரு பதினைந்து நாள் கழித்து அவை அடுத்த விடுதியைச் சென்றடைந்தன. அவை உள்ளே நுழைந்து கொண்டிருந்தபோது மூத்த ஆமை சொன்னது, 'ஏ கண்ணுகளா, என்னுடைய கைப்பையை அந்த இன்னொரு விடுதியில் விட்டுவிட்டேன்' என்று.

மூன்றில் இளைய ஆமை சொன்னது. 'வயசான உன்னால் அவ்வளவு தூரம் போய்வர முடியாது. நான் போய் அதைக் கொண்டுவருகிறேன்' என்று. அது அங்கிருந்து சென்றது.

பத்து நாட்களுக்குப் பிறகு மூத்த ஆமைகள் இரண்டும் மதுபானக் கடைக்குச் சென்றன. அப்போது ஓர் ஆமை சொன்னது. 'உன் பணத்தைக் கொண்டு வரப்போன இளைய ஆர்னால்டு இன்னமும் வந்திட்டிருக்கான்' என்று.

மற்றோர் ஆமை சொன்னது. அவன் அப்படித்தான். அவனை நம்பவே முடியாது, ரொம்ப மந்தமானவன்.'

அப்போது கடை வாயிலில் திடீரென்று ஒரு குரல் கேட்டது. 'நீங்க ரெண்டு பேரும் நாசமாய்ப் போக. அதுக்காகத்தான் நான் போகவே இல்லை.

அப்படியொரு சோம்பலைக் கொண்டு விடாதீர்கள், எதையும் தள்ளிப்போட்டுக் கொண்டு போகாதீர்கள். 'நான் தங்களருகே இருக்கும்போது இறுக்கமாய் உணர்கிறேன். அதற்கு மூன்று தெளிவான காரணங்கள் இருப்பதை நான் காண்கிறேன். முதலாவது நான் சோதிக்கப்பட்டேன். அதனால் கவனமுடன் இருக்கிறேன். இரண்டாவது தங்களிடமிருந்து நான் பெருமளவில் அடைந்திருக்கிறேன். பிரதியாக நான் எதையானும் தரவேண்டும் என்று விரும்பினாலும் அது சாத்தியப்படுவதாய் தெரியவில்லை?

மூன்றாவது, அப்படியேயானாலும் நான் இன்னமும் தங்களிடமிருந்து பெறவேண்டிய நிலையில் இருப்பதாகவே எண்ணுகிறேன். மேலும் அதைத் தவறவிட்டு விடுவோமோ என்கிற அச்சமும் இருக்கிறது.

அது அஜீத் சரஸ்வதியிடம் இருந்து வந்தது (டாக்டர் பட்னீஸ்) இந்த மூன்று காரணங்களுமே உண்மையானவைதாம். அத்துடன் அவர் விழிப்போடு இருப்பதும், விசயங்களை ஊடாடிப் புரிந்து கொள்வதும் எனக்கு மகிழ்ச்சியளிக்கிறது. ஆம், அவையனைத்தும் உண்மையானவையே.

அவர் என்னருகில் இருக்கும் போதெல்லாம், அவர் சிறிதளவு கலவரத்துடனும், உள்ளாகச் சிறிது நடுக்கத்துடனும் இருப்பதை நான் உணர்கிறேன். இவையே காரணங்கள். இவை தகுதியானவை. அதில் தவறேதுமில்லை. ஒருவர் அப்படித்தான் இருக்க வேண்டியிருக்கும்.

என்னுடைய இருப்பை நீங்கள் உணரத் தொடங்கினால் அப்போது இடைவெளியை உங்களால் கண்டுகொண்டு விடமுடியும். பிறகு, மிகுதியான அளவில் பாலமிடப்பட வேண்டியிருக்கும். ஒரு நரம்பியல் உளக்கிளர்ச்சியை (nervousness) நீங்கள் உணரத் தொடங்குவீர்கள். நான் உங்களுக்கு நிறையவே வழங்கியிருக்கிறேன். நீங்கள் எந்த அளவு பெறுகிறீர்களோ அந்த அளவுக்கு மேலும் பெறுகிற திறமையுடையராவீர்கள். இன்னும் பெற வேண்டியிருக்கிறது என்கிற எண்ணமே உளக்கிளர்ச்சியைத் தோற்றுவிக்கும். காரணம் அது ஒரு பொறுப்பு என்றே சொல்ல வேண்டும். அத்துடன் வரவிருக்கிற வாய்ப்பைத் தவற விட்டு விடுவோமோ என்கிற அச்சமும் அதில் உண்டு.

நான் ஒன்றைக் கொடுக்கிறபோது உடனே உங்கள் இதயம் சொல்லும் பிரதியாக ஒன்றைக் கொடுக்க வேண்டும் என்று, அது சாத்தியமற்றது. அதனை நான் அறிவேன். நீங்கள் எதைக் கொடுக்க முடியும்... உங்களைத்தவிர? இம்மூன்று காரணங்களுமே உண்மை யானவைதாம். ஒருவர் உணர்வுடன் இருப்பது நிறைவளிக்கிற விசயம்.



**'தாங்கள் எனக்கு எவ்வளவோ செய்திருக்கிறீர்கள். நான் தேறி வருகிறேனா, இல்லையா என்பதைத் தாங்கள் கேட்கவில்லை. என்னுடைய வேதனையை எளிதாக்குவதோடு, மகிழ்ச்சியை எனக்குச் சுட்டிக் காட்டுகிறீர்கள். தங்களுக்கு நான் என்ன செய்யட்டும்?'**

இது அமிதாவிடம் இருந்து. மெல்ல மெல்ல இதே கேள்வி எத்தனையோ இதயங்களில் எழுகின்றன. நேர்த்தியான கேள்வி. ஆனால், அதுகுறித்து கவலைப்படாதீர்கள். எனக்காக எதையும் செய்யத் தேவையில்லை. இருங்கள், அப்படியே இருங்கள். எதையாவது செய்ய வேண்டும் என்கிற வரையறையுடன் சிந்திக்காதீர்கள். ஒன்றும் செய்ய வேண்டாம். ஆனால், நீங்கள், நீங்களாகவே இருப்பதன் மூலம் எனக்குப் பெருமளவு மகிழ்ச்சியை அளிக்க முடியும். நான் முன்பு மகிழ்ச்சியாயில்லை என்பதல்ல. ஆனால் தன்னுடைய தோட்டத்து ரோஜாச் செடி பூத்துக் குலுங்குகிறபோது ஒரு தோட்டக்காரன் அடைவானே அந்த மகிழ்ச்சி அது. உங்கள் நடுவே இருக்கும் ஒருவர் இருப்புணர்வுடன், மலர்ச்சி அடைகிறபோது நான் பெரிய அளவில் மகிழ்ச்சி அடைகிறேன்.

ஓர் ஓவியர் தனது ஓவியத்துக்கு வண்ணம் தீட்டுவது போல், நான் உங்கள் பயன் கருதி செயல்படுகிறேன். ஒரு கவிஞனின் உழைப்பு அவனுடைய கவிதையில். என்னுடைய கவிதைகளாய், ரோஜாக்களாய், ஓவியங்களாய் நீங்கள் இருக்கிறீர்கள். ஓவியம் போதும், வேறெதுவும் தேவையில்லை.



**'தயவு செய்து இசையையும், தியானத்தையும் பற்றிப் பேசுங்கள்.'**

இவை இரண்டல்ல. இசையே தியானமாயிருக்கிறது - தியானம் ஒரு குறிப்பிட்ட பரிமாணத்தில் படிக உருவாக்கம் (crystallize) பெற்று விடுகிறது. தியானமே இசையாகிறது - இசை கரைந்து பரிமாண மற்றதாகி விடுகிறது. அவை இரண்டாகாது.

நீங்கள் இசையை விரும்பினால், ஒரு தியானம் நிகழ்வது போன்ற உணர்வைத் தருவதால் மட்டுமே அதை விரும்புவது. அது உங்களை முழுவதுமாய் ஈடுபடுத்திக் கொண்டு விடுகிறது. நீங்கள் ஒரு குடிகாரரைப் போல் ஆகிவிடுகிறீர்கள். இனம் தெரியாத ஏதோவென்று உங்கள்மீது இறங்கி வருகிறது... கடவுள் முணுமுணுக்கத் தொடங்குகிறார். வேறானதொரு சந்தத்தில் (rhythmn) உங்கள் இதயம் அடித்துக் கொள்கிறது. அது பிரபஞ்சத்துடன் இசைவுடையதாகிறது. எதிர்பாராத விதத்தில் முழுமையுடன் (பரம்பொருள்) இணைந்து பரவசம் எய்தப் பெறுகிறீர்கள். ஒரு நுட்பமான நடனம் உங்கள் இருப்புணர்வினுள் பிரவேசிக்கிறது. காலகாலமாய் மூடிக்கிடந்த கதவுகள் திறந்து கொள்கின்றன. ஒரு புதிய இளங்காற்று உங்களுக்குள் நுழைகிறது. நூற்றாண்டுத் தூசிகளை அது துடைத்துப் போடுகிறது. நீங்கள் ஒரு குளியலை மேறகொண்டதாய் உணர்கிறீர்கள். ஆன்மாவைத் தூய்மை செய்கிற குளியல். அந்த நீர்ப்பொழிவு உங்களைச் சுத்தப்படுத்தி, உற்சாகமூட்டுகிறது. நீங்கள் முதன்மை யானவராகி விடுகிறீர்கள்.

இசையில் இருக்கிறது தியானம். தியானத்தில் இருக்கிறது இசை. ஒரே காட்சியாய் அணுகுவதற்கான இரண்டு வாயில்கள் அவை.

**'உங்கள் இருக்கையில் நீங்கள் அமர்ந்திருப்பதைக் காணும்போது நான் மேலும் மேலும் குழப்பமடைகிறேன். நீங்கள் நம்பமுடியாத அளவு அமைதியாய் அமர்ந்திருக் கிறீர்கள்,**

**நீங்கள் எடையற்றவராய் தெரிகிறீர்கள்.**

**உங்களைப் பொறுத்தவரை புவியீர்ப்பு விதி என்ன வாயிற்று?'**

புவியீர்ப்பு விதியுடன் என்ன இருக்கிறது? நீங்கள் தியான நிலையை அடைந்து விட்டால் வேறொரு விதிதான் உங்களுக்கு ஏற்புடையதாயிருக்கும். அது ஆண்டவனின் எல்லையற்ற

அன்பென்னும் (grace) விதி. நீங்கள் வேறோர் உலகத்துக்கு உரியவராகி விடுகிறீர்கள். அது அருளுலகம். ஏதோவொன்று உங்களை மேல்நோக்கி இழுத்தபடி இருக்கும். புவியீர்ப்பு விசை உங்களைக் கீழ்நோக்கி இழுக்குமே அப்படி. குறிப்பிடவியலாத ஒன்று உங்களை மேல்நோக்கி இழுத்துக் கொண்டே இருக்கும்.

புவியீர்ப்பு விசையுடன் உங்களுக்கு ஆக வேண்டியது எதுவும் இல்லை. உங்கள் இருப்புணர்வினுள் ஒரு புதிய வாசலை நீங்கள் திறக்க வேண்டியதுதான். அங்கிருந்து இறைவனின் அருள் விதி உங்களுக்குக் கிடைக்கக் கூடியதாயிருக்கும்.

**சூத்திரம் – 15   க்ரமாண்யத்வம் பரிணாமான்யத் வேஹேது**

மாற்றத்தில் தொடர்ந்து வருகிற வேறுபாடுகளே பல்வேறு பரிணாமங்களுக்கும் காரணம்.

**சூத்திரம் – 16   பரிணாமத்ரய சம்யமம ஆததீ தானாகத ஞானம்**

மூன்றுவிதப் பரிணாமங்களின் மீதும் சம்யமம் செய்தால் கடந்த காலம் மற்றும் எதிர்காலத்தைப் பற்றிய அறிவு உண்டாகும்.

**சூத்திரம் – 17   'சப்த அர்த்த பிரத்யயாணம்**
**இதரேத்ரா அதி யாசாத்**
**சம்கராகத் பிரவிபாக சம்யமாத்**
**சர்வ புதருத ஞானம்'**

பொதுவாகச் சேர்ந்திருப்பவையான சொல், பொருள், அறிவு இவற்றின் மீது சம்யமம் செய்வதால் உயிரினங்களின் ஒலிகளைப் புரிந்து கொள்ளும் ஆற்றல் உண்டாகிறது.

**சூத்திரம் – 18   சம்ஸ்கார சாட்சாத் கரணாத் பூர்வ ஜாதி ஞானம்**

சம்ஸ்காரங்களைத் தெரிந்து கொண்டால் முற்பிறவி பற்றிய அறிவு உண்டாகும்.

❖ பிரடெரிக் நீட்சேயின் 'The Gay Science' நூலில் இருந்து ஒரு நீதிக்கதை:

'பித்துப் பிடித்த ஒருவன் கையில் லாந்தர் விளக்குடன் சந்தைப் பேட்டைக்குள் நுழைந்தான். 'நான் கடவுளைக் கண்டேன்! நான் கடவுளைக் கண்டேன்!' என்று கத்தினான். ஆனால் வேலைப் பரபரப்பில் இருந்த கூட்டம் அவனுடைய கூச்சலில் அக்கறை காட்டவில்லை. அவனுடைய நகைப்புக்கிடமான கோமாளித் தனத்தைக் கண்டு பெருங்குரலெடுத்துச் சிரித்தார்கள். திடுமென்று அவர்கள் பக்கம் திரும்பிய அந்த மனிதன் அவர்களிடம் கேட்டான். 'கடவுள் எங்கே இருக்கிறார்? நான் உங்களுக்குச் சொல்கிறேன். அவரை நாம் கொன்று விட்டோம். ஆனால், அவனுடைய அறிவிப்பில் இருந்த வன்மத்தை அவர்கள் அசட்டை செய்துவிடவும், அவன் தனது கையில் இருந்த லாந்தரை நிலத்தில் வீசியடித்துவிட்டு, 'நான் ரொம்பவும் முன்கூட்டியே வந்து விட்டேன். எனக்கு உரிய காலம் இன்னும் வரவில்லை. இந்த மிகப்பெரிய நிகழ்ச்சி இன்னும் தொடங்கியபாடில்லை?

இது தனிச்சிறப்பு வாய்ந்த ஒரு கதை. மனிதன் வளர்ச்சி காண்பதைப் போலவே அவனுடைய கடவுளும் மாறிக் கொண்டிருக்கிறார். அப்படியிருப்பதற்குக் காரணம், மனிதன் தனது கடவுளை தன்னுடைய சாயலாகவே படைத்துக் கொண்டதுதான். அது ஒன்றும் மறுதலையானது (vice versa) அல்ல. அது விவிலிய நூலில் கடவுள் தனது சாயலாகவே மனிதனைப் படைத்தார் என்று சொல்லப்படடது போவாகாது. மனிதனின் படிமம் (image) மாறும்போது அவனுடைய கடவுளும் மாறுகிறார் என்பது தெளிவு. மனிதனின் வளர்ச்சியில் கடவுள் முற்றாக மறைகிற ஒரு பகுதி வரவே செய்கிறது. கடவுளைத் தனி நபரின் கடவுளாய் பார்ப்பது மனித மனதின் பக்குவமின்மையையே காட்டும்.

பிரபஞ்ச இருப்பைத் தெய்வத்தன்மை கொண்டதாய் காண்பது முற்றிலும் வேறான கருத்தமைவு. கடவுள் உயரத்தில் எங்கோ இருந்துகொண்டு இவ்வுலகை ஆள்வதாகவும், தன் கட்டுப்பாட்டில் வைத்துப் பரிபாலனம் செய்வதாகவும் கருதிக் கொள்வது அபத்தம். மனிதன் மன முதிர்ச்சி பெற்றுவிட்டால் அத்தகைய அபத்தங்கள் மறைந்துவிடும். கடவுளைப்பற்றி குழந்தைப் பருவத்தில் உருவாக்கிக் கொண்ட குழந்தைத்தனமான கருத்து அது. ஒரு சின்னக் குழந்தை கடவுளைப் புரிந்துகொள்ள வேண்டுமென்றால், தன்னுடைய இருப்புணர்வுக்கேற்பவே அது புரிந்து கொள்ளும்படி இருக்கும். மனித குலம் வளர்ச்சி பெற்று, மன முதிர்ச்சி அடைகிறபோது அந்தக் கடவுள் செத்துப் போய்விடுவார். பின்பு, முற்றிலும் மாறுபட்டதொரு பிரபஞ்ச இருப்பு தோன்றும். அப்போது பிரபஞ்சமே தெய்வத்தன்மை கொண்டதாய் தெரியும் - அது கடவுள் இருக்கிறார் என்பதால் அல்ல.

தனிப்பட்ட கடவுள் இல்லை என்பதை நீட்சேயால் கூட தாங்கிக்கொள்ள முடியவில்லை. அவர் பித்துப் பிடித்தவரானார். தன்னுடைய உணர்வுத் திறனுக்கு என்ன ஆயிற்று என்று புரிந்துகொள்ளக்கூட அவர் தயாராயில்லை. தன்னளவில் அவர் ஒரு குழந்தையாகவே இருந்தார். அவருக்குத் தனிப்பட்ட முறையில் ஒரு கடவுள் தேவைப்பட்டது. அவர் அதன்பேரில் தியானம் செய்தார். அப்படித் தியானம் செய்யும்போது கடவுள் வானத்தில் இல்லை என்பதை உணர்ந்தார். அவர் (கடவுள்) நம்மால் கொன்று போடப்பட்டார் என்பதையும் உணர்ந்தார்.

உண்மையில் கடவுள் நம்மால் தோற்றுவிக்கப்பட்டிருந்தால் அது நம்மால் கொல்லப்பட்டிருக்கக் கூடுந்தானே. நீங்கள் குழந்தைகளாய் இருந்தபோது பொம்மைகளை வைத்துக்கொண்டு விளையாடினீர்கள். வளர்ச்சி பெற்றதும் அந்தப் பொம்மைகளை எல்லாம் மறந்து போனீர்கள் இல்லையா? தன்னுடைய குழந்தைப் பருவத்தில் தான் தோற்றுவித்த கருத்தமைவை, வளர்ந்த பின் மனிதனும் அப்படித்தான் கைவிடுகிறான். எதிர்பாராமல் ஒருநாள் வீட்டின் ஒரு மூலையில் பழைய பொம்மை ஒன்று தட்டுப்படுகிறது. அந்த பொம்மையை நீங்கள் எந்த அளவு நேசித்தீர்கள் என்பது அப்போது உங்கள் நினைவுக்கு வருகிறது. ஆனால் தற்போது அது அர்த்தமற்றதாய் தெரியும். நீங்கள் மாறிவிட்டீர்கள்.

மனிதன் தனக்கென்று ஒரு கடவுளைப் படைத்தான். பிறகு அவனே அதை அழித்து விட்டான். இந்த மெய்யுணர்வை நீட்சேயால்

தாங்கிக்கொள்ள முடியவில்லை. அவ்ன் பித்துப் பிடித்தவன் போலானான். தனக்கு நேரிட்ட உள்ளுணர்வை எதிர்கொள்ள அவன் தயார் நிலையில் இருந்திருக்கவில்லை. அவனுடைய பித்து நிலையே அதைக் குறிப்பாகத் தெரிவிக்கும்.

ஆனால், கிழக்கில் பதஞ்சலியோ இறை நம்பிக்கையற்றவர். பதஞ்சலியைப் போல் கடவுள் நம்பிக்கையில்லாத ஒருவரை நீங்கள் பார்த்திருக்க முடியாது. ஆனால் அது ஒன்றும் அவருடைய அமைதியைக் குலைத்து விடவில்லை. காரணம் உண்மையிலேயே வளர்ச்சியுற்ற மனிதர் அவர். தன்னுணர்விலும் சரி, மனப்பக்குவத்திலும் சரி, முழுமையானவர். புத்தருடைய நோக்கிலும் கடவுள் இருந்திருக்கவில்லை.

தனிப்பட்ட முறையிலான கடவுள் இருந்திருப்பின் அவர் நீட்சேயை மன்னித்திருக்கக் கூடும். காரணம் இந்த மனிதருக்கு இன்னமும் தான் தேவைப்படுவது அவருக்குப் புரிய வந்திருக்கும். நீட்சே இன்னமும் மாறுபட்ட கருத்து, குழப்பம் உடையவராகவே இருந்தார். அவருடைய இருப்புணர்வில் ஒரு பாதி 'ஆமாம்' என்றும், மறுபாதி 'இல்லை' என்றும் சொல்லிக் கொண்டிருந்தது. கடவுள் கவுதம புத்தரையும் மன்னித்திருப்பார். அவர் கடவுள் இல்லை என்று மறுத்திருந்த போதும். ஆனால் பதஞ்சலியை அவர் மன்னிக்கவே மாட்டார். காரணம், பதஞ்சலி கடவுள் இல்லை என்று மறுத்ததோடு, அந்தக் கருத்தையே ஒரு சாதனமாய் - உபாயமாய் பயன்படுத்தவும் செய்தார். அவர் சொன்னார். 'மனிதனின் முடிவான (ultimate) வளர்ச்சிக்காக, கடவுள் என்கிற கருத்தமைவையும் ஓர் ஆதாரமாகப் பயன்படுத்தலாம்' என்று. பதஞ்சலி கடவுளைக் கடுமையான முறையில், கவுதம புத்தரை விடவும் கடுமையான முறையில் பயன்படுத்தியிருக்கிறார். காரணம், நீங்கள் இல்லை என்று சொல்கிறபோது அதில் ஒரு குறிப்பிட்ட உணர்ச்சி இருக்கும். நீங்கள் 'ஆம்' என்று சொல்கிறபோதும் அதில் ஒரு குறிப்பிட்ட உணர்ச்சி இருக்கும். அன்பிலாகட்டும், வெறுப்பிலாகட்டும் ஒரு சீற்ற உணர்ச்சியைக் கண்டுகொள்ள முடியும். பதஞ்சலி முற்றிலும் வேறுபட்டவர். அவர் சொல்கிறார். 'ஆகா, கடவுள் என்கிற கருத்தைப் பயன்படுத்திக் கொள்ளலாமே' என்று. உலகம் அறிந்திருந்த நாத்திகர்களிலேயே மிகப்பெரிய ஆள் அவர்தான்.

ஆனால் நாத்திகம் பற்றிய மேற்கின் கருத்து முற்றிலும் வேறானதாகும். அது இன்னும் பக்குவமடையவில்லை. அது

ஆத்திகர்களின் அதே தளத்தில் அமைந்தது. ஆத்திகன் 'கடவுள் இருக்கிறார்' என்று குழந்தைத்தனமான சொற்பாங்கில் சொல்லிக் கொண்டிருப்பான், நாத்திகனோ தொடர்ந்து அதை மறுத்துக் கொண்டிருப்பான். 'கடவுள் இல்லை' என்று. அவர்கள் இருவரும் ஒரே தளத்தில் இருப்பவர்கள்தாம். பதஞ்சலியோ உண்மையான நாத்திகர். ஆனால் அதற்காக அவர் சமயத்திற்கு எதிரானவர் என்றாகி விடாது. அவர்தான் உண்மையிலேயே சமயப்பற்றுடைய மனிதர். உண்மையிலேயே சமயத்தில் ஈடுபாடுள்ளவனால் கடவுளை நம்ப முடியாது. அது ஒரு முரண்பாடாய் தோன்றலாம்.

உண்மையிலேயே சமயப்பற்றுடைய மனிதனால் கடவுளை நம்ப முடியாது. காரணம் கடவுளை நம்புவதாயின் அவன் பிரபஞ்ச இருப்பை இரண்டாகப் பிரித்துக் கொண்டுவிட வேண்டும் - கடவுள் இல்லை, படைத்தவன் படைப்பு, இந்த உலகம் மேலுலகம், பொருள் மனம் என்று. அவன் பிரித்துணர வேண்டியிருக்கும். அவன் சமய நம்பிக்கை உடையவன் என்கிறபோது அவனால் எப்படிப் பிரித்துணர முடியும்? அவனுக்குக் கடவுளிடத்தில் நம்பிக்கை இல்லை. பிரபஞ்ச இருப்பில் உள்ள தெய்வத்தன்மை (divinity) யை மட்டும் அவன் புரிந்து கொண்டிருக்கிறான். பிரபஞ்சத்தில் அவன் காண்கின்ற எல்லா வற்றிலும் தெய்வத்தன்மை இருக்கிறது. அந்நிலையில் ஒவ்வோரிடமும் ஒரு கோயிலாய் காட்சியளிக்கும். நீங்கள் எங்கு சென்றாலும், எதைச் செய்தாலும் அதில் கடவுள் இருக்கிறது. எல்லாமும் - உங்களையும் சேர்த்து தெய்வத்தன்மை உடையதாகிறது.

யோகாவை ஒரு முழுமையான அறிவியல் எனலாம். அது நம்புதலைக் கற்பிக்கவில்லை. அறிந்து கொள்வதற்குக் கற்பிக்கிறது. 'நீங்கள் கண்ணை மூடிக்கொண்டு பின்பற்றுங்கள்' என்று அது கூறவில்லை. அது 'உங்கள் கண்களைத் திறந்து கொள்ளுங்கள்' என்று கூறுவதுடன், எப்படித் திறப்பது என்பதற்கான முறை (method) யையும் வழங்குகிறது. உங்கள் தொலைநோக்கு பற்றிய அனைத்தையும் அது சொல்கிறது. தொலைநோக்கை எப்படிப் பெறுவது, பார்க்கும் திறமை, கண்கள் என்று இருப்பனவற்றை அது வெளிப்படுத்தும். நீங்கள் எண்ணத்தில் உருவாக்கக் கூடியவற்றைவிட அதிகமாகவே அது இருக்கும். நீங்கள் ஒன்று திரட்டும் உங்களுடைய கடவுள்கள் எல்லாவற்றையும் விட அதிகமாகவே இருக்கும்.அது அளவிற் கெட்டாத அழகும், நேர்த்தியும் கொண்டது.

இந்த நீதிக்கதை பற்றி இன்னொரு விசயம். அந்தப் பித்துப்பிடித்த மனிதன் சொன்னான். 'நான் முன்கூட்டியே வந்து விடடேன். எனக்கு உரிய நேரம் இன்னும் வரவில்லை' என்று. பதஞ்சலி உண்மையில் ரொம்பவே முன்னதாய் வந்துவிட்டார். அவருக்கு உரிய நேரம் இன்னும் வரவில்லை. தன்னுடைய நேரத்துக்காக அவர் காத்திருக்கிறார். எப்பவும் அப்படித்தான் ஆகிறது. மெய்ம்மையைத் தெளிவாய் புரிந்து கொண்டவர்கள் எப்போதும் உரிய காலத்துக்கு முன்பாகவே வந்து விடுகிறார்கள். சிலநேரம் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பாகவேவும். பதஞ்சலி இன்னமும் காலத்துக்கு முந்தியவர்தான். ஐயாயிரம் ஆண்டுகள் சென்றபின்னும் அவருடைய காலம் இன்னும் வந்தபாடில்லை. மனிதனின் அகவுலகம் இன்னமும் அறிவியலுக்குரியதாகி விடவில்லை. அடித்தளங்களையும், அமைப்பையும் இயற்கை அவனுக்கு வழங்கியிருக்கிறது. மனித குலம் தன்னை நெருங்கி வந்து, புரிந்து கொள்ளும் என்று அந்த அமைப்பு காத்திருக்கிறது.

நம்முடைய மதங்களும், மதங்களாய் கருதப்படுகிறவையும் இளைஞருக்குரியவை. பதஞ்சலி ஓர் அரக்கர். மனித உருவில் இருந்தாலும் மனிதனைவிட மாபெரும் ஆற்றலுடையவர். அவர் உச்ச நிலை அடைந்தவர். நீங்கள் பார்க்க முடியாத உயரங்கொண்ட சிகரம்! அந்த மலை முகடு மேகக்கூட்டங்களில் எங்கோ மறைந்திருக்கும். ஆனால் அவரைப்பற்றிய எல்லாமும் தெளிவானவையே. இந்த மனிதர் பதஞ்சலியிடம் இறைமை இணைவுப் பண்பு என்கிற மாதிரி எதுவும் இல்லை. அவர் புதிரானவற்றை விளங்க வைக்கும் கணித மேதை. அவர் முரண்பாடுகளைக் கையிலெடுக்கும் தர்க்க சாஸ்திர வல்லுநர். அறிந்திராதவற்றை ஆய்வு செய்யும் அறிவியல் நிபுணர். நீங்கள் எண்ணிப் பார்க்கவே முடியாது. ஒரு மனிதர் ஒட்டுமொத்த அறிவியலையும் ஒரு நிலையில் வைப்பார் என்பதை. அறிவியல் காத்திருக்கிறது மனித குலம் தன்னை நெருங்கி வரும், புரிந்து கொள்ளும் என்று.

மனிதன் எதை அறிந்துகொள்ள விரும்புகிறானோ அதை மட்டுமே அறிந்து கொள்கிறான். அவனுடைய மனதால் உணரும் திறன் (understanding) அவனது ஆசைகளின் ஆதிக்கத்துக்குட்பட்டு விடுகிறது. அதனால்தான் பதஞ்சலி, புத்தர், ஜராதுஷ்ட்ரர், லாவோட்சு ஆகியோர் தாங்கள் வரவேண்டிய காலத்துக்கு முன்னதாகவே

வந்துவிட்டதாய் உணர்ந்தனர். ஏனெனில் மனிதன் இன்னமும் விளையாட பொம்மைகள் வேண்டும் என்கிறான். அவன் வளர்ச்சியடையத் தயாராயில்லை. அவன் வளர்ச்சியடைய விரும்பவில்லை. அவன் அறிவற்றவற்றைப் பற்றிக் கொண்டிருக்கிறான். அவன் அறியாமையில் நிறையவே முதலீடு செய்திருப்பதுடன் தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ளவும் செய்கிறான்.

உங்களைச் சரியாகக் கவனியுங்கள். நீங்கள் கடவுளைப் பற்றிப் பேசும்போது - உங்களுடைய கடவுளைப் பற்றியே பேசுகிறீர்கள். உங்கள் கடவுள் எந்த வகையினத்தைச் சேர்ந்தவராயிருப்பார்? அது உங்களைவிட அதிகரிக்கப்பட்ட அளவினதாய் இருக்க முடியாது. உங்களைவிட குறைந்த அளவிலேயே இருக்க முடியும். அது உங்களைவிட அழகானதாய் இருக்க முடியாது. உங்களைவிட அவலட்சணமாகவே இருக்கும். அது ஐயமற்றதாய் இருக்காது. குழப்பத்துக்குரியதாகவே இருக்கும். காரணம், கடவுள் பற்றிய கருத்தாக்கத்தில் நீங்களும் தொடர்புடையவராய் இருக்கிறீர்கள். அது உங்களைவிட உயர்ந்ததாய் இருக்க முடியாது. பெரும்பாலும் உங்கள் உயரமே அந்தக் கடவுளின் உயரமாயிருக்கும்.

மக்கள் தங்களுடைய ஆசைகளுக்கும், பேராவலுக்கும், தன்முனைப்புக்கும் ஏற்பவே சிந்திக்கிறார்கள். ஒவ்வொன்றும் அதன் சாயையைக் கொண்டு விடுகிறது.

முல்லா நஸ்ருதீன் தேர்தலில் போட்டியிட்டார்.

அவருக்கு மூன்று வாக்குகள் மட்டுமே கிடைத்தது. அதனை அறிந்த அவருடைய மனைவி அவர் பக்கம் திரும்பி, 'நீர் இன்னொரு பொம்பளையை வச்சிட்டிருக்கிறது எனக்குத் தெரிஞ்சதுதான்'.

ஒரு வாக்கு நஸ்ருதீனுடையது. இன்னொன்று அவர் மனைவியினுடையது. ஆனால் அந்த மற்றொரு வாக்கு எங்கிருந்து வந்தது? பொறாமை கொண்ட மனம் பொறாமையோடுதான் சிந்திக்கும். உடைமைத்தனமுடைய (possessive) மனம் உடைமைத் தனத்தோடுதான் சிந்திக்கும். கோபமுள்ள மனம் கோபப் பாங்குடன்தான் சிந்திக்கும்.

---

* இறைமை இணைவுப் பண்பு (mysticism) - மனிதனுடைய ஆன்மா இறைவனுடன் கணநேர இணைவு அடையும் நிலை. தன் மனதையும் அறிவையும் மனிதன் இறைவனிடம் சரணடையச் செய்கிறான்.

யூதர்களின் கடவுளைப் பாருங்கள். ஒரு மனிதனின் உடைமைத் தனத்தை அவரிடம் நீங்கள் காண முடியும். ஒரு மனிதன் எந்த அளவு அகந்தை கொள்வானோ அந்த அளவு அகந்தை கொண்டிருப்பார் அவர். ஒரு மனிதனைப் போலவே அவரும் பழிவாங்கும் பாங்கில் இருப்பார். அவர் எவ்வகையிலும் கடவுட் தன்மையோடு காட்சியளிக்கவில்லை. புராணக் கதையில் வரும் ஆதாம் ஏடன் தோட்டத்தில் இருந்து சற்றும் இரக்கமின்றி வெளித்தள்ளப்பட்டதில் கடவுளின் கைங்கர்யமே வெளிப்பட்டது. ஆதாம் கீழ்ப்படிய மறுத்தான் என்பது காரணமாயின், அந்தச் சிறிய தவறைக்கூட பொறுத்துக்கொள்ள முடியாத கடவுள் எதில் சேர்த்தி? ஒரு மனிதனின் சிறிய சுதந்திரத்தைக் கூட அவரால் சகித்துக்கொள்ள முடியவில்லை. அந்தக் கடவுள் ஓர் அடிமைக்கு எஜமானனேயன்றி கடவுளாக மாட்டார்.

உண்மையில் ஆதாம் செய்த பாவம் என்ன? எதையும் அறிந்து கொள்கிற ஆவல் தவிர்த்து வேறெதுவும் இல்லை. காரணம் இதுதான். கடவுள் சொன்னார். ‘இந்த மரத்தின் கனியைப் புசிக்காதே’ என்று. ‘இது அறிவின் மரம்’ என்றார் அவர். இல்லையெனில் சிந்திப்பது இயலாத காரியம். அந்தச் சிறிய செய்கையை நீங்கள் ஒரு பாவம் என்று அழைத்தால் எப்படி? அத்தனை அறிவியல் சார்ந்த ஆர்வத்துக்கும், விசாரணை (inquiry)க்கும் அதுவே அடித்தளம். எல்லா விஞ்ஞானிகளுமே பாவிகள்தாம். பதஞ்சலி, புத்தர், ஜராதுஷ்ட்ரர் - என்று எல்லாரும் பாவிகள்தாம் காரணம், மெய்ப்பொருளை அறிந்து கொள்வதில் அவர்கள் பெரிதும் ஆர்வமாயிருந்தார்கள். வாழ்க்கை எப்படிப்பட்டது என்பதை அறிவதில் அவர்களுக்கு ஆர்வம் இருந்தது. அவர்கள் அனைவருமே ஆதாம்கள்தாம். ஆனால், யூதக் கடவுளால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. அவர் பைத்தியம் பிடித்தவர் போலானார். அவர் ஆதாமைத் தோட்டத்தில் இருந்து வெளியேற்றினார். மிகப்பெரிய பாவம் இழைக்கப்பட்டது. அறிந்து கொள்ளும் ஆர்வம் பாவமா? அறிந்திராத ஒன்றை அறிந்து கொள்ள முயன்றது பாவமா? அப்படியானால் மெய்ம்மையைத் தேடுவதும் பாவந்தான். கீழ்ப்படியாமை. கலகம் புரிவது பாவமா? எனில், சமயப்பெரியார்கள் எல்லாருமே பாவிகள்தாம். காரணம், அவர்கள் எல்லாருமே கலகக்காரர்களாய் இருந்திருக்கிறார்கள்.

கடவுளிடம் என்ன இருக்கிறது. யூத மனத்தைச் சொல்ல வேண்டும். சிறிய மனம் கடவுளைப் பற்றிச் சிந்திக்கிறது. தன்னுடைய சாயலாகவே ஒரு கடவுளை அது உருவாக்கிக் கொள்கிறது.

முல்லா நஸ்ருதீன் ஒருமுறை இரயிலில் இருந்து தள்ளாடியபடி நடந்து வந்தார். அவர் வெளுத்துக் காணப்பட்டார். நான் அவரை வரவேற்க இரயில் நிலையத்துக்குச் சென்றிருந்தேன்.

'பத்து மணி நேரம் அப்படி இப்படி நகராம வரும்படி ஆச்சு. என்னால் அதைத் தாங்கிக்கவே முடியலை' என்றார் அவர்.

'ஏன், எதிர் சீட் ஆசாமியிடம் இடம் மாறி உட்காரும்படி கேட்டிருக்கலாம்ல' என்று நான் விசாரித்தேன்.

'நான் அதை எப்படிச் செய்ய முடியும்? எதிர்சீட்டில் யாராவது இருந்தால் தானே?'

உங்களுடைய பிரார்த்தனையைக் கேட்க விண்ணகத்தில் யாரும் இல்லை. நீங்கள் எதைச் செய்ய விரும்பினாலும், செய்யுங்கள். அதைச் செய்யும்படி அனுமதியளிக்க யாரும் இல்லை. நீங்கள் எப்படி இருக்க விரும்பினாலும், இருங்கள். பிரபஞ்ச இருப்பு தடையற்றதாய், அனுகூலமாயிருக்கிறது. இதுவே யோகாவில் புரிந்து கொள்ளப்படுவது: பிரபஞ்சம் எல்லாருக்கும் கிடைக்கக் கூடியதாயிருக்கிறது. நீங்கள் எப்படியாக விரும்பினாலும் உங்களால் அப்படியாக முடியும். எல்லாமும் தயார் நிலையில் இருக்கிறது. யாருடைய அனுமதிக் காகவும் நீங்கள் காத்திருக்க வேண்டியதில்லை. காரணம், யாரும் இல்லை. எதிர் இருக்கை காலியாக உள்ளது. நீங்கள் விரும்பினால் அதில் அமர்ந்து கொள்ளலாம்.

முல்லா அபத்தமானவராய், நகைக்கத்தக்கவராய் தெரிகிறார். ஆனால, பல நூற்றாண்டுகளாய் மனித இனம் அதைத்தானே செய்து கொண்டிருக்கிறது. ஆகாயத்தை அண்ணாந்து பார்த்து அனுமதி கேட்டு நிற்கிறது. அங்கில்லாத ஒருவரிடம் இறைஞ்சி வேண்டுகிறது. பிரார்த்தனை சரியான காரியமல்ல. தியானமே சரியானது. இதில் காணப்படும் வேறுபாடு என்ன? நீங்கள் பிரார்த்திக்கிறபோது அந்தப் பிரார்த்தனையைக் கேட்பவரிடம் உங்களுக்கு நம்பிக்கை இருக்க வேண்டும். நீங்கள் தியானம் செய்கிறபோது நீங்கள் தனியாகவே அதைச் செய்கிறீர்கள். பிரார்த்தனையில் இன்னொருவர் தேவைப் படுகிறார். தியானத்தில் நீங்கள் மட்டுமே போதும்.

யோகா ஒரு தியான நிலை. அதில் பிரார்த்தனைக்கு இடமில்லை. காரணம் அதில் கடவுளுக்கு இடமில்லை. கடவுளைப் பற்றிய குழந்தைத்தனமான எந்தக் கருத்துக்கும் அதில் இடமில்லை.

இதனை நிலைமாறாத நினைவாக உங்களுக்குள் இருக்க அனுமதியுங்கள். நீங்கள் உண்மையிலேயே சமயப் பற்றுடையவராய் இருக்க விரும்பினால் நாத்திக நிலையைக் கடந்து வாருங்கள். உங்களுடைய சமய நம்பிக்கை ஆத்திகராயிருப்பதில் இருந்து தொடங்கவில்லை. நாத்திக நிலையில் இருந்தே நீங்கள் தொடங்க வேண்டியிருக்கும். ஆதாரமாயிருப்பதன் மூலம் தொடங்குங்கள். ஆதாம் இயேசுவின் தொடக்கம். ஆதாம் தொடங்கிய வட்டத்தை இயேசு முடித்து வைத்தார். 'இல்லை' (மறுப்பு) என்பதில் இருந்து தொடங்குங்கள். அப்போது உங்களுடைய 'ஆம்' என்பதற்கு ஒரு பொருள் இருக்கும். அஞ்சாதீர்கள். அச்சத்தில் இருந்து கொண்டு எதையும் நம்பாதீர்கள். நீங்கள் என்றாவது நம்ப வேண்டியிருந்தால் அறிவில் இருந்தும், அன்பில் இருந்தும் நம்புதலை மேற்கொள் ளுங்கள் - ஒருபோதும் அச்சத்தில் இருந்தல்ல.

அதனால்தான் கிறிஸ்தவம் யோகாவை வளர்க்க முடியவில்லை. யூத மதம் யோகாவை வளர்க்க முடியவில்லை. நம்பிக்கைகளை மறுக்கும் துணிவுடையவர்கள் மூலமே யோகா வளர்ச்சியடைந் துள்ளது. அவர்கள் குருட்டு நம்பிக்கைகளை மறுத்தவர்கள். வசதிக்காக செய்து கொள்ளப்பட்ட நம்பிகைகளை அவர்கள் மறுக்க இயன்றவராவர். அவர்கள் விசாரித்தறியத் தயாராயிருந்தனர். அதற்காகத் தங்களுடைய இருப்புணர்வு என்கிற இருண்ட காட்டுக்குள் நுழையவும் அவர்கள் தயங்கவில்லை.

அது மிகப்பெரிய பொறுப்பு. ஒரு நாத்திகனாய் இருப்பதென்பது கடுமையான பொறுப்பு. காரணம், கடவுள் இல்லை என்கிறபோது நீங்கள் ஓர் அன்பற்ற உலகில் விடப்படுகிறீர்கள், தனியராய். கடவுள் இல்லை என்கிறபோது நீங்கள் தொக்கியிருக்க (hangon) எதுவுமில்லாமல், பற்றிக்கொள்ள ஏதுமின்றித் தனித்து விடப்படுகிறீர்கள். பெரிய அளவில் துணிவு தேவைப்படுவதுடன், உங்கள் இருப்புணர்விலிருந்தே இரக்கத்தை நீங்கள் தோற்றுவித்துக் கொள்ள வேண்டியிருக்கும். யோகாவின் முழுப்பொருளும் இதுவே. உங்கள் இருப்புணர்வில் இருந்தே இரக்கத்தை உண்டுபண்ணிக் கொள்வது. பிரபஞ்ச இருப்பு அன்பற்றதாய், இரக்கமற்றதாய் இருக்கிறது. தற்காலிக ஆதாரமாய் கொள்ளும் கடவுளால் உங்களுக்கு உவகையைக் கொடுக்க முடியாது. நீங்கள் கனவு காண்கிறீர்கள். அது ஒரு விருப்ப நிறைவேற்றமாய் இருக்கலாம். ஆனால் அது

உண்மையாய் இருப்பதில்லை. சுற்றிலும் பொய்கள் சூழப்பட்டு உவகையுடன் இருப்பதைவிட உணர்ச்சியற்றிருந்தாலும் உண்மை யுடன் இருப்பது நல்லது.

நீங்கள் தனித்திருக்கிறீர்கள் என்கிற உண்மையைத் தெளிவாய் புரிந்து கொள்ளுங்கள் என்று சொல்கிறது யோகா. உங்களுக்கென்று ஒரு பிரபஞ்ச இருப்பு வழங்கப்பட்டிருக்கிறது. தற்போது நீங்கள்தாம் ஒரு கருத்தை - முக்கியத்துவம் உள்ள ஒன்றை அதில் இருந்து தோற்றுவித்துக்கொள்ள வேண்டியிருக்கும். கருத்து என்பது முன்பே கொடுக்கப்பட்டிருக்கவில்லை.

மேற்கில் உள்ள *புறமெய்ம்மை மறுத்த வாழ்வியல் கோட் பாட்டாளர்கள் (existentialists) பதஞ்சலி முழுமையாய் ஒத்துக் கொள்ளக் கூடிய ஒன்றைச் சொல்கிறார்கள். பிரபஞ்ச இருப்பு (existence) என்பது இயற்கைத்தனமை (essence)யைவிட காலவகையில் முந்தியிருப்பது என்பதே அவர்கள் சொல்வது. நான் அதனை உங்களுக்கு விளக்குகிறேன்.

ஒரு கற்பாறை இருக்கிறது. அதன் இயற்கைத்தன்மை முன்பே அதற்கு வழங்கப்பட்டதுதான். அதன் இருப்பே அதனுடைய இயற்கைத்தன்மையும் ஆகிறது. கற்பாறை வளர்ச்சியடைவதில்லை. அது தன்னால் எதுவாக முடியுமோ அதுவாக முன்பே இருக்கிறது. ஆனால் மனிதன் வேறானவன். மனிதன் பிறப்பதன் மூலம் தன்னுடைய பிரபஞ்ச இருப்பைக் கொண்டு வந்தான். ஆனால், இன்னமும் இயற்கைத்தன்மை வழங்கப்பட்டிருக்கவில்லை. அவன் ஒரு சூன்யத்தைப்போலவே வந்தான். தறபோது தன்னுடைய சொந்த முயற்சியால் அந்த வெறுமையை அவர் இட்டு நிரப்ப வேண்டியிருக்கிறது. ஒரு கருத்தை அவன் தோற்றுவித்துக் கொள்ளும்படி இருக்கும். அவன் இருட்டில் துழாவி வழி கண்டுபிடிக்க வேண்டியவனாயிருக்கிறான். வாழ்வின் பொருளை அறிய அவன் பாடுபட்டாக வேண்டும். அவன் கண்டுபிடித்தாக வேண்டும் அவன் ஆக்கத்திறன் பெற்றிருக்க வேண்டும். பிரபஞ்ச இருப்பு வழங்கப்பட்டிருக்கிறது. இயற்கைத்தன்மை தோற்றுவித்துக் கொள்ளப்பட வேண்டியது. நீங்கள் வாழ்கிற ஒவ்வொரு கணத்திலும்

* புறமெய்ம்மை மறுத்த வாழ்வில் கோட்பாட்டாளர் - 'தான்' இருத்தல் என்பது ஓர் அகநிலை உணர்வு. அதனை ஒரு புறப்பொருள் ஆய்வுக்குக் கொண்டுவர முடியாது என்று நம்புகிறவர்.

உங்களுடைய மாறாத தன்மையை நீங்கள் தோற்றுவித்துக் கொள்கிறீர்கள். நீங்கள் அதைத் தோற்றுவித்துக் கொள்ளாவிடில் அதைப் பெறுவதற்கில்லை.

மக்கள் என்னிடம் வந்து, 'தயைகூர்ந்து வாழ்வின் பொருளை எங்களுக்குக் கூறுங்கள்' என்று கேட்கிறார்கள். ஏதோ ஓரிடத்தில் முன்பே அந்தக் கருத்து வழங்கப்பட்ட மாதிரி, வாழ்வின் பொருள் (meaning) வழங்கப்பட்டிருக்கவில்லை. நீங்கள்தாம் அதை உருவாக்கிக் கொள்ள வேண்டும்.

இது ரொம்பவும் அருமையான விசயம். வாழ்வின் பொருள் முன்பே வழங்கப்பட்டிருப்பின் மனிதன் ஒரு பாறையாய் இருந்திருப்பான். அந்நிலையில் வளர்ச்சிக்கான சாத்தியமோ, கண்டுபிடிப்பதற்கான சாத்தியமோ, துணிகரச் செயலுக்கான சாத்தியமோ இருந்திருக்காது. ஏன், சாத்தியம் என்பதே இருந்திருக்காது. உண்மையில் - எல்லாமே அடைபட்டிருக்கும் - ஒரு கற்பாறை எல்லாப் பரிமாணத்திலும் அடைபட்டதாகவே இருக்கும். அது எதுவாக இருக்க வேண்டுமோ அதுவாக முன்பே இருக்கிறது. ஆனால் மனிதன் அப்படி 'முன்பே' இருக்கவில்லை... வரையிலாத (infinite) ஓர் எதிர்காலத்துடன், ஆயிரத்தியோரு மாற்று (alternative) களுடன், ஒரேயொரு நடுக்கமான சாத்தியத்துடன் அவன் இருக்கிறான். அது நீங்கள் யார், என்னவாக விரும்புகிறீர்கள் என்பதைப் பொறுத்தது.

நீங்கள் பொறுப்போடு இருக்கிறீர்கள். கடவுள் இல்லை என்கிற நிலையில் மொத்தப் பொறுப்பும் உங்கள் தலையில் விழுகிறது. அதனால்தான் பலவீனர்கள் தொடர்ந்து கடவுளில் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். பலம் பொருந்தியவர்கள் மட்டுமே தனித்து நிற்க முடியும். ஆனால, இது ஓர் அடிப்படைத் தேவை. யோகாவைப் பொறுத்தவரை நீங்கள் தனித்து நிற்பதும், வாழ்வின் பொருள் வழங்கப்படவில்லை என்பதைப் புரிந்து கொண்டிருப்பதும் அவசியம். நீங்கள் அதைத் தேடியாக வேண்டும். நீங்கள் அதைக் கண்டுபிடித்தாக வேண்டும். வாழ்க்கைப் பொருள் (meaning) கொண்டதாகும். ஆனால் அந்தப் பொருளை உங்கள் முயற்சியின் மூலமே நீங்கள் கண்டுபிடிக்கும்படி இருக்கும். நீங்கள் செய்கிற எதுவும் உங்களை வெளிப்படுத்துவதாய் இருக்கும். ஒவ்வொரு செயலும் உங்கள் வாழ்க்கையை உருவாக்குகிறது. உங்கள் பிரபஞ்ச இருப்பு மேலும் மேலும் பொருளுடையதாகும்.

இது உண்மை என்றால் மட்டுமே யோகா சாத்தியப்படும். இல்லையேல், பிரார்த்தனை செய்து கொண்டிருக்க வேண்டியதுதான். இல்லையேல் நிலத்தின் மீது மண்டியிட்டுக் கொண்டேயிருக்க வேண்டியதுதான். உங்கள் பிரார்த்தனையின் விளக்கத்திலேயே காலம் கழியும். ஒரு பிரமையின் துன்பத்தில், மாயையில் வாழ்ந்து கொண்டிருப்பீர்கள்.

சிக்மண்ட் ஃப்ராய்டு ஒரு புத்தகம் எழுதினார். அந்தப் புத்தகத்தின் பெயர் தனிச்சிறப்பு வாய்ந்தது (The Future of an Illusion). அது மதத்தைப் பற்றியதாகும். அவர் பதஞ்சலியை அறிந்திருக்க வில்லை என்பது துரதிர்ஷ்டமே. இல்லையேல், அவர் அந்தப் புத்தகத்தை எழுதியிருக்க மாட்டார். சிக்மண்ட் ஃப்ராய்டைப் பொறுத்தவரை மதம் என்றால் கிறிஸ்துவத்தையும், யூத மதத்தையுமே குறிக்கும். கிழக்கத்திய மதங்களின் ஆழங்கள் - அறிவுகள் பற்றி அவருக்குத் தெரிந்திருக்காது. மேற்கத்திய மதங்கள் ஏறக்குறைய அரசியல் சார்ந்ததாகவே இருக்கும். அவற்றில் பலவும் சமயம் சார்ந்தவை அல்ல. அவை மேலோட்டமானவை. கிழக்கத்திய மதங்களோ அடியாழத்துக்குச் செல்கிறவை. அது கடவுளையும் மறுப்பதாகும். சார்ந்திருப்பது அவசியமில்லை என்று நீங்கள் அப்போது சொல்வீர்கள். சார்ந்திருக்க ஒருவர் தேவையென்று எண்ணுகிற போதெல்லாம் ஒரு மாயையை (illusion) நீங்கள் படைத்துக் கொண்டு விடுகிறீர்கள்.

உணர்ச்சியற்ற உலகில் ஒருவர் தனித்திருக்கிறார் என்பதைப் புரிந்து கொள்வதற்கு - நீங்கள் மன்றாடிக் கேட்கவோ, முறையிடவோ எவரும் இல்லை. உங்களுக்கு உதவப் போகிறவர் எவரும் இல்லை - நீங்கள் மட்டுமே - அது ஒரு பெரிய பொறுப்பு. ஒருவர் தடுமாறுகிறார், அஞ்சுகிறார், நடுங்கத் தொடங்குகிறார். தாங்கொணாத மனவேதனை உண்டாகிறது. நீங்கள் தனித்திருக்கிறீர்கள் என்கிற எண்ணமே பெரும் கவலையை உண்டுபண்ணி விடுகிறது.

'கடவுள் மாண்டு விட்டார்' நீட்சே நூறு ஆண்டுகளுக்கு முன்புதான் இப்படிச் சொன்னார். பதஞ்சலி ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இதனை அறிந்திருந்தார். உண்மைக்கு வெகு சமீபமாய் வரமுடிந்த எல்லாருமே அறிவார்கள் கடவுள் மனிதனின் கற்பனை என்பதை. அது மனிதனின் பொருள் விளக்கம் (interpretatoi), பொய் உங்களுக்குள் உவகையை ஏற்படுத்துகிற பொய்.

மக்கள் தமக்கே உரிய வழிகளில் விளக்கிக்கொள்ள முற்படு கிறார்கள். யோகாவின் ஒட்டுமொத்த அக்கறையும் நீங்கள் விளக்கங் களை விட வேண்டும் என்பதுதான். தற்காலிக ஆதாரங்களிலும், நம்பிக்கைகளிலும் உங்கள் கண்கள் லயித்து விடக்கூடாது என்பதே அதன் கவலை. மேக மூட்டமோ, புகைப்படலமோ இல்லாமல் நேராகப் பாருங்கள். உங்களுடைய தீ புகையின்றி சுவாலை வீசட்டும். அப்போது அங்குள்ள எதையும் நீங்கள் தெளிவாகப் பார்க்க முடியும்.

ஒரு பூங்காவில் கேட்டது:

இரண்டு ஆண்கள் தங்களுடைய மனைவிகளைப் பற்றி பேசிக் கொண்டிருந்தார்கள்.

'என்னுடையவள் வீனஸ் தேவதை மாதிரி இருப்பாள்.'

'வார்த்தெடுத்த சிலை போல் நிர்வாணக் கோலத்தில் இருப்பாள் என்கிறாயா?'

'இல்லை. அவள் ஒரு பழைய நினைவுச் சின்னம்.'

'என்னுடையவள் மோனலிஸாவை எனக்கு ஞாபகமூட்டுகிறாள்.'

'அவள் ஒரு பிரெஞ்சுக்காரி. அவளுடைய புன்னகை ஒரு விளங்காத புதிர் என்று சொல்ல வருகிறாயா?'

'இல்லை, அவள் ஓவியம் வரைகிற கித்தான் துணி (canvas) மாதிரி கவர்ச்சியற்றவள். அவள் மியூசியத்தில் இருக்க வேண்டியவள்?

மக்கள் தொடர்ந்து பொருள் விளக்கம் செய்தபடி இருக்கிறார்கள்.

அவர்கள் கூறுவதில் உள்ள பொருளைக் கவனியுங்கள், வார்த்தைகளையல்ல. அவர்களுடைய உள்ளார்ந்த இருப்புணர்வைக் கவனியுங்கள். புறத்தே அவர்கள் எழுப்பும் ஒலியை அல்ல. அவர்கள் என்ன சொலகிறார்கள் என்பது முக்கியமல்ல, அவர்கள் எப்படியானவர்கள் என்பதுதான்.

தனிச்சிறப்பு வாய்ந்தது உங்கள் கடவுளோ, உங்களுடைய பிரார்த்தனைகளோ அல்ல. குறிப்பிடத்தக்கது உங்கள் தேவாலயங் களோ, கோயில்களோ அல்ல, நீங்கள் மட்டுமே. நீங்கள் இறைஞ்சிக் கேட்கிறபோது உங்கள் இறைஞ்சுதலை நான் செவிமடுக்கிறதில்லை. உங்களுக்குத்தான் காது கொடுக்கிறேன், உங்களைத்தான் மனதால் பார்க்கிறேன். நீங்கள் நிலத்தில் மண்டியிடுகிறபோது உங்கள் அங்க

அசைவுகளை நான் கவனிக்கவில்லை, உங்களைத்தான் கவனிக்கிறேன். அது அச்சத்திற்கு மாறானது. அச்சத்திற்கு மாறான மதம் சாததியமற்றது என்கிறார் பதஞ்சலி.

ஆனால், மக்கள் பதஞ்சலியையும் பொருள் விளக்கத்திற்கு உட்படுத்துகிறார்கள். தங்கள் சொந்த அறிவை அவர்கள் கொண்டு வருகிறபோது பதஞ்சலி அதில் இருப்பதில்லை. அவர்கள் தங்களுடைய இதயத்துடிப்புகளையே பதஞ்சலிக்குள் கேட்கிறார்கள்.

ஒரு சிறிய பள்ளிக்கூடத்தின் ஆசிரியர் மந்தமான ஒரு பையனிடம் கேட்கிறார்.

'நீ ஏன் 'லேட்டா வந்திருக்கே?' என்று.

'தெருவில் வர்றச்சே ஓர் அறிவிப்புப் பலகை பார்த்தேன்...' ஆசிரியர் குறுக்கிட்டார். 'சரி அறிவிப்புப் பலகைக்கும் அதுக்கும் என்ன சம்பந்தம்?'

பையன் சொன்னான். 'அந்த அறிவிப்புப் பலகையில் முன்னால் பள்ளிக்கூடம் இருக்கு, 'மெதுவாய் போகவும்'னு இருந்திச்சு' என்று.

பதஞ்சலியைப் படிக்கிறபோது நீங்கள் எந்த அளவு புரிந்து கொள்கிறீர்கள் என்பது உங்களைப் பொறுத்தது. நீங்கள் குறுக்கிடாதபோது - உங்களுடைய குறுக்கீடு இல்லாதபோது தான் பிறருடைய கண்ணோட்டத்தில் பார்ப்பது சாத்தியம். நீங்கள் வண்ணங்களையோ (பண்புகள்), வடிவங்களையோ, தோற்றங்களையோ கொடுக்க வேண்டியதில்லை. வெறுமனே பார்த்தால் போதும் எவ்விதக் கருத்தையும் உருவாக்கிக் கொள்ளாமல், ஊகங்களுக்கு இடங்கொடுக்காமல்.

தற்போது ஒரு சூத்திரம்:

> **'நிலை மாற்றத்தில் உண்டாகும் வேறுபாட்டுக்குக் காரணம் அடிப்படைச் செயல் முறைகள் பலவகையாய் இருப்பதுதான்.'**

நீங்கள் பல அற்புதங்கள், சித்திகள் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். எந்த அற்புதமும் நிகழ்த்தப்படுவதில்லை. அற்புதங்கள் ஒரு குறிப்பிட்ட நியதியை ஏற்றிருக்கும். அந்த நியதி அறியப்படாமல் இருக்கலாம். அந்த நியதியை அறியாத நிலையில் மக்கள் தங்கள் அறியாமையால் அதை அற்புதம் என்று எண்ணிக் கொண்டு

விடுகிறார்கள். பதஞ்சலிக்கு அற்புதங்களில் நம்பிக்கை இருந்த தில்லை. அவருடைய கண்ணோட்டம் முற்றிலும் அறிவியல் சார்ந்த. எது நடந்தாலும் ஒரு நியதியின்படியே நடக்கும் என்று அவர் சொல்கிறார். அந்த நியதி அறியப்படாதிருக்கலாம் - அற்புதம் செய்பவர்கூட அதன் நியதியை அறிந்திருக்க மாட்டார். ஆனால் எப்படிப் பயன்படுத்துவது என்பதை எதிர்பாராது கண்டு பிடித்திருப்பார். அதனை அவர் பயன்படுத்திக் கொண்டிருப்பார்.

அத்தனை அற்புதங்களுக்கும் இதுவே அடிப்படையான சூத்திரம். 'நிலை மாற்றத்தில் உண்டாகும் வேறுபாட்டுக்குக் காரணம் அடிப்படைச் செயல்முறைகள் பலவகையாய் இருப்பதுதான்.' நீங்கள் அடிப்படைச் செயல்முறையை மாற்றினால் வெளிப்படுவதிலும் மாற்றம் இருக்கும். நீங்கள் வெளிப்பாட்டை மட்டுமே பார்க்கிறீர்கள். உங்களால் ஆழத்துக்குச் செல்லவோ, அடிப்படையைக் காணவோ முடிவதில்லை. அடிப்படை நியதியின் போக்கையும் நீங்கள் அறிவதில்லை. அதன் காரணமாகவே, அதில் அற்புதம் இருப்பதாய் எண்ணிக்கொள்கிறீர்கள். எந்தவோர் அற்புதமும் கிடையாது.

உதாரணமாக. மேற்கில் உள்ள இரசவாதிகள் இழிந்த உலோகங்களை (base-metal)த் தங்கமாக மாற்றும் முயற்சியை நூற்றுக்கணக்கான ஆண்டுகளாய் மேற்கொண்டிருக்கிறார்கள். ஒரு சிலர் அதில் வெற்றி பெற்றதாயும் தகவல்கள் உண்டு. அறிவியலார் எப்போதுமே அதை மறுத்து வந்திருக்கிறார்கள். ஆனால் தற்போது அறிவியலும் அதில் வெற்றி பெற்றிருக்கிறது. தற்போது உங்களால் மறுக்க முடியாது - தற்போது அடிப்படைச் செயல்முறையை நாம் அறிந்திருக்கிறோம். இந்த உலகம் அணுக்களால் ஆனது. அணுக்கள் மின்னணுக்களை (electrons) கொண்டுள்ளது என்று தற்போது இயற்பியல் தெரிவிக்கிறது. அப்படியானால் தங்கத்துக்கும் இரும்பின் ஒரு வடிவமான எஃகு (steel) உலோகத்துக்கும் உள்ள வேற்றுமை என்ன? வேறுபாடு அடிப்படை இயல்பில் இல்லை, இரண்டுமே மின்னணுக்களையும், மின் துகள்களையும் கொண்டிருக்கின்றன. பிறகு என்ன வேறுபாடு இருக்க முடியும்? அவை ஏன் வேறுபடுகின்றன? தங்கம், இரும்பு அதுதான் வேற்றுமை. அமைப்பில் இருக்கிறது வேற்றுமை, அடிப்படைப் பொருளிலல்ல.

சில சமயங்களில் மின்னணுக்கள் அதிகமாகவும், சில சமயங்களில் குறைவாகவும் இருக்கும். அதுதான் வேற்றுமை.

அளவில் இருக்கிறது வேற்றுமை. ஆனால், பொருள் அப்படியேதான் இருக்கிறது. அமைப்பு (structure)தான் வேறுபடுகிறது. ஒரே மாதிரி செங்கற்களைக் கொண்டு பலவகை வீடுகளை நீங்கள் கட்ட முடியும். செங்கற்கள் ஒரே மாதிரிதான், வேறாகி விடவில்லை. அடிப்படையில் நடைமுறை ஒன்றுதான். நீங்கள் விரும்பினால் குடிசையை மாளிகையாககிக் கொள்ளவும், மாளிகையைக் குடிசையாக்கிக் கொள்ளவும் முடியும்.

இதுவே பதஞ்சலியின் அடிப்படைச் சூத்திரம்: 'நிலை மாற்றத்தில் உண்டாகும் வேறுபாட்டுக்குக் காரணம் அடிப்படைச் செயல்முறைகள் பலவகையாய் இருப்பதுதான்.' ஆக, நீங்கள் அடிப்படைச் செயல்முறையை அறிந்து கொண்டுவிட்டால் எதைச் செய்வதற்கான நிறமை சாதாரண மனிதர்களிடம் இல்லையோ அதைச் செய்வதற்கான திறமையைப் பெறுவீர்கள்.

> **'நிரோத், சமாதி, ஏகாக்ருதம் என்கிற மூன்று வகை நிலை மாற்றங்களின் பேரில் சம்யமாவைச் செயற்படுத்துவதன் மூலம் கடந்தகால, எதிர்கால அறிவைப் பெற இயலும்.'**

நீங்கள் நிரோத் (nirodh)தில் கவனத்தை ஒருமுனைப்படுத்தினால், இரண்டு எண்ணங்களுக்கு இடையேயான இடைவெளிகளை நீங்கள் குவித்துக் கொண்டே இருப்பீர்கள் - பதஞ்சலி அதைத்தான் சமாதி என்கிறார் - அதன்பிறகு உங்களுக்குள் ஒரே நோக்கம் என்கிற ஏகாக்ருத நிலை உண்டாகிறது - அது நேர்ந்து விட்டால் கடந்தகால அறிவும், வருங்காலம் பற்றிய அறிவும் சாததியமாகி விடும்.

எதிர்காலத்தை நீங்கள்அறிய முடிந்தால் அது அற்புதந்தான்.

மேற்கில் ஸ்வீடன் பார்க் என்கிற ஓர் அரிதான மனிதரைப் பற்றிய அறிவியல் பதிவு ஒன்று இருக்கிறது. அவர் வெஸ்லி என்கிற பாதிரியாருக்கு ஒரு கடிதம் எழுதினார். அதில், 'ஆவிகள் உலகில் நீங்கள் என்னைக் காண விரும்புவதாய் ஒரு வதந்தியைக் கேள்விப்பட்டேன்' என்று குறிப்பிட்டிருந்தார். வெஸ்லி ஆச்சரியப்பட்டார். காரணம், அவரைப் பார்க்க வேண்டும் என்று அவர் எண்ணிக் கொண்டிருந்தார். ஆனால் அவர் யாரிடமும் அதைச் சொல்லியிருக்கவில்லை. அவரால் அதை நம்ப முடியவில்லை. 'நான் ஆச்சரியப்படுகிறேன். ஆவிகள் உலகம் என்று தாங்கள் குறிப்பிடுவது பற்றி எனக்குத் தெரியாது. நீங்கள் வதந்தியைக் கேட்டதாய் குறிப்பிடுவதும் இன்னதென்று தெரியவில்லை. ஆனால் இது நிச்சயம்.

உங்களைப் பார்க்க வேண்டும் என்று நான் எண்ணிக் கொண்டிருந்தது. மேலும், நான் இதனை யாரிடமும் தெரிவிக்கவில்லை. நான் சுற்றுப்பயணம் செல்வதால் மூன்று நான்கு மாதங்களுக்குப் பிறகு உங்களைச் சந்திக்கிறேன்' என்று ஒரு கடிதம் எழுதினார் அவர். ஸ்வீடன் பார்க் அவருக்கு எழுதிய பதில் கடிதத்தில், 'அது சாத்தியமில்லை. நீங்கள் என்னைக் காண வரும் நாளில் நான் செத்து விடுவேன் என்கிற வதந்தியை 'நான் ஆவிகள் உலகத்தில் கேட்டேன்' என்று குறிப்பிட்டிருந்தார்.

ஸ்வீடன் பார்க் தனது நண்பர்களுடன் விடுமுறைக் காலத்தில் தங்கும் விடுதியொன்றில் தங்கியிருந்தார். அவர் திடீரென 'நெருப்பு, நெருப்பு' என்று கூவினார். அவர் சொல்ல முற்பட்டதை அவர்களால் நம்ப முடியவில்லை. ஆனாலும் அவர்கள் வெளியே ஓடினர். அங்கே எதுவும் தீப்பிடித்துக் கொள்ளவில்லை. கடற்கரை ஓரத்தில் உள்ள ஒரு சிறிய கிராமம் அது. அவர் எதைக் குறிப்பிட்டார் என்று அவரிடம் அவர்கள் கேட்டனர். அவரோ தீயின் மத்தியில் நின்றதுபோல் வியர்த்து, நடுங்கிக் கொண்டிருந்தார். பிறகு அவர் சொன்னார், 'முந்நூறு மைல்களுக்கு அப்பால் ஒரு நகரம் தீப்பிடித்து எரிகிறது' என்று. உடனே ஓர் ஆள் குதிரையில் அனுப்பி வைக்கப்பட்டான். அவர் சொன்னது சரிதான். நகரமே தீப்பிடித்து எரிந்தது. அவர் 'தீ, தீ' என்று சொன்ன சமயத்தில் அந்த நகர மக்கள் விழிப்படைந்து விட்டிருந்தார்கள்.

ஸ்வீடன் நாட்டு ராணிக்கு இந்த மனிதர் மீது அக்கறை ஏற்பட்டிருந்தது. 'நீர் ஆவிகள் உலகத்துக்குச் செல்கிறீர் என்பதற்கு நிரூபணமாய் உம்மால் ஏதும் சொல்ல முடியுமா?' என்று ராணி அவரிடம் கேட்டாள். அவர் கண்களை மூடியபடி சொன்னார், 'உங்கள் அரண்மனையில்... (அவர் அதற்கு முன் அந்த அரண்மனைக்கு அழைக்கப்பட்டு இருக்கவில்லை) ஒரு குறிப்பிட்ட அறையில், (அறையின் எண்ணைக் குறிப்பிட்டார்) பூட்டியிருக்கும் மேசை இழுப்பறையில் உங்கள் கணவர் உங்களுக்காக ஒரு கடிதத்தை விட்டுச் சென்றிருக்கிறார்' என்று. ராணியின் கணவர் இறந்து பன்னிரண்டு ஆண்டுகள் ஆகியிருந்தது. 'அந்தக் கடிதத்தில் உள்ள செய்தி இதுதான்' என்றவர், செய்தியையும் ஒரு காகிதத்தில் எழுதினார். அந்த அறையைத் திறந்து, மேசை இழுப்பறையைத் திறந்து பார்த்தார்கள். ஸ்வீடன் பார்க் சொன்னது போல் அங்கே ஒரு

கடிதம் இருந்தது. அந்தக் கடித் வாசகங்கள் இவர் எழுதிக் காட்டியதையே ஒத்திருந்தன. நிரோத்தை வெற்றிகரமாய் நிறைவேற்றி விட்டால் அதுவே சமாதி நிலையாகிறது என்கிறார் பதஞ்சலி. சமாதி அடையப் பெற்றால் ஒருவர் ஒரே நோக்கம் கொண்டவராகி விடுவார். அவருடைய பிரக்ஞை (consciousness) கூரிய வாளைப் போலாகி விடும். கடந்தகால வருங்கால அறிவு வாய்க்கும். காரணம் அந்நிலையில் காலம் மறைந்து விடுவதுடன் நீங்கள் நிலைபேறுடைய (eternity) ஒன்றின் பகுதியாகி விடுவீர்கள். பிறகு அந்த மூன்றுமே உங்களுக்கு ஏக காலத்தில் கிடைப்பதாகி விடும்.

ஆனால் இது ஒன்றும் அற்புதமல்ல. இது ஒரு நியதி. அடிப்படை நியதி. ஒருவர் அதனைப் புரிந்து கொண்டு, பயன்படுத்த வேண்டும்.

> **'ஒரு குழப்ப நிலையில் இருக்கும் மனதில் அதன் பின்னணியில் இருக்கும் ஒலி, நோக்கம், கருத்து இவை ஒரே தொடர்பாய் இருக்கும். சம்யமானவை ஒலியின் பேரில் செயல்படுத்துவதன் மூலம் பிரித்தல் நேரிடுகிறது. அத்துடன் எந்தவொரு ஜீவராசி எழுப்பும் ஒலிகளின் பொருளையும் புரிந்து கொள்ள முடிகிறது.'**

பதஞ்சலி சொல்கிறார், சம்யமாவை, அதுதான் உங்கள் தாரணை (கவன ஒருமை)யை, உங்கள் தியானத்தை (ஆழ்ந்த சிந்தனை), சமாதி நிலையை - நீங்கள் ஒருங்கிணைக்க ஒரே நோக்கம் கொண்டவராகி விடுவீர்கள். மிருகம், பறவை இப்படி எந்தவோர் உயிரினம் எழுப்புகிற ஒலியையும் அதன் பொருளையும் நீங்கள் புரிந்து கொண்டு விடுவீர்கள்.

புனிதர் ஃப்ரான்சிஸ் விலங்குகளுடன் பேசுவார் என்பது போன்ற கதைகள் மேற்கில் வழங்கி வருகின்றன. அவர் கழுதையிடம் கூட பேசுவாராம். 'சகோதரனே' என்று கழுதையே அழைப்பாராம். அவர் காட்டுக்குச் சென்று பறவைகளிடம் பேசுவதுண்டு, பறவைகள் அவரிடம் நெருங்கியிருக்கும். ஒரு சமயம் அவர் ஆற்றின் கரையில் நின்று, 'சகோதரிகளே' என்று மீன்களை அழைத்ததும், ஆற்றின் எல்லா இடங்களில் இருந்தும் ஆயிரக்கணக்கான மீன்கள் தலை தூக்கி, அவர் சொல்வதைக் கேட்டன. இதனை நிறைய பேர் கவனித் திருந்தார்கள் என்பதற்கும் பதிவேடுகள் உண்டு.

மருத்துவத்தில் யுனானி முறையைத் தோற்றுவித்த லுக்மன் பற்றி இப்படிச் சொல்லப்படுவதுண்டு. அவர் மரங்களிடம் சென்று, அவற்றின்

பண்புகளைப் பற்றிக் கேட்பாராம். - 'ஐயா, உங்களை எந்த நோய்க்குப் பயன்படுத்திக் கொள்ள முடியும்?' என்று - மரம் பதில் சொல்லுமாம். நவீன மருத்துவர்கள் திகைத்துப் போகுமளவுக்கு பல மருந்துகளைப் பற்றி அவர் அறிக்கைகள் வழங்கியிருக்கிறார். அப்போது உரிய செய்முறைகள் இல்லை என்பதும். பரிசோதனைகள் சாத்தியமில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. சமீப காலத்தில்தான் பொருள்களின் மறைந்து கிடக்கும் பண்புகளுக்குள் நுழையும் திறமையை நாம் பெற்றிருக்கிறோம். ஆனால் லுக்மன் அவற்றைப் பற்றி முன்பே சொல்லி இருக்கிறார்.

பதஞ்சலி இதுவும் அற்புதம் அல்ல என்கிறார். நீங்கள் கவனத்தை ஒருமுனைப்படுத்தினால் - நீங்கள் ஒருமை அடைகிறீர்கள். அத்துடன் எவ்வித எண்ணமுமின்றி ஒலியைக் கவனமுடன் கேட்கிறீர்கள். அந்த ஒலி அதன் பின்னணியில் உள்ள உண்மையை உங்களுக்கு தெரியப்படுத்தும். அது மொழியைப் புரிந்துகொள்ள முடியுமா என்கிற பிரச்சினையல்ல, அமைதியை புரிந்து கொள்வது. நீங்கள் அமைதியாய் இருந்தால் அமைதியை உங்களால் புரிந்து கொள்ள முடியும். வழக்கத்தில், நீங்கள் ஆங்கில அறிவு பெற்றிருந்தால் உங்களால் ஆங்கிலத்தைப் புரிந்து கொள்ள முடியும். நீங்கள் பிரெஞ்சு மொழியை அறிந்திருப்பின் உங்களால் பிரெஞ்சைப் புரிந்து கொள்ள முடியும். அதே மாதிரியான உண்மைதான் - நீங்கள் அமைதியுடன் இருந்தால் அமைதியைப் புரிந்து கொள்ள முடியும் என்பதும். அது பரம்பொருளின் மொழி.

ஒரே நோக்கம் கொள்கிற ஒருவர் முற்றிலும் அமைதியாயிருப்பார். அந்த முழுமையான அமைதியில் அனைத்தும் வெளிப்பாடாகி விடுகின்றன - ஆனால் அதுவே அற்புதமாகாது. 'அற்புதம்' என்கிற வார்த்தையை பதஞ்சலி விரும்பவில்லை. அவர் அறிவியலில் சார்ந்தவர். அறிவியலில் மாயாஜாலங்கள் கிடையாது.

நான் ஒருநாள் முல்லா நஸ்ருதீனுடைய வீட்டில் இருந்தேன். முல்லாவும் அவருடைய மனைவியும் சமையலறையில் தட்டுகளைக் கழுவிக் கொண்டிருந்தனர். நானும் முல்லாவினுடைய மகன் ஃபஜலுவும் வரவேற்பறையில் தொலைக்காட்சி பார்த்துக் கொண்டிருந்தோம். திடீரென தட்டுகள் விழுந்து நொறுங்கிய பேரோசை. நானும் ஃபஜலுவும் காது கொடுத்துக் கேட்டோம். அதற்கு மேல் ஒன்றும் இல்லை.

ஃபஜலு முடிவில் சொன்னான். 'அம்மா அவற்றை நழுவ விட்டிருக்க வேண்டும்' என்று.

நான் வியப்படைந்தேன். 'உனக்கு எப்படி தெரிஞ்சது?' என்று அவனிடம் கேட்டேன்.

'ஏன்னா, அவங்க எதுவுமே பேசலை.'

எதுவும் சொல்லப்படாமலே மனதால் உணர்ந்து கொள்ள ஒரு வழி இருக்கிறது. ஆம், ஏதோ ஒன்றை அது தெரிவிக்கும். அமைதி என்பது அப்படியே வெறுமையாய் இருப்பதில்லை. அமைதி தனக்கேயுரிய செய்திகளை வைத்திருக்கும். நீங்கள் பெருமளவில் எண்ணங்களால் நிரப்பப்பட்டிருக்கும் காரணத்தால் உங்களைப் புரிந்து கொள்ள முடிவதில்லை, கேட்க முடிவதில்லை. அந்த அளவுக்கு உள்ளிருந்து ஒலிக்கும் குரல் மிகச் சன்னமாய், ஆழ்ந்த அமைதியுடையதாய் இருக்கும்.

*குக்கூ பறவையை, குக்கூ பறவையின் பாடலைக் கொஞ்சம் கவனியுங்கள். உங்கள் எண்ணங்கள் மறைந்து விடுமளவு தியான நிலையில் இருந்து கவனமாய் கேளுங்கள் - நிரோத் வந்துவிடும். இடைவெளிகளில் அல்ல, சமாதி நிலையைப் போன்று உங்கள் மீது வர்ஷிக்கும். எண்ணங்கள் குறுக்கிடுவதில்லை. அமைதி குலைய வில்லை, ஏக சிந்தை (ஒரே நோக்கம்) வந்து விடுகிற. திடீரென்று அந்த குக்கூ பறவையுடன் நீங்களும் ஒன்றாகி விடுகிறீர்கள், அது ஏன் அழைக்கிறது என்பதை நீங்கள் புரிந்து கொள்கிறீர்கள். காரணம் முழுமையான ஒன்றின் பகுதிகள் நாம். அந்த ஒலிக்குப் பின்னால் ஒரு மறைபொருள் இருக்கும் குக்கூவின் இதயத்தில். நீங்கள் அமைதியாய் இருந்தால் அதைப் புரிந்து கொள்ள இயன்றவராவீர்கள்.

பதஞ்சலி சொல்கிறார். 'ஒரு குழப்ப நிலையில் இருக்கும் மனதில் அதன் பின்னணியில் இருக்கும் ஒலி, நோக்கம், கருத்து இவை ஒரே தொடர்பாய் இருக்கும். சம்யமாவை ஒலியின் பேரில் செயற்படுத்துவதன் மூலம் பிரித்தல் நேரிடுகிறது, அத்துடன் எந்தவொரு ஜீவராசி எழுப்பும் ஒலிகளின் பொருளையும் புரிந்து கொள்ள முடிகிறது' என்று.

---

* குக்கூ (Cuckoo) - இடம் விட்டு இடம் பெயர்ந்து செல்லும் ஒருவகைக் குடியேறும் பறவை.

முல்லா நஸ்ருதீன் அன்று பிற்பகலில் ஓர் ஏலக்கடை அறையில் நின்றிருந்தார். ஏலத்தில் விடப்படும் 455-வது பகுதிக்காக அவர் காத்திருந்தார். அது குரோமியம் கூண்டில் அடைக்கப்பட்ட ஒரு தென் அமெரிக்கக் கிளி. கடைசியாக அவருடைய வாய்ப்பு வந்தது. கிளி விற்பனைக்குக் கொண்டு வரப்பட்டது. முல்லா அதை வாங்கினார். ஆனால் அதற்குச் செலவிட அவர் எண்ணியிருந்ததைவிட அதிக தொகை கொடுக்கும்படியாயிற்று. அப்போதும் கூட அவருடைய மனைவிக்கு இன்னொன்று கிடைத்தால் அதையும் வாங்கிவிட விருப்பம்.

அவருடைய பெயர், முகவரி இவற்றைப் பெறுவதற்காக அவரிடம் வந்த உதவியாளன் சொன்னான். 'ஓர் அருமையான பறவை உங்களுக்குக் கிடைத்திருக்கிறது' என்று.

முல்லா சொன்னார். 'அது எனக்குத் தெரியும். அவன் அருமையானவன்தான். ஆனா ஒரு விசயத்தை நான் கேட்க மறந்து விட்டேன். இந்தக் கிளியால் பேச முடியுமா என்று.'

உதவியாளனின் புருவங்கள் உயர்ந்தன. 'பேசத் தெரியுமாவா? நாசமா போச்சு, இந்தக் கிளிதானே கடைசி ஐந்து நிமிடங்களில் உங்களுக்கெதிரா ஏலம் கேட்டது' என்றான் அவன்.

தனது எண்ணங்களிலேயே மனதை நிறுத்தியிருக்கிறவர் எப்படிக் காது கொடுத்துக் கேட்பார்? ஒரு கிளியின் பேச்சைக் கேட்பவர் யார்? மக்கள் தங்கள் நேசத்துக்குரியவர் பேச்சைக் கேட்பதில்லை. மனைவி சொல்வதைக் கேட்பவர் யார்? கணவன் சொல்வதைக் கேட்பவர் யார்? தந்தை சொல்வதை யார் கேட்கிறார்கள்? அல்லது குழந்தை சொல்வதைத் தான் யார் கேட்கிறார்கள்? மக்கள் தங்கள் மூளைக்குள் முன்பே இடம் பிடித்துக் கொண்டிருப்பதில் தான் மனதை வைக்கிறார்கள் - காது கொடுத்துக் கேட்பதற்கான சாத்தியமே இல்லை. காது கொடுத்துக் கேட்பதற்கு அமைதி தேவை, கருத்தோடு கவனிப்பது அவசியம். காது கொடுத்துக் கேட்பதற்கு எதிர்க்காது ஏற்கிற தன்மையும், வரவேற்கும் பண்பும் அவசியம். முழுமையான கவனம், முழுமையான விழிப்புணர்வு, முழுமையான மனத்தெளிவு தேவை.

**'கடந்தகால எண்ணப் பதிவுகளைக் கருத்துடன் கவனிப்பதன் மூலம் முந்தைய பிறவி பற்றிய அறிவைப் பெறலாம்.'**

நீங்கள் அமைதியாய் இருக்கிறபோது - பதஞ்சலியால் ஏகாக்ருத பரிணம் என்று குறிப்பிடப்படும் நிலைமாற்றம் உணர்வில் ஒரே நோக்கததைக் கொடுக்கும். அது உங்களில் தோன்றும் போது உங்களால் கடந்த கால எண்ணப் பதிவுகளை கூர்ந்து பார்க்க முடியும். நீங்கள் பின்னோக்கி நகர்ந்து, உங்கள் முந்தைய பிறவிகளுக்குச் செல்ல முடியும். அது மிகவும் தனிச்சிறப்பு வாய்ந்தது. காரணம் உங்கள் முந்தைய பிறவிகளை நீங்கள் கூர்ந்து பார்க்க முடிகிறபோது நீங்கள் முற்றிலும் மாறுபட்டவராகி விடுகிறீர்கள். அதற்குக் காரணம், நீங்கள் முன்பு வாழ்ந்தவற்றை மறந்து போனதும்; பழைய அறிவற்ற சமாசாரங்களை மீண்டும் பற்றிக் கொண்டதும் ஆகும்.

உங்களால் பின்னோக்கிப் பார்க்க முடிந்தால் மீண்டும் அதே செய் மாதிரிப் படிவத்தை (pattern)க் காண முடியும். மறுபடியும் அதே மாதிரிப் படிவம்... நீங்கள் பொறாமையுடன் இருந்தீகள், உடைமைத்தனத்துடன் (possessive) இருந்தீர்கள், முழு அளவில் வெறுப்பும் கோபமும் கொண்டிருந்தீகள், பேராசைக்காரராய் இருந்தீர்கள். உலகிலேயே அதிகாரம் மிக்கவராக முயன்றீர்கள். செல்வங்களை, வெற்றியை, உயர்ந்த நோக்கத்தை அடைய முயன்றீர்கள். தன்னையே மையமாய்க் கொண்டு அனைத்தையும் தன் நலத்துக்காகவே காண்பவராய் (egoist) இருந்தீர்கள். அதுமட்டுமா, நீங்கள் தொடர்ந்து தோற்றுக் கொண்டீர்கள், தொடர்ந்து மரணம் உங்களைத் துரத்திக் கொண்டிருந்தது. நீங்கள் செய்த எதுவும் உருப்படியாய் இருந்திருக்கவில்லை. மறுபடியும் அதே ஆட்டத்தை ஆடத்தொடங்கினீர்கள். நீங்கள் பின்னோக்கிச் சென்றால் இலட்சோபலட்சம் உயிர்கள் கால வெளியில் பரவிக் கிடப்பதைக் காண்பீர்கள். நீங்களும் அதே மாதிரிதான் இருக்கப் போகிறீர்களா? பேராசையால் ஏற்படும் ஏமாற்றத்தைக் கண்ட பின்னனும் அதில் மேலும் ஊடாடிப் பார்க்கப் போகிறீர்களா?

ஆனால் நாம் மறந்து விடுகிறோம். கடந்த காலத்தை பயன்படுத்திக் கொண்டிருப்பது அறியாமை. அது இருண்டதோர் இரவில் செல்கிறது. மறதி என்கிற திரை விழுகிறது. அத்துடன் உங்களால் திரும்பி வரமுடியாமல் போகிறது.

மும்பையில் ஒரு கலைக்கூடத்தின் உரிமையாளர் தம்முடைய வாடிக்கையாளருக்குத் தேவையான ஓவியம் எது என்று தெரியாமல் ஓவியங்களைக் காண்பித்துக் கொண்டிருந்தார். இயற்கைக்காட்சி,

அமைதியான வாழ்க்கையின் பிரதிபலிப்பு, விலங்கின் உருவப்படம். மலர்கள் தொடர்பானது என்று பலவற்றைக் காண்பித்தும் புலனில்லை.

'உங்களுக்கு நிர்வாணப் படத்தில் ஆர்வம் உண்டா.' கலைக்கூட உரிமையாளா நம்பிக்கை இழந்தவராய் கேட்டார். 'உங்களுக்கு ஆடையற்ற மனித உடல்மீது ஆர்வம் உண்டா?'

பார்வையாளர் சொன்னார். 'கடவுளே. அதெல்லாம் இல்லை. நான் ஒரு 'பெண் பாலுறுப்பியல் மருத்துவர்' என்று.

டாகடர் பட்னிஸ் பற்றி தயவுசெய்து எந்த சந்தேகமும் உங்களுக்கு வேண்டாம். உங்களிடம் சொல்ல வேண்டாம் என்று அவர் என்னிடம் சொன்னது:

நீங்கள் ஒரு பெண் பாலுறுப்பியல் மருத்துவராய் (gynecologist) இருந்தால் நிர்வாணத்தில் எப்படி உங்களுக்கு ஆர்வம் வரும்? உண்மையில் உடலின் மீது விருப்பம் கொள்வது சாத்தியமாயிருக்காது. நீஙகள் அறிந்து கொண்டிருக்கும் அளவுக்கு கவர்ச்சி குறைந்து விடும். நீங்கள் எந்த அளவு அறிந்து கொண்டிருக்கிறீர்களோ. அந்த அளவு கருத்தாவேசம் (obsession) குறைந்து போகும். நீங்கள் எந்த அளவு அறிந்து கொண்டிருக்கிறீர்களோ அந்த அளவுக்கு அது முக்கியத்துவமற்றதாகி விடும்.

முற்பிறவிகளின் பழைய எண்ணப் பதிவுகளுக்கு ஒருவர் திரும்ப வேண்டுமென்றால்... அது ரொம்ப எளிது. ஒரே நோக்கம் உடையவராய் இருக்க வேண்டும்.

புத்தர் தமது முற்பிறவிக் கதைகளைச் சொல்லியிருக்கிறார். அவை 'ஜடக்-கதைகள்' எனப்படும். அவை ஒரு பொக்கிசம் போன்றதாகும். அதற்குமுன் அதுபோல் யாரம் சொன்னதில்லை. ஒவ்வொரு கதையும் தனிச்சிறப்பு வாய்ந்தது - காரணம் அது மனித குலத்தைப் பற்றிய கதை. மனிதப் பண்புகளை உள்ளடக்கியவை. அவை மனிதனின் அறிவற்ற செயல்கள். பேராசை, பொறாமை, கோபம், இரக்கம், அன்பு பற்றியவை. நீங்கள் பின்னோக்கிப் பார்த்தால் அந்தப் பார்வையே உங்கள் எதிர்காலத்தை மாற்றிவிடும். நீங்கள் அதே ஆளாய் இருக்க மாட்டீர்கள்.

எழுபது வயதுக் கனவான் ஒருவர் தம்முடைய துணிச்சலை எல்லாம் திரட்டிக்கொண்டு ஒரு விமானத்தில் பயணம்

மேற்கொண்டார். பயணம் முடிந்து இறங்கும்போது அவர் விமானியுடன் சொன்னார். 'ஐயா, இந்த இரண்டு பயணங்களுக்காகவும் நான் உங்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்' என்று.

'நீங்க என்ன சொல்றீங்க? ஒரே ஒரு பயணம்தானே செய்தீர்கள்?' என்றார் விமானி.

'இல்லை ஐயா. இது என்னோட முதல் பயணமும், கடைசிப் பயணமும் ஆகும்' என்றார் அந்தப் பயணி.

அனுபவம் நிலை மாறுகிறது. ஆனால் உங்களை மாற்றுவதற்கு அந்த அனுபவம் உணர்வோடு கூடியதாய் இருக்க வேண்டும். தன்னுணர்வற்ற (unconscious) அனுபவத்தால் உங்களை மாற்ற முடியாது. நீங்கள் வாழ்ந்த அதே வடிவமைப்பில் தான் தற்போதும் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள், தற்போது வாழ்ந்து கொண்டிருக்கும் இதே வடிவமைப்பில்தான் இதற்கு முன் பலமுறை வாழ்ந்தீர்கள். ஏதோ புதிதாய் ஒன்றைத் தொடங்கியது போல, மறுபடியும் பழைய தடத்தில்தான போய்க் கொண்டிருக்கிறீர்கள். பலமுறை காதல் வயப்பட்டு பலமுறை ஏமாற்றமடைந்திருக்கிறீர்கள். மறுபடியும் அந்தச் செயல்முறைகளையே நாடிச் செல்கிறீர்கள்.

உங்களுடைய சரீரம் புதிதாய் இருக்கலாம். உங்கள் மனம் புதிதில்லை. உங்கள் உடம்பு ஒரு புதிய புட்டியாயும், உங்கள் மனம் பழைய ஒயினாகவும் (wine) இருக்கிறது. புட்டி மாறிக்கொண்டே இருக்கிறது என்றாலும் உள்ளிருப்பது அதே பழைய ஒயின்தான்.

பதஞ்சலி சொல்கிறார். நீங்கள் ஒரே நோக்கம் கொள்வதாயின் அது உங்களால் முடிகிறதுதான். அதில் ஒன்றும் இரகசியமில்லை. முயற்சி, விடா முயற்சி, பொறுமை தேவை - நீங்கள் முன்பிருந்த அத்தனை நிலைகளையும் புரிந்துகொள்ள இயன்றவராவீர்கள். அது ஒன்றும் அற்புதம் நிகழ்த்துவதாகாது. மிக எளிமையான ஓர் இயற்கை நியதி, அவ்வளவுதான்.

பிரச்சினை தோன்றுவதற்குக் காரணம் நீங்கள் தன்னுணர் வற்றவராய் இருப்பதே. நீங்கள் மறுபடியும் மறுபடியும் இறக்கிறீர்கள், பிறக்கிறீர்கள். ஆனால், ஒவ்வொரு முறையும் எப்படியோ ஒரு திரை விழுந்து, உங்கள் கடந்த காலத்தை உங்களிடம் இருந்து மறைத்து விடுகிறது. நீங்கள் மிதக்கின்ற ஒரு பெரிய பனிக்கட்டி (iceberg)யைப் போன்றவர், உங்களின் ஒரு பகுதி மேற்பரப்பிலும், பெரும் பகுதி

அந்தப் பரப்பிற்குக் கீழும் உள்ளது. தற்போது உங்களுடைய தனித்தன்மை - மேற்பரப்பிலிருந்து ஒரு சிறு பகுதியாய் துருத்திக் கொண்டிருக்கிறது. உங்களுடைய கடந்த காலம் அப்படியே அடியில். அந்தப் பரப்பிற்கு அடியில் இருக்கிறது. நீங்கள் அதை உணர்ந்து விட்டால் வேறெதுவும் தேவைப்படாது. அந்த விழிப்புணர்வு போதும் மகத்தான மாறுதலை உண்டுபண்ணுவதற்கு.

கப்பற் படையில் புதிதாய் சேர்ந்த சில படை வீரர்களிடம் பொது அறிவுத் தேர்வு நடத்திய சார்ஜண்ட் கேட்டார். 'ஜோன்ஸ், ஒரு துப்பாக்கியைச் சுத்தம் செய்கிறபோது நீ செய்யும் முதல் காரியம் என்ன?' என்று.

அவன் உடனே பதிலளித்தான். 'அதில் உள்ள எண்களைக் கவனிப்பேன்' என்று.

'நீ துப்பாக்கியைச் சுத்தம் செய்வதற்கு எண்களை கவனிப்பது எந்த விதத்தில் உதவும்?' சார்ஜண்ட் கேட்டார்.

'என்னுடைய துப்பாக்கியைத்தான் துடைக்கிறேனா என்பதை உறுதி செய்து கொள்வேன்' என்றான் ஜோன்ஸ்.

எல்லோரும் இந்த முக்கியப் பகுதியைத் தவறவிட்டு விடுகிறார்கள். நீங்கள் யாரென்பதை நீங்கள் அறிந்திருக்கவில்லை. உங்களுடைய எண் எதுவென்று உங்களுக்குத் தெரியாது. இவ்வளவு காலமும் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள் என்பதை நீங்கள் அறிந்திருக்கவில்லை. விசயங்களை மறப்பதில் நீங்கள் கெட்டிக் காரராய் இருக்கிறீர்கள்.

வேதனையளிப்பது எதுவாயினும் மனிதன் அதை மறப்பதில் ஈடுபாடு காட்டுகிறான். அதனால் நீங்கள் மறந்து விட்டீர்கள் என்பதாகாது - அது உங்களுடைய தன்னுணர்வின்மையில் (unconscious) ஒரு பகுதியாய் தங்கி விடுகிறது. ஆழ்ந்த அறிதுயில் நிலையில் அது மேலெழுகிறது. குமிழிட்டுக் கொண்டு மேலே வருகிறது. ஆழ்ந்த அறிதுயிலில் எல்லாமும் திரும்ப வருகிறது.

உதாரணமாக, 1961-ஆம் ஆண்டு ஜனவரி, 1-ஆம் தேதி நீங்கள் என்ன செய்து கொண்டிருந்தீர்கள் என்று நான் உங்களிடம் கேட்டால், உங்களுக்கு நினைவிருக்காது. நீங்கள் கால வகையிலும், இட வகையிலும் இருந்திருக்கிறீர்கள். 1961, ஜனவரி 1-இல் நீங்கள் உயிரோடு

இருந்திருந்தாலும், அன்று காலை முதல் மாலை வரை என்ன செய்தீர்கள் என்பது உங்களுக்கு நினைவில் இருந்திருக்காது. அந்நிலையில் ஒரு 'ஹிப்னாடிஸ்ட்' (Hypnotist) டிடம் சென்று உங்களை அறிதுயிலில் ஆழ்த்திக் கொள்ளுங்கள். ஆழ்ந்த அறிதுயிலில் இருக்கும்போது, '1961, ஜனவரி 1-ஆம் தேதி என்ன செய்தாய்?' என்று அவர் உங்களிடம் கேட்பார். மிக நுட்பமான விவரங்கள் உள்ளிட்ட அத்தனை விசயங்களையும் நீங்கள் தொடர்புப் படுத்திப் பார்ப்பீர்கள் - காலையில் நீங்கள் உலவச் சென்றதை, அது நேர்த்தியாய் இருந்ததை, புற்களின் மீது பனித்துளிகள் தேங்கி நின்றதை, அந்தக் காலை நேரக் குளிர்ச்சியை உங்களால் இன்னமும் நினைவு கூர முடிகிறது. வேலிப்புதர்கள் வெட்டப்பட்டிருந்ததை, அந்தப் புதிய புதர்ச் செடிகளின் நறுமணத்தை, சூரியன் மேலெழுவதை இன்னமும் உங்களால் நினைவு கொள்ள முடிகிறது. மிகச்சிறிய விவரங்களுடன், மிக நுணுக்கமான விவரங்களுடன் அந்த நாளை மறுபடியும் நீங்கள் வாழ்ந்து பார்க்கிறீர்கள். அறிதுயிலில் இருந்து மீண்டதும் மறுபடியும் அவற்றை மறந்து விடுகிறீர்கள்.

அத்தனையையும் நினைவில் வைத்துக் கொள்வது அளவுக் கதிகமாய், தாங்க முடியாத சுமையாய் தெரியும். எனவே, நீங்கள் அதைத் தன்னுணர்வின் அடித்தளத்தில் போட்டு வைக்கிறீர்கள். அந்த அடித்தளத்தைத் துருவி ஆராய வேண்டும். ஏனெனில் அங்கே அரிய பொக்கிசங்களும் மறைந்து கிடக்கும். அதை ஆராய்கிற போதுதான் உங்கள் முட்டாள்தனத்தை நீங்கள் தொடர்ந்து கொண்டிருப்பது தெரிய வரும். அதைப் புரிந்து கொண்டால்தான் உங்களால் அதைக் கடந்து செல்ல முடியும். அடித்தளத்தைப் புரிந்து கொள்ளுங்கள். அதுவே உங்கள் இருப்புணர்வின் மேல் தளத்துக்குச் செல்ல வழியாய் அமையும்.

உணர்வு நிலையில் இரண்டு பிரிவுகள் இருப்பதாய் நவீன உளவியல் சொல்கிறது. உணர்வில் இருப்பது, உணர்வற்றிருப்பது. யோகா உளவியல் சொல்கிறது இன்னோர் உணர்வு நிலை இருக்கிறது என்று - அது அதீத உணர்வு (superconscious) நீங்கள் கட்டட அடித்தளத்தில் இருக்கிறீர்கள். அது உணர்வோடு இருப்பது (conscious). அதற்கும் கீழே ஒரு பெரிய அடித்தளம் இருக்கிறது. அது உணர்வற்றிருப்பது (unconscious) - ஒட்டுமொத்த கடந்த காலமும் அங்கே ஒரு தொகுதியாய் குவிக்கப்பட்டிருக்கும். நான் கடந்த

காலத்தில் குவிக்கப்பட்டவை என்று கூறும்போது, நீங்கள் எடுத்த அத்தனை பிறவிகளையுமே கருத்தில் கொள்கிறேன், விலங்குகளாய், பறவைகளாய், மரங்களாய், செடிகளாய், பாறைகளாய் தொடக்கத்தில் இருந்து (அப்படியொரு தொடக்கம் இருக்குமாயின்) அல்லது தொடக்கமற்ற தொடக்கத்தில் இருந்து அனைத்தையும் கருத்தில் கொள்கிறேன். உங்களுக்கு நேர்ந்தவை, நீங்கள் அடைந்த நிலை மாற்றங்கள் என்று யாவும் அந்த அடித்தளத்தில் இருக்கின்றன. ஒருவர் அதைக் கடந்து சென்றாக வேண்டும்.

மிகச்சரியான புரிதலே மேல்தளமாகிய அதீத உணர்வு நிலைக்குச் செல்லும் மாடிப் படிக்கட்டுச் சாவியை உங்களுக்கு வழங்கும்.

ஓர் எளிய நியதிக்கிணங்கவே அது நடக்கிறது என்கிறார் பதஞ்சலி. எல்லா அற்புதங்களும் ஓர் எளிய நியதிக்கு ஏற்பவே நடக்கிறது. நீங்கள் ஒரே நோக்கம் கொள்வதில் இருக்கிறது அந்த நியதி. அற்புதம் ஒன்றுதான், அது நீங்கள் ஒரே நோக்கம் கொண்டவராய் இருப்பது.

இந்தச் சூத்திரங்கள்தாம் அறிவியலின் எதிர்கால வளர்ச்சிக்கு அடித்தளம். தற்போது அடிப்படை வேலைகள் ஆரம்பமாகி விட்டன மேற்கில். புலனுணர்வுகளுக்கு அப்பாற்பட்டவை (supersensible) களைப் பொறுத்தவே நிறையவே செய்யப்பட்டுள்ளன. இயல்புப் பிறழ்வு (para normal) பற்றியும் நிறையச் செய்தாயிற்று. ஆனால் இன்னும் இருட்டில்தான் இருக்கின்றன எல்லாமும். மனிதர்கள் தேடித் துழாவிக் கொண்டிருக்கிறார்கள். செயல்கள் தெளிவாகிறபோது பதஞ்சலி மனிதனின் தன்னுணர்வு வரலாற்றில் தனக்குரிய இடத்தைப் பெற்று விடுவார். அவர் ஒப்பிட்டுப் பார்க்க இயலாதவர் - எந்தவொரு மூடநம்பிக்கையையும் நம்பாத முதல் விஞ்ஞானி. அவருக்கு அற்புதங்களில் நம்பிக்கை இல்லை. அவர் எல்லாவற்றையுமே அறிவியல் விதியின் அளவுக்குக் குறைத்து விடுவார்.

பழைய எண்ணப் பதிவுகளைக் கருத்துடன் கவனிப்பதன் மூலம் முந்தைய பிறவி பற்றிய அறிவைப் பெறலாம்! அடிப்படை சிகிச்சையில் இந்த வரிசையில் நீங்கள் செய்வது கொஞ்ச வேலைதான். இப்பிறவியில் நீங்கள் பிறந்தது வரை நீங்கள் சிறிது பின்னோக்கிச் செல்கிறீர்கள். இது அப்படியே மண் வாரியால் குவிக்கிற வேலை (spade work)தான். நீங்கள் அதில் வெற்றி பெற்று விட்டால் கருவறையில் வாசம் செய்த காலத்தையும் உங்களால் நினைவு கூர

முடியும். நான் ஒரு புதிய சிகிச்சை முறையைத் தொடங்கப் போகிறேன் - அது 'ஹிப்னோதெரஃபி' (அறிதுயிலில் ஆழ்த்தும் சிகிச்சை முறை). நீங்கள் அடிப்படை சிகிச்சை முடித்து, அதில் வெற்றி பெற்றதும் ஹிப்னோதெரஃபி பெருமளவில் உங்களுக்குத் துணை புரிவதாயிருக்கும். கருவறை வாசத்தை மட்டுமன்றி இன்னும் ஆழத்துக்குச் சென்று கடந்த பிறவி அனுபவம் வரை நினைவு கொள்ள முடியும்.

ஒருவருடைய வாழ்க்கை விவரங்களினூடே உங்களால் செல்ல முடிந்தால் பிறகு கடந்த காலத்தின் அத்தனை கதவுகளையும் உங்களால் திறக்க முடியும்.

ஆனால் எதற்காகக் கடந்த காலக் கதவுகளைத் திறப்பது? காரணம், கடந்த காலத்தில் மறைந்திருக்கிறது எதிர்காலம். உங்கள் கடந்த காலத்தை நீங்கள் அறிந்து கொண்டிருந்தால் எதிர்காலத்தில் அதையே திரும்பச் செய்ய மாட்டீர்கள். நீங்கள் அதை அறிந்திராவிடில் அதையே மறுபடியும் மறுபடியும் செய்து கொண்டிருப்பீர்கள். கடந்த காலத்தைப் பற்றிய அறிவு அதையே வருங்காலத்திலும் திரும்பச் செய்ய மாட்டீர்கள் என்பதற்கு உத்தரவாதம். வருங்காலத்தில் முற்றிலும் புதியதோர் மனிதனாகி விடுவீர்கள். யோகா என்கிற அறிவியல் புது மனிதனுக்கானது.

*'பகவானே, ஒரு சமயம் நீங்கள் சார்த்தரை (Sartre)க் குறிப்பிட்டுப் பேசும்போது, நேர்காணல் ஒன்றில் அவரிடம், 'தங்கள் வாழ்க்கையில் மிகவும் சிறப்பு வாய்ந்ததாய் எதைக் கருதுகிறீர்கள்?' என்ற கேட்கப்பட்டதாகவும், சார்த்தர் அதற்கு, 'காதலை, வாழ்தலை, புகைத்தலை விரும்பு கிறேன்' என்று பதிலளித்ததாய் தெரிவித்தீர்கள். அத்துடன் அந்தப் பதில் 'ஜென்' (Zen)னைப்போல் துல்லியமாய் இருந்தது என்றும் நீங்கள் குறிப்பிட்டீர்கள். ஆனால், சார்த்தர் 'ஜென்' உணர்வு கொண்டிருந்தவரா?*

அதனால்தான் சொல்கிறேன். ஜென்னைப் போல் துல்லியமாய் இருந்தது என்று. மிகச் சரியாக 'ஜென்' என்று சொல்ல முடியா விட்டாலும், பெருமளவில் ஜென்னைப் போன்றது எனலாம். புறமெய்ம்மை மறுத்த வாழ்வியல் மெய்ம்மைக் கோட்பாடு (Existentialism) என்பது கிட்டத்தட்ட ஜென்னாகி விடக்கூடிய விளிம்பில் இருக்கிறது. இப்போது இருக்கும் இடத்தில் இருந்து அது தொடர்ந்து நீண்டு நிலைக்கும். அது ஜென்னாக இல்லாவிட்டாலும், ஒரே தாவலில் ஜென்னாக மாறக்கூடியது. ஞானமடைவதற்கு முன் புத்தர் எங்கே நின்றிருந்தாரோ அங்கேதான் சார்த்தரும் நின்று கொண்டிருக்கிறார். புத்தர் வருங்காலத்தை அனுமதிப்பதற்கு இசைவாக இருந்தார். சார்த்தரோ தன்னுடைய மறுப்பில் - எதிர்மறைப் பண்பில் அசையாது நிலைத்திருந்தார்.

எதிர்மறைப் பண்பு இன்றியமையாதது. ஆனால், போதிய அளவில் இல்லை. நான் அதனால்தான் சொல்கிறேன். கடவுளுக்கு மறுப்பு தெரிவிக்கும் திறமை உங்களிடம் இல்லாவிடில், ஒப்புதல் தெரிவிக்கும் திறமையும் உங்களிடம் இருக்காது என்று. இன்னும் ஒரு தப்படி போனால் எதிர்மறைப் பண்பு (negativity)ம் மறைகிறது, மறுக்கப்படுவதாகிறது. மறுத்தலை மறுத்தல் (negation of the negation) முற்றிலும் நேர்மறைப் பண்பாகிவிடும். மறுத்தலை மறுத்தல் முழுமையான ஒப்புதலாகி விடும். நான் அதனை விளக்குகிறேன் உங்களுக்கு.

நீங்கள் துயரத்தில் இருக்கிறீர்கள். துயரத்தில் குடியிருக்கிறீர்கள். இதுதான் முடிந்த முடிவென்று நீங்கள் ஏற்றுக்கொண்டு விட்டால் பயணம் அத்தோடு நின்றுவிடும். தேடுதல் இருக்காது, விசாரணை இருக்காது - உங்கள் வீட்டை நீங்களே உருவாக்கி, அதில் குடியேறி விட்டீர்கள். அந்த வீடு எதுவும் இல்லாமல் உருவாக்கப்பட்டது. தற்போது நீங்கள் ஒரு செயல் முறையாய் இல்லை. நீங்கள் தேக்கமடைந்து விட்டீர்கள். 'இல்லை' என்பதே உங்கள் வாழ்க்கை முறையாகி விட்டது. நீங்கள் எதுவும் இல்லாத (No) நிலையை அடைந்ததும் அங்கேயே நின்று விடாதீர்கள். தேடல் முடிவற்றது. போங்கள்... தொடர்ந்து போங்கள். தொடர்ந்து வாழுங்கள். ஒருநாள் 'இல்லை' என்பதன் மிகத் தாழ்ந்த பகுதியை அடைந்ததும் அங்கிருந்து மேல்நோக்கி செல்லத் தொடங்குங்கள். 'இல்லை' என்பதன் அடியாழத்தில் குதியுங்கள். நீங்கள் அடிப்பகுதியை அடைவீர்கள். அங்கிருக்கிறது திருப்புமுனை: அந்நிலையில் நேர் எதிர்ப்பக்கமாய் செல்லுங்கள். அப்போது வருகிறது 'ஆம்' என்கிற உலகம். கடவுளை மறுப்பவர் பிறகு கடவுளை ஏற்பவராகிறீர்கள். உங்கள் ஒப்புதலை பிரபஞ்சம் முழுதும் அறியும்படி நீங்கள் தெரிவிக்கிறீர்கள். அவ்வேளையில் துயரம் பேரின்பமாய் மாறுகிறது. ஆனால் இதுவும் முடிவு ஆகிவிடாது. தொடர்ந்து போய்க்கொண்டே இருங்கள். 'மறுப்பு' என்பது மறைவது போலே 'ஒப்புதல்' என்பதும் மறைந்து விடும்.

ஜென்னில் இதுவே முக்கியக் கருத்தாகும். எங்கே மறுத்தலும், ஒப்புதலும் மறைகிறதோ அங்கே எவ்வித மனப்பாங்கும் (attitude) இல்லாமல் நீங்கள் விடப்படுகிறீர்கள். நீங்கள் எவ்வித எண்ணமும் இல்லாது நிர்வாணமாய், வெறுமையாய் - ஒரு தெளிவுடன் விடப்படுகிறீர்கள். தடுப்பதற்கு எதுவும் இல்லை, ஒப்புதல் கூட. எந்தவொரு தத்துவமோ, கொள்கையோ, இறைமையியலோ, நம்பிக்கையோ உங்களைத் தடுப்பதற்கில்லை. உங்களை லயிக்கும்படி செய்வதற்கில்லை. பதஞ்சலி இதைத்தான் நிர்பீஜ சமாதி - விதைகளற்ற சமாதி என்கிறார். காரணம் ஒப்புதலில் விதை இன்னமும் எடுத்துச் செல்லப்படுவதாகவே இருக்கும்.

இதுவே கடந்து செல்லுதல் பற்றி முக்கிய கருத்தாகும். இந்தப் பகுதியில் நீங்கள் முற்றாக மறைகிறீர்கள். அதே சமயம் முழுமை யடையவும் செய்கிறீர்கள். இதனால்தான் புத்தர் கடவுளுக்கு ஒப்புதல்

கூறவில்லை, மறுப்பும் கூறவில்லை. நீங்கள் அவரிடம் 'கடவுள் இருக்கிறாரா?' என்று கேட்டால் அவர் பெரும்பாலும் புன்னகை செய்வதோடு சரி. அந்தப் புன்னகை அவர் மனித சாத்தியத்துக்கு அப்பால் செல்வதை அவரது கடந்து செல்லும் நிலை (transcendence)யை வெளிக்காட்டுகிறது. அவர் 'இல்லை' என்றும் (மறுத்தல்) சொல்ல மாட்டார். 'ஆம்' என்றும் (ஒப்புதல்) சொல்ல மாட்டார். இரண்டுமே பாதையில் அடையப்படும் நிலைகள் என்பதையும் அவை இலக்கு அல்ல என்பதையும் அவர் அறிவார். இரண்டும் குழந்தைத்தனமானவை. நீங்கள் பற்றிக் கொள்கிற போது எதுவும் குழந்தைத்தனமாகி விடுகிறது. குழந்தை மட்டுமே பற்றிக் கொள்ளும். வளர்ச்சியுற்ற மனிதன் பற்றக்கூடிய அனைத்தையும் விடுகிறான். உண்மையான முதிர்ச்சி எதையும் பற்றிக் கொள்ளாமல் இருப்பது - ஒப்புதலைக்கூட.

புத்தர் பார்ப்பதற்குக் கடவுளைப் போலிருக்கிறார். அதே சமயம் கடவுள் நம்பிக்கையற்றவராயும் இருக்கிறார். உண்மையிலேயே சிறந்த ஒன்றைப் பெறுவதற்கான தகுதி கொண்டிருப்பவர்கள் மறுத்தலையும் (No) ஒப்புதலையும் (Yes) கடந்து செல்கிறார்கள்.

இதனை நினைவில் கொள்ளுங்கள். சார்த்தர் மறுத்தலின் எல்லையில் ஏதோ ஓரிடத்தில் தொக்கியிருக்கிறார். அதனால்தான் அவர் துயரத்தையும், மனச்சோர்வையும், ஏக்கத்தையும், மனவேதனை யையும் பற்றி ஓயாமல் பேசிக் கொண்டிருக்கிறார். எல்லாமே எதிர்மறைகள். அவருடைய இலக்கியப் பெரும் படைப்பான 'Being and Nothingness' என்ற நூலில், 'இருத்தல்' என்பது 'ஏதும் இல்லா நிலை' அடைவதை அவர் நிரூபிக்க முயன்றிருக்கிறார். ஆனாலும், அவர் அதனைப் பற்றிக் கொண்டிருக்கிறார்.

ஆனாலும் அவர் நம்பத்தக்க மனிதர்தான். அவருடைய மறுப்பு உண்மையானது. அவர் அதனைத் தானாகவே தேடிக் கொண்டார். அது அப்படியே கடவுளை மறுப்பதாகாது. அவர் அந்த மறுத்தலை வாழ்வாகக் கொண்டார். அவர் அதற்காகத் துன்புற்றிருக்கிறார். அதற்காகத் தாம் விரும்பியவற்றை மனமார விட்டுக் கொடுத் திருக்கிறார். அது ஒரு நம்பத்தக்க மறுப்பு. ஆக, இரண்டு வகை நாத்திகர்கள் இருக்கிறார்கள் - அதிகாரபூர்வமானவர்கள், அதிகார பூர்வமற்றவர்கள் என்று. நீங்கள் தவறான காரணங்களுக்காக நாத்திகராக முடியும். ஒரு பொதுவுடைமைவாதி நாத்திகராயிருக்கலாம்.

ஆனால் அதிகாரபூர்வமானவராய் இருக்க மாட்டார். அவருடைய காரணங்கள் தவறானவை. அவருடைய காரணங்கள் மேலோட்ட மானவை. தம்முடைய மறுப்புத்தன்மையை (No) அவர் வாழ்ந்து காட்டவில்லை.

மறுப்பை வாழ்வாக்குகிற ஒருவர் எதிர்மறை என்கிற பலிபீடத்தில் தம்முடைய விருப்பங்களைப் பலியிட வேண்டியிருக்கும். பெரிய அளவில் துன்பத்தை அனுபவிக்க நேரிடும், நம்பிக்கையிழந்த உலகில் நலியும்படியாகும், துயரத்தில் உழல வேண்டியிருக்கும். அதற்கொரு முடிவே இருக்காது. விடியல் குறித்த நம்பிக்கை யில்லாமல் - பொருளற்ற வாழ்வை மேற்கொள்ளும்படி ஆகும். நீங்கள் இருண்ட இரவில் இருக்கும்போது தவறானதைச் செய்ய ஈர்க்கும் கவர்ச்சி இருக்கும். குறைந்தபட்சம் விடியலைப் பற்றிய கனவு காணவேனும் செய்வீர்கள். காலைப் பொழுது பற்றி எண்ணமிடுவீர்கள். உங்களைச் சுற்றி ஒரு மாயையைத் தோற்றுவித்துக் கொள்வீர்கள். உங்களிடம் காலைப்பொழுது பற்றிய நம்பிக்கை இருக்கும். நீங்கள் நம்பிக்கைக் கொள்ளத் தொடங்கும் போதெல்லாம் அதை நம்பவும் தொடங்குவீர்கள். நம்புவதன் மூலமே உங்களால் நம்பிக்கை கொள்ள முடிகிறது.

சார்த்தரின் மறுப்பு உண்மையிலேயே மெய்யானதுதான். அவர் அதனை வாழ்ந்து பார்த்தவர். அவர் அதற்காகத் துன்புற்றிருக்கிறார். அவர் எந்த நம்பிக்கையையும் பற்றிக் கொள்ளவில்லை. தம்மை வசப்படுத்துவது எதுவாயினும் அவர் கனவு காண்பதில்லை. தம்மை வசீகரிப்பது நம்பிக்கை மற்றும எதிர்காலம் பற்றிய கவர்ச்சியாயினும், கடவுள் மற்றும் சொர்க்கம் பற்றியதாயினும் அவர் தூண்டப் படவில்லை. அவர் உண்மையோடு நிலைத்திருப்பவர். அவரிடம் எதற்கும் முக்கியத்துவம் இல்லை என்பதே உண்மை. கடவுள் இல்லை என்று அவருக்குப் படுகிறது. அவருடைய வானம் வெறுமையானது. எல்லாம் நேர்மையற்றதாகவே தெரிகிறது. ஒட்டுமொத்த பிரபஞ்சமும் தற்செயலானதாய் தெரிகிறது. இது பிரபஞ்சமாய் அல்ல, பெரும் குழப்பமாகவே தோற்றமளிக்கிறது அவருக்கு.

இந்தக் குழப்ப நிலையில் வாழ்வது எளிதான காரியமல்ல. மனிதத் தன்மையற்றவராயினும், மாமனிதராயினும் இந்தக் குழப்பத்தில் வாழ்வதும், அதைப்பற்றிக் கனவு காணாமல் இருப்பதும் சாத்தியமற்றதேயாகும். காரணம் நமக்குப் பைத்தியம் பிடித்து விடுமோ

என்ற எண்ணந்தான் ஒருவருக்கு வரும். சார்த்தர் இருந்த அதே நிலையில்தான் நீட்சேக்குப் பைத்தியம் பிடித்தது. அவர் பைத்தியமானார். அதிகாரபூர்வமான மறுத்தலை முயன்று பார்த்த முன்னோடி மனிதர் அவர்தான். அந்தப் புதுமையான மனத்தினருக்குப் பைத்தியம் பிடித்தது. மறுத்தலை (No) முயன்று பார்த்த பல பேரும் பைத்தியமாகி விட்டிருக்கிறார்கள் - காரணம் அந்நிலையில் அங்கே அன்பில்லாமல் போகிறது, நம்பிக்கையில்லாமல் போய்விடுகிறது. வாழ்க்கை அர்த்தமற்றதாகிறது. உங்கள் பிரபஞ்ச இருப்பு நிச்சயமற்றது, தற்செயலானது. உள்ளேயும் வெறுமை, வெளியேயும் வெறுமை... அடைய விரும்பும் முடிவு எவ்விடத்திலும் இருப்பதாய் தெரியவில்லை. எதையும் பற்றுவதற்கில்லை, எங்கேயும் போவதற்கில்லை - இருப்பதற்குக் காரணமாய் எதைச் சொல்வது.

எளிதற்றதாய் தோற்றமளிக்கிறது - கிட்டத்தட்ட சாத்தியமற்றதாக இருக்கிறது.

சார்த்தர் அந்நிலையை தானே தேடிக்கொண்டார். அவர் அதனை வாழ்ந்து பார்த்தார். அவர் உண்மையான மனிதர், அவரே உண்மையான ஆதாம். அவர் கீழ்ப்படிய மறுத்தவர். அவர் மறுப்பு சொன்னார். எனவே அவர் தோட்டத்தில் இருந்து, கனவுகளின் தோட்டத்தில் இருந்து, உங்கள் ஆசைகளைப் பூர்த்தி செய்யும் தோட்டத்தில் இருந்து ஆடையற்றவராய், பாதுகாப்பற்றவராய் இரக்கமற்ற உலகில் அவர் வாழ்ந்தார்.

அவர் அருமையான மனிதர். ஆனால கூடுதலாய் ஒரு நடவடிக்கை தேவைப்பட்டது. கூடுதலாய கொஞ்சம் துணிச்சல். ஏதுமின்மை (nothingness)யின் அடிப்பாகத்தை அவர் தொட்டதேயில்லை.

ஏதும் இல்லா நிலையின் அடிப்பாகத்தை ஏன் அவரால் தொட முடியாமல் போனது? காரணம் அவர் ஏதும் இல்லா நிலை பற்றி ஒரு தத்துவத்தை அவர் உருவாக்கினார். தற்போது அந்தத் தத்துவம் தன்னளவில் ஓர் அர்த்தத்தை அவருக்கு வழங்குவதாய் இருந்தது. அவர் துயரத்தைப் பற்றிப் பேசினார். தன்னுடைய துயரத்தைப் பற்றி யாரேனும் பேசுவதை நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? அவருடைய பேச்சு துயரம் மறைய பேருதவியாய் இருந்தது. அதனாலதான் மனிதர்கள் தங்கள் துயரத்தைப் பற்றிப் பேசுகிறார்கள். தங்கள் துன்பம்

நிறைந்த வாழ்க்கையைப் பற்றிப் பேசுகிறார்கள். அவர்கள் பேசியாக வேண்டிய நிலையில் பேசுகிறார்கள். பின்பு அதை மறந்து விடுகிறார்கள்.

அவர் பேசிக்கொண்டும், வாதிட்டுக் கொண்டும் இருந்தார். ஒட்டுமொத்த வாழ்க்கையுமே அர்த்தமற்றது என்பதுதான் அவருடைய வாதம். வாதிடுவதும், போராடுவதுமே அவருடைய வாழ்க்கையாய் ஆயிற்று. வாழ்க்கையின் அர்த்தமாயிற்று. அந்நிலையில்தான் அவர் முக்கியக் கருத்தைத் தவற விட்டார். இன்னும் கொஞ்சம் ஆழத்துக்குச் சென்றால் அடிப்பகுதியை அடைந்திருப்பார். ஓர் ஆழ்ந்த ஒப்புதல் (Yes) பகுதிக்கு அவர் திரும்பவும் வீசி எறியப்பட்டிருப்பார்.

மறுத்தலில் (No) தோன்றுகிறது ஒப்புதல் (Yes) மறுத்தல் இல்லையேல் ஒப்புதல் தோன்றாதிருக்கும். அந்நிலையில் ஏதோவொன்று தவறாகி விட்டிருக்கும். அது அப்படித்தான் இருக்க வேண்டும். இரவில் இருந்து காலை தோன்றியது. காலைப்பொழுது புலர்ந்தாலும் மனிதன் கண் விழிப்பதில்லை என்று தீர்மானித்துக் கொண்டிருக்கிறானே. அவனுக்கு இருட்டின் மீது போதை. அவன் இருட்டுக்கு அடிமையாய் இருக்க வேண்டும் அல்லது அவனுடைய கண்கள் குருடாய் இருந்திருக்க வேண்டும் அல்லது அவன் இருட்டிலேயே வாழ்ந்திருந்து வெளிச்சத்தில் தெளிவாகப் பார்க்க முடியாமல் போயிருக்கலாம்.

வாழ்க்கையில் இன்னும் ஓரடி எடுத்து வைத்திருந்தால் சார்த்தர் ஜென்னுக்குரிய இயல்பைப் பெற்றிருப்பார். ஒப்புதல் கூற இயன்றவராய் இருந்திருப்பார். ஆம், மறுப்பில் இருந்து. ஆனால் நினைவில் கொள்ளுங்கள், அதிக்ரபூர்வமான மறுப்பில் இருந்து.

ஒரு பெண் தான் கர்ப்பமுற்றிருப்பதாய் நம்பினாள்.

அந்த நம்பிக்கையும் அந்த எண்ணமும் அவள் தன்னைத்தானே அறிதுயிலில் ஆழ்த்திக்கொண்டு நம்பும் அளவுக்கு அவளைத் தூண்டியது. தன்னுடைய வயிறு வளர்ந்து கொண்டிருப்பதாய் அவள் நம்பத் தொடங்கினாள். அவளுடைய வயிறும் உண்மையிலேயே வளரத் தொடங்கியது. வாயு (air) வைத் தவிர எதுவும் உள்ளே இருந்திருக்காது. ஒவ்வொரு மாதமும் வயிறு பெரிதாய், மேலும் பெரிதாய் வளர்ந்து கொண்டே போயிற்று. அவளுடைய மனந்தான் அவளுடைய வயிற்றுக்குள் வாயு சேரக் காரணமாய் இருந்திருக்கிறது.

கர்ப்பமும் இல்லை, உள்ளே குழந்தையும் இல்லை. இது பொய்யான கர்ப்பம். அதில் இருந்து எதுவும் பிறக்கப் போவதில்லை.

மறுக்கிற சிலர் அதைத் தாமே தேடிக் கொள்ளாமலும், அதை வாழ்ந்து பார்க்காமலும் அதைச் சொலல முற்படுகிறபோது... உதாரணமாய் தற்போது ரஷ்யாவில் மறுப்பது அதிகாரபூர்வமான தத்துவமாகி விட்டது. ஒவ்வொருவரும் ஒரு பொதுவுடைமைக் கொள்கையாளராய், நாத்திகராய் இருக்கிறார். தற்போது மறுப்பு என்பது இந்தியர்களின் ஒப்புதலைப் போல் போலியாகி விட்டது. அது தற்போது ஒரு நம்பிக்கை மோசம் செய்கிற (false) கர்ப்பமாயிருக்கிறது. அதுவே தற்போது அதிகாரபூர்வமான மதமாய் அரசால் பரப்பப்பட்டுக் கொண்டிருக்கிறது. ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும், கல்லூரியிலும், பல்கலைக்கழகத்திலும் மறுத்தல் ஒரு வழிபாடாகவே இருந்து கொண்டிருக்கிறது. நாத்திகம் மதமாகி விட்டிருக்கிறது. தற்போது ஒவ்வொருவரும் அதுபற்றிக் கற்பிக்கப்பட்டிருக்கிறார்கள். கர்ப்பம் தவறானதாய், அடுத்தவரால் நிலைப்படுத்தப்பட்டதாய் இருக்கிறது. நீங்கள் சமய நம்பிக்கையுடைய ஒரு வீட்டில் பிறந்து வேறொன்று உங்களுக்குக் கற்பிக்கப்பட்டு, அந்த வேறொன்றை நீங்கள் மெல்ல மெல்ல நம்பத் தொடங்குகிறீர்கள்.

தன்னுடைய தந்தை இறை வழிபாடு செய்து கொண்டிருப்பதைப் பார்த்த குழந்தை தானும் வழிபடத் தொடங்குகிறது. காரணம் குழந்தை பாவனையை மேற்கொள்வது (imitate). தந்தை தேவாலயத்துக்குச் செல்கிறார், குழந்தையும் தேவாலயத்துக்குச் செல்கிறது. எல்லாரும் நம்புவதைக் கண்டவுடன் தானும் நம்புவது போல் பாசாங்கு செய்கிறான். தற்போது ஒரு போலியான கர்ப்பம் தோன்றி விடுகிறது. வயிறு வளர்ந்துகொண்டே போனாலும் அதில் இருந்து குழந்தை வரப்போவதில்லை. அதில் இருது ஒரு புதிய உயிர் தோன்றாது. வளர்ச்சியுற்ற (பொய்யான) வயிற்றின் காரணமாய் அந்த நபர் அருவருப்பான தோற்றத்தை அடைவார், அவ்வளவுதான்.

'ஆம்' என்பது பொய்யாகலாம். 'இல்லை' என்பதும் பொய்யாகலாம். அதில் இருந்து எதுவும் வருவதில்லை. மரம் அதனுடைய பழத்தைக் கொண்டு அறியப்படுகிறது. வினை முதல் அதன் விளைவின் மூலம் அறியப்படுகிறது. நீங்கள் அதிகார பூர்வமானவரா இல்லையா என்பது உங்களுடைய மறு பிறவியில் இருந்து அறியப்படுகிறது. இது ஒரு விசயம்.

நீங்கள் நினைவில் வைக்க வேண்டிய இன்னொரு விசயம்: நீங்கள் உண்மையிலேயே கர்ப்பமாய் இருக்கலாம். ஆனால், குழந்தையைப் பிரசவிப்பதற்கு எதிரான கருத்தைத் தாய் கொண்டிருந்தால், அந்தக் குழந்தையை அவள் கொன்றுவிடக் கூடும். குழந்தை பொய்யில்லை, நிஜம்தான். ஆனால் தாய் அதற்கு ஒத்துழைக்க வேண்டும். குழந்தை ஒன்பது மாத வளர்ச்சிக்குப் பிறகு கருவறையில் இருந்து வெளியில் வர விரும்புகிறபோது தாயின் ஒத்துழைப்பு அதற்குத் தேவைப்படும்.

தாய்மார்கள் ஒத்துழைக்காத காரணத்தால் தான் பிரசவத்தில் வலி அதிகம் இருப்பது. குழந்தை பிறப்பதென்பது இயல்பான விசயம். அதில் வலி அவசியப்படுவதில்லை. குழந்தையைப் பிரசவிப்பதென்பது பெண்ணின் வாழ்வில் பிரசவத்துக்குரிய கணங்கள் - அவள் ஒத்துழைக்க வேண்டும். அதைப்போல வேறொன்று இருக்க முடியாது என்பதை அறிந்தவர்கள் சொல்வார்கள். குழந்தைப் பிறப்பில் பெண் பங்கேற்கிறபோது, பால் சார்ந்த பரவச நிலை (sexual orgasm) அவள் அடைகிறாள். அவளுடைய பிரபஞ்ச இருப்பு ஒரு புதிய ஊக்கத்துடன் அதிர்வு கொள்கிறது. ஒரு புதிய ஜீவன் (being) தோன்றுகிறது. அவள் கடவுட் தன்மையின் சாதனமாகிறாள், அவள் படைப்பாளியாகிறாள். அவளுடைய இருப்புணர்வின் ஒவ்வோர் இழையும் (fibre) ஒரு புதிய இசையுடன் அதிர்வுறுகிறது. அவளது இருப்புணர்வின் அடியாழத்தில் ஒரு புதிய பாடல் கேட்கப்படுகிறது, அவள் பரவசப்படுகிறாள்.

ஒரு பெண் தாயாகிற போது அடைகிற பரவசத்தைப் போல் அவளுடைய பால் சார்ந்த பரவசம் அத்தனை ஆழமாய் இருக்காது. அவள் பரவசப்படுகிறாள் என்பதைவிட பெரிய அளவில் துன்புறும் நிலையை அவள் கடக்கிறாள் என்றே சொல்ல வேண்டும் - காரணம் அவள் போராடுகிறாள். குழந்தை கருவறையை விட்டு வெளியே போய்க்கொண்டிருக்கிறது. பெரியதோர் உலகில் பிரவேசிக்க அவன் ஆயத்தமாகி விடுகிறான். தாயோ அவனைப் பற்றிக் கொண்டிருக் கிறாள். அவள் உள்ளடக்கப் பார்க்கிறாள். அவள் உதவவில்லை. இசைவாய் இருப்பதில்லை. அவள் உண்மையிலேயே உள்ளடக்கு வதாயின் அந்தக் குழந்தையை அவள் கொன்றிருக்கக் கூடும்.

சார்த்தரின் விசயத்தில் அதுதான் நடந்தது. குழந்தை ஆயத்த நிலையில் இருந்தது. அவர் உண்மையான கர்ப்பத்தைச் சுமந்திருந்தார்.

ஆனால் தற்போது அவர் அச்சத்துக்குள்ளாகி விட்டார். தற்போது மறுத்தலே (No) அவருடைய வாழ்வின் குறிக்கோளானது. கர்ப்பம் குறிக்கோளானது. குழந்தையல்ல. தன்னுடைய கர்ப்பத்தில் ஒரு சுமையை ஏற்றபோது விரும்பத்தக்க விதமாய் உணர்ந்த பெண், குழந்தை பிறந்தால் ஏதோ ஒன்றை இழந்து விடுவோம் என்று தற்போது அஞ்சுகிறாள். கர்ப்பம் ஒரு வாழ்க்கை முறையாகி விடக்கூடாது. அது ஒரு செயல்முறை. அது தொடங்குகிறது. முடிகிறது. ஒருவர் அதையே பற்றிக் கொண்டிருக்கக் கூடாது. சார்த்தர் பற்றிக் கொண்டிருக்கிறார். அந்த இடத்தில்தான் அவர் தவற விடுகிறார்.

இவ்வுலகில் பொய்யான கர்ப்பம் தரித்த நாத்திகர்கள் பலர். வெகுசிலர்தான் நிஜமாகக் கர்ப்பமுற்றது. ஆனால் உங்களுடைய கர்ப்பம் நிஜமானதாயினும் நீங்கள் தவறவிடக் கூடும்.

உங்கள் கண்ணோட்டத்தை ஒருபோதும் தத்துவமாக்கிக் கொண்டு விடாதீர்கள். ஏனெனில் அது தத்துவமானதுமே உங்களுடைய அகந்தையும் அதில் தொடர்பு கொண்டு விடும். அதன்பிறகு தொடர்ந்து அதைப் பாதுகாக்க முற்படுவீர்கள், அதற்காக வாதிடுவீர்கள். அதற்குத் துணையாய் நிரூபணங்களைத் தேடிக் கொண்டிருப்பீர்கள்.

அமிதாப் ஒரு சின்னக் கதை சொன்னார். அது புரிந்து கொள்ளக் கூடியதுதான்:

ப்ரூக்லினை (அமெரிக்கா)ச் சேர்ந்த ஒரு யூத ஞானி மற்றொரு ஞானியிடம் கேட்டார்.

'பச்சையாய், சுவரில் தொங்குகிறது, சீழ்க்கை ஒலி (whistle) செய்கிறது. அது என்ன?' என்று.

ஒரு விடுகதை: பச்சையாய், சுவரில் தொங்குகிறது, சீழ்க்கை ஒலி செய்கிறது. அது என்ன?

இரண்டாம் யூத ஞானி சிந்தித்த பின் சொன்னார், 'எனக்குத் தெரியவில்லை' என்று.

முதல் ஞானி: ஒரு சிவப்பு மீன்.

இரண்டாம் ஞானி: ஆனால் நீர் சொன்னீர் அது பச்சையாய் இருந்தது என்று.

முதல் ஞானி: அதற்கு நீர் பச்சைச் சாயம் பூச முடியும்.

சிவப்பு மீன். ஆனால் நீங்கள் அதை பச்சையாய் வரைய முடியும்.

இரண்டாம் ஞானி: ஆனால் நீர் சொன்னீர் அது சுவரில் தொங்குகிறது என்று.

முதலாம் ஞானி: உண்மைதான். நீர் அதைச் சுவரில் தொங்கவிட முடியும்.

இரண்டாம் ஞானி: ஆனால் அது சீழ்க்கை ஒலி எழுப்புகிறது என்று சொன்னீர்.

முதலாம் ஞானி: பிற்பாடு சீழ்க்கை ஒலி எழுப்பவில்லை.

தற்போது முன்பு அறிவிக்கப்பட்டபடி எதுவும் இருக்கவில்லை. ஆனால் ஒருவர் தொடர்ந்து அதைப் பற்றிக்கொண்டிருக்கிறார். அது அகந்தையின் பயணம்.

சார்த்தர் நம்பத்தக்க மனிதர்தான். ஆனால், மொத்த விசயமும் அகந்தையில் தடுக்கி விடுகிறது. அவருக்கு இன்னும் கொஞ்சம் துணிச்சல் தேவைப்படுகிறது. மறுத்துரைப்பதற்கு அகந்தை உதவக்கூடும். ஒவ்வொரு மறுத்தலிலும் அகந்தை உறுதுணையாய் இருக்கும். மறுப்பு தெரிவிப்பதை அது சரியானதாய் உணர்கிறது. அகந்தை ஊட்டம் பெற்றதாய், வலிமையுற்றதாய் எண்ணிக் கொள்கிறது. ஆனால் ஒப்புதல் (yes) கூறல் என்பது விட்டுக் கொடுப்பது ஆகும். அதற்கு மிகுதியான அளவில் துணிவு தேவைப்படும்.

சார்த்தருக்கு ஒரு மாற்றம் (conversion) தேவைப்படுகிறது. அதில் மறுத்தல், ஒப்புதல் ஆகிவிடுகிறது. அந்நிலையில் அவர் ஜென் போன்றவராய் இருக்க மாட்டார். ஜென்னாகவே மாறி விடுவார். ஜென்னிற்கு அப்பால் இருக்கிறார் புத்தர். ஜென்னில் இருந்து தொலைவில் இருக்கிறார் புத்தர். முடிவான ஞானம் நிர்பீஜ சமாதி நிலை. பதஞ்சலி இதனை விதைகளற்றது - என்பார். இச்சமாதி நிலையில் ஒப்புதலும் (Yes) கைவிடப்படுகிறது. ஒப்புதல் என்பது ஒரு மறுப்புக்கு எதிராய் மேற்கொள்ளப்பட்டது. மறுப்பு என்பது உண்மையில் கைவிடப்படுமெனில் ஒப்புதலை மேற்கொள்ள தேவையில்லை.

கடவுள் இருக்கிறார் என்று எதற்காகச் சொல்கிறீர்கள்? காரணம், அவர் இல்லாமல் போய்விடக்கூடும் என்கிற அச்சம். இது பகல் என்று

யாரும் சொல்கிறதில்லை. சூரியன் உதிக்கிறது என்று யாரும் சொல்வதில்லை. காரணம், அம்முறையில்தான் அது இருக்கும் என்பது எல்லாருக்கும் தெரியும். இது அப்படியிருக்கிறது என்று நீங்கள் அழுத்தமாய் சொல்கிறபோது உங்கள் தன்னுணர்வின்மையின் ஏதோவோர் இடத்தில் அச்சம் இருக்கும். அது எப்படி இருக்காதோ, இல்லாமல் போய்விடுமோ என்று நீங்கள் அஞ்சுகிறீர்கள். அந்த அச்சத்தின் காரணமாகவே நீங்கள் தொடர்ந்து அழுத்தமாய் கூறிக்கொண்டிருக்கிறீர்கள். மக்கள் வெறியர்களாகவும், பிடிவாதப் பண்புடையவர்களாகவும் மாறி விடுகிறார்கள். தங்கள் கருத்துகளுக்காக அவர்கள் கொலையுண்டு போவதற்கோ அல்லது கொல்வதற்கோ தயாராகி விடுகிறார்கள்.

உலகில் ஏன் கொள்கைகளைக் கடைபிடிப்பதில் அத்தனை பிடிவாதம்? காரணம், மக்கள் உண்மையில் சிறந்த ஒன்றைப் பெறுதற்கான தகுதி கொண்டிருக்கவில்லை. அவர்கள் அச்சத்தில் இருக்கிறார்கள். யாராவது மறுப்பு சொல்லி (No) விட்டால் தாங்கள் தவறுக்குத் தூண்டப்பட்டு விடுவோம் என்கிற அச்சம். யாரேனும் மறுப்பு சொல்லிவிட்டால் தங்களுக்குள் இருக்கிற மறுப்பும் தலையெடுத்து விடுமோ என்று அவர்கள் அஞ்சுகிறார்கள். தங்களுடைய கொள்கைகளுக்கு மற்றவர்களால் இடர்ப்பாடு வந்துவிடக் கூடாதே என்பதற்காக அவர்கள் வெளிப்படைத் தன்மையற்ற வாழ்க்கையை வாழ்கிறார்கள்.

ஆனால், உண்மையிலேயே முயன்று அடைந்தவர்கள், தகுதி உள்ளவர்கள் அதை ஒப்பிட வேண்டுமென்பதில்லை. புத்தர் கடவுளைப் பற்றி எதுவும் சொன்னதில்லை. அவர் மறுத்தல் மற்றும் ஒப்புதல் என்கிற மதியீனத்தை எண்ணிப் புன்னகைப்பதோடு சரி. வாழ்க்கை இருக்கிறது எந்தவித விளக்கமும் இல்லாமல். அது முழுமையாய், குறைகளற்றதாய் இருக்கிறது. அதைப்பற்றிச் சொல்வதற்கு எந்தக் கருத்தும் தேவையில்லை. கொள்கையும் தேவையில்லை. அதைக் காது கொடுத்துக் கேட்பதற்கு நீங்கள் சந்தடியற்று, அமைதியாய் இருந்தால் போதும். அதை உணர்வதற்கும், வாழ்வதற்கும் அதனுள் இருந்தாக வேண்டும். எப்போதும் நினைவில் கொள்ளுங்கள். ஒப்புவதில் தீவிர உணர்ச்சி காட்டுகிறவர்கள் தங்கள் இருப்புணர்வில் மறுப்பை மறைத்து வைத்திருப்பார்கள்.



இது அமிதாப்பிடம் இருந்து:

ஹெர்மென் ஹெஸ்ஸினுடைய சித்தார்த்தன் இவ்வாறு புத்தரிடம் பேசுகிறான்:

'சிறப்பு மிக்கவரே! தங்களுடைய போதனைகளில் ஒன்றை மட்டும் - மற்றெவற்றையும்விட நான் உவகையுடன் பார்க்கிறேன். ஒவ்வொன்றும் முற்றிலும் தெளிவாகவும், மெய்ப்பிக்கப்பட்டதாயும் இருக்கிறது. இந்த உலகத்தை முழுமையான இடையீடற்ற ஒரு சங்கிலித் தொடராய் தாங்கள் காண்பித்திருக்கிறீர்கள் - அது ஒரு நிலைபேறுடைய (eternal) தொடர்ச்சி, காலத்தால் மாறாதது. முற்றிலும் பொறுத்தமானது. அது பெரியதையும் சிறியதையும் ஒரே போக்காய் ஏற்றுக் கொள்கிறது. தாங்கள் புத்தர் என்பதை நான் ஒருகணமும் சந்தேகிக்கவில்லை. பல்லாயிரக்கணக்கானவர்கள் அடையப் பாடுபடும் உயர்நிலையைத் தாங்கள் அடைந்திருக்கிறீர்கள். தங்களுக்கே உரிய வழியில் தங்கள் கண்டுபிடிப்பின் மூலம் அதைச் செய்தீர்கள். தாங்கள் உபதேசங்கள் மூலம் எதையும் கற்றுக்கொண்டு விடவில்லை. நான் அப்படித்தான் எண்ணுகிறேன். புகழ் வாய்ந்தவரே மீட்சியுற்றவர் (பாவத்தில் இருந்து காப்பாற்றப்பட்டவர்) எவரும் இல்லை.தாங்கள் ஞானம் பெற்ற தருணத்தில் தங்களுக்கு என்ன நிகழ்ந்தது என்பதைத் தங்கள் போதனைகளில் யாருக்கும் தெரிவிக்கவில்லை. இலட்சோப லட்சம் பேர்களில் புத்தர் மட்டுமே அறிந்த இரகசியம் அது.

அதனால்தான் இன்னொரு குருவை நாடாமல் என்னுடைய வழியில் நான் போய்க் கொண்டிருக்கிறேன். தங்களைவிட சிறந்த குரு யாருமில்லை. அதனால்தான் ஒன்று தனியாக அடைவது அல்லது இறந்து விடுவது என்ற முடிவில் போய்க் கொண்டிருக்கிறேன்.

நீங்கள் கருத்து தெரிவிப்பீர்களா?

ஹெர்மன் ஹெஸ்ஸினுடைய 'சித்தார்த்தா' அவருடைய உள்ளார்ந்த ஆழத்தில் இருந்து உருவானது. அரிதான புத்தகங்களில் அதுவும் ஒன்று. சித்தார்த்தாவைவிட நேர்த்தியான, மதிப்பு மிக்க இன்னோர் அணிகலனை (புத்தகம்) அவரால் உருவாக்க முடியவில்லை. அவர் தன்னை அதிலேயே பயன்படுத்தித் தீர்த்தார் என்றுதான் சொல்ல வேண்டும். அதைவிட உயரத்துக்கு அவரால் செல்ல முடியவில்லை. சித்தார்த்தா ஹெஸ்ஸின் உச்சநிலையாயிற்று.

சித்தார்த்தன் புத்தரிடம் சொல்கிறான். 'தாங்கள் சொல்வது எதுவாயினும் அது உண்மையே. அது எப்படி வேறாக இருக்க முடியும்? முன்பு எப்போதும் விளக்கப்பட்டிராத அனைத்தையும் தாங்கள் விளக்கியிருக்கிறீர்கள். தாங்கள் எல்லாவற்றையும் தெளிவுபடுத்தியவர். தாங்களே மிக உயர்ந்த ஆசான். அனால் இந்த ஞானத்தைத் தாங்களாகவே அடைந்தீர்கள். தாங்கள் சீடராய் இருந்ததில்லை. தாங்கள் யாரையும் பின்பற்றவில்லை. தாங்கள் தனியாகவே தேடலை மேற்கொண்டீர்கள். இந்த ஞான நிலைக்குத் தனியாக வந்தீர்கள். யாரையும் பின்பற்றாமல், ஒரு பாதையில் நடந்து தங்களால் அது அடையப்பட்டது. சித்தார்த்தன் புத்தரிடம் சொன்னான். 'நான் தங்களை விட்டுச் சென்றாக வேண்டும். தங்களைவிட முக்கியத்துவம் உடைய ஒரு குருவைத் தேடியல்ல, காரணம் அப்படி யாரும் இல்லை. ஆனால், மெய்ப்பொருளை நானாகவே கண்டடையவேண்டும் என்பதற்காகத்தான். இந்த போதனையுடன் நான் ஒத்துப் போகிறேன். காரணம் இது புத்தருடைய போதனை 'உங்களுக்கு நீங்களே ஒளியாய் இருங்கள். யாரையும் பின்பற்றாதீர்கள். முயற்சி செய்யுங்கள், கவனமாய் தேடுங்கள், ஆனால் யாரையும் பின்பற்றாதீர்கள்.' இதனுடன் நான் ஒத்துப் போகிறேன் என்று. சித்தார்த்தன் மீண்டும் சொன்னான். 'எனவே நான் போயாக வேண்டும்.

அவன் துயரத்தில் இருந்தான். புத்தரை விட்டுச் செல்வது அவனுக்கு எளிதற்றதாய் இருந்திருக்க வேண்டும். ஆனாலும், முயற்சி செய்வதற்கு, கவனமாய் தேடுவதற்கு அவன் போயாக வேண்டும் அல்லது சாக வேண்டும். வழியை அவன் கண்டறிந்தே ஆக வேண்டும்.

அதன்பேரில் நான் எப்படி கருத்து சொல்வது? உலகில் இரண்டு வகை மனிதர்கள் இருக்கிறார்கள். தொண்ணூற்றியொன்பது சதவிகிதம் பேர் தனியே செல்ல முடியாதவர்கள். தனியே அவர்கள் முயன்றால் விரைந்து தூங்கி விடுவர் எப்போதைக்குமாய். தங்களை எழுப்பிவிட யாராவது அவர்களுக்குத் தேவைப்படுவார்கள். தூக்கத்தில் இருக்கும் அவர்களை யாராவது உலுக்கி எழுப்பிவிட வேண்டியிருக்கும். அவர்களுக்கு உதவ யாராவது தேவைப்படுவார்கள். ஆனால், இன்னொரு வகையினரும் இருக்கிறார்கள். அது ஒரு சதவிகிதந்தான். அது தன்னுடைய வழியைத்தானே கண்டுபிடித்துக் கொள்வது.

புத்தர் ஒரு சதவிகித வகையைச் சேர்ந்தவர். அது அரிதான வகை. சித்தார்த்தனும் அதே வகையைச் சேர்ந்தவன்தான். அவன்

புத்தரை அறிந்திருப்பவன். புத்தரை நேசிக்கிறவன். போற்றிப் பாராட்டுகிறவன். அவரை விட்டுச் செல்லும்போது துயரத்தை, வேதனையை, நெஞ்சு வலியை அவன் உணர்கிறான். ஆனாலும், தான் அவரை விட்டுச் சென்றாக வேண்டும் என்பதையும் அவன் அறிவான். தன்னுடைய வழியைத் தானே கண்டுபிடிக்க வேண்டியவனாய் அவன் இருக்கிறான். உண்மையைத் தானாகத் தான் அவன் கண்டுபிடித்தாக வேண்டும். அவனால் ஒரு நிழலாக இருக்க முடியாது. அந்த வகையைச் சேர்ந்தவனல்லன் அவன். ஆனால், அது எல்லாரும் தாமாகவே கண்டுபிடிக்க வேண்டும் என்று குறிப்பதாகாது.

இந்த நூற்றாண்டில் மிக முக்கியமான இரண்டு பேர் இருந்திருக்கிறார்கள்: குருட்ஜீவ் மற்றும் கிருஷ்ணமூர்த்தி. அந்த இருவரில் கிருஷ்ணமூர்த்தி - ஒவ்வொருவரும் தம்முடைய சொந்த முயற்சியில் கண்டுபிடிக்க வேண்டும் என்று அழுத்திக் கூறுவார். தனியாக முயற்சி செய்து தனியாக அடைய வேண்டும் அவருக்கு. கூட்டாகச் செயல்பட வேண்டும் என்று வலியுறுத்துவார் குருட்ஜீவ். பிறர் துணையின்றி ஒருவர் சிறையில் இருந்து தப்புவது இயலாத காரியம். எல்லாக் கைதிகளும் ஒன்று சேர்ந்து சிறைக் காவல் குழுவுடன் சண்டையிட்டுத் தப்ப வேண்டியிருக்கும். கைதிகள் அனைவரும் ஒன்று சேர்ந்து அதற்கான வழிகளை, உபாயங்களை, செய்முறைகளைக் கண்டுபிடித்தாக வேண்டும். சிறைக்கு வெளியேயிருக்கும் ஒருவருடைய ஆதரவும் அவர்களுக்குத் தேவைப்படும். இல்லையேல் அவர்களால் வழியைக் கண்டுபிடிக்க முடியாது. எப்படி வெளியே வருவது என்பதை அவர்களால் கண்டறிய முடியாது. குருவின் உதவி தேவைப்படும்.

யார் சரியானவர்? கிருஷ்ணமூர்த்தியை ஏற்று நடப்பவர்கள் குருட்ஜீவை காது கொடுத்துக் கேட்க மாட்டார்கள். குருட்ஜீவைப் பின்பற்றுகிறவர்கள் கிருஷ்ணமூர்த்தியை காது கொடுத்துக் கேட்க மாட்டார்கள். ஒருவரைப் பின்பற்றுகிறவர்கள் கண்ணுக்கு அடுத்தவர் தவறானவராகத்தான் தெரிவார். ஆனால், நான் உங்களுக்குச் சொல்கிறேன். அவர்கள் இருவருமே சரியானவர்கள்தாம். காரணம் மனித குலம் இரண்டு வகையானவர்களைக் கொண்டது.

மதிப்பீடு செய்ய முயலாதீர்கள். சிலர் பெண்ணாக இருக்கலாம். சிலர் ஆணாக இருக்கலாம் - ஆனால் யாரும் யாரை விடவும் தாழ்ந்தவரல்லர். அதேமாதிரி யாரும் யாரை விடவும் உயர்ந்தவரல்லர்.

உயிரியலில் பல வகைகள். ஒருவர் தனியாகக் கண்டுபிடிக்க முயல்வார். இன்னொருவருக்கோ மற்றவர்களின் துணை தேவைப்படும். யாரும் உயர்ந்தவரில்லை. யாரும் தாழ்ந்தவரில்லை. ஆன்மிகத்தில் பல்வேறு வகைகள்.

தனியே முயன்று அடைய முடியாதவருக்கு சரணாகதியே வழியாக இருக்கும். அன்பே வழியாக இருக்கும். பக்தியே வழியாக இருக்கும். நம்பிக்கையே நல்ல நெறிமுறையாய் இருக்கும். நம்பிக்கை கொள்வதை எளிதாய் எண்ணி விடாதீர்கள். தனக்கே உரிய விதத்தில் முயல்வதைப் போல் அதுவும் எளிதற்றதுதான். சில சமயங்களில் அதைவிட இடர்ப்பாடு மிக்கதுதான். தனியே முயற்சியைத் தொடர்கிறவர்கள் இருக்கிறார்கள்.

சில நாட்களுக்கு முன்னர் ஓர் இளைஞன் வந்து என்னிடம் கேட்டான். 'நானே சுயமாய் முயன்று தேடுவது முடியாத காரியமா? நான் சந்நியாசி ஆக வேண்டுமா? நான் தங்களிடம் சீடனாக வேண்டுமா? நானே சுயமாய் தேட முடியாதா?' என்று. நான் சொன்னேன். 'நீ எதற்காக என்னிடம் கேட்டுக்கொண்டு நிற்கிறாய்? தானாக முயன்று அடையும் வகையைச் சேர்ந்தவன் அல்லன் நீ. இதுகூட நீயாகத் தீர்மானித்துக் கொண்டதல்ல. எந்த அளவு நீ சுயமாகத் தீர்மானிக்க முடியும்? இதையும் நீ என்னிடம்தான் கேட்க வந்திருக்கிறாய். நான்தான் இதையும் தீர்மானிக்க வேண்டியிருக்கிறது - நீ முன்பே ஒரு சீடனாய் இருக்கிறாய். 'ஆனால், தாங்கள் யாரிடமும் சீடராய் இருந்திருக்கவில்லையே என்று அவன் வாதிட்டான். நான் சொன்னேன். 'அது சரிதான். நான் யாரிடமும் கேட்டு நிற்கவில்லை. இதற்காகக் கூட நான் யாரிடமும் கேட்டு நின்றதில்லை' என்று.

நான் உணர்ந்து கொண்டது இதுதான்: தங்கள் வழியை அடைய முயற்சிக்கிறவர்கள் அரிதாகவே அடைகிறார்கள். வெகு அரிதாகவே அடைகிறார்கள். காரணம் உங்களுடைய அகந்தை நீங்கள் அரிதான வகையினர் என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்கும். நீங்கள் தனியாகவே செல்ல முடியும். யாரையும் பின்பற்ற வேண்டியதில்லை என்றும் அது சொல்லும். நீங்கள் யாரையும் பின்பற்றாமல் இருக்கலாம். உங்களுடைய அகந்தையை, உங்கள் மனக்காட்சியை (image) நீங்கள் பின்பற்றிக் கொண்டிருக்கிறீர்கள். அது உங்களை ஆயிரத்தியோரு படுகுழிகளில் தள்ளிவிடும். உண்மையில் உங்களை நீங்கள் பின்பற்றுகிறீர்கள். அத்துடன் ஒரு குழப்பமான வெளியில் அல்லவா

நீங்கள் இருக்கிறீர்கள். நீங்கள் எங்கே செல்ல முடியும்? எப்படிச் செல்ல முடியும்?

அதுபற்றித் தெளிவாய் இருங்கள். உங்களுக்கு மிக உள்ளேயிருக்கும் ஆழங்களைக் கவனியுங்கள். அது அகந்தையாய் இருக்கும் பட்சத்தில் நீங்கள் எங்கேயும் சென்று அடைகிறதில்லை. நீங்கள் பொறியில் அகப்பட்டிருக்கிறீர்கள். முன்பே பொறியில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள். அந்நிலையில், ஒருவரைப் பின்பற்றுவதுதான் நல்லது. ஒரு கற்கும் இடத்தைக் கண்டுபிடித்துக் கொள்ளுங்கள். ஒரு குருவைக் கண்டுபிடித்துக் கொள்ளுங்கள். இந்த அகந்தையை விட்டு விடுங்கள். இது எதற்கும் உதவாத இடத்தில்தான் உங்களைக் கொண்டு சேர்க்கும்.

சித்தார்த்தனின் வார்த்தையைக் கவனியுங்கள். அவன் சொல்கிறான். 'இது காரணம் பற்றியே நான் என்னுடைய வழியில் போகிறேன் - இன்னொருவரைக் கண்டுபிடிப்பதற்காக அல்ல, இன்னும் சிறந்த ஆசானைப் பெறுவதற்காக அல்ல, தங்களைவிடச் சிறந்தவர் இல்லை...' அவன் புத்தரை வெகுவாய் நேசித்தான். பெரிய அளவில் அவரை மதித்தான். அவன் சொல்கிறான். 'தாங்கள் உரைப்பது எதுவாயினும் முற்றிலும் தெளிவாகவே இருக்கும். முன்பு எவரும் இத்தனை தெளிவாய் கற்பித்ததில்லை. தாங்கள் சொல்கிற விசயம் சிறியதைப் பற்றியதாயினும், பெரியதைப் பற்றியதாயினும் புரிந்துகொள்ளக் கூடியதாய், ஈர்ப்பதாய், மதம் கொள்கை இவற்றில் இருந்து மாறுபட்டதாய், ஒரு பரிவை உண்டுபண்ணுவதாய் இருக்கிறது. அவன் சொன்னான், தாங்கள் முயன்று அடைந்தவர் என்பதை நான் அறிவேன். நான் தங்களைச் சந்தேகித்துப்போகவில்லை. தங்களை நான் மதிக்கிறேன். கணநேரக் காட்சியேயாயினும் அதனைத் தங்கள் மூலமே கண்டேன். மெய்ப்பொருளைத் தங்கள் வாயிலாகவே நான் காணப் பெற்றேன். நான் நன்றியுடையவனாய் இருக்கிறேன். ஆனாலும் நான் போய்த்தான் ஆக வேண்டும்.'

ஒருவரைப் பின்பற்றிச் செல்லும் வகையைச் சேர்ந்தவனல்லன் அவன். அவன் உலகத்துக்குள் நுழைகிறான். குறிப்பிட்ட நோக்கத்தோடு நுழைந்து செல்கிறான். அவன் ஒரு விலை மாதுவுடன் வாழ்கிறான். மனம் இச்சைக்கு அடிபணிவதைப் பற்றி அறிந்து கொள்ள முயல்கிறான். உலகின் வழிமுறைகளை, குற்றத்தின் செயல் முறைகளைத் தெரிந்து கொள்கிறான். மெல்ல மெல்ல பல்வகைத்

துன்பங்களில் இருந்தும், பல்வேறு ஏமாற்றங்களில் இருந்தும், விரக்திகளில் இருந்தும் அவனுடைய மனசாட்சி மேலெழுகிறது. நெடிய பாதை அவனுடையது. ஆனாலும் தளர்வுறாமல், தடுமாற்றமடையாமல் அவன் போய்க்கொண்டே இருக்கிறான். ஒன்று, முயன்று அடைவது அல்லது சாவது என்று. எந்த விலையும் கொடுக்க அவன் தயாராயிருக்கிறான். தன்னுடைய வகை (!ype) யை அறிந்தவன் அவன்.

ஆன்மா சார்ந்த தேடலில் ஒருவர் தன்னுடைய வகையை அறிந்திருப்பது அடிப்படை முக்கியத்துவம் உடையதாகும். நீங்கள் எந்த வகையினர் என்பதில் உங்களுக்குக் குழப்பம் ஏற்பட்டிருந்தால் அந்நிலையில் நிச்சயப்படுத்திக் கொள்ளுங்கள். நீங்கள் தனக்கே உரிய வழியில் செல்பவரல்லர் என்பதை. 'தாங்கள் சொல்கிறீர்கள், வகையைப் புரிந்து கொள்வது முக்கியம் என்று. ஆனால் நாங்கள் எந்த வகையைச் சேர்ந்தவர்கள் என்பது எங்களுக்குத் தெரியவில்லையே' என்று பலர் என்னிடம் வந்து சொல்கிறார்கள். தாங்கள் சொந்த வழியில் செல்லும் வகையினரல்லர் என்பதை அவர்கள் தெரிந்துகொள்ள வேண்டும். காரணம், உங்கள் வகையைப் பற்றி கூட நீங்கள் உறுதியானவராயில்லை. அதைக்கூட வேறொருவர் தீர்மானிக்க வேண்டியிருக்கிறது. அந்நிலையில், நீங்கள் தனியே செயலாற்றும் வல்லமையைப் பெற்றிருக்க மாட்டீர்கள். அந்நிலையில் அகந்தையை விட்டுவிடுங்கள்.

இப்படி நிகழ்ந்திருக்கிறது... அகப்படுத்தக்கூடிய படுகுழிகள் அநேகம். கிருஷ்ணமூர்த்தியின் சீடர்களைப் பார்த்தால் நீங்கள் புரிந்து கொள்வீர்கள். தவறான வகையைச் சேர்ந்தவர்கள் எல்லாரும் ஒன்று கூடுகிறார்கள். சித்தார்த்தனைப் போன்றவர்கள் அல்ல - அப்படி யிருந்தால் அவர்கள் ஏன் கிருஷ்ணமூர்த்தியிடம் செல்கிறார்கள். தவறானவர்கள் - ஓர் ஆசான் தேவைப்பட்டவர்கள் - இன்னமும் தங்களுடைய அகந்தையைவிட அவர்கள் தயாராயில்லை. கிருஷ்ணமூர்த்தியைச் சுற்றி அப்படிப்பட்டவர்களை நீங்கள் பார்க்க முடியும். அது ஓர் அழகான ஏற்பாடு. கிருஷ்ணமூர்த்தி சொல்கிறார். 'நான் ஓர் ஆசான் அல்லன்' என்று. எனவே, அவர்களுடைய அகந்தைகள் மாறாமல் இருக்கிறது. 'சரணடையுங்கள்' என்று அவர் சொல்லவில்லை. அதனால் எந்தவொரு தொல்லையும் கிடையாது. உண்மையில், அவர்களுடைய அகந்தையை அவர் அதிகப்படுத்தி

விட்டார். 'உங்களுடைய வழியை நீங்களாகவே கண்டுபிடியுங்கள்' என்றார் அவர். அவர்கள் வெகு நேர்த்தியாய் உணர்ந்தனர். வருடக்கணக்கில் கிருஷ்ணமூர்த்தியின் உரைகளை அவர்கள் கவனமாய் கேட்டுக் கொண்டிருந்தனர்.

நாற்பது ஆண்டுக் காலம் அவருக்குக் காது கொடுத்தவர்கள் இருக்கிறார்கள். சில நேரங்களில் அவர்கள் என்னிடம் வருவதுண்டு. நான் அவர்களிடம் கேட்டிருக்கிறேன், 'நீங்கள் உண்மையிலேயே அவரைப் புரிந்து கொண்டிருந்தால், பிறகு ஏன் அவர்களிடம் செல்வதை நிறுத்திக் கொண்டிருக்கக் கூடாது. அவரோ தான் ஆசான் இல்லை என்கிறார். அவர் உங்களுடைய ஆசானில்லை. மேலும் கற்பிக்கவோ, கற்றுக் கொள்ளவோ ஏதும் இல்லை. ஒருவர் வாழ்க்கை நெடுகிலும், மிகக் கடினமான வழியில் அதைத் தேட வேண்டி யிருக்கிறது. தானாகவே முயன்று அடைய வேண்டியிருக்கிறது. அப்படியிருக்க நீங்கள் ஏன் நாற்பது வருடங்களை வீணடித்தீர்கள்?' என்று. அவர்களுக்குத் தேவைப்பட்டது ஒரு குரு. ஆனால் அவர்கள் சரணடைய விரும்பவில்லை என்பதை அவர்களுடைய முகத்தைப் பார்த்தே நான் தெரிந்து கொண்டேன். ஆக, இது ஒரு நல்ல சமரச ஏற்பாடு. கிருஷ்ணமூர்த்தி சொல்கிறார். 'சரணடையத் தேவையில்லை, எதையும் விட்டுக் கொடுக்க வேண்டியதில்லை' என்று. அவர் போதித்துக் கொண்டே இருக்கிறார், அவர்கள் கவனித்து, கற்றுக் கொண்டபடியே இருக்கிறார்கள்.

கிருஷ்ணமூர்த்தியிடம் இருந்ததைவிட ஒரு சிறந்த குழுவை நீங்கள் குருட்ஜீவிடம் காண முடியும் - அவர்கள் எதையும் விட்டுக்கொடுக்கக் கூடியவர்கள், விட்டுக்கொடுக்கத் தயாராய் இருப்பவர்கள். தப்பித்துக் கொள்ளும் வழிகளும் இல்லாமல் இல்லை. காரணம், எதையுமே செய்ய விரும்பாத மனிதர்கள் இருக்கிறார்கள். எதையும் செய்யாமல் இருக்கும் நிலையே சரணாகதி என்று அவர்கள் எண்ணிக் கொள்கிறார்கள். தாங்கள் எதையும் செய்யாமலே அடுத்தவரை உறிஞ்சுகிறவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் சொல்கிறார்கள். 'நாங்கள் சரணடைகிறோம். தற்போது எல்லாம் உங்கள் பொறுப்பாகி விடுகிறது. ஏதேனும் தவறாகி விட்டால் நீங்கள்தாம் பொறுப்பு' என்று. ஆனால், குருட்ஜீவ் அத்தகையவர்களுக்கு இடமளிப்பதில்லை. அவர் மிகவும் கடுமையானவர். அவர் உண்டுபண்ணும் இடர்ப்பாடுகளைச் சமாளிக்க முடியாமல் சில மணி

நேரங்களுக்கு உள்ளாகவே ஓட்டமெடுத்தவர்கள் உண்டு. உண்மையி லேயே வெகு சிலர்தான் சரணாகதி அடையும் பக்குவத்தில் அங்கே இருந்தவர்கள்.

உதாரணமாக ஓர் இசைக்கலைஞன் வந்தான். மிகவும் திறமை உடையவனாய், புகழுடன் பிரபலமாய் இருந்தவன். குருட்ஜீவ் அவனிடம், 'இசையை நிறுத்திவிட்டு, தோட்டத்துக்குப் போய் குழிகள் தோண்டு' என்றார். பன்னிரண்டு மணி நேர வேலை. அத்தகைய கடினமான வேலைகளை ஒருபோதும் செய்தவனல்லன் அவன். எப்போதும் தன்னுடைய இசைக்கருவியையே வாசித்துக் கொண்டிருந்தவன். அவனுடைய கைகள் மிருதுவானவை. அவை ஒரு தொழிலாளியின் கைகளைப் போன்றவை அல்ல, கைகளால் வேலை செய்யும் ஒருவனுடைய கைகளல்ல அவை. நளினமான பெண்ணுக்குரிய கரங்கள். அவனுக்குத் தெரிந்த ஒரே வேலை இசைக்கருவியின் சுருதிக் கட்டைகளை அழுத்துவதுதான். தன்னுடைய வாழ்க்கை நெடுகிலும் அதைத்தான் அவன் செய்து வந்திருக்கிறான். தற்போது இந்த மனிதர் சொல்கிறார்... ஆனால், அவன் மறுநாள் காலையிலேயே தோண்டுகிற வேலையைத் தொடங்கி விட்டான்.

மாலையில் குருட்ஜீவ் வந்து, 'சரி, ரொம்பச் சரி. இப்போ திரும்பவும் அந்தக் குழிகளில் மண்ணைத் தள்ளு. குழிகளை நிரப்பு. அவற்றை இட்டு நிரப்பாமல் நீ தூங்கப் போகக்கூடாது' என்று அவனிடம் சொன்னார். எனவே மறுபடியும் நான்கைந்து மணி நேரத்துக்கு அவன் குழிகளை நிரப்பும் வேலையைச் செய்தான். காரணம், அடுத்த நாள் காலையில் அவர் வந்து பார்வையிடுவார். காலையில் அவர் வந்து விட்டார். அவனிடம், 'நல்லது, இப்போ மற்ற குழிகளையும் தோண்டு' என்றார். இப்படியே மூன்று மாதங்கள் சென்றன.

நகைப்பிற்கிடமான செயல்தான். ஆனால், நீங்கள் சரணாகதி என்றால் சரணாகதி அடைய வேண்டும். அவர் என்ன செய்கிறார் என்பதைப் பற்றி நீங்கள் கவலைப்படுவதற்கில்லை. உங்களுடைய தர்க்க அறிவை நீங்கள் விட்டுவிட வேண்டும.

மூன்று மாதங்களுக்குப் பிறகு அந்த மனிதன் முற்றிலும் வேறான இருப்புணர்வு கொண்டவனாகி விட்டான். அப்போது குருட்ஜீவ் சொன்னார். 'இப்போது நீ இசைக்கத் தொடங்கலாம்' என்று. ஒரு புதிய

இசை எழுந்தது. அதற்கு முன் ஒருபோதும் இருந்திராத இசை. அறிந்திராத ஒன்றை அவன் ஸ்பரிசித்து விட்டான். அவன் குருட்ஜீவைப் பின்பற்றினான். அவரிடம். நம்பிக்கை வைத்தான். நெடுகிலும் அவரோடு நடந்தான்.

ஏமாற்ற முயல்கிறவர்கள் அங்கு இருக்க மாட்டார்கள். அங்கிருந்து சீக்கிரமே நழுவியோடி விடுவார்கள். அவர்களால் கிருஷ்ண மூர்த்தியுடன் தங்கியிருக்க முடியும். காரணம், அவர்கள் எதையும் செய்ய வேண்டியிருக்காது. எதையும் ஆழ்ந்து சிந்திக்க வேண்டியிருக்காது... கிருஷ்ணமூர்த்தி நியாயமானவர். ஆனால் ஒரு சதவிகிதத்துக்கு நியாயமானவர் என்பதுதான் பிரச்சினை. அந்த ஒரு சதவிகிதத்தினர் தன்னுடைய வழியில் செல்கிறவராயிருப்பார். அவர் ஏதோ ஒரு வகையில் கிருஷ்ணமூர்த்தியை எதிர்ப்பட நேர்ந்தால் அவருக்கு நன்றி கூறுவார். இதுவே சித்தார்த்தன் செய்தது.

சித்தார்த்தன் புத்தரை எதிர்பாராது சந்தித்தான். அவருடைய உரைகளைக் கவனமுடன் கேட்டான். அதில் உள்ள நேர்த்தியை உணர்ந்தான். அவர் சொன்னது எதுவாயினும் அதில் உள்ள தனிச்சிறப்பை உணர்ந்தான். இந்த மனிதரை இவர் முயன்று அடைந்த ஞானத்தை அவன் உணர்ந்து கொண்டான். அவருடைய தியான சக்தி அவனுடைய இதயத்தைத் தொட்டது. அவருடைய அருகாமையில் அறிந்திராத ஒன்றின் அழைப்பை அவனால் உணர முடிந்தது. ஆனாலும் தன்னுடைய வகை இன்னது என்பதை அவன் அறிந்திருந்தான். மிகுந்த மரியாதையுடனும், உள்ளார்ந்த அன்புடனும் துயரத்தோடு அவன் பிரிகிறான். 'உங்களுடன் இருப்பதை நான் விரும்பினேன். ஆனால் நான் போயாக வேண்டியிருக்கிறது' என்கிறான். அவன் போவது அகந்தையினால் அல்ல. இன்னொரு சிறந்த ஆசானைக் கண்டடைவதற்காக அவன் போகவில்லை. தன்னால் ஒருவரைப் பின்பற்றிச் செல்ல முடியாது என்பதைத் தெரிந்து கொண்டிருப்பதால் அவன் போகிறான். அவனுள் எந்த எதிர்ப்பும் இல்லை. எதிர்ப்பில்லாமல் அவன் கேட்டுக் கொள்கிறான். அவன் புத்தரை அறிந்து கொண்டான். முற்றாக அறிந்து கொண்டபடியால் அவன் போகும்படியாகிறது.

கிருஷ்ணமூர்த்தியை உண்மையிலேயே புரிந்து கொண்டு விட்டால் நீங்களும் போக வேண்டியதுதான். அந்நிலையில் அவர் சூழ்ந்து கொள்ளப்பட வேண்டியவரல்லர். அவரை விட்டு நீங்கள் போக

வேண்டியதுதான். நீங்கள் குருட்ஜீவுடன் இருக்க முடியும். உங்களால் கிருஷ்ணமூர்த்தியுடன் இருக்க முடியாது. காரணம், அவருடைய போதனை முழுதும் தனியாகவே செல்ல வேண்டும் என்பதுதான். எந்த வழியையும் பின்பற்ற வேண்டியதில்லை - உண்மைக்கென்று வழிவகை எதுவும் இல்லை. நுழையும் வழி, வழியற்றதாயிருக்கிறது - வகைப்பாட்டு முறை (method) ஒன்றுதான். அது உணர்வுள்ளவராய் (aware) இருப்பது. வேறெதுவும் செய்யப்பட வேண்டியதில்லை. ஒருமுறை புரிந்து கொண்டு விட்டால் நீங்கள் நன்றியறிதலுடன் இருப்பீர்கள். உங்கள் மரியாதைகளைச் செலுத்திவிட்டு உங்கள் வழியே செல்வீர்கள். ஆனால், இது ஒரு சதவிகிதத்தினருக்கு மட்டுமேயானது.

நீங்கள் அந்த வகையைச் சேர்ந்தவரல்லர் என்றால் பாசாங்கு செய்ய வேண்டாம். உங்களுடைய வகையை நீங்கள் மாற்றிக்கொள்ள முடியாது. உங்கள் வகையை நீங்கள் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அதைப் பயன்படுத்திக் கொள்வதன் மூலமே நீங்கள் கடந்து செல்லும்படி இருக்கும்.



**'தனிப்பட்ட முறையிலான கடவுள் இல்லையெனில் ஒவ்வொரு நாள் காலையிலும் தாங்கள் எதனால் என்னுடைய கேள்விகளுக்கு விடையளிக்கிறீர்கள்? கவனிப்பு இருக்குமெனில் நான் மேற்கிற்குத் திரும்பிய பிறகும் அந்தச் செயல் முறை தொடருமா?'**

ஆம், நீங்கள் கேட்டாலும் கேட்காவிட்டாலும் ஒவ்வொரு காலைப் பொழுதிலும் உங்களுடைய எண்ணங்களுக்கு நான் விடையளிக்கிறேன். தனிப்பட்ட முறையிலான கடவுள் இல்லாத காரணத்தால்தான் உங்கள் எண்ணங்ளுக்கு நான் விடையளிக்கிறேன்.

தனிப்பட்ட முறையிலான கடவுள் ஒருவன் இருந்திருந்தால் அவனை அதிக அளவில் சுவாதீனப்படுத்திக் கொண்டு விடுவார்கள். உங்களுடைய கேள்விக்கு அவனால் விடையளிக்க முடியாமல் போயிருக்கும். பிரபஞ்சத்தின் அத்தனை பிரச்சினைகளும் அவனுள் இடம் பிடித்திருக்கும். இந்த உலகம் தனியாயில்லை. கடவுள் நேர்முகமாய் வந்து இவ்வுலகின் கவலைகளை, பிரச்சினைகளை, கேள்விகளைக் கையில் எடுத்துக் கொண்டால் அவனுக்கு பைத்தியம் பிடித்துவிடும். பார்க்கப் போனால் இந்நிலவுலகம் தூசியின் ஒரு

துணுக்கு மாதிரி. இந்த உலகத்தைப் போல் ஐம்பதினாயிரம் உலகங்கள் இருக்கின்றன. அவற்றில் உயிர்களும் தோற்றுவிக்கப்பட்டிருக்கின்றன. இப்பிரபஞ்சத்தில் நாம் ஊடுருவிப் பார்த்தால் எல்லைகள் விலகி, தொலைவில் வெகு தொலைவில் மறைந்து போகும். பிரபஞ்சம் எல்லையற்று காணும். கடவுள் இங்கே நேர்முகமாய் - தனிப்பட்ட முறையில் வந்திருந்தால், அவன் வெகுகாலத்துக்கு முன்பே பைத்தியமாகி விட்டிருப்பான், அல்லது தற்கொலை செய்து கொண்டிருப்பான்.

கடவுள் தனிப்பட்ட முறையில் இல்லையென்பதால் எல்லாமே எளிமையாயிருக்கின்றன. ஒட்டுமொத்த பிரபஞ்சமும் தெய்வத் தன்மையோடு காட்சியளிக்கிறது. வரும்நிலை குறித்த அச்சம் இல்லை, எதுவும் நெரிசலாயில்லை. பிரபஞ்ச இருப்பு முழுதிலும் தெய்வத் தன்மை பரவியிருக்கும். ஒரு தனிப்பட்ட கடவுளின் எல்லைக்கு உட்படுத்தப்பட்டிருக்காது.

உங்களுடைய கேள்விகளுக்கு விடையளிக்கும்போது நான் ஒரு தனி நபராயிருந்தால் அப்போது அது இடர்ப்பாடாயிருக்கும். அந்நிலையில் நீங்கள் பலராயிருப்பீர்கள், நான் தனியாளாய் இருப்பேன். உங்களுடைய மனங்கள் என்னுடைய மனதின் மீது பாய்ச்சல் நடத்தினால் நான் பைத்தியக் காரனாகி விடுவேன். ஆனால், உள்ளே யாரும் இல்லை என்பதால் பித்துப்பிடிப்பது சாத்தியமில்லை. நான் எதிரொலிப்பதை மட்டுமே செய்கிற வெற்றுப் பள்ளத்தாக்கு. அங்கே யாரும் இல்லை. எதிரொலிப்பதற்கு, எதிரொலிப்பது வெற்றுப் பள்ளத்தாக்குதான். அல்லது என்னை ஒரு கண்ணாடி என்றால் அதுவும் சரியே. என் முன்னால் வந்து நில்லுங்கள், பிரதிபலிக்கப் படுவீர்கள். நீங்கள் போய்விட்டால், பிரதிபலிப்பதும் போய்விடும்.

நான் எந்தவொரு தனிப்பட்ட செயல் முறையிலும் இங்கே இருக்கவிலலை, ஏதுமற்ற வெறுமையாயிருக்கிறேன். எனவே, உங்களுக்குப் பதில் சொல்வது சிரமமாயிருக்காது. நீங்கள் இங்கிருப்பதால் பிரதிபலிக்கிறேன், இதில் சிரமம் கிடையாது.

மைக்கேல் ஆஞ்செலோவிடம் யாரோ கேட்டார்கள், 'உங்க ளுடைய வேலையில் மிகப்பெரிய அளவில் ஊக்குவிப்பு இருக்கும் போலிருக்கிறதே' என்று. அவர் சொன்னார், 'ஆம், இருக்கிறது. ஆனால் ஒரேஒரு சதவிகிதந்தான். ஒரு சதவிகிதம் ஊக்குவிப்பும் தொண்ணூற்றைந்து சதவிகிதம் வியர்வை (உழைப்பு)யும். அவர்

வரைக்கும் சரிதான். என்னைப் பொறுத்தவரை வியர்வை இல்லை. அது நூறு சதவிகிதம் அகத்தூண்டுதல்தான். நான் உங்கள் பிரச்சினைகளைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கவில்லை. உங்களைப் பற்றி நான் தொல்லைப் படுத்திக் கொள்வதில்லை. உங்களுக்கு உதவுவதற்கே நான் முயற்சி எடுக்கவில்லை. நீங்கள் அங்கிருக்கிறீர்கள், நான் இங்கிருக்கிறேன். இரண்டுக்கும் இடையில் ஏதோ ஒன்று வெளியாகிறது. என்னுடைய இன்மை (nothingness) க்கும் உங்களுடைய இருத்தலுக்கும் (beingness) இடையில் வெளியாகும் அந்த ஒன்று உங்களிடமோ, என்னிடமோ தொடர்பற்றதாகவே இருக்கும். என்னிடமோ உங்களிடமோ எந்தவொரு பாதிப்பையும் ஏற்படுத்தாது. நீங்கள் பாடும் பாடலை எதிரொலிக்கிறது வெற்றுப் பள்ளத்தாக்கு.

ஆக, நீங்கள் இங்கிருந்தாலும் சரி, மேற்கில் இருந்தாலும் சரி, அது வேறுபாட்டை உண்டு பண்ணுவதில்லை. நீங்கள் வேறுபாடாய் உணர்ந்தால் அதற்கு நீங்களே தான் காரணமாய் இருப்பீர்கள், நான் அல்ல.'

நீங்கள் எனக்குப் பக்கமாய் இருக்கும்போது மிகவும் வெளிப்படையாய் உணர்வீர்கள். அருகில் இருக்கிற காரணத்தால் வெளிப்படையாய் உணர்வதுபோல் ஒரு எண்ணம். பிறகு, மேற்கே போகிறீர்கள். தொலைவில் இருப்பதால் எப்படி வெளிப்படையாக முடியும் என்கிற எண்ணம், உள்ளாகப் புழுக்கமடைவீர்கள். அந்த எண்ணத்தை விடுங்கள். நீங்கள் எங்கிருந்தாலும் அங்கே நான் பெறக்கூடியவனாயிருப்பேன். இந்தக் கிடைக்கும் தன்மை (availability) தனிப்பட்ட முறையிலானதல்ல. எனவே, காலமும் இடமும் பிரச்னைக்குரியதாய் இருக்காது. மேற்கே சென்றாலும் உலகில் முடிவெல்லைக்கே சென்றாலும் ஒரே மனப்பான்மையுடன் இருங்கள்.

முயன்று பாருங்கள், உங்களில் பலரும் இங்கிருந்து போகலாம். ஒவ்வொரு காலைப் பொழுதிலும் இந்திய நேரத்துக்குச் சரியாய் எட்டு மணிக்கு இங்கே வருவது போல் வாருங்கள், இங்கே அமர்ந்திருப்பது போலவே அமர்ந்து கொள்ளுங்கள், இங்கே காத்திருப்பது போல் காத்திருங்கள். உங்கள் எண்ணங்களுக்கு விடையளிக்கப் படுவதை உணர்வீர்கள். எனக்குப் பக்கமாய் இருப்பதைவிடவும் நேர்த்தியான அனுபவமாய் அது இருக்கும், காரணம் அப்போது அங்கிருப்பது தூலமானதாய் (physical) இருக்காது. அது கடந்து செல்வதாகவே

(transcendertal) இருக்கும். சாத்தியமான அளவுக்குத் தூய்மையாயும் இருக்கும். உங்களால் அதைச் செய்ய முடிந்தால் இடைவெளி மறையும். ஒரு குருவிற்கும் சீடனுக்கும் இடையில் எவ்வித இடைவெளியும் கிடையாது.

அத்துடன் இன்னோர் அதிசயமும் சாத்தியமாகும், பிறகு ஒருநாள் காலத்தையும் நீங்கள் கைவிடுவீர்கள். ஏனெனில், ஒருநாள் இந்த உடம்பை நான் உதறிச் செல்வேன். நான் இங்கிருக்க மாட்டேன். என்னுடைய உடம்பை நான் கைவிடுவதற்கு முன், காலத்தை நீங்கள் கடந்து செல்லாவிடில் நான் உங்களுக்குக் கிட்டாதவனாகி விடுவேன். ஆனால், நான் செத்துவிட்டால் எப்படி என்னோடு தொடர்பு கொள்ள முடியும் என்று தற்போது எண்ணிக் கொள்கிறீர்கள், உள்ளுக்குள் புழுங்கித் தவிக்கிறீர்கள்.

அது உங்கள் கருத்து. காலத்தையும், இடத்தையும் பற்றிய கருத்தை விடுங்கள். எனவே, நீங்கள் எங்கிருந்தாலும் காலை எட்டு மணி இந்திய நேரத்துக்கு முயன்று பாருங்கள். பிறகு, இந்திய நியமப்படியான நேரத்தையும் விட்டு விடுங்கள். எந்த நேரத்தில் வேண்டுமானலும் பரிசோதித்துக் கொள்ளுங்கள். முதலில் இடத்தை விடுங்கள், பிறகு நேரத்தை விடுங்கள். மேலும், நீங்கள் எங்கிருந்தாலும் அங்கே என்னைக் கண்டு கொள்ள முடிவதில் பரவசமடைவீர்கள். அப்போது அந்தப் பிரச்சினையும் இருக்காது.

புத்தர் இறந்தார். பலபேர் அழுது புலம்பினார்கள். ஒரு சிலர் அப்படியே அமர்ந்திருந்தனர். அவருடைய மிகச்சிறந்த சீடரான மஞ்சு ஸ்ரீயும் அங்கிருந்தார். ஒரு மரத்தடியில் அவர் அமர்ந்திருந்தார். அவரிடம் எவ்வித மாற்றமும் காணப்படவில்லை. எதுவுமே நடவாததுபோல் அவர் இருந்தார். உலக வரலாற்றின் உன்னதமான நிகழ்வுகளில் அதுவும் ஒன்று. அரிதாகவே ஒரு புத்தர் பிறந்தார். எனவே, அவர் இறந்ததில் எந்தப் பிரச்சினையும் இல்லை, அரிதாகவே அது நிகழ்கிறது. மஞ்சுஸ்ரீயிடம் யாரோ வந்து கேட்டார்கள், 'தாங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்? உங்களால் செயல்பட முடியாத அளவுக்கு புத்தரின் இறப்பில் அதிர்ச்சி அடைந்து விட்டீர்களா?' என்று. மஞ்சுஸ்ரீ சிரித்தபடி சொன்னார், 'அவர் இறப்பதற்கு முன்பே நான் காலத்தையும் இடத்தையும் விட்டுவிட்டேன். அவர் எங்கிருந்தாலும் எனக்கு கிட்டுகிறவராகவே இருப்பார். எனவே, அத்தகைய அபத்தமான செய்திகளை என்னிடம்

கொண்டுவராதீர்கள்.' அவர் இறந்த உடலைச்சென்று பார்க்கவே யில்லை. அவர் இறுக்கமற்றவராய், தணிவு நிலையில் இருந்தார். கிடைக்கும் தன்மை காலம் அல்லது இடம் இவர் எல்லைக்கு உட்பட்டதில்லை.

தம்மால் பெறப்படுகிற எவர்க்கும் பெறக்கூடியவராகவே இருந்தார் புத்தர். நீங்கள் எனக்குக் கிட்டுகிறவராயிருந்தால் நானும் உங்களுக்குக் கிட்டுகிறவனாய் இருப்பேன். எனவே, கிட்டும் விதமாய் இருப்பது எப்படியென்பதைத் தெரிந்து கொள்ளுங்கள்.

'பகவானே! ஏறக்குறைய யோகியைப் போல் இருந்த இதயத்தைப் பற்றி தங்கள் பதில் கீழ்க்கண்ட வார்த்தைப் பரிமாற்றத்தை எனக்கு ஞாபகப்படுத்துகிறது.'

மனைவி: டார்லிங், நமக்குக் கல்யாணமானதில் இருந்து நீங்கள் என்னனை மிக அதிகமாய் நேசிக்கிறீர்களா? அல்லது குறைவாகவா?

கணவன்: 'அதிகமாய் அல்லது குறைவாய் அன்பைப்பற்றி' ஏறக்குறைய என்கிற சொற்பாங்கில் கேட்பது முட்டாள்தனம். காரணம், அன்பு எப்போதும் 'ஏறக்குறைய'வாய் இருப்பதில்லை. ஒன்று அது இருக்கும் அல்லது இல்லாமலிருக்கும். அது ஓர் அளவையாகாது. அது ஓர் இயல்பு ஆகும். அதை அளவிட முடியாது. அது அளவிடக் கூடாததாய் இருக்கிறது. நீங்கள் அதைப்பற்றி அதிகமாகவும் சொல்ல முடியாது, குறைவாகவும் சொல்ல முடியாது. கேள்வியே பொருத்த மற்றது. ஆனாலும் காதலர்கள் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருக் கிறார்கள், காரணம், காதல் என்றால் என்னவென்று அவர்களுக்குத் தெரியாது. அவர்களுக்குத் தெரிந்தது வேறுஎதுவாகவும் இருக்கும். அது காதலாய் இருக்க முடியாது, காரணம் காதல் அளவு சார்ந்ததல்ல.

நீங்கள் எப்படி அதிகமாய் காதலிக்க முடியும்? நீங்கள் எப்படி குறைவாய் காதலிக்க முடியும்?

அன்பு உங்களைச் சூழ்ந்து கொண்டிருக்கிறது, உங்களை முழுமையாய் நிரப்புகிறது அல்லது முற்றாக மறைந்து இல்லையென்றாகிறது. நீங்கள் அதைப் பிரிக்க முடியாது, பிரிப்பது சாத்தியமில்லை. அன்பு பிரிக்க முடியாததாயிருக்கிறது. நீங்கள் எதிர்கொள்ளும் அன்பு பிரித்தறியக் கூடியதாய் இருந்து விட்டால் அதில் விழிப்பாயிருங்கள். நீங்கள் அதை அன்பென்று எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் எதை அன்பென்று எண்ணிக்

கொண்டிருக்கிறீர்களோ அது போலி நாணயம். அதை விட்டு விடுங்கள் - விரைந்து விடுவது சிறப்பு - அசலான நாணயத்தைக் கண்டுபிடியுங்கள்.

இதில் வேறுபாடாய் இருப்பது என்ன? ஒரு போலி நாணயத்தைப் போல் நீங்கள் நேசிக்கிறபோது உங்கள் நேசம் வெறும் கற்பனையாயிருக்கும். அது மனதின் தந்திரம். நீங்கள் நேசிப்பதாய் கற்பனை செய்து கொள்கிறீர்கள் - நாள் முழுக்க சாப்பிடாமல் பசியோடு இருந்துவிட்டு படுக்கச் செல்கிறீர்கள். இரவு சாப்பிடுவது போல் கனவு காண்கிறீர்கள். உங்கள் நேசம் பற்றிய கற்பனை அத்தகையது. காரணம், மனிதன் அத்தகைய ஓர் அன்பற்ற வாழ்க்கையை வாழ்ந்து கொண்டிருக்கிற உங்கள் மனம் அன்பைப்பற்றிய கனவிலேயே இருந்து கொண்டிருக்கும். சுற்றிலும் இருப்பது பொய்யான கனவுகள். எப்படியோ நீங்கள் வாழ்வதற்கு அது துணை செய்கிறது. அதனால்தானோ என்னவோ மறுபடியும் கனவுகள் உடைந்து விடுகின்றன. அன்பு நொறுங்கிப் போகிறது. நீங்கள் மறுபடியும் இன்னொரு கனவை உண்டாக்கிக் கொள்கிறீர்கள். இந்தக் கனவுகள் நமக்கு உதவாது என்பதை நீங்கள் உணர்வதேயில்லை.

குருட்ஜீவிடம் யாரோ கேட்டார்கள், 'எப்படி அன்பு செய்வது?' என்று. அவர் சொன்னார், 'முதலில் இருங்கள். இல்லையேல் எல்லா அன்பும் பொய்யாகிவிடும்' என்று. நீங்கள் முழுமையான விழிப்புணர்வுடன், வலுவான இருத்தலுடன் அதிகாரப்பூர்வமாய் அங்கே இருந்தால் மட்டுமே மெய்யான அன்பு சாத்தியம்.

அன்பு உண்மையான இருப்புணர்வின் நிழல் போன்றது. ஒரு புத்தர், இயேசு, ஒரு பதஞ்சலி மட்டுமே அன்பு செய்ய முடியும். உங்களால் அன்பு செய்ய முடியாது. நேசித்தல் என்பது இருப்புணர்வின் இயக்கம். நீங்கள் இன்னமும் இருப்புணர்வு கொண்டவராயில்லை. நேசத்துக்கான உணர்வை நீங்கள் போதிய அளவில் கொண்டிருக்கவில்லை.

பெரிய அளவிலான விழிப்புணர்வு தேவைப்படுகிறது நேசத்துக்கு. தன்னுணர்வற்ற நிலையிலும் குறட்டைவிட்டபடி உறங்கும்போதும் உங்களால் அன்பு செய்ய முடியாது. உங்கள் அன்பு அன்பைவிட அதிகம் வெறுப்பைப் போன்றிருக்கிறது. அதனால்தான் உங்கள் அன்பு ஒரு நிமிடத்தில் கரித்துப் போய்விடுகிறது. ஒரு கணத்தில் பொறாமையாகிவிடுகிறது உங்கள் அன்பு. கணத்திலும்

வெறுப்பாய் மாறிவிடுகிறது உங்கள் அன்பு. உங்கள் அன்பு ஒளிந்து கொள்கிற ஓர் இடம்போல் இருக்கிறதேயன்றி வெளிப்படையான ஆகாயமில்லை. அது ஒரு தேவையாய் இருக்கிறதேயன்றி தடையின்றித் தொடர்வதாயில்லை. அது ஒன்றைச் சார்ந்திருப்பது போல் இருக்கிறது. சார்ந்திருக்கிற எல்லாமும் சகிக்க முடியாதவைதாம். உண்மையான அன்பு உங்களை சுயேச்சையானவராக்கும். உங்களுக்கு முழுமையான சுதந்திரத்தை வழங்கும். அது நிபந்தனையற்றது. எதையும் கோருவதில்லை. அது கொடுக்கிறது. பகிர்ந்து கொள்கிறது. பகிர்ந்து கொள்ளும் சாத்தியமே அதற்கு மகிழ்ச்சியை அளிக்கிறது. நீங்கள் ஏற்றுக் கொண்டால் அது நன்றியுடையதாயிருக்கிறது.

எதையும் அது கேட்பதில்லை. ஏராளமாய் அதனிடம் வருகிறது. அது வேறு விசயம் ஆனாலும் அது எதையும் வேண்டி நிற்பதில்லை.

இந்தக் கணத்தில் அது எப்படி உங்களுக்குச் சாத்தியம்? நீங்கள் தடையின்றிப் பாய்ந்தோடவில்லை. எனவே நீங்கள் ஏமாற்றகிற வேலையை மேற்கொள்கிறீர்கள். நீங்கள் அடுத்தவரை ஏமாற்றுவதோடு நின்றுவிடுவதில்லை. முக்கியமாய் உங்களை நீங்கள் ஏமாற்றிக் கொண்டு விடுகிறீர்கள். அதனால்தான் எப்போதும் அப்படி ஆகிறது. ஒவ்வொரு மண வாழ்க்கையிலும் இந்த நிகழ்வு அன்றாடம் நிகழ்கிற ஒன்றுதான். தன்னுடைய மனைவி தன்னை நேசிக்கிறாளோ இல்லையோ என்று கணவன் கவலைப்படுவான். தன்னுடைய கணவன் தன்னை நேசிக்கிறானோ இல்லையோ என்ற கவலை மனைவிக்கு. அந்த நேசம் எந்த அளவு இருக்கும் என்கிற கவலை.

அன்பின் அளவுபற்றி ஒரு போதும் கேட்காதீர்கள். என்னை நேசிக்கிறாயா? என்று மட்டும் கேளுங்கள். காரணம், அது இன்னொருவரின் கேள்வியல்ல. எந்த அளவுக்கு அவர் நேசிக்கிறார், எந்த அளவுக்கு அவள் நேசிக்கிறாள் என்பது ஒரு தவறான கேள்வியாகும். நீ நேசிக்கிறாயா என்று கேளுங்கள் எப்போதும். நீங்கள் நேசிக்காவிட்டாலும் நம்பத்தக்கவராய் உண்மையானவராய் இருக்கப் பாருங்கள்.

அதற்காக எல்லாவற்றையும் தியாகம் செய்யலாம். அத்தனைக்கு அது தகுதியானதுதான். உங்களிடம் அன்பு இல்லையெனில், எது இருந்தாலும் பயனில்லை. அன்புக்காக எதை வேண்டுமானாலும் தியாகம் செய்யலாம். அன்பெனும் பண்பை நீங்கள் அடையாவிடில்

உங்களுடைய கோகினூர் வைரங்கள் எல்லாமும் பெறுமானமற்றவை தாம். அந்நிலையில் கடவுளும் வேண்டியிராது. அன்பே போதுமானதாயிருக்கும்.

மனிதர்கள் உண்மையிலேயே நேசிக்கத் தொடங்கிவிட்டால், 'கடவுள்' என்கிற வார்த்தையே உலகில் இருந்து மறைந்து விடும் என்றுதான் சில சமயம் எனக்குத் தோன்றுகிறது. கடவுளின் இடத்துக்கு மாற்றாக அமைகிற அன்பு அதை இட்டு நிரப்புகிற வேலையைச் செய்யும். தங்கள் வாழ்க்கையில் நிறைவடையாத மக்கள் தொடர்ந்து கடவுளைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். அங்கே அன்பில்லை என்பதால் அவர்கள் கடவுளை வைத்துச் சோதித்துப் பார்க்கிறார்கள். ஆனால், கடவுள் உணர்ச்சியற்றவராய் - ஒரு பளிங்குச் சிலையாய், எவ்வகையிலும் உயிரோட்டமில்லாதவராய் இருக்கிறார்.

அன்பே உண்மையான கடவுள். அன்பு மட்டுமே கடவுள். ஒன்று நீங்கள் கடவுளை முழுமையாய் ஏற்றுக் கொண்டிருக்க வேண்டும் அல்லது ஏற்காமலே இருந்துவிட வேண்டும். 'ஏறக்குறைய' என்கிற பேச்சுக்கே இடமில்லை. ஆனால், நீங்கள் தேடுங்கள், கடுமையாய் தேட வேண்டியிருக்கும்.

ஒன்றை நினைவில் பெறுங்கள். உங்களால் அன்பு செய்ய முடிந்தால், நீங்கள் நிறைவடைவீர்கள். நீங்கள் நேசிக்கக் கூடியவரா யிருந்தால் அதைக் கொண்டாடவும் இயன்றவராயிருப்பீர்கள். முழுமனதுடன் நன்றி கூறவும் உங்களால் இயலும். உங்களால் நேசிக்க இயலுமாயின் உயிரோடிருப்பதே மகிழ்ச்சியளிக்கிற விசயமாகிவிடும். அதற்குமேல் தேவைப்படாது. அதுவே ஆசீர்வாதமாகும்.

மதம் இல்லாத வாழ்க்கை ஒருபோதும் பூக்காத பலனளிக்காத மரமாகிவிடும். ஆம், மதம் இல்லாவிடில் மனிதனின் ஆசை பயனற்றதுதான். ஆனால், மதத்துடன் கூடிய மனிதனின் வாழ்க்கை மலர்ச்சி காண்கிறது. அவனுடைய உள்ளம் கடவுளால் நிரப்பப் பட்டிருக்கிறது. ஆக, மதம் என்கிற வார்த்தை ஏன் கண்ணியமற்ற வார்த்தையானது என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

மதத்துக்கு எதிரான நிலையை உறுதியாய் மேற்கொண்டவர்கள் இருக்கிறார்கள். மதத்துக்கு எதிரான நிலையை எடுக்காவிட்டாலும், அதை அலட்சியப்படுத்துகிறவர்கள் இருக்கிறார்கள். மதத்தில் சிரத்தையில்லாவிட்டாலும் அதில் அக்கறை காட்டுவதுபோல் பாசாங்கு செய்பவர்களும் இருக்கிறார்கள். இப்படி மூன்று வகையினங்கள் உண்டு. மதத்தில் உண்மையிலேயே நம்பிக்கை கொண்டவர்களைக் காணவில்லை, என்ன ஆயிற்று?

முதலாவது, வாழ்க்கையின் பேரிலான ஒரு புதிய மனோபாவத்தைக் கண்டறிதல், அறிவியல் கண்டுபிடிப்பு - ஒரு புதிய சன்னலைத் திறந்து வைத்தது. மதத்தால் ஏனோ அதை உட்கிரகித்துக் கொள்ள முடியவில்லை. மதம் அதனை கிரகித்துக் கொள்ள முடியாமல் போனதற்குக் காரணம் சாதாரண மதத்துக்கு அது சாத்தியமில்லை என்பதுதான்.

வாழ்க்கையினிடத்தில் மூன்று மனோபாவங்கள் சாத்தியம். ஒன்று தர்க்கரீதியானது, அறிவுக்கேற்புடையது, அறிவியல் பூர்வமானது. அடுத்தது - அறிவுக்குப் பொருத்தமற்றது, மூடநம்பிக்கை சார்ந்தது. மூன்றாவது - அறிவை மிஞ்சியது, கடந்து செல்வது. சாதாரண மதம் பகுத்தறிவிற்குக் கீழ்ப்பட்ட மனப்பாங்கைக் கொண்டது. அதுவே தற்கொலையாகிறது. அது மெள்ள நஞ்சூட்டுகிற காரியம். வாழ்க்கையின் பேரில் தாழ்வான நிலைப்பாட்டைக் கொண்டிருப் பதாலேயே மதம் தற்கொலை செய்து கொண்டு விடுகிறது. 'பகுத்தறி விற்குக் கீழ்ப்பட்ட' என்ற வார்த்தையைப் பயன்படுத்தும்போது நான்

எதனைக் கருத்தில் கொள்கிறேன்? ஒரு குருட்டு நம்பிக்கையை. மதம் எந்தவொரு போட்டியும் இல்லாமல் அதன்மீது செழித்து வளர்கிறது. அதில் உயர்வான நிலைப்பாடு இல்லை.

நம் இருப்புணர்விற்குள், அறிவியல் இடம் பெறுகிறபோது ஓர் உயர்ந்த நோக்கு, கூடுதல் முதிர்ச்சி, கூடுதல் தகுதி வந்து விடுகிறது. மதம் அச்சமும் நடுக்கமும் கொண்டுவிடும். அதற்குக் காரணம் புதிய மனப்பாங்கு தன்னை அழித்துவிடும் என்பதுதான். அது தற்காத்துக் கொள்ளும் முயற்சியில் இறங்கும். அது அதிகாரமிக்க ஒரு நிறுவனமாய் இருந்தது. அது அறிவியலின் கலிலியோக்களை அழிக்க முயன்றது. அந்த அழிக்கும் நடவடிக்கைகள் தன்னைத்தானே அழித்துக் கொள்வதாகிவிடும் என்பதை அது அறிந்திருக்கவில்லை. அறிவியலுடன் ஒரு நீண்ட யுத்தத்தைத் தொடங்கிய மதம், அது உண்மையில் இழக்கிற யுத்தமாகவே இருந்தது.

ஒரு தாழ்வான நோக்கு உயர்ந்த நோக்குடன் போரிடுவதற்கில்லை. தாழ்ந்த நோக்கு இன்றோ, நாளையோ அல்லது அதற்கடுத்த நாளிலோ தோற்கவே செய்யும். சண்டையில் தோல்வி தள்ளிப்போடப் படலாம், தவிர்க்கப்படுவதில்லை. உயர்ந்த நோக்கு இடம் பெறுகிறபோது தாழ்ந்த நோக்கு தன்னால் மறைந்தாக வேண்டும். அது மாற வேண்டும், அதிக வளர்ச்சி பெற வேண்டும்.

அதிக வளர்ச்சி இல்லாத மதம் அழிந்துவிடுகிறது. பதஞ்சலியின் அளவீட்டை எட்ட முடியாத காரணத்தால் மதம் என்று அழைக்கப் படுகிற சாதாரண மதம் அழிந்து போகும்படி ஆனது. பதஞ்சலி மதம் சார்ந்தவர் என்பதோடு அறிவியல் சார்ந்தவருமாவார். பதஞ்சலியின் மதம் மட்டுமே தாக்குப்பிடிக்க முடியும். அதற்குக் குறைந்தவற்றால் தாக்குப் பிடிப்பதற்கில்லை. உண்மையின் ஸ்திரத் தன்மையை, ஓர் உன்னத உணர்வை அறிவியல் மூலமே மனிதன் ருசி பார்க்கிறான். தற்போது மனிதனை குருட்டு நம்பிக்கைகளை ஏற்கும்படி நிர்ப்பந்திக்க முடியாது. அது முடியாத காரியம். மனிதன் உரிய வளர்ச்சியைப் பெற்றிருக்கிறான். பழைய முறைகளில் அவனைக் குழந்தையாக்கும்படிக் கட்டாயப்படுத்த முடியாது. ஆனால், அதைத்தான் மதம் செய்து கொண்டிருக்கிறது.

அது இயல்பாகவே கண்ணியமற்ற வார்த்தையாகிவிட்டது எனலாம்.

இரண்டாவது மனோபாவம்:- தர்க்கம் சார்ந்த மனோபாவம். பதஞ்சலியின் நோக்குடையது. அவர் எதிலும் நம்பிக்கை வைக்கும் படி கேட்கவில்லை. அவர் எதையும் சோதித்தறிய வேண்டும் என்கிறார். தற்காலிகமாய் வாதத்தில் பயன்படுத்தப்படும் அனுமானங்களை உங்கள் அனுபவத்தைக் கொண்டு நீங்கள் தாம் நிருபித்தாகவேண்டும் என்கிறார் அவர். மேலும், அதுவன்றி வேறு நிருபணம் இல்லை என்றும் கூறுகிறார். மற்றவற்றில் நம்பிக்கை வைக்க வேண்டாம். இரவல் அறிவை வைத்துக் கொண்டு தொடர்ந்து இருப்பதற்கில்லை.

மதம் இரவல் அறிவான படியால் இறந்து போயிற்று. 'கடவுள் இருக்கிறார்' என்று இயேசு கூறவும் கிறிஸ்தவர்கள் தொடர்ந்து நம்புகின்றனர். 'கடவுள் இருக்கிறார்' என்று கிருஷ்ணர் கூறவும், இந்துக்கள் தொடர்ந்து நம்பிக்கை வைக்கின்றனர். முகமது சொல்கிறார், 'கடவுள் இருக்கிறார். அவரை நான் எதிர்கொண்டேன். அவருடைய குரலைக் கேட்டேன்' என்று. முகமதியர்களின் நம்பிக்கை தொடர்கிறது. இது இரவல் வாங்கப்பட்டது. பதஞ்சலி அதில் வேறுபடுகிறார். 'அடுத்தவர் அனுபவம் உங்களுடையதாகாது. நீங்கள் சுயமாய் அனுபவித்தறிய வேண்டும். அந்நிலையில் மட்டுமே உண்மை உங்களுக்கு வெளிப்படையாகும்'

ஒரு குட்டிக்கதை.

இரண்டு அமெரிக்க சிப்பாய்கள் தூரக் கிழக்கில் எங்கோ ஓரிடத்தில் தாக்குதலை எதிர்நோக்கி ஒரு பதுங்கு குழியில் காத்திருந்தனர்.

ஒருவன் காகிதமும், பென்சிலும் எடுத்து கடிதம் எழுதத் தொடங்கினான். ஆனால், பென்சிலின் முனை உடைந்துவிட்டது. அடுத்த சிப்பாயிடம், 'ஏ, மாக், உன்னுடைய பால்பேனாவைக் கொஞ்சம் கொடுக்க முடியுமா?' என்று கேட்டான். அவன் பேனா கொடுத்தான். முதலாமவன், 'உன்னிடம் கடித உறை இருக்கிறதா?' என்று கேட்டான். அடுத்தவன் தன்னுடைய சட்டைப்பையில் இருந்து கசங்கிய உறையொன்றை எடுத்துக் கொடுத்தான். கடிதம் எழுதுகிறவன் எதையோ கிறுக்கிவிட்டு மீண்டும் கேட்டான், 'ஒரு தபால் தலை கிடைக்குமா?' என்று. ஒரு ஸ்டாம்பும் கிடைத்தது. அவன் கடிதத்தை மடித்து, உறையில் வைத்தான். அதன்மீது தபால் தலையை

ஒட்டினான். பிறகு நண்பனிடம் சொன்னான், 'ஏ, மாக், உன் சிநேகிதியின் முகவரியைச் சொல்லு' என்று.

எல்லாமும் இரவல் வாங்கப்பட்டது - பெண்ணின் முகவரி உட்பட.

உங்களுக்குக் கிடைத்திருக்கும் கடவுளின் முகவரியும் இரவலாய் பெறப்பட்டதுதான். அந்தக் கடவுள் இயேசுவின் சிநேகிதியாய் இருக்கக் கூடும். ஆனால் அவர் உங்களுடையவராக மாட்டார். அந்தக் கடவுள் கிருஷ்ணருக்கு அன்பிற்குரியவராயிருக்கலாம், ஆனால், உங்களுக்கல்ல. பைபிள், குர்-ஆன், கீதை என்று எல்லாம் இரவலாய் பெறப்பட்டவைதாம். இரவலாய் பெற்ற அனுபவத்தை வைத்துக் கொண்டு ஒருவர் எப்படித் தொடர்ந்து தன்னை ஏமாற்றிக் கொண்டிருக்க முடியும்? ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் ஒட்டுமொத்த விசயமும் அபத்தமாய், அர்த்தமற்றதாகிவிடும். இரவல் சமாசாரம் என்றாவது ஒருநாள் சுமையாய் மாறிவிடும். அது உங்களைச் செயலற்றவராகி, நசுக்கிப்போடும். இதுதான் நடக்கும்.

இரவல் அனுபவத்தில் பதஞ்சலிக்கு நம்பிக்கை கிடையாது. நம்பிக்கைகளை அவர் நம்புவதில்லை. அதுதான் அவருடைய அறிவியல் சார்ந்த மனோபாவம். அவர் அனுபவத்தில் நம்பிக்கை வைக்கிறவர். அவருக்கு சோதித்தறிவதில் நம்பிக்கை உண்டு. கலிலியோவும், ஐன்ஸ்டீனும் பதஞ்சலியைப் புரிந்து கொள்ளக் கூடியவர்கள். அவர்கள் சகபயணிகள்.

வருங்காலம் பதஞ்சலியினுடையது. அது பைபிளுக்கோ, குர்-ஆனுக்கோ, கீதைக்கோ உரியதல்ல. அது யோக சூத்திரங்களுக் குரியது. காரணம், அவர் சொல்வதெல்லாம் அதே கருத்து வெளியிடும் முறையில் அமைந்ததாகும். அவர் சொல்கிறார் என்பதோடு, அதே பரிமாணத்தை உடையவராகவும் இருக்கிறார். அதே புரிதலும், அதே தர்க்க ரீதியான அணுகுமுறையும் கொண்டவர் அவர்.

மூன்றாவது நோக்குமுறை ஒன்றும் உள்ளது. அது பகுத்தறிவிற்கும் மேம்பட்டது. அது ஜென்னுடைய நோக்கு முறை ஆகும். அது தொலைதூரத்தில் வருங்காலத்தில் இருக்கிறது. தொலைதூரப் பார்வை என்பது கற்பனை போன்றது. ஜென் உலக மதம் ஆகிற காலம் ஒரு நாள் வரும். ஆனால் அந்த நாள் வெகு தொலைவில் உள்ளது. காரணம் ஜென் பகுத்தறிவிற்கும் மேம்பட்டு இருப்பதுதான். நான் அதனை விளக்குகிறேன்.

பகுத்தறிவுக்குக் கீழானதும் பகுத்தறிவைவிட மேம்பட்டதாய் தெரியும். அதைப்போல் தோன்றுமே தவிர அதைப் போன்றதாகி விடாது. அது ஒரு கள்ள நாணயம். இரண்டுமே தர்க்க ரீதியானவைதாம், ஆனால் பெருமளவு செயல்முறையில் மாறுபட்டவை. வேறுபாடு ஆழமானது. பெரிய அளவிலானது. பகுத்தறிவுக்குக் கீழான வாழ்க்கையை அறிவுடன், குருட்டு நம்பிக்கை என்கிற இருளில் வாழ்கிறவர். சோதித்தறியும் துணிவு இருக்காது. அவருடைய ஒட்டு மொத்த வாழ்க்கையும் இரவலாய் பெறப்பட்ட வாழ்க்கையாகவே இருக்கும். அது நம்பகத்தன்மையற்றதாய் - மந்தமாகவும், சலிப்பேற்படுத்துவதாகவும் உணர்வற்றதாயும் இருக்கும். மேம்பட்டும் அறிவில் நுழைகிறவரும் தர்க்கத்துக்கு எதிரானவராய், பகுத்தறிவுக் கொவ்வாதவராய், ஆனால் முற்றிலும் வேறான உணர்வுடன் இருப்பார். அறிவைப் பயன்படுத்தும் நிலையைக் கடந்திருப்பார்.

பகுத்தறிவுக்குக் கீழானவர் எப்போதும் அறிவைப் பயன்படுத்த அஞ்சுவார், காரணம், அறிவு எப்போதும் ஒரு தற்காப்பைத் தோற்றுவித்துக் கொள்வது. அது தொடர்ந்து அச்சநிலையை உண்டு பண்ணிக் கொண்டிருக்கும். அறிவு வெற்றியடையும்போது நம்பிக்கை, நம்புதல் மரித்துவிடுகிற அபாயம் இருக்கிறது. நம்பிக்கையைப் பற்றுகிறவர் அறிவுக்கு மாறாகவன்றோ அதைப் பற்றிக் கொள்கிறார். மேம்பட்ட அறிவுடையவர் பகுத்தறிவது பற்றி அஞ்சுவதில் அவருக்கு அது மகிழ்ச்சியளிப்பதாக இருக்கும்.

மேல்தளம் எப்போதுமே கீழ்த்தளத்தை ஏற்றுக் கொண்டிருக்கும். அதை ஏற்றுக் கொண்டிருப்பதோடு, உட்கிரகித்துக் கொள்ளவும் செய்யும். அதில் இருந்து ஊட்டத்தைப் பெறும், அதன் தோள்களில் ஏறி நின்று கொள்ளும். தாழ்ந்தது எப்போதுமே உயர்ந்ததைக் கண்டு அஞ்சும்.

பகுத்தறிவிற்குக் கீழானது என்பது குறைபட்டதாகும். -அது கழிக்கப்பட்ட அறிவு. பகுத்தறிவுக்கு மேம்பட்டது என்பது கூடுதலானது - கூடுதலான அறிவு. பகுத்தறிவிற்குக் கீழானது நம்புகல் (faith). பகுத்தறிவை விட மேம்பட்டது அனுபவத்தின் வாயிலாக வரும் நம்பிக்கை (trust). அது இரவல் வாங்கப்படுவதில்லை. மேம்பட்ட பகுத்தறிவை உடையவர் பய்ன்படுத்தப்படும் அறிவைவிட வாழ்க்கை உயர்ந்தது என்பதைப் புரிந்து கொள்கிறார். அறிவைப் பயன்படுத்து வதோடு வாழ்க்கை முடிந்துவிடுவதில்லை. அறிவே வாழ்வின்

எல்லையாகிவிடாது. வாழ்க்கை ரொம்ப பெரிய விஷயம். அறிவு அதில் ஓர் அங்கம். முழுமையின் ஓர் அங்கமாய் இருக்கும்பேது அது அழகாயிருக்கும். அது தனிப்பட்ட நடப்பாகிறபோதும், சுயமாய் செயல்படுகிறபோதும் சகிக்க முடியாததாகிவிடும். அது தீவாகிவிடும் எனில அருவருக்கத்தக்கதாயிருக்கும். ஒரு பரந்த கண்டத்தின் பகுதியாய் இருக்கும்போது அதுவே அழகு.

அதிவிவேகி பகுத்தறிவுக்கு எதிரானவரல்லர், அவர் பகுத்தறிவைக் கடந்தவராயிருப்பார். அவர் அறிவுக்குப் பொருந்துவதையும் அறிவுக்குப் பொருந்தாதையும் வாழ்க்கையின் பகுதியாகவே பார்ப்பார். அவை இரவும் பகலும் போலும், வாழ்வும் மரணமும் போலும் பிரிக்க முடியாத இரண்டு பகுதிகளாகவே இருக்கும். அவரைப் பொறுத்தவரை எதிரிடைகள் மறைந்து முழுமை செய்யும் இணைப்புகளாகிவிடும்.

ஜென் ஒரு கடந்து செல்கிற மனோபாவம். பதஞ்சலியோ தர்க்கம் சார்ந்த மனோபாவம். நீங்கள் பதஞ்சலியோடு சென்றால் பகுத்தறிவைவிட மேம்பட்ட சிகரங்களை மெள்ள மெள்ள அடைவீர்கள். அறிவியல், விவேகம், தர்க்கம் இவற்றைக் கண்டு அஞ்சும் சாதாரண மத நம்பிக்கை உடையவர்களைப் போலவே அறிவியல் மனோர்பாவத்தைப் பற்றியிருப்பவரும் ஜென்னைக் கண்டு அஞ்சுகிறார்கள். நீங்கள் தர்க்கவாதியான ஆர்தர் கோஸ்லரின் நூல்களைப் படித்திருப்பீர்கள். சாதாரண மத நம்பிக்கை உடையவரின் அதே மோசமான நிலையில்தான் அவரும் காட்சியளிக்கிறார். தர்க்கமே மதமாகிவிடுகிறது அவருக்கு, அவர் ஜென்னைப் பற்றி அஞ்சுகிறார். தற்போது தர்க்கமே அவருடைய மதமாகிறது. அவர் ஜென்னைப் பற்றி எதை எழுதினாலும் அதில் ஒரு தடுமாற்றம் இருக்கும், ஓர் அச்சம் இருக்கும் - காரணம் ஜென் அத்தனை வகையினங்களை (Categories) யும் அழித்து விடுகிறது.

சாதாரண கிறிஸ்தவமும், இந்து மதமும், முகமதிய மதமும் விவேகத்துக்குக் கீழே இருக்கின்றன. எகார்ட், பொஹ்மி, சூஃபிகள், கபீர் இவர்களெல்லாம் அறிவெல்லை கடந்தவர்கள்.

மத நம்பிக்கை உடைய ஒரு சாதாரண மனிதன் ஜென்னை நோக்கிச் செல்வதற்கு பதஞ்சலி ஒரு பாலமாயிருக்கிறார். அவரையன்றி வேறொரு பாலம் இல்லை. பதஞ்சலி அகம் சார்ந்த அறிவியல் வல்லுநர். மனிதனால் இரண்டு வகை வாழ்க்கையை வாழமுடியும். ஒரு வாழ்க்கை புறத்தேயானது, மனிதன் வாழக்கூடிய

இன்னொரு வாழ்க்கை அகத்தேயானது. பதஞ்சலி பாலமாயிருக்கிறார். வெளியே இருப்பதற்கும், உள்ளே இருப்பதற்கும் இரண்டுக்கும் இடையில் நின்று அந்தச் சமநிலையை 'சம்யமா' என்கிறார் பதஞ்சலி. இரண்டுக்கும் இடையில் நின்று அந்தச் சமநிலையை நீங்கள் அடைய முடியும். நீங்கள் உள்ளே செல்ல முடியும். வெளியே செல்ல முடியும். எதுவும் உங்கள் வழியைத் தடுப்பதற்கில்லை. இரண்டு உலகங்களும் உங்களுக்குக் கிடைக்கக் கூடியதாகிறது.

அந்தச் சொற்பொருளில் ஐன்ஸ்டீனை விட பதஞ்சலி ஒரு பெரிய விஞ்ஞானியாவார். என்றாவதொருநாள் ஐன்ஸ்டீன் பதஞ்சலியிடமிருந்து கற்றுக் கொள்வார். ஐன்ஸ்டீனிடமிருந்து பதஞ்சலி கற்றுக்கொள்ள எதுவும் இல்லை. காரணம், புறவுலகில் இருந்து நீங்கள் பெறுகிற அறிவு செய்தியளவாகவே இருக்கும். அது ஒரு போதும் உண்மையான அறிவாக இருக்காது. காரணம், நீங்கள் அதற்கு வெளியே இருக்கிறீர்கள். அறிதலின் பிறப்பிடத்துக்கு நீங்கள் வரும்போதுதான் உண்மையான அறிவு சாத்தியம். அவ்விடத்தில் நிகழ்கிறது மிகப்பெரிய அற்புதங்கள்.

மிகப்பெரிய அற்புதம் என்பது நீங்கள் அறிதலின் மூலாதாரத்தில் நுழைந்து, காணாமல் மறைகிறபோது நிகழ்வது. நீங்கள் எந்த அளவு மூலாதாரத்தை நெருங்குகிறீர்களோ அந்த அளவுக்கு நீங்கள் மறையத் தொடங்குகிறீர்கள். ஒருமுறை மையம் கொண்டுவிட்டால் நீங்கள் இல்லையென்றாகிறீர்கள். ஆயினும் முதல் முறையாய் நீங்கள் இருக்கிறீர்கள். உங்களைப் பற்றி நீங்கள் எண்ணுகிற செயல்முறையில் நீங்கள் இல்லையென்றாகிறீர்கள். அதற்குமேலும் உங்கள் அகந்தை இருக்காது.

இந்த இருப்புணர்வோடுதான் மிகப்பெரிய அற்புதம் நிகழ்கிறது உங்களுக்கு. நீங்கள் வீட்டுக்கு (முழுதும் பயனளிக்கும் நிலை) வரப் பெற்றீர்கள். இதனையே சமாதி என்று பதஞ்சலி கூறுகிறார். அத்தனை பிரச்சினைகளும் தீர்கிற, அத்தனை கேள்விகளும் மறைகிற, அத்தனை கவலைகளும் முடிவுக்கு வருகிற நிலையிது. வீட்டுக்கு வந்துவிட்டால் எதுவும் தொல்லைப்படுத்தாது. எதுவும் அமைதிக் குலைவை ஏற்படுத்தாது முழுமையான ஓய்வில், அமைதியில் இருப்பீர்கள். நீங்கள் மகிழ்ச்சிக்குரியவராவீர்கள். தற்போது ஒவ்வொரு கணமும் உங்களைச் சந்தோஷப்படுத்தும்.

முதலாவது: மதம் பகுத்தறிவிற்குக் கீழானதில் மாட்டிக் கொண்டிருக்கிறது. இரண்டாவது- சமய வாதிகளாய்

அழைக்கப்படுகிறவர்கள் மேலும் மேலும் நம்பகத் தன்மையற்ற வர்களாகிக் கொண்டிருக்கிறார்கள் - அவர்களுடைய எல்லா நம்பிக்கை ககளும் இரவலாய் பெறப்பட்டவை. மூன்றாவது - உலகம் ரொம்பவே பொறுமையற்றதாகிவிட்டது. மக்கள் அவரசத்தில் இருக்கிறார்கள், எங்கேயும் போகவில்லை, ஆனாலும் அவசரம். விரைந்து செல்கிறார்கள், வேகத்தில் கனவேகத்தில், தலைதெறிக்கிற வேகத்தில். 'எங்கே போகிறீர்கள்?' என்று அவர்களிடம் கேட்காதீர்கள், காரணம், அதுவே அவர்களைக் குழப்புவதாகிவிடும். அவர்களிடம் கேட்காதீர்கள், 'எத்தனை வேகத்தில போகிறீர்கள்?' என்று. வேண்டுமானால் கேளுங்கள். 'நீங்கள் எங்கே போகிறீர்கள்?' என்று. கேட்பது நாகரிகமாகாது. அது நடத்தைப் பாங்கிற்கு ஏற்றதுமல்ல, காரணம், தான் எங்கே போய்க் கொண்டிருக்கிறோம் என்பது அவர்களுக்குத் தெரியாது.

மக்கள் அவசரத்தில் இருக்கிறார்கள், மதத்துக்கு பொறுமை தேவைப்படுகிறது. அளவற்ற பொறுமை. அதற்குத் தேவை அவசரமின்மை. நீங்கள் அவரசத்தில் இருந்தால் மதம் என்ன வென்பதை தவறவிட்டு விடுவீர்கள். இந்த நவீன வாழ்க்கையில் இத்தனை பெரிய அவசரம் எதனால் தோற்றுவிக்கப்பட்டது? அது எங்கிருந்து வந்தது? காரணம், அத்தகைய அவசரத்தில் - வேகத்தில்தான். நீங்கள் நிகழ்ச்சிகளுடன் போட்டியிட முடியும்: கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டுவருவதற்குப் பொறுமை தேவைப்படும், நீண்ட பொறுமை, காத்திருத்தல். அது வளர்கிறது, ஆனால், அவசரத்தில் அல்ல. அது பருவ காலத்தில் பூக்கிற பூவல்ல. நீங்கள் உடனே அதைப் பெற முடியாது. அது பூப்பதற்கு ஒரு மாதம்போல் அவகாசம் எடுத்துக் கொள்ளும். அது வாழ்வென்னும் நிலைபேறுடைய மரம். அதில் நீங்கள் அவரசம் காட்ட முடியாது.

மக்கள் பொருள்களில் காட்டும் ஆர்வம் அதிகம், காரணம், அவற்றை உடனே அடைந்துவிட முடிகிறது. நபர்களிடம் அவர் களுக்குள்ள ஆர்வம் குறைவு. அவர்கள் மற்றவர்களிடம் தொடர்புடன் இருப்பதில்லை. உண்மையில் அவர்கள் மனிதர்களைப் பொருள்களைப் போல் பயன்படுத்துகிறார்கள். பொருள்களை மனிதர்களைப் போல் பயன்படுத்துகிறார்கள்.

தன்னுடைய காரை நேசிக்கும் ஒரு மனிதரை நான் அறிவேன். தனது மனைவியிடம் அத்தனை நேசம் கொண்டிருப்பார் என்று

உறுதியாய் சொல்ல முடியாது. 'என் மனைவியை நேசிக்கிறேன்' என்று நிச்சயமாய் அவரால் சொல்ல முடியாது. ஆனால், தன் காரை அவர் நேசிக்கிறார். அவர் தனது மனைவியைப் பயன்படுத்துகிறார், காரை நேசிக்கிறார். ஒட்டு மொத்த செய்கையும் தலைகீழாகிவிட்டிருக்கிறது.

பொருள்களைப் பயன்படுத்துங்கள், மனிதர்களை நேசியுங்கள். ஆனால், இன்னொரு மனிதரை நேசிக்க வேண்டும் என்றால் நீங்களும் மனிதராயிருக்க வேண்டும். அதற்கு அவகாசம் பிடிக்கும், நீண்ட ஆயத்தம் செய்யும்படி இருக்கும்.

அதனால்தான் மக்கள் பதஞ்சலியைப் படிப்பதற்கு அஞ்சுகிறார்கள். அது ஒரு நீண்ட செயல்முறையாய் தெரிகிறது அவர்களுக்கு.

நான் படித்தது...

உறக்கமின்மையால் அவதிப்பட்டுக் கொண்டிருந்த ஒருவர், உறக்கம் பிடிப்பதற்காக மருத்துவர் தந்த செலவில்லாத மருந்துச் சீட்டைக் கண்டு மகிழ்ச்சியடைந்தார்.

'இரவுப் படுப்பதற்குமுன் ஒரு ஆப்பிள்' என்றார் மருத்துவர்.

'அற்புதம்' என்றபடி நோயாளி புறப்பட்டார்.

'பொறுங்கள். அத்தோடு முடிந்துவிடவில்லை' எச்சரிக்கையுடன் சொன்னார் மருத்துவர். 'அது குறிப்பிட்ட விதத்தில் உட்கொள்ளப்பட வேண்டும்.' மருத்துவரின் மிச்ச பரிந்துரையைக் கேட்கத் தாமதித்தார். 'ஆப்பிளை சரிபாதியாய் நறுக்க வேண்டும். ஒரு பாதியைத் தின்றுவிட்டு, கோட்டும் தொப்பியும் அணிந்து கொண்டு மூன்று மைல் தூரம் நடக்க வேண்டும். வீட்டுக்குத் திரும்பியதும் மறுபாதியைத் தின்ன வேண்டும்'

குறுக்கு வழிகள் இல்லை. வாழ்க்கை குறுக்கு வழிகளை அறிந்திருக்கவில்லை. அது நீண்ட வழி. நீண்டவழி குறிப்பிட்ட ஒரு பொருளைக் கொண்டதாயிருக்கும். காரணம் நீண்ட காத்திருத்தலில் நீங்கள் வளர்ச்சியடைகிறீர்கள். வசீகரமான வளர்ச்சி அது.

நவீன மனம் ரொம்பவும் அவசரமுடையதாய் இருக்கிறது. ஏன்? என்ன அவசரம்? காரணம், நவீனமனம் ரொம்பவும் அகந்தையை மையமாய் கொண்டிருக்கிறது. அங்கிருந்தே அவசியம் வருகிறது. அகந்தை எப்போதும் மரணம் குறித்து அஞ்சுகிறது. அந்த அச்சம் இயல்பானதுதான் காரணம் அகந்தை அழிந்து போகும். யாராலும்

அதைக் காப்பாற்ற முடியாது. தற்காலிகமாகவே நீங்கள் அதைப் பாதுகாக்க முடியும். அதை எப்போதைக்குமாய் காப்பாற்ற எவராலும் முடியாது. அது மடியப்போகிறது. தனித்திருந்தால் அழிய வேண்டியிருக்கும். பிரபஞ்ச இருப்பில் இருந்து, முழுமையில் இருந்து எந்த அளவு விலகியிருக்கிறீர்களோ, அந்த அளவுக்கு நீங்கள் அச்சமடைகிறீர்கள். விலகியிருப்பதில், வெவ்வேறாகி விடுவதில் விளைகிறது அச்சம். நீங்கள் தனித்திருக்கும் அளவுக்குக் கவலையுடையவராகிறீர்கள்.

கிழக்கில் உள்ள மக்கள் தனித்திருப்பதில்லை, அவர்கள் பழைய காலத்தில் போலவே சேர்ந்திருக்கிறார்கள். தனித்திருக்கும் தன்மை (individuality) வலியுறுத்தப்படுவதில்லை. அவர்கள் எதற்கும் அவசரப்படுவதில்லை. வெகுநிதானமாய் செயல்படுகிறார்கள். போதிய அவகாசம் எடுத்துக் கொள்கிறார்கள். அவர்கள் பயணத்தை அனுபவித்து மகிழ்கிறார்கள். மேற்கில் தன் முனைப்பு (ego) பெரிய அளவில் வலியுறுத்தப்படுகிறது. ஒவ்வொருவரும் தனித்தனியா யிருக்கிறார்கள். மேலும் மேலும் கவலை, மேலும் மேலும் மனஉபாதை மேலும் மேலும் தடுமாற்றம், அச்சம், வேதனை, சாவு பற்றிய பயம். நீங்கள் எத்தனைக்குத் தனியாய் இருக்கிறீர்களோ அத்தனைக்கு மரணத்தை நோக்கிச் செல்வீர்கள். மரணம் உங்கள் தனித்திருக்கும் தன்மையுடன் இணை விகிதத்தில் இருக்கும். காரணம் தனியொரு நபர்தான் சாகிறது. உங்களுக்குள் இருக்கும் உலகம் தொடர்ந்து உயிரோட்டமுடையதாயிருக்கும். அது அழிவதில்லை. நீங்கள் பிறப்பதற்கு முன்பே அது இருந்தது. நீங்கள் இறந்த பின்னும் அது இருக்கும்.

ஓர் அருமையான குட்டிக்கதை, நான் கேள்விப்பட்டது. தற்பெருமைக்காரன் ஒருத்தன், 'என்னுடைய குடும்பத்தின் மூதாதையர்களை மேபிளவரில் இருந்து படிப்படியாய் விவரிக்க முடியும்' என்று பீற்றிக் கொண்டான்.

'அடுத்து உன்னுடைய மூதாதையர்கள் நோவாவுடன் ஒரே படகில் இருந்தார்கள் என்று கூட சொல்வாய்' என்று கேலி பேசினான் அவனுடைய நண்பன்.

'நிச்சயமாய் இல்லை. எங்க மனிதர்களிடம் சொந்தமா படகு இருந்திச்சு' என்றான் அவன்.

அகந்தை உங்களைத் தனிப்படுத்துகிறது. இந்தத் தனிப்படுதலே மரணத்துக்குக் காரணமாகிறது.

அந்நிலையில் நீங்கள் அவசரம் காட்டுவீர்கள். காரணம், சாவு நெருங்கியபடி இருக்கும். வாழ்க்கைக் குறுகியது, காலம் குறைவானது. அந்தக் கால அவகாசத்துக்கள் பலவற்றைச் செய்யவேண்டி யிருக்கிறது. யாருக்குத் தியானம் செய்ய நேரம் இருக்கிறது. யோகா என்கிற உலகில் இயங்குவதற்கு யாரிடம் நேரம் இருக்கிறது? மக்கள் நினைக்கிறார்கள், இதுவெல்லாம் கிறுக்குப் பிடித்தவர்களுக்கானது என்று. ஜென்னில் அக்கறை காட்டுகிறவர்கள் யார்? காரணம், நீங்கள் தியானம் செய்வதாயின் கடுமையான, கட்டுக்கடங்காத உணர்ச்சியுடன் கூடிய விழிப்புணர்வில் நீண்ட காலம் காத்திருக்கும்படியாகும். தொடர்ந்து காத்திருக்க வேண்டியிருக்கும். மேற்கத்திய அல்லது நவீன மனதுக்கு அது வெறும் நேரவிரயமாகவே தெரியும். அதனால்தான் சமயத்தின் மலர்ச்சி சாத்தியமற்றதாயிருக்கிறது.

தாங்கள் சமயத்தில் பற்று வைத்திருப்பதாய், நம்பிக்கை கொண்டிருப்பதாய் மக்கள் பாசாங்கு செய்கிறார்கள். ஆனால், உண்மையான மதத்தைப் புறக்கணிக்கிறார்கள். அது ஒரு சமூக சம்பிரதாயமாயிருக்கிறது. மக்கள் தேவாலயத்துக்குச் செல்கிறார்கள், கோயிலுக்குச் செல்கிறார்கள். சும்மா மரியாதை காட்டும் விதமாகத் தான். யாரும் மதத்தில் உண்மையான அக்கறை கொண்டிருக்க வில்லை. காரணம் அதற்கெல்லாம் யாருக்கு நேரம் இருக்கிறது? இந்தக் குறுகிய கால வாழ்க்கையில் பலவற்றைச் செய்தாக வேண்டியிருக்கிறது. மக்களுக்குப் பொருள்களில் ஆர்வம் - பெரிய கார், பெரிய வீடு, வங்கிக் கணக்கில் பெருமளவிலான பணம் இருந்தாக வேண்டும் அவர்களுக்கு. நம்முடைய உண்மையான வேலை அதிக இருப்புணர்வைப் பெற்றிருப்பது என்பதை மக்கள் முற்றிலுமாய் மறந்துவிடுகிறார்கள். வாழ்வின் உண்மையான வேலை அதிக இருப்புணர்வைப் பெற்றிருப்பதுதான் - அதிக வங்கியிருப்பை அல்ல. காரணம், வங்கியிருப்பு இங்கேயே இருக்கும், நீங்கள் போய்விடுவீர் கள். உங்களுடன் போகக்கூடியது உங்களுடைய இருப்புணர்வு மட்டுமே.

யோகா உங்களுடைய உள்ளார்ந்த இருப்புணர்வு பற்றிய அறிவியல் ஆகும். எப்படி அதிக வளர்ச்சி காண்பது, நீங்கள் எப்படி ஒரு கடவுளாகி பூரணத்துடன் ஒன்றுவது என்பது பற்றிய அறிவியல் அது.

*தற்போது சூத்திரங்கள்:*

*'சம்யாமவின் மூலம், அடுத்தவர் மனதில் இடம் பெற்றிருக்கும் படிமத்தை* (image) *அறிந்து கொள்ள முடியும்'*

நீங்கள் ஏகாக்ர சிந்தையைப் பெற்றிருப்பின், சமாதி நிலையை அடைந்திருப்பின் அடுத்தவர் மனதில் உள்ள படிமத்தை அறியும் திறமை உங்களிடம் இருக்கும். அவர்களுடைய எண்ணங்களை உங்களால் படிக்க முடியும்.

இரண்டு யோகிகள் சந்தித்துக் கொண்ட ஒரு நகைச்சுவையை நான் கேட்டிருக்கிறேன். இருவருமே சமாதிநிலையை அடைந்தவர்கள். பேசுவதற்கு எதுவுமே இல்லை. ஆனால், சந்தித்துக் கொள்கிறபோது எதையாவது பேசியாக வேண்டுமே. 'நான் உம்முடன் ஒரு நகைச்சுவையைப் பகிர்ந்து கொள்ளப் போகிறேன். அது ரொம்பப் பழசு. ஒரு காலத்தில்...' என்று ஒரு யோகி சொல்ல முற்பட்டார். அடுத்தவர் சிரிக்க ஆரம்பித்து விட்டார்.

ஒட்டு மொத்த நகைச்சுவையுமே அதுதான். வாய்விட்டுச் சொல் லாமலே முழு நகைச்சுவையையும் அவரால் புரிந்து கொள்ள முடிந்தது.

நீங்கள் அமைதியாய் இருந்தால் அந்த அமைதியின் மூலம் அடுத்தவர் மனதைப் புரிந்து கொள்ளும் திறமையைப் பெறுவீர்கள். நீங்கள் பெறவேண்டும் (அந்தத் திறமையை) என்பதல்ல, பெற்றேயாக வேண்டும். அந்தச் செயல்முறை பற்றிய அனைத்தையும் பதஞ்சலி சொல்கிறார். உண்மையில் அது அடுத்தவருடைய சுதந்திரத்தில் அத்துமீறி நுழைகிற செயல் என்பதால் ஒரு யோகி அதைச் சொல்வதில்லை. அடுத்தவருடைய அந்தரங்கத்தைப் பங்கப்படுத்து கிற வேலை, ஆனால் அது நிகழவே செய்கிறது.

பதஞ்சலி விபூதிபாதம் என்கிற இந்த அத்தியாயத்தில் கூறுவது ஒருவர் அடைய வேண்டிய - செய்து முடிக்க வேண்டிய அற்புதங்களை அல்ல. அற்புதங்கள் பற்றிய உணர்வும் கவனமும் ஒருவருக்கு இருக்க வேண்டும் என்பதை. அற்புதங்களல் வியந்து நிற்பதோ, அற்புதங்கள் நிகழ்த்தும் ஆற்றலைப் பயன்படுத்துவதோ உங்கள் வளர்ச்சியை நிறுத்திவிடும். ஆற்றல் அங்கேயே ஆணி அறைந்தாற்போல் நின்றுவிடும். அவற்றைப் பயன்படுத்தாதீர்கள். இந்தச் சூத்திரங்கள் உங்களை அற்புதங்கள் பற்றிய உணர்வும், கவனமும் உடையவராக்கும். அதற்கான திறமையைப் பயன்படுத்தும்

மனத்தூண்டுதலும், மனச்சார்பும் உங்களுக்கு ஏற்படக்கூடும். அடுத்தவர் மனதைக் கூர்ந்து நோக்க விரும்பாதவர் யார்? அந்நிலையில் உங்களுக்கு அடுத்தவர் மீது அதிகாரம் ஏற்பட்டுவிடும். ஆனால் யோகா அதிகாரம் செலுத்தும் பயணமல்ல, உண்மையான யோகி ஒருபோதும் அதைச் செய்வதில்லை.

ஆனால், அது நடக்கவோ செய்கிறது. அதை அடைய முயல்கிறவர்கள் இருக்கிறார்கள். அது அடையக்கூடியதாய் இருக்கிறது. சமயத்தில் நம்பிக்கை வைக்காமலே அதை அடைய முடியும். யோகாவைப் பின்பற்றும் ஒரு உண்மையான சீடனாக இல்லாவிட்டாலும் அதைச் செய்ய முடியும்.

சில சமயங்களில் அது எதிர்பாராத நிகழ்வாய் அமைந்துவிடுவதும் உண்டு. ஏதாவதொரு வழியில் உங்கள் மனம் அமைதி நிலைக்கு வந்துவிட்டால் அடுத்தவர் மனதில் தோன்றும் படிமங்களை - கருத்துகளை உங்களால் கூர்ந்தறிய முடியும். அது மிகவும் நெருக்கமாகிவிடும். உங்கள் மனதில் எண்ணங்கள் நெரிசலாய் இருக்கும்போது அடுத்தவர் மனம் தொலைவுக்குச் சென்றுவிடும். காரணம் எண்ணங்களின் திரள் (crowd) உங்கள் மன அமைதியைக் குலைத்துவிடும். உங்களுக்குள் நிகழும் போக்குவரத்தின் இரைச்சல் அதிகம். அது அடுத்தவர் எண்ணத்தைத் தெரிந்து கொள்ள முடியாத அளவுக்கு இருக்கும்.

நீங்கள் அதைக் கவனித்திருக்கிறீர்களா? சில சமயங்களில் தியானத்துடன் அல்லது யோகாவுடன் அல்லது டெலிபதித் திறன்களுடன் இயற்பியலுக்கு அப்பாற்பட்ட நுட்ப அறிவுகளுடன் தொடர்பில்லாத சாதாரணர்களும் தங்களுக்கு நேரிடும் சில குறிப்பிட்ட நிகழ்வுகளை உணரக்கூடியவர்களாவார்கள். உதாரணமாக, ஒருவரை யொருவர் நேசிக்கும் ஆணும் பெண்ணும் ஒருவருக்கொருவர் பொருந்தி, ஒருவரது எண்ண ஓட்டத்தை மற்றொருவர் உணரக் கூடியவர்களாகிறார்கள். கணவன் மனதில் இருப்பதை மனைவி உணர்கிறாள். இந்த விழிப்புணர்வை அவள் உணராதிருக்கலாம், ஆனால் ஒரு நுட்பமான செயல் முறையில் தன் கணவனின் மனதுக்குள் இருப்பதை அவள் உணரத் தொடங்குகிறாள். அவள் தெளிவற்றிருக்கலாம். அது குழப்பத்தைத் தருகிற ஒரு பொருளாயிருக்கலாம். கவனத்தைக் கவராதிருக்கலாம். கொஞ்சம் மங்கலான காட்சியுமாயிருக்கலாம். ஆனால் காதலர்கள் மெள்ள

மெள்ள அடுத்தவர் மனதை உணரும் திறனைப் பெற்றுவிடுகிறார்கள். தன் குழந்தையை நேசிக்கிறதாய் தனது குழந்தையின் தேவைகளை அது வாய்விட்டுச் சொல்லாமலே உணர்ந்து கொண்டுவிடுகிறாள்.

நீங்கள் அடுத்தவருடன் இணைதற்கான பாதை எங்கானும் ஓரிடத்தில் இருக்கவே செய்யும். நாம் முழுமை பரம்பொருள்புடன் இணைக்கப்படுகிறோம்.

பதஞ்சலி சொல்கிறார், சம்யமாவின் மூலம் ஏகாக்ர சிந்தையை, உள்ளார்ந்த சீர்த்தன்மையை, சமாதி நிலையை அமைதியை சாந்தத்தை அடைந்தவரால் அடுத்தவர் மனதில் உள்ள கருத்தை அறிய முடியும் என்று. நீங்கள் அடுத்தவர் மீது உங்கள் கவனத்தைச் செலுத்தினாலே போதும். ஆழ்ந்த அமைதி நிலையில் நீங்கள் அடுத்தவரை நினைவில் கொள்கிறீர்கள். அடுத்தவரை கூர்ந்து நோக்குகிறீர்கள், எதிர்பாராத கணத்தில் அவருடைய மனம் உங்கள் முன்னால் ஒரு திறந்த புத்தகமாய் விரிவதைக் காண்பீர்கள்.

ஆனால், அதைச் செய்யத் தேவை இல்லை. காரணம் இது சாத்தியமானவுடன் மேலும் பல சாத்தியங்கள் அதைச் சூழ்ந்து கொள்ளும். நீங்கள் தலையிட்டு, அடுத்தவர் எண்ணங்களை வழி நடத்த முடியும். உங்களுடைய கருத்துகளை அங்கே வைக்க முடியும். அடுத்தவரை உங்களால் கையாள முடியும். தான் கையாளப் படுகிறோம் என்பதை அவர் உணரமாட்டார், தன்னுடைய சொந்தக் கருத்தின் படி நடப்பதாய் அவர் எண்ணிக் கொள்வார். ஆனால், இதுவெல்லாம் செய்யப்பட வேண்டும் என்பதில்லை.

'ஆனால், கண்டுணரும் திறன் சம்யாவின் மூலம் அடுத்தவர் மனக் கருத்தைத் தாங்கிப்பிடிக்கும் மனம் சார்ந்த காரணிகள் பற்றிய அறிவைக் கொண்டு வருவதில்லை. சம்யமாவின் நோக்கமும் அதுவாகாது.'

அந்தக் கருத்தை நீங்கள் கண்டறிய முடியும் என்பதால் அதன் காரணத்தையும் உங்களால் கண்டு கொள்ள முடியும் என்பதில்லை. காரணத்தை அறிய இன்னும் ஆழத்துக்கு நீங்கள் செல்ல வேண்டியிருக்கும். உதாரணமாக, ஒருவரைப் பார்க்கும்போது அவருடைய மனதில் உள்ளதையும் உங்கள்ால் கண்டு கொள்ள முடியும். எடுத்துக்காட்டாக, நிலவைப் பற்றிய ஒரு படிமம் இருக்கிறது. வெண்ணிற மேகங்களால் சூழப்பட்ட முழுநிலவின் படிமம். ஆனால் அந்தப் படிமம் அங்கே இருப்பதற்கான காரணத்தை நீங்கள் அறிய

மாட்டீர்கள். காண்பவர் ஓர் ஓவியராயிருந்தால் செயல் நோக்கம் (motivation) வேறாயிருக்கும். அவர் ஒரு விஞ்ஞானியாயிருந்தால் அந்த நோக்கம் இன்னும் வேறுபடும்.

ஒரு படிமத்தைக் கவனிப்பதால் மட்டும் அதற்கான நோக்கத்தை நீங்கள் அறிந்து கொண்டுவிட முடியாது. நோக்கம் அந்தப் படிமத்தைவிட நுட்பமானது. படிமம் (image) என்பது முழுமையானது - ஒன்று விடாமல் ஓர் அமைப்பில் உள்ளது. அது அடுத்தவர் மனதில் இருந்தாலும் நீங்கள் அதைப் பார்க்க முடியும். அது ஏன் முதற்கண்ணாய் நிகழ்கிறது. அடுத்தவர் எதற்காக நிலவைப் பற்றி எண்ணமிடுவது? அவர் ஓர் ஓவியராய் -கவிஞராய் - கிறுக்குப் பிடித்தவராய் இருக்கக்கூடும்.

அந்தப் படிமத்தைக் காண்பதால் மட்டுமே அதன் நோக்கத்தை நீங்கள் உணர்வதற்கில்லை, நோக்கத்தையறிய நீங்கள் இன்னும் ஆழத்துக்குச் சென்றாக வேண்டும்.

நீங்கள் நிர்விகல்ப சமாதியை அடைந்தால் மட்டுமே நோக்கத்தை அறிய முடியும், அதற்கு முன்பல்ல. காரணம் நோக்கம் என்பது நுட்பமானது. அதற்குப் படிமம் இல்லை. பார்க்கக்கூடியதாய் எதுவும் இல்லை. மனிதனின் தன்னுணர்வற்ற நிலையில் அடியாழத்தில் பார்க்க முடியாத வேட்கையாய் இருக்கிறது அது. நீங்கள் முற்றாய் உணர்கிற போது, உங்கள் விருப்பங்கள் மறைகிறபோது... உற்றுக் கவனியுங்கள். உங்களுடைய விருப்பங்கள் மறையுமெனில் உங்களால் அடுத்தவருடைய விருப்பங்களைப் புரிந்து கொள்ள முடியும்.

'புதிய எண்ணங்களைக் கருத்தில் கொள்ளும் திறனை நிறுத்தி வைப்பதற்காக, சம்யமாவை தேக அமைப்பில் செயற்படுத்துகிறபோது, கவனிப்பவரின் கண்ணுக்கும் உருவத்தில் இருந்து வெளிப்படும் ஒளிக்கும் இடையேயுள்ள தொடர்பு தடைப்படுகிறது, அத்துடன் அந்த வடிவம் பார்க்க முடியாததாகிறது.'

கண்ணுக்குப் புலப்படாமல் போகும் யோகிகளைப் பற்றி நீங்கள் கண்டிப்பாய் கேட்டறிந்திருப்பீர்கள். பதஞ்சலி எதையும் அறிவியல் நியதிக்குட்படுத்த முயல்கிறார். அதிலும்கூட எந்த அற்புதமும் இல்லை என்கிறார் அவர். ஒரு குறிப்பிட்ட நியதியின் நிச்சயமான புரிதலைக் கொண்டு ஒருவர் கண்ணுக்குப் புலனாகாமல் இருக்க முடியும். அந்த நியதி என்ன?

நீங்கள் எனனைப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள் என்றால் என்மீது விழுகிற சூரியக் கதிர்கள் ஏற்படுத்தும் பிரதிபலிப்பால் என்னைப் பார்க்கிறீர்கள். அந்தச் சூரியக் கதிர்களை நான் உட்கிரகித்து, பிரதிபலிக்காமல் செய்ய ஏதேனும் வழி இருந்தால் நீங்கள் என்னைப் பார்க்க முடிந்திருக்காது. சூரியக்கதிர்கள் என்னை வந்தடைந்தால் மட்டுமே நீங்கள் என்னைப் பார்க்க முடியும். சூரிய ஒளிக்கதிர்கள் வராமல் அங்கே இருட்டாய் இருந்திருந்தால், நீங்கள் என்னைப் பார்க்க முடியாது. ஆனால், நான் சூரியக்கதிர்கள் அனைத்தையும் உட்கிரகித்து, மீண்டும் அவற்றைப் பிரதிபலிக்காமல் இருந்துவிட்டால், நீங்கள் என்னைப் பார்க்க இயலாது. ஒரு இருண்ட பகுதியையே நீங்கள் காண்பீர்கள்.

நவீன அறிவியலும் அதைத்தான் சொல்கிறது - நாம் வண்ணங்களை எப்படிக் கண்டு கொள்கிறோம் என்பதை. உதாரணமாக, நீங்கள் ஆரஞ்சு நிறத்தில் உடுத்திருக்கிறீர்கள். நீங்கள் ஆரஞ்சு நிறத்தில் உடுத்தியிருப்பதை நான் காண்கிறேன். இது எதைக் குறிக்கிறது? உங்கள் உடைகள் ஆரஞ்சு நிறக் கதிர்களைப் பிரதிபலிக்கிறது என்பதையே குறிக்கிறது. மற்ற நிறக்கதிர்கள் உங்கள் உடையால் உட்கிரகித்துக் கொள்ளப்படும். ஆரஞ்சு நிறம் மட்டுமே பிரதிபலிக்கப்படும். நீங்கள் வெள்ளை நிறத்தைப் பார்க்கிறபோது, எல்லா நிறங்களும் மீண்டும் பிரதிபலிக்கப்படுவதையே அது குறிக்கும். வெண்மை ஒரு நிறமல்ல, எல்லா நிறங்களையும் அது பிரதிபலிக்கும். எல்லா நிறங்களும் சேர்ந்ததுதான் வெள்ளை. நீங்கள் எல்லா நிறங்களையும் ஒன்றாகக் கலந்தால் அது வெள்ளையாகிவிடும். ஆக, வெள்ளை ஒரு நிறமல்ல. அதுவே எல்லா நிறங்களுமாகும். நீங்கள் ஒரு கறுப்பு உடையைப் பயன்படுத்துகிறபோது எதுவும் பிரதிபலிகக்கப்படுவதில்லை, எல்லா கதிர்களும் உட்கிரகிக்கப்படட்டு விடுகின்றன. அதனால்தான் உங்கள் உடை கறுப்பாகத் தெரிகிறது. கறுப்பும் ஒரு நிறமல்ல, அது நிறமற்றது. எல்லா கதிர்களும் உட்கிரகிக்கப்பட்டுவிடுகின்றன. அதனால்தான் வெப்பம் நிறைந்த ஒரு நாட்டில் நீங்கள் கறுப்பைப் பயன்படுத்துகிறபோது மிகப்பெரிய அளவில் வெம்மையை உணர்கிறீர்கள். கடுமையான வெயிலில் கருப்பு நிற உடையணிந்து செல்லாதீர்கள். ரொம்பவும் கடுமையான வெப்பத்தை உணர்வீர்கள், காரணம் கருமை எல்லாவற்றையும் உறிஞ்சிவிடும். வெள்ளை குளுமையானது. நீங்கள் வெள்ளையைப்

பயன்படுத்துகிறபோது, குளுமையை உணர்வீர்கள் காரணம் எதுவும் உறிஞ்சப்படுவதில்லை, எல்லாமும் பிரதிபலிக்கப்பட்டுவிடும்.

இந்தியாவில் ஜைன மதம் துறத்தலின் காரணமாய் வெள்ளையைத் தங்களுடைய நிறமாய் தெரிவு செய்திருக்கிறது. காரணம் அது எல்லாவற்றையும் துறக்கிறது. வெள்ளை நிறம் எல்லாவற்றையும துறந்து விடுகிறது - எல்லாவற்றிலும் இருந்து விலகிவிடுகிறது. அது எல்லாவற்றையும் திருப்பித் தந்துவிடும், எதையும் உட்கிரகித்துக் கொள்வதில்லை. மரணம் எங்குமே கருமையாய் சித்திரிக்கப்படுகிறது. காரணம், அது - சகலத்தையும் உறிஞ்சிக் கொண்டுவிடும். அதில் இருந்து எதுவும் வெளிப் படுவதில்லை. அதனுள் எல்லாமும் கரைந்து, காணாமல் போய்விடும்.

அது ஒரு கருமையான குழி. எங்குமே பேயைக் கருமையாய் சித்திரிக்கிறார்கள். தீமைகள் - பாவங்கள் கருமையாய் சித்திரிக்கப் படுகின்றன. காரணம், அவை எதையும் துறப்பதில்லை. மரணமும் சரி, பாவமும் சரி எதையும் கொடுக்காது, எதையும் பகிர்ந்து கொள்ளாது.

இந்துக்கள் ஆரஞ்சு நிறத்தைத் தெரிவு செய்து கொண்டிருப் பதற்கு ஒரு காரணம் உண்டு. அதில் செந்நிறக்கதிர்கள் திரும்பவும் பிரதிபலிக்கப்படுகின்றன. உடம்பினுள் நுழைகிற செங்கதிர் பாலுறவு நாட்டத்தையும், வன்முறையையும் தோற்றுவிக்கும். சிவப்பு வன்முறையின் நிறம். இரத்தத்துக்குரியது. உடம்புக்குள் நுழைகிற செங்கதிர் பாலுறவு நாட்டத்தை, வன்முறையை, இச்சையை அமைதிக்குலைவை உண்டு பண்ணும். நீங்கள் சிவப்பு வண்ணம் பூசிய ஓர் அறைக்குள் விடப்பட்டால் ஏழு நாட்களுக்குள் உங்களுக்குப் பைத்தியம் பிடித்துவிடும், வேறெதுவுமே தேவைப்படாது. சிவப்பு நிறப் பொருள்களையே தொடர்ந்து ஏழு நாட்களுக்குப் பார்த்துக் கொண்டிருந்தால் போதும். திரைகள், வீட்டுச்சாமான்கள் (பர்னிச்சர்) சுவர்கள் என ஒவ்வொன்றும், எல்லாமும் சிவப்பு நிறத்தில் இருந்தால், சிவப்பு நிறத்தைச் சகிக்க முடியாமல் நீங்கள் பைத்தியமாகி விடுவீர்கள். இந்துக்கள் சிவப்பை, சிவப்பின் சாயைகளை ஆரஞ்சு காவி இப்படி, தேர்ந்தெடுக்கிறார்கள். காரணம், அவை உங்களுடைய வன்முறை உணர்வைக் குறைக்கும். சிவப்பு நிறக்கதிர் திரும்பவும் பிரதிபலிக்கப்பட்டுவிடும். அது உடம்பினுள் நுழைவதில்லை.

தன் உடம்பில் விழும் கதிர்களை உட்கிரகித்துக் கொண்டுவிட முடிந்தால், மனிதன் கண்ணுக்குப் புலனாகாதவனாகி விட முடியும்

என்கிறார் பதஞ்சலி. நீங்கள் அவனைப் பார்க்க இயலாது. அந்த மனிதன் கண்ணுக்குப் புலப்படமாட்டான். நீங்கள் வெறுமையை கறுமையான வெற்றிடத்தை மட்டுமே காண்பீர்கள். அது ஒரு யோகிக்கு எப்படி நேர்கிறது? சில நேரங்களில் அது நிகழ்கிறது. சில நேரங்களில் அது நிகழ்வது யோகிக்குத் தெரியாமலே போய்விடுகிறது. அதன் இயக்கு நுட்பத்தை (Mechanism) நான் உங்களுக்கு விளக்குகிறேன்.

பதஞ்சலியின் சிந்தனா முறையில் புற உலகுக்கும் அக உலகக்கும் இடையே ஆழ்ந்த இசைவு - தொடர்பு இருக்கிறது. அவை ஒன்றாய் இணைந்திருக்கின்றன -இருந்தாக வேண்டும். இங்கே ஒளியிருக்கிறது. இந்த ஒளி சூரியனிடம் இருந்து வருவது. உங்களுடைய கண்கள் அதை ஏற்கிறது - வரவேற்கின்றது. உங்களது கண்கள் அதை ஏற்காவிட்டாலும் சூரியன் அங்கே இருக்கக்கூடும். ஆனால், நீங்கள் இருளில் வாழ்வீர்கள். பார்வையிழந்த ஒருவனுக்கு அதுதான் நேரிடுகிறது - அவனுயை கண்களில் ஏற்புத்திறன் இல்லாமல் போய்விட்டது. ஆக, உங்களுடைய கண்களுக்கு எப்படியோ சூரியனுடன் தொடர்பு இருக்கவே செய்கிறது. உங்கள் உடம்பில் உங்களுடைய கண்கள் சூரியனை உருப்படுத்துகிறது. அவை ஒன்றாய் இணைந்திருக்கின்றன. சூரியன் கண்களில் விளைவை ஏற்படுத்துகிறது. அதனுடனான கண்களின் உணர்வு நுட்பமானது. ஒலிகள் உங்கள் காதுகளில் விளைவை ஏற்படுத்துகின்றன. அந்தக் காதுகள் உங்களுக்குள் இருக்கின்றன.

புறத்தே உள்ள மெய்ம்மை தத்துவம்- அடிப்படைக் கூறு (element) ஆகும். அகத்தே தொடர்புடையது தன் மாத்திரை எனப்படும். பதஞ்சலியின் வழிமுறையில் இந்த இரண்டும் முக்கியமாய் புரிந்து கொள்ளப்பட வேண்டியவை. தத்துவம் புறத்தே இருக்கும் மெய்ம்மை (reality). அதனுடன் தொடர்புடையதாய் உங்கள் கண்களில் இருக்கிற ஒன்றையே நாம் தன்மாத்திரை என்கிறோம். அது உங்களுக்குள் இருக்கும் முக்கியப்பகுதி. அதனால்தான் கண்களுக்கும் சூரியனுக்கும் இடையே, ஒலிக்கும் காதுக்கும் இடையே நாசிக்கும் வாசனைக்கும் இடையே ஓர் உரையாடல் இருக்கிறது. அங்கே ஓர் இசைவு, கண்ணுக்குப் புலப்படாத ஓர் இணைப்பு இருக்கிறது.

ஒருவர் தொடர்ந்து தியானித்துக் கொண்டிருந்தால் 'நிரோத்' என்கிற இடைவெளிகளைப் புரிந்து கொள்கிறார். அந்நிலையில்

இடைவெளிகள் திரளாகச் சேர்ந்து சமாதிநிலை ஏற்படுகிறது. அப்போது ஏகாக்ரபரிணம் என்கிற ஒற்றை நோக்கு உண்டாகிறது. பிறகு அவரால் தன் மாத்திரைகளைக் கூர்ந்து கவனிக்க முடிகிறது. அவை உள்ளிருக்கும் நுட்பமான் கூறுகள். நீங்கள் சூரியனைக் கண்களால் காண முடியும். ஆனால், இதுவரைக்கும் உங்கள் கண்களை நீங்கள் பார்த்ததில்லை. ஆழ்ந்த வெறுமையில் (emptiness) மட்டுமே ஒருவர் விழிப்புடன் இருக்கவும் தன்னுடைய கண்களைத் தானே பார்க்கவும் முடியும். நீங்கள் ஒலியைக் கேட்கிறீர்கள். ஆனால் உங்கள் காது புரியும் எதிர்ச் செயலைக் கேட்டிருக்க மாட்டீர்கள். உங்கள் காதில் உண்டாகும் நுட்பமானஅதிர்வு, நீங்கள் அதனை இன்னமும் கேட்டிருக்க மாட்டீர்கள். அது ரொம்பவும் நுட்பமானது. நீங்களோ அத்தனை நுட்பமில்லாதவர். நீங்கள் இன்னமும் சுத்திகரிக்கப்படாதவராகவே இருக்கிறீர்கள். உங்களால் நுட்பமான இசையைக் கேட்க முடியாது. நீங்கள் ரோஜாவை முகர்ந்திருப்பீர்கள். ஆனால் ரோஜாவை முகர்வதற்கு உங்களுக்குள் இருக்கும் நுட்பமான பகுதியை நீங்கள் அறிந்திருக்க மாட்டீர்கள். அந்த நுட்பமான பகுதியே தன் மாத்திரை.

உள்ளார்ந்த சப்தம் என்கிற, நிசப்தத்தைக் கவனமுடன் கேட்கும் திறமை யோகியிடம் இருக்கிறது. அவன் தூய காட்சியைத் தனது அகக் கண்ணில் காண்கிறான். அதில் உள்ளது கண்ணுக்குப் புலப்படா திருக்கும் இயக்குநுட்பம். 'தேக அமைப்பின் பேரில் சம்யமாவை செயற்படுத்துவதன் மூலம்...'

யோகி தன்னுடைய தேக அமைப்பில் கவனத்தை ஒருமுனைப் படுத்துகிறபோது, தன்னுடைய சொந்த அமைப்பில் அவன் செலுத்துகிற அந்தக் கவனத்தால், அமைப்பினுள் கிரகிக்கப்படுகிற சூரியக் கதிர்கள் திரும்பவும் பிரதிபலிக்கப்படுவதில்லை. நீங்கள் அமைப்பில் கவனம் செலுத்துகிறபோது அது திறந்து கொள்கிறது. மூடியிருந்த அத்தனை கதவுகளும் திறந்து கொள்ள சூரியக்கதிர்கள் உங்கள் அமைப்பில் பிரவேசிக்கின்றன. உங்கள் அமைப்பின் தன் மாத்திரை சூரியனின் தத்துவத்தை உட்கிரகித்துக் கொள்கிறது. திடீர் நிகழ்வாய் யாராலும் உங்களைக் காண முடியாமல் போகும். காரணம் காண்பதற்கு ஒளி பிரதிபலிக்கப்பட்டிருக்க வேண்டும்.

ஒலியிலும் அதுவே நிகழ்கிறது.

'ஒலி மறைந்து போகும் நிலையை விளக்குகிறது இந்தக் கோட்பாடு'

தன்னுடைய காதுக்குள் இருக்கும் தன் மாத்திரையில் யோகி கவனம் செலுத்துகிறபோது. அத்தனை ஒலிகளும் உட்கிரகிக்கப்பட்டு விடுகின்றன. ஒலிகள் உட்கிரகிக்கப்பட்ட நிலையில் யோகியின் இருப்பே உங்களைச் சுற்றியுள்ள அமைதியின் முன்னுணர்வு (hunkch) உங்களுக்கு வழங்கும். நீங்கள் ஒரு யோகியிடம் சென்றால் திடீரென்று ஒரு நிசப்தத்துக்குள் நீங்கள் பிரவேசிப்பதாய் உணர்வீர்கள். தன்னைச் சுற்றி எந்தவோர் ஓசையையும் அவர் உண்டு பண்ணுவதில்லை. மாறாக அவர்மீது படிகிற அத்தனை ஒலிகளையும் அவர் உள்வாங்கிக் கொண்டு விடுகிறார். அவரது எல்லா புலன்களிலும் இவ்வாறே நிகழ்கிறது. பலவழிகளிலும் அவர் கண்ணுக்குப் புலப்படாதவராகிறார்.

ஒரு யோகியிடம் நீங்கள் வருகிறபோது இவையே அவரைப் பற்றி முடிவெடுக்க உதவும் நெறிமுறைகள் ஆகும். ஆனால், அவர் நெறிமுறையாய் எதையும் முயன்று பார்ப்பதில்லை. அவற்றைச் செய்து பார்ப்பதில்லை. மாறாக தவிர்க்கவே செய்வார். ஆனால், சில வேளைகளில் அவை நிகழ்ந்து விடுகின்றன. சில வேளைகளில் குருவுடன் அமர்ந்திருக்கும்போது..

இங்கு பலபேருக்கு அது நிகழ்ந்திருக்கிறது. அவர்கள் எனக்கு எழுதியிருக்கிறார்கள். அன்றொரு நாள் ஒரு கேள்வி எழுந்தது: 'உங்களைக் கவனித்துக் கொண்டிருக்கிறபோது எதுவோ நிகழ்கிறது. நான் அடக்க முடியாத ஆர்வம் கொண்டு விடுகிறேனா? என்ன நடக்கிறது? சில நேரங்களில் நீங்கள் மறைந்து விடுகிறீர்கள்' என்பதாய். நீங்கள் என்னைக் கவனித்தபடி இருக்கும்போது நான் மறைந்து போகிற கணங்கள் இருக்கவே செய்யும். என்னுடைய வார்த்தைகளை நீங்கள் கவனமாய் கேட்டு, உங்கள் கவனத்தை ஒருமுனைப் படுத்துகிறபோது, அவை சற்றும் எதிர்பாராத விதமாய் நிசப்தத்தில் இருந்து வருவதை நீங்கள் உணர்வீர்கள். நீங்கள் அதை உணர்கிற போது என்னையும் உணர்ந்திருப்பீர்கள், அதற்கு முன்பாகவல்ல.

எதுவும் செய்யப்பட்டதாய் இருக்காது. உண்மையில் யோகி எதையும் செய்வதில்லை. அவர் தன்னுடைய இருப்புணர்வில் இருந்து கொண்டிருக்க செயல்கள் நடக்கின்றன. உண்மையில் அவர் தவிர்க்கிறார், விலகியிருக்கிறார். ஆனாலும் சில நேரம் செயல்கள் நடந்தேறுகின்றன. அற்புதங்கள் தொடர்கின்றன, அவை சமாதிநிலை அடைந்தவரைத் தொடர்கின்றன. அகவெளியை அடைந்த மனிதரின் நிழலாய் அவை பின் தொடர்கின்றன.

இதனையே நான் மதத்தின் அறிவியல் என்கிறேன். பதஞ்சலி அடித்தளமிட்டார். நிறையவே செய்யப்பட வேண்டியவை இருக்கின்றன. அவர் வெறுமையான அமைப்பை மட்டுமே வழங்கினார் - நிறையவே இடைவெளிகளை இட்டு நிரப்ப வேண்டியிருக்கிறது. அது ஒரு கெட்டியான அமைப்பு. சுவர்கள் எழுப்பப்பட வேண்டும், அறைகள் உருவாக்கப்பட வேண்டும். நீங்கள் வெறுமையான ஒரு கட்டமைப்பில் வாழ முடியாது. அதனை ஒரு வீடாக உருவாக்க வேண்டும். ஆனால் அவரோ அடிப்படை அமைப்பைத் தான் வழங்கியிருக்கிறார்.

ஐயாயிரம் ஆண்களுக்குப் பின்னும் அடிப்படை அமைப்பு அப்படியே இருக்கிறது. அது இன்னமும் மனிதனின் வசிப்பிடமாக வில்லை. மனிதன் இன்னமும் அதற்கு ஆயத்தப்படவில்லை.

மனிதன் விளையாட்டுக்கருவிகளை வைத்து விளையாடிக் கொண்டிருக்கிறான். மெய்ம்மையோ காத்திருக்கிறது -நீங்கள் போதிய வளர்ச்சி பெற்றதும் அதைப் பயன்படுத்துவீர்கள் என்று காத்திருக்கிறது. வேறுயாரும் அதற்குப் பொறுப்பல்ல, நாம்தான் பொறுப்பு. உலகைச் சுற்றியிருக்கும் மிகப்பெரிய உறக்க நிலைக்கு ஒவ்வொரு மனிதனும் பொறுப்பாகிறான். ஒட்டு மொத்த உலகையும் ஒரு பனிப்படலமாய் அது சுற்றிச் சூழ்ந்திருப்பதை நான் காண்கிறேன். அத்துடன் மனிதன் நிலையான உறக்கத்தில் இருக்கிறான்.

சாலையில் தள்ளாடிக் கொண்டிருந்த ஒரு குடிகாரனிடம் ரொம்பவும் ஊக்கமுடன் பணியாற்றும் சீர்திருத்தவாதி ஒருத்தி கேட்டாள், ‘பரிதாபத்துக்குரியவ்ரே, இந்த அளவு குடிக்கும்படி உம்மைத் தூண்டியவர் யார்?’ என்று.

முட்டக் குடித்திருந்த அந்தக் குடிகாரன் கடுமையான குரலில் சொன்னான், ‘சீமாட்டியே, என்னை யாரும் தூண்டவில்லை. நான் ஒரு தன்னார்வத் தொண்டன்’ என்று.

மனிதன் யாருடைய தூண்டுதலுமின்றி, தன்னிச்சையாகவே கவலையில் கிடக்கிறான். நீங்கள் தானாகவே தான் கவலைக் குள்ளாவது. உங்களை யாரும் அதற்குக் கட்டாயப்படுத்துவதில்லை. அதில் இருந்து வெளிவருவது உங்கள் பொறுப்பு. யாரையும் குறைகூறிக் கொண்டிருக்காதீர்கள். சாத்தானும், பேயும் உங்களைக் களங்கப்படுத்திக் கொண்டிருக்கவில்லை, உங்களை யாரும்

களங்கப்படுத்த முடியாது. அது நீங்களே செய்து கொள்ளுகிற காரியம். நீங்கள் தூக்கக் கலக்கத்துடன் இருக்கும்போது நீங்கள் பார்க்கிற எதுவும் சிதைந்து போனதாகவே தெரியும். நீங்கள் தொடுகிற எதுவும் சிதைவுற்றதாகவே இருக்கும் - உங்கள் கைக்கு வருகிற எல்லாமும் அசுத்தப்பட்டுவிடுகின்றன.

இரண்டு குடிகாரர்கள் இரயிலின் பாதையின் பக்கமாய் வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தனர். இரயில் தண்டவாளங்களைத் தாங்கும் குறுக்குச் சட்டங்களில் தடுமாற்றத்துடன் கால்வைத்துச் சென்றனர். முன்னால் போய்க் கொண்டிருந்தவன் சொன்னான், 'ஐயோ, ட்ரீவர், இதுவரை இத்தனை மோசமான படிக்கட்டுகளில் நான் ஏறினதே இல்லை' என்று.

அவனுடைய நண்பன் சொன்னான், 'எனக்குப் படிகளைப் பற்றிக் கவலையில்லை. ஆனால், கீழே உள்ள இந்தக் கைப்பிடிக் கம்பிகள் தான் ரொம்ப மோசம்' என்று.

நாம் போதையில் செல்கிறோம். அகந்தையில் போதை. உடைமைகளில் போதை. மெய்ம்மை பற்றிய அறிவு சிறிதும் இல்லாதவர்களாய் இருக்கிறோம். நாம் காண்பது எதுவாயினும் அது சிதைவுற்று விடுகிறது. இந்தச் சிதைவும், திரிபு (distortion) ந்தான் மாய்வுலகைத் தோற்றுவிக்கிறது. உலகம் மாயையாய் - ஏமாற்றும் தன்மை உடையதாய் இல்லை. நம்முடைய மயங்கிய அறிவின் காரணமாகவே உலகம் மாயையாய் தெரிகிறது. நம்முடைய போதை மறைந்து விட்டால் உலகம் பேரழகுடன் கூடிய ஒரு நிகழ்வாய் பிரகாசிக்கும் - உலகமே கடவுளாகிவிடும்.

கடவுளும் உலகமும் இரு வேறானவையல்ல. நாம் தூக்கக் கலக்கத்தில் இருப்பதால் அவை இரண்டாகத் தெரிகின்றன. நீங்கள் விழிப்படைந்து விட்டால் அவை ஒன்றாகிவிடும். உங்களைச் சுற்றியிருக்கும் பேரழகை நீங்கள் கண்டு கொண்டால் எல்லாத் துயரங்களும், எல்லா நம்பிக்கையற்ற நிலைகளும், வேதனைகளும் மறைந்துவிடும். பிறகு நீங்கள் முற்றிலும் வேறான, ஆசீர்வதிக்கத்தக்க பரிமாணத்தில் வாழ்வீர்கள்.

யோகா என்பது இவ்வுலக விழிப்புடன் பார்ப்பதன்றி வேறல்ல.. மேலும், உலகமே கடவுளாகிவிடும். கடவுளை வேறெங்கும் தேடுகிற அவசியமில்லை. உண்மையில் கடவுளைப் பற்றி மறந்து விடுங்கள்.

அதிக விழிப்புணர்வு கொண்டவராகி விடுங்கள். உங்கள் விழிப்புணர்வில் கடவுள் தோன்றுகிறார். உங்கள் உறக்கத்தில் அவர் இழக்கப்படுகிறார். கடவுள் காணாமல் போய்விடுவதில்லை. நீங்கள்தாம் அவரை இழக்கிறீர்கள். நீங்கள்தாம் காணாமல் போகிறீர்கள். உங்கள் உறக்கநிலையில் நீங்கள் யார் என்பதை மறந்துவிடுகிறீர்கள்.

சமாதி என்கிற விழிப்புணர்வு தனது உச்சக்கட்ட முன்னேற்றத்தை அடைகிறது. சமாதி மலர்ச்சியுறும் அமைதியாய் இருக்கிறது. யார் வேண்டுமானாலும் அதை அடைய முடியும், காரணம் அது ஒவ்வொருவரின் பிறப்புரிமையும் ஆகும். நீங்கள் அதைக் கோரவில்லை என்றாலும், அதற்கு உரிமை கொண்டாடவில்லை என்றாலும் அது உங்களுக்காகவே இருக்கிறது. அது கோரப்படா விட்டாலும் காத்திருக்கிறது.

நேரத்தை இதற்கு மேலும் வீணடிக்காதீர்கள். இந்த வாழ்க்கை நிலையான ஒரேயொரு நோக்கத்தைக் கொண்டதாயிருக்கிறது. நீங்கள் இன்னும் கூடுதல் விழிப்புடன் இயங்க வேண்டியிருக்கிறது. உங்கள் வாழ்க்கை மற்றும் நேரத்தின் சிறுபகுதியையும் விடாமல் பயன்படுத்துங்கள்.

நான் ஒரு கதை சொல்வேன் உங்களுக்கு:

சாரா மற்றும் ஆமி என்கிற இரண்டுயூதப் பெண்கள் இருபது ஆண்டுகளுக்குப் பிறகு சந்தித்துக் கொண்டனர். அவர்கள் கல்லூரியில் ஒன்றாகவே படித்தனர், நல்ல நண்பர்கள். ஆனால் இருபதாண்டுகளிலும் அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளவேயில்லை. தற்போது அவர்கள் ஒருவரையொருவர் கட்டித் தழுவி முத்தமிட்டுக் கொண்டனர்.

சாரா சொன்னாள், 'ஆமி, நீ எப்படி இருக்கே?' என்று.

'நல்லாயிருக்கேன். உன்னைப் பார்த்தது மனசுக்கு நிறை வாயிருக்கு சாரா, இந்த உலகம் உன்னை எப்படி கவனிச்சுட்டிருக்கு?'

'ஹாரியும் நானும் கல்யாணம் செய்து கொண்டதும், அவன் என்னைத் தேனிலவுக்கு அழைச்சிட்டுப் போனான். உன்னால் நம்ப முடியுமோ, மத்தியதரைக் கடல் பிரதேசத்தில் மூணு மாதம், இஸ்ரேலில் மூணுமாதம். நீ அதைப்பத்தி என்ன நினைக்கறே?'

'ஆச்சரியமா இருக்கு!' என்றாள் ஆமி.

'இப்போ எங்க இருபதாவது மணநாளில் ஒரு வைர மோதிரம் - பத்து காரட் எடையில் வாங்கித் தந்திருக்கிறார்.'

'நம்பவே முடியலை.'

'அதுமட்டுமா, இப்போ நாங்க ஒரு கப்பலில் உலகத்தைச் சுற்றி வரப்போறோம்.'

'ஆகா, ரொம்ப வித்தியாசமான விசயம்.'

'ஓ ஆமி, ஹாரி எனக்கு என்ன செஞ்சார், என்ன செய்யப் போறார்னு சொல்லிட்டேயிருந்ததில் ஒன்றை மறந்திட்டேன். உன்னோட கணவர் உனக்கு என்னவெல்லாம் செஞ்சிருக்கார்னு கேட்க மறந்திட்டேன்.'

'ஓ நாங்க ரெண்டு பேரும் நல்லா வாழ்ந்திட்டிருக்கோம்'

'ஆனா அவர் ஸ்பெஷலா என்ன செஞ்சிருக்கார்?'

'என்னை மந்திரம் போட்டு மயக்கற ஸ்கூலுக்கு அனுப்பி வெச்சுருக்காரே!'

'மந்திரத்தால் மயக்கற பள்ளிக்கூடமா? நீ எதுக்காக அந்தப் பள்ளிக்கூடத்துக்குப் போகணும்?'

'அபத்தம்னு சொல்றதுக்குப் பதிலா எப்படி 'அற்புதமாருக்கு', 'ஆச்சரியமாயிருக்கு'ன்னு சொல்லக் கத்துக்கறதுக்காகத்தான்.'

யோகாவில் இருப்பதெல்லாம் அவ்வளவே - அது நம்பவே முடியாத விசயங்களில் உங்களை விழிப்புடன் இருக்கச் செய்கிறது. அது மிகச்சரியான மூலையில் உங்களுக்காகக் காத்திருக்கிறது. நீங்களோ அபத்தத்தில் அமிழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். அதில் இருந்து உங்களை விடுவித்துக் கொள்ளுங்கள். போதும்னா போதுந்தான்.

இந்த முடிவை வேறு எவராலும் எடுக்க முடியாது. நீங்கள்தான் தீர்மானித்தாகவேண்டும். நீங்கள் இருப்பது உங்கள் முடிவின் படியே. நீங்கள் மாற விரும்பினால் அதை நீங்கள் தாம் முடிவு செய்ய வேண்டும்.

வாழ்க்கை வியக்கத்தக்கது. நான் சொல்லக்கூடியது அவ்வளவுதான். அது மிகச் சரியாய் உங்கள் பக்கத்திலேயே இருக்கிறது. இருந்தாலும் நீங்கள் அதைத் தவறவிடுகிறீர்கள். இனியும் அதைத் தவறவிட வேண்டியதில்லை.

யோகா சமய நம்பிக்கையுள்ள ஓர் அமைப்பல்ல. அது ஒரு செய்முறைத் திட்டம். நம்ப முடியாத ஒன்றை எப்படி அடைவது என்பதற்கான விஞ்ஞானப் பூர்வமான செய்முறைத் திட்டம்.

பூனாவுக்குத் திரும்பியதில் இருந்து, உங்களுடைய விளக்கப் பேருரைகளைக் கேட்டதில் இருந்து ஒரு கலக்கத்தை - அமைதியின்மையை நான் அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். என்னுடைய அகந்தை உண்மையிலேயே இருந்திருக்கவில்லை என்பதை நான் தெரிந்து கொண்டேன். எனது கலக்கம் என்னுடைய மிதமிஞ்சிய அகந்தை பற்றித்தான். இருந்திராத ஓர் அகந்தையைத் தான் இத்தனை ஆண்டுகளிலும் நான் உன்னிப்பாய் கவனித்து வந்திருக்கிறேன். என்னுடைய இக்கட்டான நிலைமையில் யாரோ ஒரு கவிஞர் சொன்ன சில வரிகளை நினைவு கூர்கிறேன். அந்த வரிகள் கிட்டத்தட்ட இப்படி இருக்கும்.

> 'நான் படிகளில் மேலேறிச் சென்றபோது அங்கு இருந்திராத ஒரு மனிதனைக் கடந்து சென்றேன். இன்று அவன் மறுபடியும் வரவில்லை உண்மையில் அவன் போய்விட் டிருப்பான் என்றே எண்ணுகிறேன்'

அகந்தை இக்கட்டை ஏற்படுத்தும் என்பதோடு புரிந்து கொள்ளப் படவேண்டியதும் ஆகும். இல்லையேல் உங்கள் அகந்தை அளவற்றதாகிவிடும். பழைய அகந்தையுடன் போரிடும் புதிய அகந்தையை உருவாக்கிக் கொண்டேயிருப்பீர்கள்.

உண்மையில் அகந்தை என்றால் என்ன? மிகச் சரியாக சொன் னால், அது இணக்கமின்மையின் உச்சநிலை. அது உங்களுக்குள் ஒரு பிரிவை (divison) ஏற்படுத்தும் - இணக்கமின்மையின் உச்சநிலை மற்றும் கீழான நிலை என்கிற பிரிவை, மேம்பட்ட மற்றும் தாழ்வான பிரிவை, மகான் மற்றும் பாவி என்கிற பிரித்தறிதலை. நல்லது மற்றும் தீயது என்கிற பிரித்தலை. அந்தப் பிரித்தல் அடிப்படையில் கடவுள் மற்றும் பேய் பற்றியது. நீங்கள் அழகான ஒன்றுடன், உயர்ந்த ஒன்றுடன் மேம்பட்ட ஒன்றுடன் உங்களை அடையாளப்படுத்திக் கொள்கிற வேலையைத் தொடர்ந்து செய்து கொண்டிருக்கிறீர்கள். அதே சமயத்தில் கீழ்ப்படியில் (lower) இருப்பதை எப்போதும் பழித்துக் கூறுகிறீர்கள்.

இந்தப் பிரிப்பு வேலை இடம்பெறும் பட்சத்தில் நீங்கள் எதைச் செய்தாலும் அதில் அகந்தை இருக்கும். அதைவிடுவதன் மூலம் மிதமிஞ்சிய ஓர் அகந்தையை நீங்கள் தோற்றுவித்துக் கொள்கிறீர்கள். பிறகு மெள்ள மெள்ள ஒரு மிகுதியான அகந்தை உங்களுக்குத் தொல்லை கொடுக்கத் தொடங்கிவிடும். காரணம் பிரித்தலில்

இருக்கிறது துன்பம். பிரிவு அற்று இருப்பது பரமசுகம். பிரிவு என்றாலே துயரம். அது புதியப் பிரச்சினைகளை, புதிய கவலைகளைத் தோற்று விக்கும். அந்நிலையில் மறுபடியும் நீங்கள் மிகுதியான ஒரு அகந்தையை நீங்கள் உருவாக்கிக் கொள்வீர்கள். அது எண்ணிக்கை யற்றதாகும். எல்லையற்றதாகிவிடும். இது பிரச்சினையைத் தீர்க்கப் போவதில்லை. நீங்கள் அதை இடம்பெயரச் செய்கிறீர்கள் அவ்வளவுதான். நீங்கள் மறுபடியும் வலுக்கட்டாயமாக அதன் வழியில் அதைச் செலுத்துகிறீர்கள். நீங்கள் பிரச்சினையைத் தவிர்க்க முயல்கிறீர்கள்.

கன்னித் தாயான மரியாளிடமும் கடவுளிடமும் கத்தோலிக்க மதக் கல்வியிலும் நம்பிக்கை கொண்ட ஒரு கத்தோலிக்க கிறுக்கனைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். பிறகு, அவன் தெவிட்டலாகிப் போய் அதை விட்டுவிட்டான். மேலும், அவன் நாத்திகனாய் மாறிப் போனான். அதன்பிறகு, 'கடவுள் இல்லை, மரியாள் அவருடைய தாயில்லை' என்று சொல்ல ஆரம்பித்து விட்டான். தற்போது அதே பழைய விசயம் ஏற்க முடியாததாகி விட்டது.

நான் ஒரு யூதனைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். சிறியதொரு நகரத்தின் எளிமையான தையற்காரன். ஒருநாள் கோயிலில் அவனைக் காணவில்லை. அது மதத்தொடர்பான ஒரு நாள். அவன் எப்போதுமே அந்நாளில் அங்கே இருப்பவன்தான். ஆனால் அவன் நாத்திகனாகிவிட்டதாய் நகரத்தில் மெள்ள வதந்திகள் பரவிற்று. எனவே நகரம் பரபரப்புற்றது. அந்தத் தையற்காரன் நாத்திகனானது பெரிய நிகழ்வு. அந்த ஊரில் அப்படி நடந்ததில்லை. அதற்குமுன் யாரும் அங்கே நாத்திகனாய் மாறியிருக்கவில்லை. எனவே தான், நகரவாசிகள் அத்தனைபேரும் அவன் கடைவாசலில் போய் நின்றார்கள். அவனிடம் அவர்கள் கேட்டதற்கு அவன் எதுவுமே சொல்லவில்லை. அவன் அமைதியாய் இருந்தான்.

மறுபடியும் அவர்கள் இன்னொரு நாளில் அவனை அணுகினார்கள், காரணம் நகரத்தில் எந்த ஒன்றைச் செய்வதும் சாத்தியமில்லைபோல் பட்டது. மொத்த நகரமும் அவனைப் பற்றிய கவலையிலாழ்ந்தது - அவன் எதற்காக நாத்திகனாய் மாறினான்? அவர்கள் ஒரு பேராண்மைக்குழுவை ஏற்படுத்தினர், கொஞ்சம் எரிச்சல் பேர் வழியான காலணி செய்கிற ஒருவன் அதற்குத் தலைவனானான். அவர்கள் தையற்கடைக்கு வந்தனர். காலணி

செய்பவன் அவனிடம் கேட்டான், 'நீ நாத்திகனாகி விட்டாயாமே?' என்று.

தையற்காரன் அமைதியாய் சொன்னான். 'ஆமாம், நான் ஒரு நாத்திகனாகி விட்டேன்தான்.'

தங்களுடைய காதுகளையே அவர்களால் நம்பமுடியவில்லை. அப்படியொரு நேரிடையான பதிலை அவனிடமிருந்து அவர்கள் எதிர்பார்க்கவில்லை. எனவே, 'அப்படியானால் நேற்று ஏன் எதுவும் சொல்லாமல் இருந்தாய்?' என்று அவனிடம் அவர்கள் கேட்டனர்.

அவன் சொன்னான், 'என்னது! எந்த நோக்கத்துடன் பேசு கிறீர்கள்? புனிதமான திருநாளில் (Sabbath) நான் நாத்திகனாகி விட்டேன் என்பதை ஒத்துக்கொள்ள வேண்டுமா?'

நீங்கள் நாத்திகனான போதும்கூட உங்களுடைய பழைய அமைப்பு தொடர்கிறது.

நான் செத்துக் கொண்டிருந்த ஒரு நாத்திகனைப் பற்றிக் கேள்விப்பட்டதுண்டு. மதகுரு அவனிடம் வந்தார். அந்த நாத்தகனிடம், 'இதுதான் சரியான நேரம். உன்னுடைய கடவுளுடன் சமாதானமாகி விடு.'

நாத்திகன் தனது கண்களைத் திறந்து சொன்னான், 'நான் நாத்திகனாய் இருக்க முடிந்ததற்கு, கடவுளே உனக்கு நன்றி' என்று.

அது தொடர்கிறது. நீங்கள் அப்படியேதான் இருக்கிறீர்கள். குறிப்புச் சீட்டுகள் (Labels) மட்டுமே மாறுகின்றன.

தயவு செய்து அகந்தையைப் புரிந்து கொள்ளுங்கள். மிதமிஞ்சிய அகந்தையைத் தோற்றுவித்துக் கொள்ளாதீர்கள். இந்த அகந்தை எத்தகையது என்பதைப் புரிந்து கொள்ள முயலுங்கள்.

அகந்தை முழுமையில் இருந்து பிரிப்பது. பரிபூரணமான ஒன்றில் இருந்து நீங்கள் விலகியிருப்பதாய் கொஞ்சம் எண்ணிப் பாருங்கள். வெறும் எண்ணந்தான் உண்மையல்ல. கற்பனைதான் உண்மையல்ல. உங்களைச் சுற்றி நீங்களே உருவாக்கிக் கொண்ட கனவு அது. முழுமையில் இருந்து நீங்கள் பிரிந்திருக்கவில்லை, விலகியிருக்க வில்லை. உங்களால் முடியாது, காரணம் ஒருமுறை நீங்கள் அதில் இருந்து விலகிவிட்டால் உங்களால் இருக்க முடியாது. அந்நிலையில் உங்களுக்குள் உயிர்ச்சக்தி தடையின்றித் தொடர்வதில்லை. ஆனால்,

முழுமையான பரம்பொருள் அதைப் பற்றிக் கவலைப்படாமல் உங்களை உண்பித்து, வளர்த்துக கொண்டிருக்கும்.

ஆனால், நீங்கள் விலகியிருப்பதாய் கருதிக் கொண்டது அதன் விழிப்பு நிலையில் பல கவலைகளைத் தோற்றுவிக்கும். முழுமையில் இருந்து வேறாய் நீங்கள் எண்ணத் தலைப்பட்டதுமே உள்ளுக்குள் ஒரு பிரித்தலை நீங்கள் உண்டு பண்ணுவிடுகிறீர்கள். உங்களுக்குள் இயல்பாய் அமைந்தவை எல்லாம் முக்கியத்துவத்தை இழந்துவிடும். காரணம், அது முழுமைக்கு உரியதாய்த் தெரிவது. பாலுறவு தகுதியில் குறைந்ததாகிவிடக் காரணம், அது முழுமையின் உறுப்பு - கரிமப்பகுதி (organic unit) க்குரியது என்பதுதான்.

அதனால்தானோ என்னவோ எல்லா மதங்களும் பாலுறவை நிந்திக்கின்றன. அதே சமயம் நான் உங்களுக்குச் சொல்வது பாலுறவை முழுமையாய் ஏற்காவிடில் யாரும் உண்மையிலேயே சமயப் பற்றுடையவராய் இருக்க முடியாது என்பதைத்தான். காரணம் சமயம் என்பது அந்தச் சக்தியின் இன்னொரு நிலை மாற்றமே. அது மறுத்தலாகாது. அது ஓர் ஆழ்ந்த ஏற்பு (acceptance) ஆகும். ஆம் அது ஒரு நிலைமாற்றந்தான். ஆனால், அது ஆழ்ந்த ஏற்பின் வாயிலாகவே அடையப்படுவது. ஏற்கப்பட்ட இயற்கை முற்றிலும் மாறுபட்டதாகிறது. இயற்கை மறுக்கப்பட்ட நிலையில் உங்களுக்குள் புளிப்பாய் கசப்பாய் மாறிவிடும். அந்நிலையில் ஒரு நரகத்தை நீங்கள் ஏற்படுத்திக் கொண்டு விடுகிறீர்கள்.

அகந்தைக்கு எதையாவது கண்டனம் செய்து கொண்டே யிருப்பதில் மகிழ்ச்சி, காரணம், கண்டனம் செய்வதன் மூலமே தன்னை அது உயர்வாய் எண்ணிக் கொள்ள முடிகிறது.

நான் படித்த ஒரு விசயம், அது நடந்ததுதான்.

ஒரு சமயம் தேவாலய உரை மேடையில் ஏறி நின்ற வட்டார மதகுரு சொன்னார், 'கடந்த வாரத்தில் பாவம் செய்தவர்களெல்லாம் எழுந்து நில்லுங்கள்' என்று. கூட்டத்தில் பாதிபேர் எழுந்து நின்றனர். பிறகு அவர் சொன்னார், 'வாய்ப்பு கிடைத்திருந்தால் பாவம் செய்திருக்கக் கூடியவர்கள் எழுந்து நில்லுங்கள்' என்று. மீதிபேர் எழுந்து நின்றனர்.

ஒரு பெண்மணி தன் கணவனிடம் முணுமுணுத்தார், 'இங்கே மதகுரு ஒருவர் மட்டுந்தான் நல்லவராய் இருப்பார் போலத் தெரிகிறது?'

'சொன்னா நம்ப மாட்டே. அவர் நம் எல்லோருக்கும் முன்னாடியே எழுந்து நிற்கிறார்' என்றான் அந்த மனிதன்.

அதீத அகந்தை ஓரளவு உணர்வு நிலையும், ஓரளவு உணர்வு கடந்த நிலையும் கொண்டுள்ள மனநிலை. இது நிந்தித்தபடி இருககும். இது பாவம், இது தீமை, இது குற்றம், இது மோசம் என்று அது உங்களிடம் சொல்லிக் கொண்டே இருக்கும். (இதனை 'superego' என்பார்கள். இது 'நான்' என்னும் முனைப்பின் செயலூக்கத்திற்கும் சமுதாயக் குறிக்கோளிற்கும் இடையே தொடர்பு உண்டாக்கும்) ஆனால், இதுவே உலகத்தின் ஒரே தீமையாய், ஒரே பாவமாய் இருக்கும். ஆக, என்ன செய்ய வேண்டும்? இந்த அகந்தையை நீங்கள் கண்டனத்துக் குள்ளாக்க வேண்டும. அந்நிலையில் ஒரு அதீத அகந்தை (superego) உங்களால் உருவாக்கப்பட்டுவிடும். எதிரான தீர்ப்பு வழங்குவதை விடுங்கள் -அத்தனை எதிரான தீர்ப்புகளையும் - அப்போது அகந்தை மறைகிறது. விழிப்பு நிலையில் எந்தவொரு அதீத அகந்தையையும் உருவாக்காமல். அத்தனை எதிரிடையான தீர்ப்புகளையும் விட்டுவிடுங்கள்.

தீர்ப்பு செய்வதற்கு நீங்கள் யார்? எது சரி, எது தவறு என்று சொல்ல நீங்கள் யார்? பிரபஞ்ச இருப்பை இரண்டாகப் பிளக்க நீங்கள் யார்? பிரபஞ்சம் ஒன்றாயிருக்கிறது - வேதிப் பொருளின் ஒற்றைச் சேர்க்கையாய். அது எல்லாமும் ஒன்றாகவே இருக்கிறது. இரவும் பகலும் சேர்ந்து ஒன்று - நல்லதும் கெட்டதும் சேர்ந்து ஒன்று. இதில் பிரிப்பு வேலையைச் செய்வது மனிதனின் அகந்தை. அவை மனிதனால் செய்யப்பட்டவை. கண்டனம் செய்யாதீர்கள்.

நீங்கள் கண்டனம் செய்வீர்களாயின் அது ஏதாவதொன்றைத் தோற்றுவித்துக் கொண்டேயிருக்கும். கண்டனம் செய்வதை நிறுத்திவிட்டுக் கண்டறிய முயலுங்கள். அதில் அகந்தை விடப்படவில்லை என்பதைக் கண்டு கொள்வீர்கள். ஆக, அகந்தை உண்மையான பிரச்சினையல்ல. கண்டனம் செய்வதும், தீர்ப்பு செய்தலும், பிரிப்பு வேலையும்தான் உண்மையில் பிரச்சினையாகிறது. அகந்தையைப் பற்றி அறவே மறந்துவிடுங்கள், நீங்கள் அகந்தையுடன் செய்கிற எதுவும் இன்னோர் அகந்தையைத் தோற்றுவித்துவிடும்.

மனிதர்களைப் போலவே அகந்தைகளும் மிகப்பலவாகும். சிலருடைய அகந்தை லோகாயதமாகவும் (worldly) சிலருடைய அகந்தை சமயம் சார்ந்ததாகவும் உள்ளது. சிலர் தம்மிடம்

இருப்பவற்றைப் பற்றிப் பேசுகிறார்கள். சிலரோ, தாம் உதறி எறிந்தவற்றைப் பற்றிப் பேசுகிறார்கள்.

மகான் என்று அழைக்கப்பட்ட ஒருவர் மரணப்படுக்கையில் இருந்தார், சீடர்கள் அவரைச் சுற்றிக் குழுமியிருந்தனர். அந்தக் கடைசிக் கணப்பொழுதுகளில் அவர்கள் படுக்கையருகே இருந்தபடி தங்கள் குருவைப் பற்றி பேசிக் கொண்டிருந்தனர். ஒருவர் சொன்னார், 'இவரைப் போல் ஒழுங்குணர்வு (moral) மிக்க இன்னொருவர் இனி இருக்கப் போவதில்லை' என்று. அப்போது மற்றொருவர் சொன்னார், 'நான் நிறையவே கற்றிருக்கிறேன், ஆனால் இவரைப்போல் அதிக விசயம் தெரிந்த ஒருவரை நான் சந்தித்ததில்லை' என்று. 'நாம் அவரை இழந்துவிட்டோம் எப்போதைக்குமாய்' என்று அவர் குறிப்பிட்டார். பிறகு வேறொருவர் வேறொன்றைச் சொன்னார். அவர் இந்த உலகத்தில் உள்ள சகலத்தையும் துறந்துவிட்டவர் என்று ஒருவர் சொல்ல, பேச்சு இவ்விதமாய் போய்க் கொண்டிருந்தது. அவருடைய அறிவு, துறவு பற்றி அவர்கள் பேசினார்கள். அவர் இச்சையகற்றி உடல் வருத்தி மெய்ஞ்ஞான வழி நடந்தது பற்றிப் பேசினார்கள். அச்சமயத்தில் செத்துக் கொண்டிருந்த குரு தம்முடைய வாயைத் திறந்து, 'என்னுடைய தன்னடக்கம் பற்றி யாரும் சொல்லவே யில்லையே' என்றார்.

அடக்கம் அப்போது அகந்தையாகிவிடுகிறது. பணிவு அகந்தையின் போர்வையாகி விடுகிறது. அந்நிலையில் அகந்தை பக்தி பாவத்தைக் கொண்டு விடுகிறது. பக்தியாக மாறுகிற எந்தவொரு நஞ்சும் மேலும் நஞ்சாகிவிடுகிறது.

எனவே, நீங்கள் என்னைச் சரியாகப் புரிந்து கொண்டிருந்தால் அகந்தையைக் கண்டனம் செய்யாதீர்கள்.

நீங்கள் இன்னொரு வழியில் ஓர் அதீத அகந்தையை உருவாக்கிக் கொள்வதுடன், மனக்கலக்கம் அடைந்ததாய் உணர் வீர்கள். காரணம் உச்ச அளவிலான பிடிவாதமும், பிரித்தல் வேலை யும். கண்டனம் செய்வதை விடுங்கள். விடாப்பிடியாயிருப்பதை விடுங்கள். இயல்பாயிருங்கள். இருக்கிறபடிக்கு உங்களை ஏற்றுக் கொள்ளுங்கள். ஏற்றுக் கொள்வதோடு வரவேற்கவும் செய்யுங்கள். வரவேற்பதோடு அதில் மகிழ்ச்சி கொள்ளவும் வேண்டும். அப்போது சற்றும் எதிர்பாரதவிதமாய் அங்கே அகந்தையோ அதீத அகந்தையோ இருக்கவில்லை என்பதைப் புரிந்து கொள்வீர்கள்.

அவை ஒருபோதும் அங்கே இருப்பதில்லை. நீங்கள் தாம் அவற்றை உண்டு பண்ணியது. நீங்களே அவற்றைப் படைத்தவர்கள்.

மனிதன் படைத்தது ஒன்றே ஒன்றுதான். அது அகந்தை. மற்றவையாவும் கடவுளால் படைக்கப்பட்டவை.



**'நான் தியானத்தில் நுழைகிறேன், செயல்படுகிறேன், மேலும் அதை விரும்புகிறேன். ஆனால், அது போதாது என்ற எண்ணமும் இருக்கிறது. பகவானே, தாங்கள் என்னை அழித்துப் போட்டு விடுங்கள் எப்போதைக்கு மாய்!'**

இது ஆனந்த போதிசத்வர் சொன்னது. எந்தவோர் அனுபவமும், அது எத்தகைய அனுபவமாயினும் போதுமானதாய் இருக்கப் போவதில்லை. வேலை அனுபவம், காதல் அனுபவம், தியான அனுபவம் அல்லது இறையனுபவம் என்று வைத்துக் கொள்ளுங்களேன். எந்த அனுபவமும் போதுமானதாயிருக்காது. காரணம், எல்லா அனுபவங்களும் உங்களுக்கு வெளியேயிருப்பவை. நீங்கள் அனுபவத்துக்குப் பின்னால் ஒளிந்திருக்கிறீர்கள். நீங்கள் சாட்சிபாவம் கொண்டிருக்கிறீர்கள், உங்களுக்கு அனுபவம் நேரிடுகிறது. ஆனால் நீங்கள் அதுவாகிவிடுவதில்லை. ஆக அனுபவம் எதுவாயினும், எந்தவோர் அனுபவமும் முழுமையாய் இருக்காது. காரணம், அனுபவிக்கிறவர். அனுபவிக்கிற ஒருவர் எப்போதுமே அனுபவத்தைவிட உயர்ந்தவர் தாம். அனுபவத்துக்கும் அனுபவிக்கிறவருக்கும் இடையில் ஒரு வேறுபாடு எப்போதுமே இருக்கிறது. இடைவெளியுந்தான். 'ஆம், ஏதோ நடக்கிறது. நடந்தாலும் அது போதுமானதாய் இல்லை. மேலும் வேண்டும் என்று அந்த இடைவெளி சொல்லிக் கொண்டேயிருக்கும்.' அதுவே மனித மனத்தின் துயரம். அதனால்தான் மனம் இன்னும் அதிகமாய் வேண்டும், வேண்டும் என்கிறது. நீங்கள் பணத்தைச் சம்பாதிக்கிறீர்கள். அச்சமயத்தில் மனம் சொல்கிறது. அதிகமாய் வேண்டும் என்று. நீங்கள் வீடு கட்டுகிறீர்கள், அப்போது மனம் சொல்கிறது, 'இன்னும் பெரியதாய் கட்ட வேண்டும்' என்று. ஒரு ராஜ்யத்தை நீங்கள் உருவாக்குகிறீர்கள், அப்போது மனம் சொல்லும், 'ஒரு பெரிய சாம்ராஜ்யத்தை உருவாக்கப்பார்' என்று. பிறகு நீங்கள் தியானிக்கத் தொடங்குகிறீர்கள்,

அவ்வேளையில் மனம் சொல்கிறது, 'இது போதாது, இன்னும் பல உச்சங்களை நீ அடைந்தாக வேண்டும்' என்று. இப்படியாவதற்குக் காரணம், அனுபவத்தின் தன்மை ஒரு போதும் முழுமையடையாமல் இருப்பதுதான்.

அவ்வாறாயின் எது முழுமையானது? அவ்வாறாயின் எது நிறைவளிப்பது? சாட்சி பாவத்தில் இருங்கள். அனுபவத்தில் தொலைந்து போய்விடாதீர்கள். அப்படியே விழிப்புடன் இருங்கள். இது கடந்து செல்கிற மனநிலை என்பதை அறிந்து கொள்ளுங்கள். ஆம், இது கடந்து சென்றுவிடும். நல்லதோ கெட்டதோ, அழகானதோ அருவருப்பானதோ, மகிழ்ச்சியளிப்பதோ, மகிழ்ச்சியற்றதோ எதுவாயினும் கடந்து செல்லக் கூடியதுதான். நீங்கள் அதனுடன் உங்களை அடையாளப்படுத்திக் கொள்ளாதீர்கள். இல்லையேல் காதல் நிறைவாயிருக்காது, தியானமுந்தான். உண்மையில் தியானம் என்பது என்ன? தியானம் ஒரு அனுபவமல்ல. அது சாட்சிபாவத்தை உணர்ந்திருப்பது. ஆழ்ந்து சிந்தியுங்கள், கவனமாயிருங்கள். விழிப் புணர்வில் மையம் கொண்டிருங்கள். அப்போது முழுமையுற்ற தாயிருக்கும்: இல்லையேல் எதுவும் முழுமையற்றதுதான். அந் நிலையில் ஒவ்வொன்றும் எல்லாமும் நிறைவாயிருக்கும், இல்லையேல் எதுவும் நிறைவளிக்காது.

நீங்கள் சாட்சி பாவத்தில் இருந்தால் ஒரு குளியல் ஷவருக்கடியில் (shower) போடுகிற ஒரு குளியல் போதும். உங்களை நிறைவாய் உணரச் செய்வதற்கு காலைச் சிற்றுண்டியிலும் இருக்கிறது உணர்வு. நீங்கள் மிகுதியாய் எதிர்பார்க்க மாட்டீர்கள். ஒருவாய் தேநீரை உறிஞ்சுவதுகூட மிகப்பெரிய மகிழ்ச்சியை அளிக்கும். அதைவிடக் கூடுதலாய் எதையும் நீங்கள் எண்ணவோ, கற்பனை செய்யவோ முடியாது. அவ்வேளையில் ஒவ்வொரு கணமும் ஒரு வைரமாகிவிடும், ஒவ்வோர் அனுபவமும் மலர்ச்சி காணும் - ஆனால் நீங்கள் விழிப்புடன் இருக்க வேண்டும். அந்த அனுபவத்தில் நீங்கள் தொலைந்து விடக்கூடாது, அதனுடன் உங்களை அடையாளப்படுத்திக் கொள்ளவும் கூடாது.

போதிசத்வரை நான் புரிந்து கொள்கிறேன். நீங்கள் கடுமையாய் முயல்கிறீர்கள். நீங்கள் வேலை செய்கிறீர்கள், தியானம் பண்ணுகிறீர்கள். ஒரு மனிதனால் செய்யக் கூடியதையெல்லாம் நீங்கள் செய்கிறீர்கள். அதற்குமேல் உங்களால் செய்ய முடிவதில்லை.

அப்படியே முடிந்தாலும் அது உதவப் போவதில்லை. தற்போது முக்கியக் கருத்து புரிந்து கொள்ளும்படி யிருக்கிறது. சாட்சியாய் இருங்கள். அனுபவம் உங்களைக் கடந்து செல்ல விடுங்கள். அவை வந்து போகட்டும். அவற்றால் அமைதி குலைந்து விடாதீர்கள். அவற்றால் இழுபட்டு விடாதீர்கள். விழிப்புடன் இருங்கள். கவலையற்றவராய் இருங்கள் - போக்குவரத்தைக் கவனியுங்கள். வானத்து மேகங்களைக் கவனியுங்கள். சாட்சி பாவத்தில் இருங்கள். அப்போது சற்றும் எதிர்பாராத வகையில் மிகச்சிறியவைகளும் நிறைவளிப்பதாகிவிடுவதை நீங்கள் புரிந்து கொள்வீர்கள் - ஒரு பறவையின் கீதமும், ஒரு சின்னப் பூவின் மலர்ச்சியும்.

பாஸோவின் ஹைக்கூ* ஒன்று. நஸுனா என்ற பூ, ஜப்பானில் எங்கும் சர்வசாதாரணமாய் காணப்படுகிற ஒரு சிறிய எளிமையான பூவாகும். மக்கள் அதைச் சிலாகித்துப் பேசுகிறதில்லை. கவிஞர்கள் ரோஜாக்களைப் பற்றிப் பேசுகிறார்கள். நஸுனா பூவைப்பற்றிப் பேசுகிறவர் யார்? அது பெருமளவில் காணப்படுவது. பலமொழிகளில் அதற்கென்று ஒரு பெயர்கூட இருப்பதில்லை. அதற்குப் பெயரிட வேண்டும் என்று யாருக்கு அக்கறை? அதைக்கடந்து செல்கிற மக்கள் ஏறெடுத்தும் பார்ப்பதில்லை. தம்முடைய முதல் சடோரி (Satori) - ஞான உதயத்தை அடைந்த நாளில் பாஸோ தமது குடிலை விட்டு வெளியே வந்தார். அந்த சமயத்தில் நஸுனா இதழ் விரிப்பதைக் கண்டார்.

தம்முடைய ஹைக்கூவில் அவர் இப்படிச் சொல்கிறார்: 'நஸுனாவின் அழகை நான் முதல் முதலாய்க் கண்டேன். அது பேரழகுடையது. அத்தனை சொர்க்கங்களை ஒரு சேர வைத்தாலும் அதற்கு இணையாகாது.'

ஒரு நஸுனாவிற்கு அத்தகைய அழகு எப்படி வந்தது? பாஸோ கூறுகிறார்: 'அது எப்போதுமே இருந்ததுதான். நான் அதை இலட்சக்கணக்கான முறை கடந்து சென்றிருக்கிறேன். ஆனால் அப்போதெல்லாம் நான் அதைக் காணவில்லை' - காரணம் பாஸோ அங்கே இருந்திருக்கவில்லை. தன்னுடைய அகந்தையை நிரப்பக் கூடியவற்றை மட்டுமே மனம் பார்க்கிறது. ஒரு நஸுனாவைப் பற்றிக் கவலைப்படுகிறவர் யார்? அது எந்த வகையிலும் ஒன்றை நிரப்புவதில்லை. ஒரு தாமரை, ஒரு ரோஜா என்றால் சரி. அவற்றால்

---

* ஹைக்கூ (Haiku) ஒப்புமைகளும், மறை குறிப்புகளும் கொண்ட பதினேழு அசைகளுடன் கூடிய ஜப்பானியக் கவிதை.

நிறைவு செய்ய முடியும். ஆனால், நஸுனா ஒரு சாதாரண, பெருமளவில் காணப்படுகிற அற்பமான பூ. அது யாருடைய கவனத்தையும் ஈர்ப்பதில்லை, அது யாருக்கும் அழைப்பு விடுவதில்லை.. ஆனால், அன்று அந்தக் காலைப் பொழுதில் பாஸோ ஒரு நஸுனாவைப் பார்க்கிறார். நான் முதல்முதலாக ஒரு நஸுனாவின் மெய்ம்மை (reality) யைக் கண்டேன்' என்கிறார் அவர் - ஆனால் அது நிகழ்வதற்குக் காரணம், தன்னுடைய மெய்ம்மையை அவர் எதிர்கொண்டதுதான்.

நீங்கள் சாட்சி பாவத்தை அடைகிற அந்தக் கணத்தில் - நிகழ்கிறது ஞானஉதயம். அதுவே சமாதி என்பதும். நீங்கள் ஒரு சாட்சியாகிற கணத்தில் எல்லாமே ஒரு மாறுபட்ட வண்ணத்தை - அணியழகைப் பெற்றுவிடும். அந்நிலையில் சாதாரணப் பச்சை நிறம் அதற்குமேலும் சாதாரணப் பச்சையாயிருக்காது. அது அசாதாரணப் பச்சை நிறமாகி விடும். அப்போது எதுவுமே சாதாரணமாய் இருப்பதில்லை. நீங்கள் சாட்சி பாவத்தைக் கொண்டுவிடுகிறபோது எல்லாமும் உயர் மதிப்புடையதாகிவிடும்.

இயேசு தம்முடைய சீடர்களிடம் கூறுகிறார், 'அந்த வெண்ணிறப் பூக்களை (லிலி)ப் பாருங்கள்' என்று. சாதாரண அல்லிப்பூதான் - ஆனால் இயேசுவைப் பொறுத்தவரை அது சாதாரணமல்ல. காரணம் இயேசு முற்றிலும் மாறுபட்ட ஓர் இடத்தில் இருப்பவர். அவர் அல்லிப் பூவைப்பற்றிப் பேசுவது ஏன் என்று அவருடைய சீடர்கள் வியப்படைந்திருக்க வேண்டும். அதைப் பற்றிப் பேச என்ன இருக்கிறது? ஆனால், இயேசு கூறுவார், 'இந்த அல்லிப் பூவுக்கு முன்னால் சாலமனின் அத்தனை பெருமைகளும், உயர்வுகளும் தூசி' என்று. சாலமன் சகல ஐஸ்வர்யங்களும், பெயரும் புகழும் உடைய ஒரு பேரரசன். யூத புராணத்தில் பேசப்படுகிற அவனும் அந்தப் பூவுக்கு முன்னால் ஒன்றுமேயில்லை. அந்தச் சாதாரண அல்லிப்பூவுக்கு முன்னால்? நாம் காணத் தவறுகிற ஒன்றைக் கண்டு கொள்பவர் இயேசு.

அவர் எதைக் கண்டார்? நீங்கள் ஒரு சாட்சியாகிவிடுகிற போது உலகம் தன்னுடை அத்தனை புதிர்களையும் உங்களுக்கு வெளிப்படுத்திக் காட்டிவிடும். நான் சொல்கிறேன் எல்லாமும் நிறைவளிக்கக் கூடியவைதாம்.

பெரிய ஜென் துறவியொருவரிடம் யாரோ கேட்டார்கள், 'நீங்கள் ஞானம் பெற்றபின் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?' என்று.

அவர் சொன்னார், 'விறகு பிளக்கிறேன், தண்ணீர் எடுத்து வருகிறேன், பசித்தபோது உண்கிறேன், களைத்தபோது உறங்குகிறேன். எல்லாம் அருமையாயிருந்தது, விறகு உடைப்பதும் கிணற்றில் இருந்து தண்ணீர் இறைப்பதும்..'

கொஞ்சம் சிந்தியுங்கள், கொஞ்சம் ஆழ்ந்து சிந்தியுங்கள்.

புனிதர் ஃப்ரான்சிஸ் பற்றி நிகோஸ் கஸன்ட்ஸாகிஸ் எழுதிய நாவலில் இப்படி வருகிறது. தவத்திரு ஃப்ரான்சிஸ் ஒரு வாதுமை மரத்துடன் உரையாடுகிறார்: 'சகோதரி, இறைவனைப் பற்றி எனக்காகப் பாடு' என்று கூறுகிறார். அது வாதுமை மரம் உடனே புஷ்பிக்கிறது. இறைவனைப் பற்றிய பாடலை அது அவ்விதமாய் பாடுகிறது. அது உங்களுடைய தோட்டத்திலும் பூக்கவே செய்கிறது. ஆனால், 'சகோதரி கடவுளைப் பற்றிப் பாடு' என்று சொல்வதற்கு நீங்கள் அங்கே இருப்பதில்லை. புனிதர் ஃப்ரான்சிஸ் மாதிரி ஒருவர் தேவைப்படும் நம்முடைய தோட்டத்திலும் வாதுமை மரம் பூக்கத்தான் செய்கிறது. உங்களுடைய வாழ்வில் ஆயிரத்தியொரு மலர்கள் மலரும். ஆனால், அந்தச் சமயத்தில் நீங்கள் அங்கே இருப்பதில்லை.

இயற்கையில் உங்களுடைய இடம் எதுவோ, அங்கே திரும்பி வாருங்கள். சாட்சி பாவத்தில் இருங்கள். அப்போது வேலை, காதனம், தியானம் இப்படி எல்லாமும் நிறைவளிப்பதாகி விடும். எல்லாமும் முழுமையுடன் இருக்கும், எல்லையற்ற முழுமையுடையதாய் இருக்கும். இன்னும் வேண்டும் எண்ணம் மறைந்தேவிடும். உங்களுடைய மனம் கூடுதலான ஒன்றுபற்றிக் கவலைப்படாத போது மட்டுமே நீங்கள் வாழத் தொடங்குகிறீர்கள்.

'பகவானே, தாங்கள் எப்போதைக்குமாய் என்னை அழித்துப் போட வேண்டும் என்று விரும்புகிறேன்' - என்பதில் உங்களுடைய கவலை எனக்குப் புரிகிறது. நான் அதைச் செய்யக் கூடுமெனில் முன்பே செய்திருக்க வேண்டும். அது என்னளவில் ஆகக் கூடியதென்றால் நான் உங்களுக்காகக் காத்திருக்க மாட்டேன். உங்களுடைய அனுமதியையும் அதற்காகக் கேட்டுக் கொண்டிருக்க மாட்டேன். ஆனால், அது என்னளவில் ஆகிறதில்லை. நீங்களும் அதற்கு ஒத்துழைக்க வேண்டியிருக்கும். உண்மையில் நான் சொல்வது சாக்குப்போக்கு. நீங்கள்தாம் அதைச் செய்ய வேண்டும்.

அவசரப்படாதீர்கள், பொறுமையற்றவராகி விடாதீர்கள். பெரிய அளவில் பொறுமை தேவைப்படும். ஆனால் மேற்கில்

பொறுமையின்மையும் மனதின் ஒரு பகுதியாகிவிடுகிறது. மக்கள் பொறுமையின் நேர்த்தியை மறந்துவிட்டனர்.

நான் படித்த ஒரு குட்டிக்கதை:

'மீண்டும் நலம் பெறுவதற்கான உத்தியைத் தமது நோயாளியிடம் விவரித்துக் கொண்டிருந்தார் மருத்துவர். 'அறுவைக்குப் பிறகு உம்மால் முடிந்த அளவு சீக்கிரமே நீர் நடக்க ஆரம்பித்துவிட வேண்டும். முதல்நாளில் ஒரு ஐந்துநிமிடம் நடக்க வேண்டும். இரண்டாம் நாளில் பத்து நிமிடம், மூன்றாம் நாள் முழுசாய் ஒரு மணி நேரம் நீர் நடந்தாக வேண்டும். என்ன உமக்குப் புரிகிறதா?''

'சரி டாக்டர்...' பயத்துடன் இருந்த நோயாளி கேட்டான், 'ஆனால், அறுவை சிகிச்சையின்போது நான் கீழே படுத்துக் கொண்டால் தவறில்லையே' என்று.

கொஞ்சம் கூடுதலான பொறுமையோடு இருங்கள். நீங்கள் அறுவைக்கான மேசை மீது இருக்கிறீர்கள். தயவுசெய்து ஒய்வு நிலையில இருந்து கொண்டு எனக்கு ஒத்துழையுங்கள், காரணம், இது நீங்கள் உணர்வற்றிருக்கும் நிலையில் செய்யப்படுகிற அறுவையல்ல, 'உணர்வகற்றி'யைக் (anaestheisa) கொடுத்து செய்யப்படுகிற அறுவையல்ல. நீங்கள் தன்னுணர்வு நிலையில் இருக்கும்போதே செய்யப்படுவது அது. உண்மையில் நீங்கள் எந்த அளவு உணர்வுடன் இருக்கிறீர்களோ, அந்த அளவு எளிதாய் அதைச் செய்ய முடியும். காரணம், ஒட்டுமொத்த அறுவையும் உணர்வுநிலையில் வைத்துச் செய்யப்படுவது. உங்களுக்கு மாறாக நான் அதைச் செய்ய முடியாது. உங்களுடைய ஒத்துழைப்பு இல்லாமலும் நான் அதைச் செய்ய முடியாது. நீங்கள் என்னுடன் முழுமையாய் இருந்தாலன்றி நான் அதைச் செய்வதற்கில்லை.

உண்மையில் நீங்கள் முழுமையாய் என்னுடன் இருந்து கொண்டு, நீங்களாகவேதான் அதைச் செய்து கொள்ள வேண்டும். அது நடந்தேறும் நாளில் நீங்கள் புரிந்து கொள்வீர்கள், அதைச் செய்தது நானல்லவென்பதையும். நீங்களாகவேதான் அதைச் செய்து கொண்டீர்கள் என்பதையும். சாத்தியமுடைய வாக்குறுதியை நான் உங்களுக்கு வழங்கினேன், அவ்வளவுதான். 'நீங்கள் வழி தவறிப் போவதில்லை என்கிற உறுதியை, சரியான பாதையில்தான் இருக்கிறீர் கள் என்கிற நம்பிக்கையை' நான் உங்களுக்கு வழங்கியிருக்கிறேன்.

இந்த அறுவைச் சிகிச்சையில் நோயாளியே அறுவை நடத்துபவராயும் இருக்கிறார். அறுவை சிகிச்சை நிபுணர் பக்கமாய் நின்று கொண்டிருக்கிறார். அவருடைய இருப்பே துணை செய்வதாய் இருக்கும். நீங்கள் அஞ்ச வேண்டியதில்லை, தனித்துவிடப்பட்டதாய் எண்ண வேண்டியதில்லை.

உங்களுக்கு வேறுயாரும் அதைச் செய்ய முடியாதிருப்பதும் நல்லதுதான். காரணம் வேறுயாரும் உங்களை விடுவிக்க முடியுமெனில் உங்களுடைய அந்தச் சுதந்திரம் உண்மையான சுதந்திரமாய் இருக்க முடியாது. இன்னொருவரால் உங்களை விடுவிக்க முடியும் என்றால் உங்களை அடிமைப்படுத்தவும் அவரால் முடியுந்தானே. உங்களை யாரும் விடுவிக்க முடியாது. சுதந்திரம் உங்கள் தேர்வுக்குட்பட்டது. அதனால்தான் அது இறுதி செய்யப்பட்டதாயிருக்கிறது. அதை யாரும் உங்களிடம் இருந்து எடுத்துச் செல்வதற்கில்லை. கொடுக்க முடிகிற ஒன்றை, உங்களிடம் இருந்து எடுக்கவும் முடியுந்தானே. ஆனால் வழங்கப்படாத ஒன்றை எவ்விதத்திலும் மீட்டெடுப்பதற்கில்லை.

உண்மையில் நான் உங்களுக்கு உதவ முடியாது. நீங்கள் விரும்பினால் சாத்தியப்படுகிற அத்தனை உதவிகளையும் என் வழியே பெற்றுக் கொள்ள முடியும். நான் அதனை உங்களுக்கு விளக்குகிறேன்.

நான் உதவ முடியாதற்குக் காரணம், நான் நேரிடையாகத் தலையிட முடியாது என்பதுதான். நான் உங்களைக் கொன்றுவிட மாட்டேன், ஆனால் என் மூலமாக நீங்கள் தற்கொலை செய்து கொள்ள முடியும். உங்களுக்கு அது புரிகிறதா? என் வழியே நீங்கள் தற்கொலை செய்து கொள்ள முடியும். நான் உங்களைக் கொல்ல மாட்டேன். நான் உங்களுக்கு அநுகூலமாயிருப்பேன். என் மூலமாய் உங்களுக்குத் தேவையானதை நீங்கள் செய்து கொள்ள முடியும். அந்த நாள்வரும்போது நீங்கள் அதைப் புரிந்து கொள்வீர்கள். அப்போது நீங்கள் தனியாகவே எதையும் செய்யக் கூடியவராயிருப்பீர்கள். ஆனால், தற்போது தனியே செய்வது பெரும்பாலும் முடியாத காரியம். என்னுடன்கூட என்றாலும் அதைச் செய்வது கடினமாகவே இருக்கும்.

பொறுமையை இழக்காதீர்கள், காத்திருங்கள். சாட்சி பாவத்தில் இருக்கும் உங்கள் சுயத்துடன் பொருந்துவதால் மேலும் மேலும் நீங்கள் பெற முடியும்.

வேதனையிலும், துன்புறும் நிலையிலும், அடையாளப் படுத்திக் கொள்ளாத நிலையிலும் அது மிகவும் எளிதாயிருக்கும். ஆனால், நீங்கள் ஆழ்ந்த காதலில், மகிழ்ச்சியில், பேரின்ப நிலையில், தியானத்தில், பரவசத்தில் இருக்கும்போதுதான் உண்மையிலேயே பிரச்னைகள் எழுகின்றன. அப்போது அடையாளப்படுத்திக் கொள்ளாமல் இருப்பது கடினம், ஆனால், அங்கேதான் ஊசலாடிக் கொண்டிருக்கிறது மொத்த விசயமும். அதுதான் மையப்பகுதி யாயிருக்கும். இதனை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் பேரின்ப நிலையில் இருக்கும்போதும் அது ஒரு மனநிலை என்கிற எண்ணத்தோடு இருங்கள். மேகம் வருகிறது, வந்து செல்கிறது. அது ஓர் அழகான மேகம். அதற்கு நன்றி சொல்லுங்கள், கடவுளுக்கு நன்றி சொல்லுங்கள். ஆனால், அதில் இருந்து விலகியே இருங்கள். முண்டியடித்துக் கொண்டு அதனுடன் ஒன்றாகிவிட வேண்டாம். அந்த அடையாளப்படுத்திக் கொள்ளும் முயற்சியில் தோன்றுகிறது இன்னும் அதிகமாய் வேண்டும் என்கிற எண்ணம்.

நீங்கள் தன்னந்தனியராய், ஒரு குன்றின் மீது நின்று கவனிப் பவராய் கவலையற்று இருக்க முடிந்தால் அதிகம் வேண்டும் என்ற எண்ணம் எழாது. ஏன்? காரணம் கவனிப்பவர் (watcher) அனுபவத்துடன் தன்னைத் தொடர்புப்படுத்திக் கொள்கிறபோது அது மனமாகி விடுகிறது. மனம் கூடுதலுக்கு ஆசை கொண்டது.

கவனிப்பவர் கவனிப்பவராகவே நின்றுவிடும்போது, வெளியில் கடந்து செல்கிற மேகத்தைப்போல் அங்கே அனுபவம் இருக்கும், மனம் இருக்காது. இரண்டுக்கும் இடையில் வெற்றிடம் இருக்கும், பாலம் இருப்பதில்லை. அந்த இணைப்பற்ற நிலையில் மேலும் வேண்டும் என்கிற ஆசை இருக்காது - ஆசை அங்கே எவ்வகையிலும் இருப்பதில்லை. ஒருவர் நிறைவுற்றவராகிவிடுவார். அவருடைய மனநிறைவு முழுமையானது.

அவசரப்படாதீர்கள், பொறுமையை இழந்து விடாதீர்கள்.



**'வளர்ச்சியடைவதன் பொருட்டு நான் அபாய நிலைகளைத் துணிந்து ஏற்க வேண்டியிருக்கும் என்றும், ஆபத்துக்களைத் துணிந்து ஏற்கும் பொருட்டு நான் முடிவெடுக்க வேண்டியிருக்கும் என்றும் நம்புகிறேன்.**

*முடிவெடுக்க முயல்கிறபோது தவறானதைத் தேர்வு செய்து விடுவோமே என்ற கவலை. வாழ்க்கையே அதைச் சார்ந்திருப்பதுபோல் ஒரு நம்பிக்கை. என்னவொரு பைத்தியக்காரத்தனம் இது?'*

இன்னமும் இது ஓர் உடன்பாடாக இல்லாமல் நம்புதலாகவே இருக்கிறது. நம்புதல் உதவாது. நம்பிக்கை இரவலாய்ப் பெறப்படுகிறது. நம்பிக்கை என்றால் நீங்கள்இன்னும் அதைப் புரிந்து கொண்டிருக்க வில்லை என்றுதான் பொருள். நீங்கள் அதனால் கவரப்பட்டிருக்கலாம். ஆபத்தான முயற்சிகளில் ஈடுபட்டு, அதன்மூலம் வளர்ச்சியடைந்த வர்களை நீங்கள் கண்டிருக்கக்கூடும். ஆனால், ஆபத்திற்குட்படுத்திக் கொள்வது (rish) ஒன்றே வாழும் வழி என்பதை, வேறு வழியேதும் இல்லை என்பதை நீங்கள் இன்னும் தெளிவாய் புரிந்து கொள்ளவில்லை. ஆபத்துக்குட்படுத்திக் கொள்வது ஒருபோதும் தவறாகிவிடாது.

நீங்கள் துணிந்து செயல்படத் தயங்குகிறபோது, ஏதேனும் ஒன்று தவறாகி விடக்கூடும் என்கிற அச்சத்தில் இருக்கும்போது, அது அபாயநிலைகளை ஏற்பதாகிறது. எல்லாமே உத்தரவாதத்துடன் இருக்கும்பட்சத்தில் அதில் உங்களை ஆபத்துக்குட்படுத்திக் கொள்வதாய் (rish) எதுவும் இருக்காது. ஒன்று தவறாகிவிடக் கூடிய சாத்தியம் இருந்தும் அதில் துணிந்து ஈடுபடுவதுதான் 'ரிஸ்க்' என்பது.

எதுசரி, எது தவறு என்று வரையறுக்கப்படாத ஒன்றில் நுழைவது நேர்த்தியான விஷயம்.

ஒருவர் அதன்வழியே வளர்ச்சியடைகிறார் காரணம் ஒருவேளை நீங்கள் தவறு செய்திருந்தாலும் மறுபடியும் நீங்கள் முன்பு இருந்ததுபோல் இருக்கப் போவதில்லை. அதைச் செய்ததன் மூலம் நீங்கள் நிறையவே புரிந்து கொண்ட கணத்திலேயே திரும்பி வந்துவிடுவீர்கள். நீங்கள் திரும்பி வரும்போது ஒன்றைக் கற்று வருவீர்கள். கடுமையான செயல் முறையைக் கற்று வந்திருப்பீர்கள். நீங்கள் அதை மனப்பாடம் செய்து வருவதில்லை. அது உங்களுடைய இரத்தத்தில், எலும்புகளில், எலும்பு மஜ்ஜை (marrow) களில் ஒரு பகுதியாகவே ஆகிவிட்டிருக்கும். எனவே, வழிதவறிப் போனதற்காக ஒருபோதும் அச்சப்பட வேண்டாம். தடம்புரள நேர்ந்ததற்காய் அஞ்சி நடுங்குகிறவர்கள் சிறிதும் இயலாத நிலைக்குத் தள்ளப்படுவீர்கள். அவர்களால் அசையவும் முடிவதில்லை.

வாழ்க்கை உயிரோட்டமுடையது என்பதாலேயே வாழ்க்கை இடர்ப்பாடுகளை எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது. எவ்வித இடர்ப்பாடும் இல்லாத இடம் கல்லறைதான். நீங்கள் இறந்துபோனபின் அபாயத்துக்குள்ளாகும்படி இருக்காது.

லாவோட்சுவிடம் ஒரு சீடர் கேட்டார், 'வாழ்க்கையை சவுகரியமாய் எவ்வித இடர்ப்பாடும் இல்லாமல் வாழ்வது சாத்தியமில்லையா?' என்று.

லாவோட்சு சொன்னார், 'பொறு. சீக்கிரமே செத்துப்போவாய். கல்லறையில் சவுகரியமாய், எந்தத் தொல்லையும் இல்லாமல் இருந்து கொள்ள முடியும், எப்போதைக்குமாய்' என்று.

நீங்கள் அதற்காக வாழ்க்கையை வீணடிக்க வேண்டியதில்லை. காரணம் அது வந்து கொண்டிருக்கிறது. இந்தக் கணத்தில் வாழுங்கள், வாழ்வதற்கு வேறு எந்தச் செயல்முறையும் இல்லை. வாழ்வது என்றாலே ஆபத்துக்குட்படுத்திக் கொள்வது என்றுதான் பொருள். அபாயம் என்பது எப்போதும் இருக்கவே செய்கிறது. அது அப்படித்தான் இருக்கும் காரணம். நீங்கள் தடையின்றித் தொடர்ந்து செல்கிறவர். உங்களால் வழிதவறிச் செல்லமுடியும் - நேர்வழியில் இருந்து விலக முடியும்.

முடிவெடுப்பது என்றாலே அஞ்சி நடுங்கும் ஒருவரைப் பற்றி நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் ஒருவர் முடிவெடுத்துத் தானே ஆக வேண்டும். எனவே அவர் முடிவெடுக்க வேண்டியதாயிற்று. அவர் எடுக்கிற முடிவு எதுவாயினும் தொடர்ந்து தவறாகிக் கொண்டேயிருந்தது. அவருடைய வாழ்க்கையில் ஒரு பகுதியாகவே அது ஆகிவிட்டது. தாம் எடுக்கிற முடிவு தவறாகிப் போவது அவருக்கும் தெரிந்தேயிருந்தது. தொழிலில் ஆதாயம் வரவில்லை. தாம் போக வேண்டும் என்று தீர்மானித்திருந்த ரயிலை அவர் தவறவிட்டு விடுவார். அவர் மணந்து கொள்வதென்று தீர்மானித்த பெண் வேறொருவருடன் காதல் வசப்பட்டிருப்பாள். அவர் எப்போதுமே தவறவிட்டுக் கொண்டிருந்தார்.

ஒரு நாள் இப்படியாயிற்று. தொழில் தொடர்பான வேலையாய் அவர் வேறொரு ஊருக்குச் செல்ல வேண்டியிருந்தது. ஒரேயொரு விமான நிறுவனம், ஒரேயொரு விமானம் மட்டுமேயிருந்தது - தீர்மானிப்பது பற்றிய கேள்விக்கே இடமில்லை. ஆக, முடிவெடுக்கும் பிரச்னை இல்லையென்பதால் அவருக்க ஒரே சந்தோஷம். மாற்று

(alternative) க்கு வாய்ப்பே இல்லை. அவர் விமானத்தில் ஏறிக் கொண்டார். ஆனால் நடுவே எஞ்சினில் கோளாறு.

அவர் வெகுவாய் கவலைப்பட்டார். 'கடவுளே. இம்முறை நான் எந்த முடிவுக்கும் வரவில்லை. மாற்று வழியாய் எதுவும் இருந்திருக்கவில்லை. இது ரொம்ப அதிகம். என்னிடமோ எனது முடிவிலோ தவறேதும் இருந்திருந்தால் சரி. ஆனால் இந்தமுறை நான் எவ்வகையிலும் முடிவெடுக்கவில்லை. நீதான் தீர்மானித்தது' என்று கூறிக் கொண்டார். அவர் புனித ஃப்ரான்சிஸைப் பின்பற்றுபவர். எனவே 'தவத்திரு ஃப்ரான்சிஸ் அவர்களே, என்னைக் காப்பாற்றும். குறைந்தபட்சம் இந்த ஒரு முறையாவது என்னைக் காப்பாற்றிவிடும். நான் ஒருபோதும் உம்முடைய உதவியைக் கோரியதில்லை. எப்போதும் நானே முடிவெடுத்துக் கொண்டிருந்தேன். என்னுடைய தவறின் காரணமாக எல்லாமும் தவறாகிவிடுவதை நான் அறிவேன். ஆனால் இந்த முறை தவறு என்னுடையதல்ல' என்று வேண்டினார்.

ஆகாயத்தில் இருந்து ஒரு கரம் நீண்டு. அவரை விமானத்தில் இருந்து எடுத்தது. அவர் சந்தோஷப்பட்டார். அப்போது ஆகாயத்தில் ஒரு குரல் கேட்டது. 'நீ யாரை அழைத்தாய்? எந்த ஃப்ரான்சிஸை? ஃப்ரான்சிஸ் சேவியரா? ஃப்ரான்சிஸ் ஆஃப் அஸிஸியா?' என்று.

தற்போது மறுபடியும்.. உங்களால் தப்ப முடியவில்லை. வாழ்க்கை ஆபத்துக்குட்படுத்திக் கொள்வது. ஒருவர் தெரிவு செய்ய வேண்டிய வராகிறார். தேர்வு செய்வதன் மூலம் நீங்கள் வளர்ச்சியடைகிறீர்கள். தேர்வு செய்வதன் மூலம் நீங்கள் பக்குவப்படுகிறீர்கள். தேர்வு செய்வதன் மூலம் நீங்கள் விழுகிறீர்கள், மீண்டும் எழுகிறீர்கள்.

விழுவது பற்றிப் பயப்பட வேண்டாம். இல்லையேல் உங்கள் கால்கள் நகரும் திறனை இழந்துவிடும். விழுவதில் எந்தத் தவறும்இல்லை. விழுவதும் நடப்பதன் ஒரு பகுதிதான். விழுவதும் வாழ்க்கையின் ஒரு பகுதியே. விழுங்கள், மீண்டும் எழுங்கள். ஒவ்வொரு விழுதலும் உங்களைப்பலம் உடையவராக்கும். வழி தவறிப்போகும் ஒவ்வொரு முறையும் முன்னைவிடச் சிறப்பாய் தேர்ச்சிபெற்றவராய். கூடுதல் விழிப்புணர்வு கொண்டவராய் திரும்பிவிடுவீர்கள். அடுத்தமுறை அதேபாதை உங்கள் கவனத்தைத் திருப்ப இயலாததாகிவிடும். உங்களால் முடிந்த அளவு தவறுகளைச் செய்யுங்கள் - செய்த தவறையே மறுபடியும் மறுபடியும் செய்கிற வேலை மட்டும் வேண்டாம்.

தவறுகள் செய்வதில் தவறேயில்லை. உங்களால் முடிந்த அளவு செய்யுங்கள். அதிகம் செய்வது சிறப்பு, காரணம் அதிக அனுபவம். அதிக விழிப்புணர்வு கிடைக்கிறதே. சும்மா உட்கார்ந்தபடியே இருந்து கொண்டிருக்காதீர்கள், முடிவெடுக்க இயலாமல் ஊசலாடிக் கொண்டிருக்கிறீர்கள். முடிவெடுங்கள். முடிவெடுப்பதில்லை என்று இருப்பதுதான் தவறான முடிவு. காரணம், அப்போது நீங்கள் எல்லாவற்றையும் தவறவிட்டுவிடுகிறீர்கள்.

தாமஸ் எடிசன் தம்முடைய செயல்திட்டமொன்றில் ஆயிரம் முறை தோற்றதாய் சொல்லப்படுவதுண்டு. அவர் தொடர்ந்து மூன்று ஆண்டுகள் உழைத்து, தோல்வியடைவார். அவர் ஒவ்வொன்றாய் எல்லாவற்றையும் சோதித்துப் பார்த்தார். ஆனால் எதுவும் பலனளிப்பதாயில்லை. அவருடைய சீடர்கள் நம்பிக்கையிழந்து, ஊக்கக்குறைவுக்குள்ளாயினர்.

ஒருநாள் சீடனொருவன் கேட்டான், 'தாங்கள் ஆயிரம் பரிசோதனைகள் நிகழ்த்தியிருக்கிறீர்கள். ஒவ்வொரு பரிசோதனையும் தோல்வியில் முடிந்தது. நாம் எங்கே போவதாய் தெரியவில்லையே?'. எடிசன் வியப்புடன் அவனை நோக்கினார், 'நீ என்ன சொல்கிறாய்? எதைக் குறித்துக் காட்டுகிறாய்? எங்கேயும் போகவில்லையா? ஆயிரம் தவறான வாயில் வெகுதொலைவில் இல்லை. நாம் ஓராயிரம் தவறுகளைச் செய்திருக்கிறோம். ஆனால் என்ன, அந்த அளவுக்குக் கற்றுக் கொண்டிருக்கிறோமே. நாம் நேரத்தை வீணடிப்பதாகச் சொல்வதன் மூலம் நீ எதைக் குறித்துக் காட்ட முற்படுகிறாய்? இந்த ஓராயிரம் தவறுகளும் இதற்கு மேல் நம்மைக் கவர்ந்திழுக்க முடியாது. நாம் நெருங்கிவிட்டோம். உண்மைக்கும் நமக்கும் இடைவெளியில்லாத அளவிற்கு. எத்தனைகாலந்தான் அது நம்மிடம் இருந்து நழுவிச் செல்ல முடியும்?'

சரியான வழியில் இருந்து விலகிச் செல்வதற்காகவோ, தவறுகளுக்காகவோ நியாயமற்ற முறையில் நடந்து கொண்டதற் காகவோ அஞ்சி நடுங்காதீர்கள்.

இந்தக் கேள்வி பிரேம் நிஷாவிடம் இருந்து. அவள் எப்போதுமே அச்ச உணர்வு கொண்டவள். அளவுக்கதிகமாய் அஞ்சி நடுங்குவாள். எங்காவது ஒளிந்து கொண்டதுபோல் உட்கார்ந்திருப்பாள். அவளை ஒருபோதும் நான் கண்டதில்லை. என்னுடைய பார்வையை எதிர்கொள்வதே இடர்ப்பாடாய் இருந்திருக்கும். அவள் தொடர்ந்து

தன்னை ஒளித்துக் கொள்பவளாகவே இருந்தாள். அவள் அங்கேயிருப்பதை, தினமும் அவள் அங்கே அமர்ந்திருப்பதை நான் அறிவேன். ஆனால், ஏதாவதொரு தூணுக்குப் பின்னாடி, நான் பார்க்க முடியாதபடி அவள் அமர்ந்து கொண்டிருப்பாள். அல்லது சிலசமயம் என் முன்பாய் இருக்க நேரிடும் போது, நான்கண்டு கொள்ளாதபடி தலையைக் குனிந்து கொண்டிருப்பாள்.

வாழ்க்கை ஓடியபடி இருக்கிறது. உங்களால் உட்கார்ந்தபடியே இருந்துவிட முடியும். அப்போது அந்த வாழ்க்கை நீங்கள் மரித்துவிட்ட மாதிரிதானே இருக்கும். எழுந்திருங்கள், செயல்படுங்கள். இடர்ப்பாடுகளை எதிர்கொள்ளத் தயாராகுங்கள்.

அவளது நிலை ஒரு சின்னப் பையனுடையதைப் போன்றது.

மதிநுட்பமுடைய வினிஃப்ரட் கோடைகால முகாமில் இருந்து மரத்தில் செய்யும் கைவினை (wood-craft) நடைப்பயணம், படகோட்டுதல் இவற்றுக்கான விருதுகளுடன், ஒரு சிறிய நட்சத்திரத்தை (கவுரவச்சின்னம்)யும் பெற்றுத் திரும்பியிருந்தான். அந்த நட்சத்திரம் எதற்காக வழங்கப்பட்டது என்று கேட்டபோது, 'என்னுடைய பெட்டியை நான் கச்சிதமாக தயார் செய்து கொண்டு வீட்டுக்குத் திரும்பியதற்காகத் தரப்பட்டது' என்றான். அந்த பதில் அவனுடைய தாய்க்கு திருப்தியளிப்பதாய் இருந்தது. அவன் 'பெட்டியை நான் திறக்காமலே வைத்திருந்தேன்' என்று சொல்லும் வரையில்.

நிஷா, பெட்டியில் ஒழுங்காக வைக்கப்பட்டதை வெளியில் எடுக்காமலேயே இருப்பவள். முன்போல் கச்சிதமாய் நம்மால் கட்டி வைக்கமுடியாதோ என்று பயப்படாதீர்கள். கொஞ்சம் குளறுபடியாவதும் விரும்பத்தக்கதும்தான், அதில் தவறேதுமில்லை. ஆனால், கொஞ்சமும் இசைவில்லாமல் வெளிப்படைத்தன்மை இல்லாமல் வாழ்வது, வாழ்க்கைக்கு நீங்கள் இழைக்கிற தவறாகிவிடும். அதுவே மறுத்தல் ஆகும். அது கடவுளை மறுக்கிற காரியம். இங்கே வாழ்வதற்குத்தானே பரம்பொருள் உங்களைப் படைத்தது. முடிந்த அளவு ஆழமான அறிவுடன் வாழ்வதற்கு - முடிந்த அளவு ஆபத்துக்களோடு வாழ்வதற்கு. நீங்கள் உயிரோட்டத்துடன் உச்ச அளவு உயிரோட்டத்துடன் இருக்க வேண்டும் என்பதே. பரம் பொருளின் விருப்பம். கட்டுக்கடங்காத உயிரோட்டத்துடன் இருங்கள் - அதற்காகத்தான் நீங்கள் அனுப்பப்பட்டது. அதே சமயம் நீங்களே

ஏதோவொன்று தவறாகிவிடக்கூடும் என்று அஞ்சிக் கொண்டிருக்கிறீர்கள்.

உங்களை அனுப்பி வைப்பதற்குக் கடவுள் அஞ்சவில்லை. அவர் அச்சமற்றவர். அவர் - நல்லவர்கள், கெட்டவர்கள், புனிதர்கள், பாவிகள் என்று பலவகைப்பட்ட மனிதர்களை இங்கே அனுப்பிக் கொண்டிருக்கிறார். அவர் அச்சமின்றி அந்த வேலையைத் தொடர்கிறார். அவர் அஞ்சி நடுங்குபவராய் இருந்திருந்தால் இந்த உலகம் எப்போதே மறைந்து விட்டிருக்கும் அல்லது அது ஒரு போதும் இருத்தலை மேற்கொண்டிருக்காது.

'நான் மக்களைப் படைத்து அவர்கள் தவறேதும் செய்துவிட்டால், மனிதன் ஒருவேளை வழிதவறிச் சென்றுவிட்டால்..' என்று அவர் அச்சப்பட்டிருப்பின். உண்மையில் முதல் மனிதனாகிய ஆதாம் வழிதவறிச் சென்றவன்தான். மனிதன் அந்த வழியில்தான் போகும்படி இருக்கும். கடவுள்படைத்த முதல் மனிதன் அவருடைய நம்பிக்கைக்கு எதிரானவனாய், அவருக்குக் கீழ்படியாதவனாய் இருந்தான். அத்துடன் சகல வசதிகளும் கொண்ட ஈடன் தோட்டத்துச் சவுகரிய வாழ்க்கையைத் துறக்கவும் அவன் துணிந்தான். ஆதாமைப் பற்றி எண்ணிப்பாருங்கள்- எப்படியோர் ஆபத்துக்குத் தன்னை உட்படுத்திக் கொண்டிருந்தான்! அன்றில் இருந்து இன்றுவரை கடவுளும் தன்னுடைய தொழிலை நிறுத்திக் கொண்டுவிடவில்லை. இல்லையேல் அவர் நிறுத்திக் கொண்டிருக்க வேண்டும். அதற்கு அவசியம் ஏற்படவில்லை. அவர் படைத்த முதல் மனிதன் வழிதவறிப் போனான்- தற்போது அவசியப்படவில்லை. அவர் தொடர்ந்து படைத்துக் கொண்டிருக்கிறார்.

உண்மையில் முழு செயல் நிலையையும் கடவுளே உண்டு பண்ணியதாகத்தான் தெரிகிறது. 'இந்த மரத்தின் கனியை புசிக்காதிரு' என்று ஆதாமிடம் அவர் கூறினார். இது தவறானதைச் செய்ய ஆசை காட்டுவதாகும். சாத்தான் ஆதாமைத் தூண்டியதாக கிறிஸ்தவர்கள் சொல்வது முற்றிலும் தவறு. 'அறிவுக்குரிய இந்த மரத்தின் கனியைப் புசிக்காதிரு' என்று சொல்வதன் மூலம் கடவுள் அவனைத் தூண்டினார். அதைவிட மோசமான தூண்டுதலை நீங்கள் கற்பனை செய்ய முடியுமா என்ன? அந்த அறைக்குள் போகாதே என்று அவனிடம் சொல்லுங்கள். அவன் செய்கிற அடுத்த காரியமே அந்த அறைக்குள் நுழைவதாகத்தான் இருக்கும்.

தீரேஷ் இலண்டனுக்குத் திரும்பிச் சென்று கொண்டிருந்த ஒரு குட்டி சந்நியாசி. நான் அவனிடம் ஒரு பெட்டியைத் தந்து, அதைத் திறந்து பார்க்கக்கூடாது என்று சொன்னேன். அவன் சொன்னான், 'நான் அதைத் திறக்கவே மாட்டேன்' என்று. அவனுடைய தாய்க்காரி சொன்னாள், 'அவன் முன்பே திறந்துவிட்டான்' என்று.

கடவுள் ஆசை காட்டுகிறார். அவர் ஆதாமிடம் சொல்லும்போது 'இந்த மரத்தின் கனியைப் புசியாதிரு' என்றார். எந்தவொரு சாத்தானும் அங்கே வேண்டியிருக்க வில்லை. கடவுள் பெரிய அளவில் தூண்டுகிறவர். நீங்கள் அனுபவப்படவேண்டும் என்று அவர் விரும்புகிறார். பிரபஞ்ச இருப்பில் எங்கும் நீங்கள் சுற்றிவர வேண்டும் என்பது அவருடைய விருப்பம். நீங்கள் வழிதவறிச் சென்றால்கூட அவரைவிட்டு எப்படிச் செல்ல முடியும்? எங்கே செல்வீர்கள்? நீங்கள் தவறு செய்தாலும் என்ன தவறைச் செய்ய முடியும்? காரணம் கடவுள் இருக்கிறார். அவர் மட்டுமே இருந்து கொண்டிருக்கிறார். அவருக்கு மாறாக நீங்கள் எதையும் செய்ய முடியாது? அதற்கான சாத்தியமே யில்லை. அது ஒரு கண்ணாமூச்சி விளையாட்டு. கடவுள் உங்களைத் தூண்டுவதற்குக் காரணம் அது மட்டுமே வளர்ச்சிக்கான வழியாயிருக்கிறது.

ஆம், என்றாவதொரு நாள் நீங்கள் திரும்பி வருவீர்கள். ஆதாம் தோட்டத்தில் இருந்து வெளியே செல்கிறான். இயேசு திரும்பி வருகிறார். இயேசுதான் திரும்பி வருகிற ஆதாம். அது திரும்புவதாகும். திரும்பிவருகிற பயணமாகும். தவற்றினைப் புரிந்து கொண்ட, உணர்ந்து கொண்ட ஆதாமாக இயேசு இருக்கிறார். ஆனால், தொடக்கத்தில் ஆதாம் இருந்திருக்கவில்லை என்றால் இயேசு எதுவும் செய்யக்கூடியதாய் இருந்திருக்காது.

கடவுளிடம் எப்படிப் பிரார்த்தித்துக் கொள்வது, எப்படி உங்களுடைய தவறுகள் மன்னிக்கப்படுகின்றன என்பது பற்றி, ஒரு பாதிரியார் ஒரு சின்னக் குழந்தைகளிடம் சொல்லிக் கொண்டிருந்தார். பிறகு அவர்களிடம் அவர் கேள்விகள் கேட்டார். 'மன்னிக்கப் படுவதற்கு அடிப்படை தேவை எது?' என்று அவர் கேட்டார். ஒரு சின்னக் குழந்தை எழுந்து நின்று சொல்லிற்று, 'பாவம் செய்வது' என்று.

செய்யப்படுகிற தவறு மன்னிக்கப்படுவது அவசியம். இயேசு நிகழ்த்த வேண்டும் என்பதற்காகவே ஆதாம் தேவைப்பட்டான். வழிதவறிப் போவதைத் தொடங்கி வைத்தான் ஆதாம். இயேசு திரும்ப வருகிறார்.

ஆனால், இயேசு ஆதாமில் இருந்து முற்றிலும் மாறுபட்டவர்.

ஆதாம் கள்ளமற்றவன். இயேசு மதிநுட்பம் உடையவர். மாசற்ற தன்மையுடன் கூடுதலாய் ஏதோ ஒன்று. அந்தக் கூடுதல் சமாச்சாரம் அவர் விலகிச் சென்றதால் வந்தது. தற்போது அவர் வாழ்க்கை மற்றும் வளர்ச்சிக்கான வழிமுறைகளை அறிந்தவராய், புரிந்து கொண்டவராயிருக்கிறார். எல்லாரும் இந்த நாடகத்தில் திரும்பத் திரும்ப பங்கு பெற்றாக வேண்டியிருக்கிறது. நீங்கள் இயேசுவாக மாறுவதற்கு முதலில் ஆதாமாக வேண்டும். கவலைப்படாதீர்கள். துணிவோடிருங்கள். கோழையாகி விடாதீர்கள். செயல்படுங்கள்.

வழிதவறிச் செல்வதுகூட சரிதான் என்று நான் உங்களுக்குச் சொன்னேன். செய்த தவற்றை மீண்டும் மீண்டும் செய்யாதிருந்தால் போதும். காரணம், அதே தவற்றை நீங்கள் மறுபடியும் மறுபடியும் செய்தால் அந்நிலையில் நீங்கள் ஒரு முட்டாளாகி விடுகிறீர்கள். நீங்கள் தவறே செய்யாமல் இருந்தால் முட்டாளாயிருப்பதைவிட மோசம். நீங்கள் தினமும் புதுப்புது தவறுகளைச் செய்து கொண்டேயிருந்தால் மதிநுட்பம் உடையவராவீர்கள். விவேகம் என்பது அனுபவத்தால் வருவது. வேறு எந்த வழியிலும் நீங்கள் அதைப்பெற முடியாது. நீங்கள் குறுக்கு வழியில் செல்வதற்கில்லை.

'வளர்ச்சியடையும் பொருட்டு நான் என்னை ஆபத்துக்குட் படுத்திக் கொள்ள வேண்டியிருக்கும் என்று நம்புகிறேன்..' இந்த நம்புதலை விடுங்கள். இது நம்பிக்கை பற்றிய பிரச்னையல்ல. வாழ்க்கையைக் கவனியுங்கள். உங்களைக் கவனியுங்கள். இது நம்பிக்கையாய் இருக்க வேண்டாம், மனதால் அறியும் திறனாய் (insight) இருக்கட்டும். அது நீங்கள் நம்புகிறீர்கள் என்று நான் சொல்வதாகாது. ஆனால் நீங்கள் அச்சத்துடன் செயல்படா திருந்துவிட்டால் ஒரேயடியாய் முடங்கிப் போவீர்கள் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். ஒரு குழந்தை நடப்பதற்கு முயற்சிக்காமல் பயத்தில் இருந்துவிட்டால்.. அவன் தன்னுடைய முயற்சியில் பலமுறை தோற்க நேரிடும். அவனுக்குக் காயங்களை ஏற்படக் கூடும். அவன் தனக்குத்தானே ஊறு (hurt) விளைவித்துக் கொள்வான் என்பதை எல்லாரும் அறிவார்கள. ஆனால், அதுதானே கற்றுக் கொள்ளும் வழியாய் இருக்கிறது. எப்படிச் சமநிலை அடைவது என்பதை அவன் மெள்ள மெள்ளக் கற்றுக் கொள்கிறான். நடக்க முயற்சிக்கிற ஒரு குழந்தையைக் கவனியுங்கள். முதலில் அவன் கைகளை ஊன்றி முட்டி போட்டுத் தவழ்கிறான். பிறகு இரண்டு காலால் நிற்கும் துணிகர முயற்சியில் ஈடுபடுகிறான்.

ஒட்டுமொத்த மனித குலமும் அந்தக் கிளர்ச்சியூட்டும் அனுபவத்தில் இருந்தே வந்தது. விலங்குகள் நான்கு கால்களில் ஊர்ந்து செல்கின்றன. மனிதன் மட்டுமே இரண்டு கால்களுடன் முயற்சித்தவன். விலங்குகள் கூடுதல் பாதுகாப்புடன் செல்கின்றன. மனிதன் சிறிய அளவிலோ பெரிய அளவிலோ அபாயத்தால் ஈர்க்கப்படுகிறவன்- அவன் இரண்டு கால்களில் செல்ல முயற்சித்தான்.

இரண்டு கால்களில் நிற்கும் கட்டாயத்துக்குள்ளான முதல் மனிதனைப் பற்றி எண்ணிப்பாருங்கள். அவன் வழிவழியாய் வரும் கோட்பாடுகளில் நம்பிக்கையற்றவனாய், பெருமளவில் ஒத்துப் போகிறவனாய - மகத்தான மாறுதலைக் கொண்டுவருகிற ஒரு கலகக்காரனாய் இருந்திருக்க வேண்டும். எல்லாரும் நாலுகாலில் நடந்து கொண்டிருக்க ஒருவன் மட்டும் இரண்டு காலில் எழுந்து நிற்கிறான் - கொஞ்சம் எண்ணிப் பாருங்கள். சமுதாயம் முழுவதுமே அவனைக் கண்டு சிரித்திருக்கும். அவர்கள் கண்டிப்பாய் கேட்டிருப்பார்கள், 'என்ன இது.. பைத்தியமா? யாரும் இரண்டு காலில் நடந்ததில்லையே. நீ விழத்தான் போகிறாய். உன்னுடைய எலும்புகளை நீ உடைத்துக் கொள்வாய். வா, பழைய முறைக்கு வந்துவிடு.' என்று. அந்த மனிதன் அவர்களுக்குச் செவிசாய்க்காமல் இருந்தது சரிதான். அவர்கள் சிந்தித்திருப்பார்கள். அவனைப் பழையபடி பட்டியில் அடைக்க எல்லா வழிகளிலும் அவர்கள் முயன்றிருப்பார்கள். ஆனால், அவன் சென்றுவிட்டான்.

பழைமையில் ஊறியவர்கள் இன்னும் மரங்களில்தான் இருந்து கொண்டிருக்கிறார்களே. குரங்குகளாய், வாலற்ற பெருங்குரங்குகளாய் அவர்கள் இருக்கிறார்கள். பொங்கியெழுந்து- மகத்தான மாறுதலைக் கொண்டுவந்தவன் மனிதனாகிவிட்டான். அவர்கள் இன்னும் நாலு கால்களில் ஊர்ந்தபடி, மரங்களைப் பற்றிக் கொண்டிருக்கிறார்கள். 'இந்த மனிதர்கள் ஏன் தவறாகிப் போனது? என்ன ஒரு துரதிர்ஷ்டம் இவர்களைப் பிடித்தாட்டுகிறது.' எனறு அவர்கள் இன்னமும் எண்ணிக்-கொண்டிருப்பார்கள்.

ஆனால், நீங்கள் புதிதாய் ஒன்றைச் செய்ய முயற்சிக்கிறபோது அந்த நொடிப் பொழுதில் புதிய ஒன்றுக்குக் கிடைக்கத் தக்கவராகி விடுகிறீர்கள். அது குறித்து அஞ்ச வேண்டியதில்லை. தொடக்கத்தில் சிறிய அடிகளாய் வைத்து, சின்னச்சின்னதாய் முடிவுகள் எடுத்தபடி செல்லுங்கள். எந்த ஒன்றும் சாத்தியந்தான என்கிற உணர்வில் இருங்கள். நீங்கள் தவறாகிவிடக் கூடும். ஆனால், தவறாகி

விட்டிருப்பதில் என்ன தவறு? திரும்பி வாருங்கள், நீங்கள் மதிநுட்பமுடையவராய் வருவீர்கள்.

வெறும் நம்பிக்கையாய் அதை இருக்கவிடாதீர்கள். அது ஒரு புரிதலாகட்டும் (understanding). அப்போதுதான் அது சக்தி வாய்ந்ததாய்- விளைவுகளை ஏற்படுத்தக் கூடியதாய் இருக்கும்.

'... ஆபத்துக்களுக்குட்படுத்திக் கொள்வதன் பொருட்டு நான் முடிவுகளை எடுக்க வேண்டியிருக்கிறது! உண்மை, ஒருவர் முடிவுகளை எடுத்தாக வேண்டும். வாழ்க்கையில் மிக அருமையான விசயங்களில் இதுவும் ஒன்று. நீங்கள் தடையற்றவராய் இருப்பதை அது காட்டுகிறது. உங்களுக்காக இன்னொருவர் முடிவெடுப்பதை நீங்கள் விரும்பலாம். அந்நிலையில் நீங்கள் அடிமைகளாகி விடுவீர்கள். அந்த வகையில் பார்த்தால் விலங்குகளின் நிலை சிறப்பாகவே உள்ளது. -ஒவ்வொன்றும் முன்பே தீர்மானிக்கப்பட்டதாய் இருக்கிறது. அவை ஒரு குறிப்பிட்ட உணவை உண்கின்றன. அவை ஒரு குறிப்பிட்ட முறையில் வாழ்கின்றன. அவை தாக எதையும் தீர்மானிக்கிறதில்லை, அவை ஒரு போதும் குழப்பத்துக்குள்ளா வதில்லை.'

மனிதன் மட்டுமே தொடர்ந்து குழப்பத்தில் இருந்து கொண்டிருக்கிற விலங்கு. ஆனால், அவன் தீர்மானிக்கக் கூடியவனாயிருப்பதில் பெருமிதப்படுகிறான். அவன் எப்போதும் தயங்கிக் கொண்டிருப்பவன், இரண்டு மாற்று வழிகளுக்கிடையில் ஊசலாடிக் கொண்டிருப்பவன். தவத்திரு ஃப்ரான்சிஸ் அஸிஸியா, தவத்திரு ஃப்ரான்சிஸ் சேவியரா என்று- அபாயம் உடையவன். அந்த மனிதனின் நிலையை எண்ணிப் பாருங்கள். அந்தக் கை தவத்திரு ஃப்ரான்சிஸ் அஸிஸியினுடையதாய் இருந்து, அவன் மட்டும் தவத்திரு ஃப்ரான்சிஸ் சேவியருடையது என்று சொல்லியிருந்தால் அத்தோடு தொலைந்து விட்டிருப்பான். ஆனால், ஒருவர் தீர்மானிக்க வேண்டியிருக்கிறது.

முடிவெடுப்பதன் வாயிலாக உங்கள் ஆன்மா தோற்றம் பெற்றது, நீங்கள் முழுமையுற்றீர்கள்.

முடிவெடுங்கள் - உங்கள் முடிவு எத்தகையதாயினும் முடிவெடுக்கவியலாதவராய் இருந்து கொண்டிருக்காதீர்கள். நீங்கள் முடிவெடுக்கவியலாதவராய் இருந்தால் முரண்பாடானதையே செய்து கொண்டிருப்பீர்கள். முடிவெடுக்கவியலாத காரணத்தால், ஏக

காலத்தில் இரண்டு பாதைகளிலும் நீங்கள் சென்று கொண்டிருப்பீர்கள். காரணம், வாழ்ந்தாக வேண்டுமே. வடக்கு நோக்கி ஐம்பது சதவிகிதமும், தெற்கு நோக்கி ஐம்பது சதவிகிதமும் போய்க் கொண்டிருப்பீர்கள். அந்நிலையில் அதில் துன்பமும், துயரமும், வேதனையும் இருக்கும்.

வருமானவரி அலுவலகத்தில் ஒருவன் நுழைந்து அங்கிருந்த மேலாளரின் சட்டைக் காலரைப் பற்றினான். 'இதோபார், நான் அரசின் ஒரு பகுதியில் இருந்து கொண்டிருக்கிறேன். என்னுடைய மனைவி காணாமல் போய்விட்டாள்' என்று சொன்னான்.

'அவளைக் காணவில்லையா? அது துர்ப்பாக்கியமான விசயந்தான். ஆனால் இது வருமானவரி அலுவலகமாயிற்றே. நீ தகவல் கொடுக்க வேண்டியது காவல் நிலையத்தில் அல்லவா' என்றான் வரிவசூலிக்கும் அதிகாரி.

அந்த மனிதன் தன்னுடைய தலையை ஊக்கத்துடன் அசைத்தான், 'எனக்குத் தெரியாதா என்ன? நான் மறுபடியும் சிக்கிக் கொள்ள மாட்டேன். போனமுறை அவள் காணாமல் போனபோது நான் காவல்துறையிடம் தெரிவித்தேன். அவர்கள் அவளைக் கண்டுபிடித்துக் கொடுத்து விட்டார்கள்' என்று பதிலளித்தான்.

அப்படியானால் வருமானவரி அதிகாரியிடம் எதற்காகப் புகார் செய்யப்போனது? ஏதாவது செய்தாக வேண்டும் அல்லவா? மனைவியைக் காணவில்லை என்கிற நிலையில் கணவன் எதையாவது செய்தாக வேண்டுமே. இது ஒரு பகுதி என்று வைத்துக் கொண்டால் இன்னொரு பகுதி அதில் அவன் மகிழ்ச்சியடைவதும், 'அவள் காணாமல் போனது நல்லதுதான். காவல்நிலையத்துக்குப் போக வேண்டாம், அவர்கள் மறுபடியும் அவளைக் கண்டுபிடித்து விடுவார்கள்' என்கிற கருத்தை உட்கொண்டிருப்பதும்.

இப்படிப் பாதி, அப்படிப் பாதி என்று போய்க் கொண்டிருக்கிறது வாழ்க்கை. அந்நிலையில் நீங்கள் துண்டாடப்படுகிறீர்கள். அந்நிலையில் கணவன்- கவுரமான கணவன் ஏதாவது செய்தாக வேண்டு. சுதந்திரம் தேவைப்படுகிற கணவன் வேறு எதையாவது செய்தாக வேண்டும். மனைவி போனதில் அவனுக்கு சந்தோஷந்தான். கணவன் சோகமாய். காட்சியளிப்பது, சோகமாய் இருப்பதுபோல் பாசாங்கு செய்வது- அவனுடைய துன்பத்தைக் காட்டுகிறது- எங்கே உள்ளிருக்கும் ஆசாமி சந்தோசப்படுவதை மக்கள் உணர்ந்து கொண்டுவிடுவார்களோ என்கிற பயமும் அதற்குக் காரணம். அது

மதிக்கத்தக்க தன்முனைப்பை (ego) சுக்குநூறாய் உடைத்தெறியக் கூடும். எனவே, அவன் ஏதாவது செய்தாக வேண்டியிருக்கிறது. அவனால் காவல் நிலையத்துக்குப் போக முடியாது. அந்நிலையில் அவன் வேறு இடத்துக்குச் செல்கிறான்.

* உங்கள் வாழ்க்கையைக் கவனியுங்கள். அந்தச் செயல்முறையில் உங்கள் வாழ்க்கையை வீணடிக்காதீர்கள்.

முடிவெடுப்பது அவசியமாகிறது. ஒவ்வொரு கணத்தையும் பற்றி நீங்கள் தீர்மானிக்க வேண்டியிருக்கும். முடிவெடுக்காமல் கழிகிற ஒவ்வொரு கணமும் உங்களைத் துண்டாடிக் கொண்டிருக்கும். முடிவெடுக்கப்பட்ட ஒவ்வொரு கணமும் உங்களை ஒன்று சேர்த்து, முழுமையாக்கும். நீங்க்ள் முழுமையடைகிற ஒரு கணம் வரவே செய்கிறது. அந்தக் கணத்தில் நீங்கள் முழுமையுறுகிறீர்கள். முடிவெடுத்தல் உங்களை ஆற்றலுடையவராக்கும்.

ஒரு சமயம் இப்படி நடந்தது.

பெரும் அச்சத்துக்குள்ளான ஒரு பெண் நோயாளி பல் மருத்துவரிடம் சென்றாள். காத்திருக்கும் அறையில் அமர்ந்தாள். மூன்று மாதக் கைக்குழந்தையைக் கவனித்துக் கொள்வதற்காக அவளது சகோதரியும் அவளுடனிருந்தாள். சித்ரவதைக் கூடத்திற்குள் அவள் செல்வதற்கான முறை (turn) சீக்கிரமே வந்தது.

அவள் சிகிச்சைக்கான இருக்கையில் அமர்ந்ததுமே பல் மருத்துவரிடம் கேட்டாள், 'ஒரு பல்லை எடுத்துவிடுவது அல்லது ஒரு குழந்தையைப் பெறுவது இவற்றில் எது மோசமானது என்றே எனக்குத் தெரியவில்லை' என்று.

பல் மருத்துவர், 'நல்லது, சீக்கிரமா முடிவு பண்ணு. நிறையபேர் எனக்காகக் காத்திருக்கிறார்கள்' என்று சுருக்கமாய் சொன்னார்.

நானும் அதைத்தான் நிஷாவுக்குச் சொல்வேன். அவள் இங்கே ஊசலாட்டத்தில் இருக்கிறாள். மன உறுதி கொள்ளுங்கள். முடிவெடுங்கள். தயக்கத்துடன் இருப்பது சரியல்ல. ஒன்று இங்கிருக்க வேண்டும் அல்லது வேறு எங்காவது இருக்க வேண்டும் ஆனால் இருத்தல் முக்கியம். நீங்கள் இங்கிருக்க விரும்பினால் இருங்கள். ஆனால் அப்போது முழுமையாய் இருக்க வேண்டும். பிறகு இந்த இடம் உங்களுடைய உலகமாகிவிடும். இந்தக் கணம் சாசுவதம் பெற்றதாகிவிடும். நீங்கள் இல்லாவிட்டாலும் சரியே. ஆனால்,

ஊசலாட்டத்தில் இருந்து விடாதீர்கள். வேறு எங்கானும் இருப்பதும் விரும்பத்தக்கதுதான். 'நீங்கள் எங்கிருக்கிறீர்கள்' என்பதல்ல கேள்வி. 'இருக்கிறீர்களா?' என்பதுதான். கொள்கை மாறுபாடு கொண்டு விடாதீர்கள். எல்லாத் திக்கிலும் ஓடிக் கொண்டிருக்க வேண்டாம். அது உங்களைப் பித்து நிலைக்குத் தள்ளிவிடும்.

ஒப்புவித்துக் கொள்ளல் (surrender) என்பது ஓர் முடிவு. ஒருவரை நம்புவது என்பதும் ஓர் முடிவுதான். அதில் ஆபத்துக்குட்படுத்திக் கொள்ளும் நிலை (risk) இருக்கிறது. நீங்கள் நம்புகிற அந்த நபர் ஏமாற்றக் கூடியவராயிருக்கலாம். யாருக்குத் தெரியும்?

ஒரு பெண்ணிடம் நீங்கள் காதல் கொள்கிறீர்கள். நீங்கள் நம்பிக்கை வைக்கிறீர்கள். ஓர் ஆணுடன் நீங்கள் காதல் வசப்படுகிறீர்கள். நீங்கள் நம்பிக்கை வைக்கிறீர்கள். யாருக்குத் தெரியும்? அந்த மனிதன் இரவொன்றில் உங்களைக் கொன்று போடலாம். யாருக்குத் தெரியும், மனைவி உங்களுடைய வங்கியிருப்பைக் காலி செய்துவிட்டு ஓட்டம் பிடிக்கலாம். ஆனால் ஓர் அபாய நிலைகளை எதிர்கொள்ளாமல் காதலிப்பது சாத்தியமில்லை.

இட்லர் எந்தப் பெண்ணையும் தன்னுடைய அறையில் படுத்துறங்க அனுமதித்ததில்லை. அவருடைய சிநேகிதிகள்கூட அனுமதிக்கப்பட்டதில்லை. அவர்களைப் பகலில்தான் அவர் பார்த்துப் பேசுவார். இரவில் தம்முடைய அறையில் அல்ல. அவர் அந்த அளவுக்கு அச்சத்தில் இருந்தார். யாருக்குத் தெரியும்? அவள் அவருக்கு நஞ்சூட்டலாம், அவருடைய கழுத்தை நெரித்துக் கொல்லலாம். அத்தகைய ஒருவரின் அவலத்தை எண்ணிப் பாருங்கள். அவரால் எந்தப் பெண்ணையும் நம்பமுடியாது. என்ன ஒரு நரக வாழ்க்கை அவருடையது. நரகத்தில் வாழ்ந்தது அவர் மட்டுமா, அவரைச் சுற்றியிருந்தவர்களுந்தான்.

அவரைப் பற்றி இப்படிச் சொல்லப்பட்டதுண்டு. அவர் பிரிட்டிஷ் ராஜதந்திரி ஒருவருடன் தம்முடைய கட்டடத்தின் ஏழாம் தளத்தில் உரையாடிக் கொண்டிருந்தார். தம்மை எதிர்ப்பதால் பயனில்லை, தம்மிடம் சரணடைவதே சரி என்ற கருத்தை அவர் மனதில் பதிய வைக்க இட்லர் முயன்றிருக்கிறார். 'நாங்கள் இந்த உலகத்தையே வெல்லப் போகிறோம். எங்களை யாரும் தடுக்க முடியாது' என்று கூறினார். ஓர் உதாரணத்துக்காக அங்கே நின்றிருந்த சிப்பாய் ஒருவனிடம், 'இந்த சன்னல் வழியே குதித்துவிடு' என்று

உத்தரவிட்டார். அந்தச் சிப்பாயும் ஏழாம் தளத்தில் இருந்து அப்படியே குதித்துவிட்டான். பிரிட்டிஷ் ராஜதந்திரியால் அதை நம்பவே முடியவில்லை. அந்தச் சிப்பாய் சிறிதளவும் தயக்கம் காட்டாமல் குதித்திருக்கிறான். தம்முடைய கருத்தை மேலும் தெளிவுப் படுத்திக் காட்டுவதற்காக மற்றொரு சிப்பாயிடம் 'குதி' என்று சொன்னார். அவனும் குதித்தான். இது ரொம்ப அதிகந்தான். தம்முடைய கருத்து அந்த ராஜதந்திரியின் இதயத்தில் மிகச் சரியாகப் போய்ச் சேரவேண்டும் என்பதற்காக அவர் மூன்றாம் சிப்பாயிடமும் 'குதி' என்று சொன்னார்.

ஆனால் இம்முறை அந்த ராஜதந்திரி பயத்தால் அதிர்ந்து போனார். குதிக்க முனைந்த சிப்பாயினுடைய தோளைப் பற்றிக் கொண்டார். 'பொறு. நீ எதற்காக இப்படித் தற்கொலைக்குத் தயாராகிறாய்? எதற்காகக் கொஞ்சமும் தயங்காமல் வாழ்க்கையை விடப் பார்க்கிறாய்?' என்று கேட்டார்.

அந்த மனிதன் சொன்னான்: 'விடுங்கள் என்னை. இதையா வாழ்க்கை என்கிறீர்கள்?!' அவன் உடனே குதித்துவிட்டான்.

நரகத்தில் வாழ்ந்த இட்லர், தன்னைச் சுற்றியிருந்தவர்களுக்கும் ஒரு நரகத்தையே உருவாக்கியிருந்தார். அன்பில்லை என்றால் வாழ்வது சாத்தியமில்லை. வாழ்க்கை அன்பைக் கருத்தில் கொண்டிருப்பது. அன்பு வாழ்க்கையைக் கருத்தில் கொண்டிருப்பது. அன்பு நம்பிக்கைக் கொள்வது. ஆபத்துக்குட்படுத்திக் கொள்வது.

என் அருகில் இருப்பதற்கு நீங்கள் பெரிய அளவில் அன்பு செய்பவராய் இருக்க வேண்டும். என் அருகில் இருப்பதற்கான ஒரேவழி அதுதான். சில போதனைகளைப் பரப்பும் முயற்சியில் நான் இங்கே இருந்து கொண்டிருக்கவில்லை. நான் ஒன்றும் ஆசான் அல்லன். வாழ்க்கைக் குறித்த ஒரு மாறுபட்ட பார்வையை நான் உங்களுக்கு வழங்குகிறேன். நீங்கள் தற்போது வாழ்ந்து கொண்டிருக்கும் முறை தவறானது என்று உங்களை நம்ப வைக்கவே நான் முயல்கிறேன். வேறொரு வழி இருக்கிறது. ஆனால், அந்த வழி அறியப்படாததாகவே இருக்கிறது. அது உண்மையில் வருங்காலத்தில் இருக்கும். நீங்கள் அதை அனுபவித்திருக்க மாட்டீர்கள். நீங்கள் என்னிடம் நம்பிக்கை கொள்ள வேண்டும், இருளில் என்னோடு நீங்கள் நடந்தாக வேண்டும். அங்கே அச்சம் இருக்கும், ஆபத்து இருக்கும். அது வேதனையளிப்பதாய் இருக்கும் - அத்தனை வளர்ச்சி

நிலைகளிலும் வலி இருக்கிறது - வலியினூடேதான் பரவசம் அடையப்படுகிறது.



**'தியானத்தின் போது உங்களுடைய வெறுமைக்காக நான் வேண்டிக் கொள்கிறேன். அத்துடன் உங்களுடைய வெறுமை என்னுள் படிப்படியாய் ஊடுருவிப் பரவுவதையும் நான் கண்டுபிடிக்கிறேன். இந்தச் செயல்முறையின் மூலம் உங்களுடைய இருப்புணர்வை நான் முழுமையாய் உள்வாங்கிக் கொள்ள முடியுமா? உங்களை என்னுள் ஒட்டுமொத்தமாய் பெறுவதற்கு நான் வேண்டிக் கொள்ள முடியுமா? தயை கூர்ந்து என்னை ஆசிர்வதியுங்கள்.'**

(நீங்கள் வாய் மொழியாகத்தான் பதிலளிக்க வேண்டும் என்பதில்லை)

நான் எப்போதுமே வாய் மொழியாகவே பதிலளிக்கிறேன். நான் பதிலளிக்கிறபோதெல்லாம் அந்தப் பதில் இரண்டு பரிமாணங்களைக் கொண்டதாகவே இருக்கும். அவை ஒருசேர இரண்டு தளங்களில் இருக்கும். ஒன்று சொற்கள் சேர்ந்தது. அது வேறெந்த பரிமாணத்திலும் புரிந்து கொள்ள முடியாதவர்களுக்கானது- அது கேட்கும் திறனோ, பார்க்கும் திறனோ இல்லாதவர்களுக்கானது, செயலற்றவர் களுக்கானது. அதே சமயத்தில் மற்றொரு தளத்தில் சொற்களற்ற தகவல் தொடர்பும் இருக்கிறது. அது கேட்பவர்களுக்கும், பார்ப்பவர் களுக்கும் உயிரோட்டத்துடன் இருப்பவர்களுக்குமானது.

என்னுடைய ஆசீர்வாதங்களை ஒரு போதும் கேட்காதீர்கள். காரணம் அவை எப்போதும் உண்டு. நீங்கள் கேட்டாலும் கேட்காவிட்டாலும் அவை இருக்கவே செய்யும். நீங்கள் என்னுடன் ஒத்துழைத்தாலும் அல்லது இல்லாவிட்டாலும், நீங்கள் எனக்குச் சார்பாக இருந்தாலும் அல்லது மாறுபட்டாலும் அது என்னுடைய ஆசீர்வாதங்களில் எந்த வேறுபாட்டையும் உண்டு பண்ணிவிடாது. என்னுடைய ஆசீர்வாதம் ஒரு செயலல்ல. அது சுவாசம் போன்றது. அது எப்போதும் இருக்கிறது. நீங்கள் உணரமுடிந்தால், அது எப்போதும் அங்கிருப்பதைக் கண்டு கொள்வீர்கள். என்னுடைய ஆசீர்வாதங்களில் நான் இருக்கிறேன்.

நீங்கள் ஒரு சரியான செய்முறையின்மீது தடுக்குற்றிருக்கிறீர்கள் (stumbled). 'தியானத்தின்போது உங்களுடைய வெறுமைக்காக நான் வேண்டிக் கொள்கிறேன். அத்துடன் உங்களுடைய வெறுமை என்னுள் படிப்படியாய் ஊடுருவிப் பரவுவதையும் நான் கண்டுபிடிக்கிறேன். இந்தச் செய்முறையின் மூலம் உங்களுடைய இருப்புணர்வை நான் முழுமையாய் உள்வாங்கிக் கொள்ள முடியுமா?' ஆம், அது முற்றிலும் சரியே. அஞ்சாமல் தொடருங்கள். ஏனெனில் சற்று முன்பின்னாகவேனும் வெறுமை அச்சத்தை ஏற்படுத்திவிடும். காரணம் வெறுமை என்பது நீங்கள் மறைந்து கொண்டிருப்பதைக் குறிப்பது. உங்களுடைய மெய்ம்மை தொடங்குவதற்கு முன் நீங்கள் அங்கிருந்து முற்றாய் போய் விட்டிருக்க வேண்டும். உங்கள் மெய்ம்மையின் இருப்பை உணர்வதற்கு முன் நீங்கள் நீங்கிச் சென்றுவிட வேண்டும். உங்கள் இருப்புணர்வின் முழுமையை நீங்கள் உணர்வதற்குமுன் நீங்கள் முற்றிலும் வெறுமையாகிவிட வேண்டும். ஓர் இடைவெளி இருக்கிறது. அந்த இடைவெளி மரணம் போன்றது. நீங்கள் போய்ச் சேர்ந்து விட்டீர்கள். ஆனால், கடவுள் இன்னமும் பிரவேசிக்கவில்லை. ஒரு சின்ன இடைவெளிதான், ஆனால் அந்தச் சின்ன இடைவெளியே முடிவற்றதாய் தெரிகிறது.

நீதி மன்றத்தில் ஒரு வழக்கு. கொலை வழக்கு நடைபெற்றது. ஆனால் சான்றாயர்களும் நீதிபதியும் அந்த நபரைக் குற்றமற்றவர் என்று தீர்ப்பு செய்வதாயிருந்தனர். காரணம், தங்களைவிட்டு அந்த நபர் மூன்று நிமிடங்கள்தாம் வெளியே சென்றிருந்தார். பிறகு அவர் தங்களுடன் தான் இருந்தார் என்று நம்பகமான சாட்சிகள் தெரிவித்திருந்தது. மூன்று நிமிடங்களுக்கு மட்டுமே அவர்களுடன் அவர் இருக்கவில்லை. மூன்று நிமிடத்தில் ஒரு கொலையை நடத்தியிருக்க முடியாது என்று பட்டது. அந்நிலையில் எதிர்த்தரப்பு வழக்கறிஞர் எழுந்து, 'நான் ஒரு சோதனையின் மூலம் இந்த வழக்கைப் பரிசீலனை செய்கிறேன்' என்றார். தன்னுடைய கடிகாரத்தை வெளியே எடுத்தவர், 'தற்போது எல்லாரும் கண்ணை மூடிக் கொண்டு, அமைதியாய் இருங்கள். மூன்று நிமிடங்கள் சென்றதும் நான் மூன்று நிமிடங்கள் முடிந்தது என்று சாடையாய் குறிப்பிடுவேன்' என்று சொன்னார். எல்லாரும் அமைதியாய் இருந்தனர்.

நீங்கள் மூன்று நிமிடங்களுக்கு அமைதியாய் இருக்கும் பட்சத்தில் அந்த மூன்று நிமிடங்களும் வெகு நீண்டதாய், நீண்டநேரம் ஆனதுபோல் தெரியும். அதற்கு முடிவே இல்லாதது போல் தோன்றும்.

யாரேனும் ஒருவர், ஓர் அரசியல்வாதி அல்லது வேறொருவர் இறந்து அவருக்கு மவுன அஞ்சலி செலுத்த ஒரு நிமிடம் நின்றிருக்கிறீர்களா? இந்த மனிதர் எதற்காகச் செத்துத் தொலைத்தார், இவர் இறந்திருக்கக்கூடாது என்று நீங்கள் எண்ணுமளவுக்கு அந்த ஒரு நிமிடம் நீண்டதாயிருக்கும்.

மூன்று நிமிடங்கள்.. மூன்று நிமிடங்கள் முடிந்த பிறகு அந்த வழக்கறிஞர் சொன்னார், 'நான் சொல்வதற்கு வேறொன்றுமில்லை' என்று. அப்போது சான்றாயர்கள் குற்றம் சாட்டப்பட்டவர்தான் அந்தக் கொலையைச் செய்திருக்க வேண்டும் என்று தீர்மானித்தனர். தாங்கள் முன்பு வழங்குவதாயிருந்த தீர்ப்பை மாற்றிக் கொண்டனர். மூன்று நிமிடங்கள் வெகு நீண்டவை.

நீங்கள் அமைதியாயிருக்கும்போது கணப்பொழுதும் வெகு நீண்டதாயிருக்கும். நீங்கள் இருந்திராதபோது (absent) என்ன நடந்திருக்கும் என்று கற்பனை செய்வது சாத்தியமில்லை.

ஒரு கணம் என்பது சின்ன இடைவெளியாய் இருக்கலாம். ஆனால் அதுவே முடிவற்ற காலமாய் தோன்றக்கூடும். ஒருவர் ரொம்பவே அச்சத்துக்குள்ளாவார். ஒருவர் கடந்த காலத்துக்கே திரும்பிவிட விரும்புவார்.

சீக்கிரமே அந்த பயம் மேலெழும். அந்த நேரத்தை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள். திரும்பவும் கடந்த காலத்துக்குச் சென்றுவிடாதீர்கள், கடந்த காலத்தில் விழுந்து விடாதீர்கள். மேலும் செல்லுங்கள். மரணத்தை ஏற்றிடுங்கள், காரணம் நீங்கள் மரணமடைகிறபோதுதான், மரணமற்ற வாழ்வை அடைகிறீர்கள்.

அது எப்போதுமே உங்களுக்காகக் காத்திருக்கிறது. அது உங்களுக்கு வெளியே இருக்கிற ஒன்றல்ல. அது உங்கள் இருப்புணர்வின் மையப்பகுதியில் உள்ளது. ஆனால் நீங்களோ அழியக்கூடிய உடம்புடன், மனதுடன் உங்களை அடையாளப்படுத்திக் கொள்கிறீர்கள். இவை மிகச்சிறிது நேரமே இருந்து, மாறுகிறது. உங்களுக்குள் எங்கோ ஓரிடத்தில் தீண்டப்படாத, களங்கமற்ற, தூய்மையான தன்னுணர்வு இருக்கிறது. அந்தத் தூய தன்னுணர்வே உங்களுடைய உண்மையான இயல்பாகும்.

முழுமையான யோகாவின் முயற்சி அந்தத் தூய இருப்புணர்வை அடைவதுதான். அந்தக் கன்னித் தன்மையில் இருந்தே இயேசு தோன்றினார். அந்தக் கன்னித் தன்மையை- தூய்மையை நீங்கள்

தொட்டவுடன் மறுபடியும் பிறக்கிறீர்கள், அதுவே மீண்டும் உயிர்த்தெழுதல் ஆகும்.

என்னை உங்களுடைய மரணமாக்கிக் கொள்ளுங்கள். அவ்விதமாய் நீங்கள் திரும்பவும் பிறந்துவர முடியும். குருவான ஒருவர் மரணமாயும், வாழ்க்கையாகவும், சிலுவையாகவும், மீட்டெழுச்சி (resurrection) யாகவும் இருக்கிறார். மிகச் சரியானதொரு செய்முறையின் மீதுதான் நீங்கள் தடுக்குற்றிருக்கிறீர்கள் (stumbles). தற்போது முன்னோக்கிச் செல்லுங்கள். அந்த வெறுமையை (emptiness) மேலும் மேலும் உள்வாங்கி வெறுமையாகி விடுங்கள். சீக்கிரமே எல்லாமும் மாறிவிடும்- வெறுமை மறையலாகும். முதலில் எல்லாமும் மறைந்து, உங்களுக்குள் வெறுமை ஒன்று சேர்கிறது. பிறகு அந்த வெறுமை முழுசாகி அதுவும் மறைகிறது.

இந்த நிகழ்வு பற்றி புத்தர் தமது சீடர்களிடம் கூறுவார்: ‘அந்திப் பொழுதில் நீங்கள் ஏற்றி வைக்கிற ஒரு மெழுகு வர்த்தியைப் போன்றது அது’ என்று. இரவு முழுக்க மெழுகுவர்த்தி எரிகிறது. சுவாலை மெழுகுவர்த்தியை எரிக்கிறது, மெழுகுவர்த்தியின் திணிப்புப் பொருளை எரித்துவிடுகிறது. தீயின் நாக்கு தொடர்ந்து அதை எரித்துக் கொண்டேயிருக்கும். மெழுகுவர்த்தி மறைந்து மறைந்து ஒரேயடியாய் காணாமல் போய்விடும். காலையில் அந்த மெழுகு வர்த்தி கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து விட்டிருக்கும். இறுதிக் கணத்தில் மெழுகுவர்த்தி முற்றாய் மறைந்துவிடுகிறபோது, சுவாலை குதித்தோடிப் போகிறது. முதலில் அது மெழுகுவர்த்தியை அழிக்கிறது. பிறகு தன்னைத்தானே அழித்துக் கொண்டுவிடுகிறது.

முதலில் நீங்கள் வெறுமையை, இன்மையை அகந்தையற்ற தன்மையை உள்வாங்கிக் கொள்கிறபோது அதுவேதான் நிகழ்கிறது. அது மற்றவற்றையெல்லாம் அழித்துப் போடும். எல்லாவற்றையும் அழிக்கிற தீநாக்கைப்போல் அது இருக்கும். எல்லாமும் அழிந்து விடுகிறபோது நீங்கள் முற்றிலும் வெறுமையாகி விடுகிறீர்கள். ஒரு சுவாலையின் துள்ளல், அத்தோடு வெறுமையும் போய்விடுகிறது. சற்றும் எதிர்பாராதவிதமாய் உங்களுடைய பூர்வ இடத்துக்கு நீங்கள் திரும்புகிறீர்கள் வெகுநாள் தேவை நிறைவேறப் பெற்றவராய், வழிந்தோடும் பிரவாகமாய். அதுவே மனிதன் ஒரு கடவுளாய் மாறுகிற இடம்.

